## BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| Title of the Book | Tamilar Tirumanam |
| Author | Dr. S Sasivalli<br>International Institute of Tamil Studies, T.T.T I. Post, Madras. 600113. |
| Publisher | International Institute of Tamil studies T.T.T.I. Post, Madras. 600113. |
| Publication Number | 112 |
| Language | Tamil |
| Date of Publication | May, 1985 |
| Edition | First |
| Paper used | White Printing |
| Size of the book | 21×14 cms |
| Printing types used | 10 Points |
| Number of copies | 1200 |
| Number of Pages | 351+VIII=359 |
| Price | Rs.25. (Twenty five only) |
| Printers | Meeraa Press AE-103, Anna Nagar Madras-600 040. |
| Binding | Cardboard |
| Artist | VELUCHAMY |
| Subject | Marriage system of the Tamils. |

# உள்ளே

டாக்டர். ச. வே. சுப்பிரமணியன்
இயக்குநர்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

# அணிந்துரை

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் தமிழர் தொடர்பாக பல நூல்களை இதுவரை வெளியிட்டுள்ளது. தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், தமிழர் ஆடைகள், தமிழர் கண்ட மனம் தமிழர் உணவு, தமிழர் நாட்டுப்புற விளையாட்டுகள், தமிழர் எண்ணங்கள் போன்றவை குறிப்பிடத்தக்கன. இப்போது வருகின்ற நூல் 'தமிழர் திருமணம்' பற்றிய நூலாக அமைகிறது. ஏற்கனவே தமிழர் திருமணம் பற்றிச் சில கட்டுரைகள் வந்துள்ளன. தனி நூலாக இதுவரை வரவில்லை. ஜப்பான் நாட்டில் தமிழர் திருமணத்திற்கும், ஜப்பான் நாட்டுத் திருமணத்திற்கும் ஒப்பிட்டு ஆய்கின்ற முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. இந்த நூல் தொல்காப்பிய காலம் முதல் ஓரளவு இக்காலம் வரை இலக்கியங்களில் உள்ள திருமணச் செய்திகள் அனைத்தும் தொகுத்துத் தருகின்றது. அதோடு பழங்காலத் திருமண முறை, இடைக்காலத் திருமணமுறை, தற்காலத் திருமண அமைப்புகள் போன்றவற்றை தெளிவுபடுத்துகின்றது. திருமணம் தொடர்பான பாடல்கள் இலக்கியச் சான்றுகள் அனைத்தையும் தொகுத்து பின்னிணைப் பாகத் தரப்பட்டுள்ளது நன்கு முயன்று இந்த நூலைச் சிறப்பாகச் செய்து தந்துள்ள டாக்டர் சசிவல்லி அவர்களைப் போற்றிப் பாராட்டி மகிழ்கின்றேன், இது போன்று இன்னும் பல தமிழர் தொடர்பான நூல்களை அவர் தருதல் வேண்டும் என எதிர் பார்க்கிறேன்.

நிறுவனப் பணிகள் அனைத்திற்கும் ஆக்கம் தருகின்ற கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்களுக்கு எங்கள் நன்றி என்றும் உரித்தாகுக.

உரிய காலத்தில் சிறப்பாக அச்சிட்டுத் தந்த 'மீரா' அச்சகத்திற்கு எங்கள் நன்றி.

அன்புள்ள,

ச. வே. சுப்பிரமணியன்

# முன்னுரை

ஒரு சமுதாயத்தின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் அறிய இலக்கியங்கள் துணைசெய்வன. அந்த அடிப்படையில் தமிழர் தம் வாழ்வியலைப் பற்றிய விரிவான செய்திகளைத் தமிழ் இலக்கியங்கள் தருகின்றன. எனினும் வரலாற்று நூலைப் போலச் செய்திகள் அனைத்தும் வரன் முறையாகக் கூறப்படுதலை இலக்கியங்களில் எதிர்ப்பார்த்தல் இயலாது. இலக்கியத்தில் ஓரிடத்தில் ஒரு செய்தி வெளிப்படையாகக் கூறப்பெறவில்லை. என்பதற்காக வேறு இடங்களிலிருந்து இலைமறை காயாகப் புலப்படும் உண்மைகளை மறுத்தல் ஆகாது. பற்பல இலக்கியங்களிலிருந்து கிடைக்கும் செய்திகளைத் தொகுத்து ஒரு நிகழ்ச்சியின் முழுநிலையைக் காண முயல்வதே ஏற்புடைத்தாகும்.

நயத்தக்க நாகரிகம் பேணும் தமிழர் வாழ்வில் ஓர் ஆணும் பெண்ணும் ஒன்றிணைந்து வாழ எண்ணியபோது ஒழுங்குநிலை உருவாகியது. அவ்வாறு ஒன்றுபட்டு வாழ எண்ணும் ஓர் ஆணும் பெண்ணும் தம்மைச் சார்ந்தவர்களும் தமது இணைப்பினால் ஒன்றுபட வேண்டும் என்று எண்ணியபோது அவரவர்க்கு ஏற்ற மணமுறைகள் தோன்றலாயின. அன்றிலிருந்து இன்றுவரை தமிழர் திருமண முறை குறித்த செய்திகளை அறியத் தமிழ் இலக்கியங்கள் பெரிதும் துணைபுரிகின்றன. எனவே இலக்கியங்கள் தோன்றிய கால வரையறைப்படி அவ்வக்காலத் தமிழர் திருமண முறைகளைத் தொகுத்தும் வகுத்தும் காண்பதே முறையாகும்.

'தமிழர் திருமணம்' என்னும் இந்நூல் பத்துப் பிரிவுகளாகப் பகுக்கப்பட்டு அமைந்துள்ளது. முதல் நிலையில் தமிழர் என்பவர் யார், அவர்கள் வாழ்ந்த இடம், பழக்கவழக்கங்கள் ஆகியன குறித்து மிகச் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

பின்னர் திருமணம் என்ற சொல்லுக்குப் பல அறிஞர்கள் கூறும் விளக்கங்கள் தரப்பட்டு, அச்சொல்லுக்கு வழங்கும் வேறு பெயர்கள், மணப்பொருத்தம், வயது, திருமணம் நடைபெறுமிடம், காலம், பொழுது என்பவை இலக்கிய ஆதாரங்களுடன் விளக்கப்பட்டுள்ளன.

தொல்காப்பியங் காட்டும் திருமண முறையில்' இயற்கையோடு இயைந்து வாழ்ந்த தமிழர் மேற்கொண்ட களவுமணம், கற்புமணம் விளக்கப்பட்டு, பலர் அறியத் திருமணம் நடைபெறக் காரணம் என்ன என்பது கூறப்பட்டு, அவற்றுடன் எண்வகை ஆரியமணம் எவை என்பதன் விளக்கமும் இடம்பெறுகிறது.

'சங்காலத் திருமணம் என்ற தலைப்பில் அக்காலத்தில் வழக்கிலிருந்த திருமண வகைகள் எவை எவை என்பது கூறப்பட்டு அவை ஒவ்வொன்றும் சான்றுடன் விளக்கப்பட்டுள்ளன. சங்க காலத்தில் நடைபெற்ற திருமணம் பிறர் கலப்பற்ற தூய தமிழர் திருமணம் என்பதும் விளக்கப்பட்டுள்ளது.

சிலப்பதிகார காலத்தில் பழந்தமிழர் போற்றிய திருமண முறையோடு ஆரியர் மணமுறைகள் ஆதிக்கம் பெறத் தொடங்கின. தமிழர் திருமணம் என்ற அடிப்படையில் நோக்குகையில் சிலப்பதிகார காலத்தில் நாகரிகம் பெற்ற சமூகத்தில் நடைபெற்ற மணங்கள் எல்லாம் வேதமுறையை ஒட்டிய வைதிக மணங்களாகவே நடைபெற்றிருத்தல் வேண்டும். சிலப்பதிகாரத்தில் திருமணவினையில் வருணிக்கப்படும் சடங்குகள் இன்று நடைமுறையிலிருக்கும் திருமணச் சடங்குகளை ஒட்டியே காணப்படுகின்றன. இரட்டைக் காப்பியங்களுள் ஒன்றான மணிமேகலையில் உறவுமுறைத் திருமணம் பற்றிய குறிப்பே காணப்படுகிறது. இதற்கு முக்கிய காரணங்கள் தம்முடைய செல்வம் தங்குடியிலேயே எக்காலத்தும் இருக்க வேண்டும் என்பதும் வருணப் பாகுபாடும், குலப்பாகுபாடும் என்றும் அழியாமல் இருக்கவேண்டும் என்பதுமேயாகும். உறவு முறையில் கொள்வதும் கொடுப்பதும் இன்றும் தமிழரிடையே வழக்கிலிருப்பதைக் காணலாம்.

இடைக்காலத் திருமண முறைகள் என்ற பிரிவில் கி.பி. 6ஆம் நூற்றாண்டு முதல் கி.பி, 13ஆம் நூற்றாண்டு முடிய உள்ள காலப்பகுதியில் தோன்றிய நாயன்மார், ஆழ்வார் பாடல்கள், பெருங்கதை, சூளாமணி, சிந்தாமணி, பெரியபுராணம், கம்பராமாயணம், நளவெண்பா போன்ற சிறந்த இலக்கியங்களின் துணைகொண்டு அவற்றில் இடம்பெற்றுள்ள திருமணம் குறித்த செய்திகள் அவற்றில் கூறப்பட்டுள்ள முறைப்படியே தொகுத்துத் தரப்பட்டுள்ளன. சங்க காலத்தில் பல்வேறு வகைப்பட்ட திருமணங்கள் காணப்பட்டதைப் போலவே இடைக்காலத்திலும் பலவகையான திருமண முறைகள் காணப்படுகின்றன. இவற்றுள் சூளாமணி இலக்கியத்தில் வடநாட்டுக்கே உரிய சுயம்வரமணம்

முதன்முதலாக இடம்பெற்றுள்ளதைக் காணலாம். மேலும் மேற் கூறிய ஒவ்வொரு இலக்கியத்திலும் ஒவ்வொரு புதுப்புது சடங்கு இடம் பெறுவதை அறிய முடிகிறது. கந்தபுராணம் போன்ற தெய்விக நூல்களில் இறைவன் இறைவியர் திருமண நிகழ்ச்சியைக் கூறும்பொழுது ஆசிரியர் திருமணச் சடங்குகளின் முக்கியத்துவம் புலப்படுமாறு பாடியுள்ளதைக் காணலாம்.

'பிற்காலத் தமிழர் திருமண முறைகள்' என்ற பிரிவில் கி.பி. 14-ஆம் நூற்றாண்டு முதல் 19-ஆம் நூற்றாண்டிற்கு இடைப்பட்ட காலத்தில் எழுந்த வில்லிபாரதம், அரிச்சந்திரபுராணம், பேரூர்ப்புராணம் ஆகியவற்றோடு பழமொழி, சுவடி, பாரதிதாசன் கவிதைகள் ஆகியவற்றில் காணப்படும் திருமணமுறைகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இவற்றுள் சுவடியினின்றும் எடுக்கப்பட்ட திருமணமுறை எனும் பாடற்பகுதி இந்நூலின் பிற்பகுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.

நாகரிக முன்னேற்றங் கண்ட இக்காலத்தில் திருமண நிகழ்ச்சியில் பல சீர்திருத்தங்கள் தோன்றின. சிலப்பதிகார காலத்தில் தோன்றிப் படிப்படியாக வளர்ச்சியடைந்து நடைபெற்றுவரும் வைதிகநெறித் திருமண முறையுடன் தமிழ்த் திருமணம், சுயமரியாதைத் திருமணம் என்ற சீர்திருத்தத் திருமணங்கள் இந்நாளில் மக்களால் மேற்கொள்ளப்படுகின்றன. சூளாமணி காப்பியத்தில் காணப்படும் சுயம்வரத் திருமணம் இன்று நவீன சுயம் வரத் திருமணமாக ஒவ்வொரு வகுப்பினரிடையே நடைபெறுவதைக் காண்கிறோம். 'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம்' என்றனர் தொல்காப்பியனார். இன்று அதையே உறுதி செய்யும் வகையில் பதிவுத் திருமணம் நடைபெறுகின்றது. இவை எல்லாவற்றிற்கும் மேலாக ஏழைகள் வாழ்விலும் வசந்தம் வீசும் வகையில் திருமணத்திற்குத் தேவையான பொருட்கள் இலவசமாகத் தரப்பெற்று தொகைத் திருமணங்கள் ஆங்காங்கே நடைபெற்று வருவதைக் காண்கிறோம்.

திருமணச் சடங்குகள் என்ற பிரிவில் சடங்குகளின் முக்கியத்துவம் கூறப்பெற்று, வைதிகநெறித் திருமணங்களில் பின்பற்றப்படும் சடங்குகள் என்னென்ன, அவை நடத்தப்பெறும் விதம், அவற்றை விளக்கும் இலக்கியச் சான்றுகள் ஆகியவை இடம் பெற்றுள்ளன. இச்சடங்குகள் இக்காலத்திலுள்ள சாதி அடிப்படையில் நோக்கும் பொழுது சிறுசிறு மாற்றங்கள் இருத்தல் கூடும்.

திருமணச் சின்னம் என்பதில் அன்றும் இன்றும் தமிழர் வாழ்வில் திருப்புமையமாக அமையும் திருமணம் நடந்ததற்கான அடையாளம் ஏதேனும் உண்டா? அது எது? என்ற வினாவிற்கு அமையக் கூடிய விடை இன்றும் ஆய்வுக்குரிய ஒன்றாகவே இருந்து வருகிறதுஎனினும் இலக்கியச் சான்றுகளின் துணைகொண்டு சங்க காலம் முதற்கொண்டே தமிழரிடையே தாலி அணியும் பழக்கம் இருந்துவருகிறது என்ற கருத்தை ஓரளவு நிறுவ முயன்றுள்ளேன். மேலும் கல்வெட்டுகள், சிற்பம், ஓவியம் ஆகியவற்றை ஆராய்ந்து பார்த்தால் இப்பழக்கம் எக்காலத்துத் தோன்றியது என்பதற்கான ஆதாரம் ஏதாகிலும் கிடைத்தற்கூடும்.

பின்னிணைப்பாக இந்நூல் எழுதுவதற்கு உறுதுணையாகப் பயன்பட்ட இலக்கியச் சான்றுகள் காலவரையறைப்படி, தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இவற்றுடன் சுவடியில் கண்ட 'திருமண் முறை' என்ற பாடல் சுவடியில் உள்ளதைப் போலவே சேர்க்கப்பட்டுள்ளது. இறுதியாக இக்காலத்தில் வைதிக நெறி முறைப்படி நடைபெறும் திருமணத்தின் போது பாடப்பெறும் 'திருமணப் பாடல்கள்' சில இடம்பெறுகின்றன.

மக்கட் சமுதாயத்திற்குப் பயன்படக் கூடிய ஆய்வு நூல்கள் தொகுப்பு நூல்கள் பல தமிழில் மேன்மேலும் வெளிவரவேண்டும் என்ற பேரார்வத்துடன் பணியாற்றிவரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், பேராசிரியர் டாக்டர் ச.வே. சுப்பிரமணியன் அவர்களின் அயராத உழைப்பினால் வெளிவந்த நூல்கள் பல. அவற்றுடன் ஒன்றாக இணையும் இத்தமிழர் திருமணம் என்ற நூல் வெளிவருவதற்கான பெருமையும் அவர்களையே சாரும். என்னை மிகவும் ஊக்கப்படுத்தி இந்நூல் அமையப் பெரிதும் உதவிய அவர்கட்கு என் மனமார்ந்த நன்றியை நவில்கின்றேன்.

திருமணமுறை என்ற பாடற்பகுதியை இந்நூலில் சேர்த்து அச்சிட்டு வெளியிட இசைவு நல்கிய அரசினர் கீழ்த்திசை சுவடிகள் காப்பக நூலகருக்குப் பெரிதும் நன்றி உடையேன். இந்நூல் உருவாக்கத்திற்கு உதவிய அனைவர்க்கும் என் நன்றி உரித்தாகும்.

இந்நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டளித்த மீரா அச்சக உரிமையாளருக்கும் அங்குப் பணிபுரியும் அனைவர்க்கும் மிகவும் நன்றி உடையேன்.

டாக்டர் சசிவல்லி

# தமிழும் தமிழரும்

## தமிழ்மொழி :

தமிழ் நாட்டைத் தாயகமாகக் கொண்ட மக்களால் பேசப்படும் மொழி தமிழ்மொழி. இம்மொழி இலக்கணத்திற்கு உட்பட்ட திருந்திய மொழி. தமிழ்ச்சொற்கள் பேசுதற்கு எளிமையும் கேட்பதற்கு இனிமையும் உடையன. தமிழ்மொழி தன்னிடத்துள்ள சொற்களுக்கு வேண்டும் எழுத்துக்களையும், அவற்றிற்குரிய ஒலிகளையும் கொண்டு பேசப்பட்டும் எழுதப்பட்டும் வருகிறது.

தமிழ்மொழி, தமிழ்நாட்டில் இயற்கையோடு கூடிய நிலமும் பொழுதுமாகிய முதற்பொருளுக்கும், மரம், புள், விலங்கு போன்ற இயற்கைக் கருப்பொருளுக்கும், புணர்தல், பிரிதல் போன்ற உரிப்பொருள்களுக்கும், தமிழர் கண்டறிந்த எழுத்துக்களுக்கும், சொற்களுக்கும், தமிழ்ச்சொற்களால் பெயர்கொடுத்தும். எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம் ஆகியவற்றையும் கூறுகிறது. இவற்றுள் பொருளிலக்கணத்தில் கூறப்படும் அகப்பொருள் இலக்கணமும், புறப்பொருள் இலக்கணமும் தமிழ்மொழிக்கே சிறப்பாக உள்ள இலக்கணங்களாகும்.

தமிழ்மொழி எழுத்துக்களுக்குப் பிறப்புக் கூறும் முறையையும், எழுத்துக்களுக்குக் குறுக்கங்கள் கூறும் முறையையும், அளபடை கூறும் முறையையும், தமிழ்மொழி தனக்கே சிறப்பாகக் கொண்டு விளங்குகிறது.

தமிழ்மொழி தன்னைப் பேணி வளர்த்த பண்டை மக்களையும், மன்னர்களையும், புலவர்களையும், பாணர், கூத்தர் போன்றோரையும் அவர்களுடைய உணவு, உடை, அணிகலன்களையும், அவர்களுடைய வாழ்க்கையையும், பெருமையையும், பிற்கால மக்களுக்கு எடுத்துரைக்கின்றது. தமிழ் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்று மூவகையில் கூறப்படுகிறது.

**தமிழ்நாடு:**

தமிழ்நாடு தென்னாசியாவில் பாரத நாட்டில் தென்பகுதியில் உள்ள நாடு. தமிழ்மொழி பேசப்படும் இந்நாட்டிற்குத் தமிழ் நாடு என்று பெயர் அமைந்தது. இதுவே தமிழகம் எனப்பட்டது. பழைய இலக்கியங்கள் இந்நாட்டைத் தமிழகம் என்றே வழங்கி யுள்ளன, 'வையக வரைப்பின் தமிழகம் கேட்ப'. (புறம்:168)

பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திற்குச் சிறப்புப் பாயிரம் பாடிய பனம்பாரனார் என்பார், தமிழ் வழங்கும் நாட்டைக் குறிப்பிடும் பொழுது, 'வடவேங்கடந் தென் குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்,' என்று குறிப் பிட்டுள்ளார். கடல்கோளுக்குப்பின் தமிழ்நாடு. வடவேங்கடம், தென்குமரி என்ற எல்லையில் அமைந்தது. கிழக்கும், மேற்கும் கடல்கள். வேங்கடமலையை வடக்கிலும், குமரியைத் தெற் கிலும் எல்லையாகக் கொண்ட தமிழ்நாடு குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐவகை நிலங்களைக் கொண்டது ஐவகை நிலங்களும் இயற்கை வகையால் அமைந்த நிலத்தாலும், மரஞ்செடி கொடிகளாலும், விலங்கு பறவை களாலும், மக்களாலும், தொழிலாலும் சிறுசிறு வேறுபாடு களைக் கொண்டன, இந்த எல்லைக்குட்பட்ட தமிழ் நாட்டைச் சேர, சோழ பாண்டியர் என்ற தமிழ் மன்னர்கள் பழங்காலந் தொட்டு ஆண்டனர். தமிழ் நாட்டின் மேற்குப்பகுதி சேர நாடாகவும், வடக்கும் வடகீழ்ப்பகுதியும் சோழ நாடாகவும், தென்கீழ்ப்பகுதி பாண்டி நாடாகவும் பிரிக்கப்பட்டிருந்தன. சேர நாட்டை ஆன்பொருநையும் பேராறும்; சோழநாட்டைக் காவிரி யும், பாண்டிய நாட்டை வைகையும் வளம்படுத்தின,

சேரநாட்டுள் கொங்குநாடு என்ற உப்பிரிவும், சோழநாட் டில் தொண்டைநாடு என்ற பிரிவும், பாண்டியநாட்டில் தென்பாண்டி நாடும் இருந்தன இப்பெரும் பிரிவுகளன்றி பழைய காலத்தே தமிழ்நாடு செந்தமிழ்சேர் பன்னிரு நாடாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பர் இந்தப் பிரிவுகளேயன்றி நாட்டு ஆட்சி முறைக்காக ஒவ்வொரு நாடும் பல்வேறு பிரிவுகளாகப் பிரிந்திருந்தன கூற்றம், வட்டம் போன்ற பிரிவுகளும் பிற் காலத்தே அமைந்தன. இவையேயன்றி தமிழ்நாட்டு மூவேந்தரு டன் ஆங்காங்குச் சிற்றரசர் ஆண்ட நாடுகள் தனித்தனியாகப் பிரிக்கப்பட்டு எல்லை வகுப்பட்டன.

**தமிழர் :**

தென்னிந்தியாவில் மிகப்பழங்காலத்தில் வாழ்ந்த மக்கள் தமிழர் என்று குறிக்கப்பட்டதோடு வரலாற்றுத் தெளிவு கருதித் திராவிடர் என்ற பெயராலும் வழங்கப்பட்டனர். வடநூலார் தமிழரைத் திராவிடர் என்று வழங்கினர்.[1] தமிழ்நாட்டில் பிறந்து தமிழைத் தாய் மொழியாகக் கொண்டு பேசும் மக்கள் தமிழரே ஆவர். அவர்கள் வாழ்ந்த தமிழ்நாட்டில் இயற்கையின் அமைந்த குறிஞ்சி, முல்லை. மருதம், நெய்தல் பாலை நிலங்களிலுள்ள நன்செய், புன்செய்களை உழுது பயிரிட்டு உணவுப் பொருட்களைக் கொண்டனர். குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த தமிழர் மலையும் மலைசார்ந்த இடங்களிலும் கிடைக்கக் கூடிய தினை, தேன், கிழங்கு, பறவை, விலங்குகளின் ஊன் ஆகியவற்றை உண்டனர். முல்லை நிலத்தார் காட்டைச் சார்ந்த பகுதியில் வரகைப் பயிரிட்டு அதனின்று கிடைத்த உணவுப் பொருளையும், பால், நெய், தயிர் ஆகியவற்றையும் உணவாகக் கொண்டனர். மருதநிலத்தில் நெல்லைப் பயிரிட்டு உண்டனர். நெய்தல் நிலத்து மக்கள் கடலில் கிடைத்த மீன், உப்பு ஆகியவற்றை விற்றுக் கிடைத்த பொருட்களையும் உண்டனர். முல்லையும் குறிஞ்சியும் திரிந்த இடமாகிய பாலை நிலத்தில் விலங்கு, பறவைகளை வேட்டையாடி உண்டனர். தமிழர்களில் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் குறவரென்றும், முல்லை நிலத்தார் இடையார் என்றும், மருத நிலத்தில் வாழ்ந்த மக்கள் உழவர் என்றும், நெய்தல் நிலத்தவர் பரதர் என்றும், பாலை வாழ்மக்கள் வேடர் என்றும் பெயரிடப் பெற்றனர். ஐந்நிலத்து வாழ்ந்த மக்களுடைய வாழ்க்கையைப் பண்டைத் தமிழ் நூல்கள் விரித்துக் கூறுகின்றன.

தமிழருள் ஆடவன், புலிப்போத்தன்ன புல்லணற் காளை, (பெரும்பா : 138) என்று கூறப்படுகின்றான். மகளிர் கொல்லி மலையிலுள்ள கடவுள் எழுதிய பாவை போன்றவர்கள். மடப்பத்தால் சிறந்த மாமைக் கவினுடையவர்கள். தமிழருள் சிறுவர்கள் கழுத்தில் புலிப்பல்தாலி அணிந்தனர். சிறுமியர் தினைப் புனத்தில் ஊசலாடினர், பந்தாடினர். பாவைகளை மணமக்களாக்கி அவற்றிற்கு மணஞ்செய்வித்து விளையாடினர், (கலி:59: 18 : 21) தைந்நீராடி நோன்பு நோற்றனர்.

---

1. பக். 510 கலைக்களஞ்சியம். தொகுதி 5

தமிழ் நாட்டிலுள்ள மலைகளையும் அவற்றை அடுத்த ஊர் களையும் தமிழர்களுள் சிற்றரசர்கள் ஆண்டனர். குறிஞ்சி முல்லை, மருதம், நெய்தல் என்ற நானிலங்களாலும் சிறந்து விளங்கிய பெருநாடாகிய சேரநாட்டைச் சேரமன்னர்களும், சோழ நாட்டைச் சோழ மன்னர்களும், பாண்டிய நாட்டைப் பாண்டிய மன்னர்களும் அரசாண்டனர். நானிலங்களிலும் முந்நாடுகளிலும் அவரவர்களுக்குரிய ஊர்களையும், மலைகளை யும், நாட்டையும் ஆட்சி செய்த குறுநில மன்னர்களும் நானிலத்து மக்களாகிய தமிழரேயாவர்.

வரலாற்றுக்கு எட்டாத காலம் முதல் தமிழ்நாட்டில் சேரர், சோழர், பாண்டியர் என்ற மூவேந்தர் மரபுகள் இருந்து வந்தன. தமிழ் மன்னர்கள் நாட்டின் உயிர் போல் போற்றி மதிக்கப் பட்டார்கள். அதற்குக் காரணம் அம்மன்னர்கள் குடிதழீஇக் கோலோச்சியமையே ஆகும். குடிமக்களுக்கு வேண்டிய உணவுப் பொருட்களை விளைவித்தலில் கருத்தாக இருந்து நீர்நிலை களை ஏற்படுத்தி நன்செய் வளம் பெருகச் செய்தனர். புலவர், பாணர், கூத்தர், விறலியர் ஆகியோரைப் போற்றிப் பரிசு அளித்ததின் வாயிலாக இயல், இசை, நாடகங்களை வளர்த்துக் கலைவளம் பெருக்கினர். குடிமக்களும் போர்க்காலத்தில் ஒன்று பட்டு வீரராய்த் திரண்டு தலைவரின் ஆணைப்படி நடந்து போர் செய்து நாட்டைக் காத்தனர்,

பழிக்கு இடம் இல்லாமல் செங்கோல் செலுத்தி ஆளவேண் டும் என்ற குறிக்கோள் தமிழ் வேந்தர் அனைவர்க்கும் பொது வாக இருந்தது. நாட்டைக் காப்பதற்கு திட்டங்கள் வகுத்துப் பொறுப்பானவர்களை ஏற்படுத்தி முறையாகக் காதல் அரசின் கடமையாகக் கருதினர். வடநாட்டு அரசரிடையிலும் கிரேக்க, ரோம மன்னர்களிடையிலும் தமிழ் வேந்தர்கள் மதிப்புப் பெற்று விளங்கினர்.

தமிழர்களுள் ஒருவனும் ஒருத்தியும் காதல் கொண்டு மணந்து வாழும் வாழ்க்கை மதித்துப் போற்றப்பட்டு வந்தது. குடும்ப வாழ்விற்குப் பழங்காலத்தில் இருந்துவந்த மதிப்பப் பெரிது. கற்பு நெறியில் நின்று, இல்வாழ்க்கை நடத்தி' விருந் தோம்பி, மக்களைப் பெற்று வளர்த்திடும் மனைவி மனைக்கு விளக்காக மதிக்கப்பட்டாள். பழந்தமிழர்களுக்கு அறத்திலிருந்த நம்பிக்கை மிகப்பெரியது. தீமை செய்தவர்கள் அறத்தின் ஒறுத் தலுக்குத் தப்ப முடியாது என்று நம்பினர். போர்க்களத்திலும்

அறநெறி பிறழாமல் பேரிட்டனர். போர்க்காலத்தில் ஆடவர்க்கு மட்டும் அல்லாமல் மகளிர்க்கும் வீர உணர்ச்சி இருந்தது.

ஒவ்வோர் ஊரிலும் ஊர்ப்பெருமக்கள் கூடி ஊரின் நலனை நாடி ஒரு பொதுமன்றம் அமைத்தனர். ஊராரிடையே வழக்கு நேர்ந்த பொழுது மன்ற உறுப்பினரே வழக்கைக் கேட்டு நீதி வழங்கினார். இதேபோல் நகர மக்களுக்குள் வழக்கு நேரும்போது வழக்கைக் கேட்டு நீதி வழங்கினர். இதேபோல் நகர மக்களுக்குள் வழக்கு நேரும்போது வழக்கைக் கேட்டுத் தீர்ப்புக் கூறுவதற்கு அறங்கூறவையம் இருந்தது.

தமிழர் வாணிகத் துறையில் சிறந்து விளங்கினார். தமிழர் மரக்கலங்களில் சென்று பல நாடுகளிலும் வாணிகத்துறையில் முன்னேறி இருந்தனர். தமிழரிடைய இத்துறையில் நேர்மையும் நியாயமும் இருந்தன.

உழவுத் தொழிலும், நெசவுத் தொழிலும் நாட்டின் இரு கண்கள் போல் போற்றப்பட்டு வந்தன. மிக நுண்ணிய வேலைப்பாடு அமைந்த அணிகலன்களை அக்காலத் தமிழர் செய்தனர்.

தமிழரிடையே தொழில் வகையால் பாகுபாடு இருந்ததே தவிர, பிறப்புப்பற்றி சாதிப் பாகுபாடு இருந்ததில்லை. எல்லாக் குடியினர் தத்தம் தொழிலைக் கற்றது போலவே நூல்கள் பலவற்றைக் கற்று அறிவு வளர்த்தனர். கல்வித்துறையில் ஆண், பெண் இருபாலாரும் வேறுபாடின்றி கற்றுப்புலமை பெற்றனர்.

தமிழ்மகன் ஒவ்வொருவனும் தானே முயன்று பொருள் தேடுவது கடமை என்று எண்ணினன். ஒருவன் தன் திருமணத்திற்கான பொருளையும் தானே தேடிச் சேர்த்தலைக் கடமையாகக் கொண்டான். திருமணத்திற்குப் பின்பும் பொருள் தேவை ஏற்பட்டபோது மனைவியினைப் பிரிந்து பிறநாட்டிற்குச் சென்று பொருளீட்டி வரும் முயற்சி இருந்தது.

இசை, நடனம் ஆகிய கலைகள் நாடெங்கும் ஊரெங்கும் போற்றப்பட்டு வந்தன. அக்கலைகளில் தேர்ந்த பாணர், கூத்தர் (விறலியர்) என்னும் மரபுகளும் தனியே விளங்கி வந்தன. ஓவியம், சிற்பம் முதலிய கலைகளும் போற்றப்பட்டன. பழந்தமிழர் கலையுணர்ச்சி உள்ளவர்களாதலால் அவர்கள் செய்த மட்பாண்டம், செப்புப் பாத்திரம், அணிகலன்கள் எல்லாவற்றிலும் தம் கலையுணர்ச்சியைப் புலப்படுத்தினர்.

பலவகை விளையாட்டுக்கள் தமிழரிடையே தோன்று தொட்டு இருந்து வருகின்றன. ஆடவரும் பெண்டிரும் ஆற்றிலும் குளத்திலும் நீர் விளையாட்டை மேற்கொண்டு மகிழ்ந்தனர். ஆடவர் குதிரைச்சவாரி யானையேற்றம், மற்போர் சிலம்பப் பயிற்சி முதலியவைகளில் பழகித் தேர்ந்தனர்.

தமிழர் கடவுள் உண்டு என்ற கொள்கை உடையவராக இருந்தனர். சிவபெருமான், திருமால், கொற்றவை, முருகன் வழிபாடு இருந்து. கோட்டம் அல்லது நகர் என்னும் பெயரால் கோயில்கள் இருந்தன. தெய்வம் ஏறி ஆடும் வழக்கம் வெறியாடல் என்ற பெயரால் இருந்தது. சிறு தெய்வங்கள் பல போற்றப்பட்டன. குறமகளிர் தலைவிக்கும் தலைவனுக்கும் மணமாதற் பொருட்டு முருகனைப் பாடிக் குரவையாடினர். ஊழ்வினையில் தமிழர் நம்பிக்கைக் கொண்டிருந்தனர்.

பலவகையான திருவிழாக்கள் அக்காலத்தில் வழக்கில் இருந்தன. தெய்வத் திருவிழாக்கள் சிற்றூர்களிலும் பெரிய நகரங்களிலும் இருந்தன- விழாக்களில் கலைநிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன.

பழந்தமிழரின் இல்லற வாழ்க்கை இன்பம் நிறைந்ததாக இருந்தது. விருந்தினரை வரவேற்று உபசரிக்கும் உயரிய பண்பு தமிழரிடையே தனிக்கலையாக வளர்ந்திருந்தது. இல்லற வாழ்க்கை என்பது குடும்பத்தார் மட்டும் சிறப்புடன் வாழ்தல் என்ற குறுகிய நோக்குடன் இல்லாது விருந்தினரை உபசரித்து, மற்றவர்க்கும் உதவியாக வாழ்வதற்கே என்ற சிறந்த சமுதாய நலன் தமிழர் வாழ்க்கையில் இருந்தது. இத்தகைய நல்லறமாகிய இல்லறத்தை மேற்கொள்ள ஓர் ஆணும் ஒரு பெண்ணும் இணைந்து வாழத் தொடங்கும் நன்னாளே திருமணநாள் எனப் பெறும். இவ்வாறு இல்லறத்தின் நுழை வாயிலாக அமைவது திருமணம். தமிழ் எவ்வளவு இனிய மொழியோ, தமிழர் எவ்வளவு நல்லுள்ளங் கொண்டவர்களோ அவ்வளவு ஏற்றங் கொண்டது தமிழர் திருமணம்.

# திருமணம்

**சொல்லும் பொருளும் :**

'திருமணம்' என்பது இன்பந்தரும் ஓர் இனியசொல். இச்சொல் தங்கள் செவிகளில் கேட்டதுமே ஆண் பெண் இருபாலார் உள்ளத்திலேயும் ஒருவித இனிய உணர்வு, பூரிப்பு, புத்துணர்ச்சி பழைய இனிய நினைவுகள், புதுக்கனவு எழாமல் இருப்பதில்லை. 'செந்தமிழ்நாடு எனும் போதினிலே இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே' என்பர் பாரதியார். அதைப் போலத் திருமணம் என்ற சொல்லைக் கேட்டவுடன் இனிய உணர்வலைகளை எழுப்புகின்ற இச்சொல்லின் ஆழ்பொருள் என்ன? இது ஒரு சாதாரணச் சடங்கா? ஆன்றோர் இச்சொல்லுக்குத் தரும் விளக்கம் என்ன? அன்று தொட்டு இன்றுவரை 'திருமணம்' என்ற சொல் எவ்வெப் பெயரால் குறிக்கப்பெற்று வந்துள்ளது? திருமணம் நடக்கும் இடம், காலம், மணப்பொருத்தம் ஆகியன குறித்தும் விளக்க முயல்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

'திருமணம்' என்ற சொல்லை நாம் திரு+மணம் எனப்பிரிக்கலாம். மணம் என்பதே தமிழரின் பழைய மரபுதான், ஒரு கன்னிப் பெண்ணின் கூந்தலிலே மலர் சூட்டி அவளை ஊரும் உறவும் அறியத் தன் மனத்திற்கு இனியாளாக, வாழ்க்கைத் துணைவியாக ஒருவன் ஏற்றுக்கொள்வதனாலேதான் மணம் திருமணம் என்ற பெயர்கள் அச்சடங்கிற்கு ஏற்பட்டன. இவ்வாறு கணவனும் மனைவியுமாய் வாழத் தொடங்கும் நிகழ்ச்சிக்குத் திருமணம் என்று பெயர் வைத்தமை எண்ணிமகிழ்தற்குரியதாகும் ''திருவென்னுஞ் சொல் அழகு, செல்வம், செம்மை, சிறப்பு முதலிய பொருள் பொதிந்த செல்லாகும். சுருங்கக் கூறின். 'கண்டோரால் விரும்பப் பெறும் தன்மை விளங்குமிடமெல்லாம்' திருவும் பொலிகின்றதென்று சொல்லலாம். மணமென்னுஞ் சொல் நறுநாற்றத்தைக் குறிக்கும். பெரும்பாலும் இயற்கையில் மணங்கமழ்வது மலர்களே ஆகும். அம்மலரும், வைநுனையாய் — சிற்றரும்பாய்-வீயாய் இருக்குங்கால் மணஞ் சிறப்பதில்லை; மலரும் நிலையில் — பெரும் போதாய் நிற்கும் போதுதான் மண மிகுந்து விளங்குகிறது காய்த்துக் கனிந்து

விளங்க மணமிகும் போது பருவமே சிறந்ததாகும் அங்ஙனமே மக்கள் வாழ்விலும் குழவியாய், இளைஞனாய், நரை மூதாளனாய் இருக்கும்நிலை பெருஞ்சிறப்புடையதன்று. மணந்து மகப்பெற்று நாட்டிற்கும் வீட்டிற்கும் நல்லன புரியச் சிறந்து நிற்பது மணப்பருவே ஆகும். இப்பருவத்தில் மலரின்கண் மணம் வெளிப்படுவது போல் மணமக்களின் மனத்தகத்து அன்பு மலரும். இச்சிறப்பு உணர்ந்தே தமிழ் மக்கள், இந் நிகழ்ச்சி (மணவினையை) மணமென மனமுவப்பக் கூறினார். மணமென்பது மணமக்களின் மனமொத்ததாகும். வாழ்வு முழுவதும் மணம் பெற்றுத் திகழ்வதற்கு ஏதுவான இந்நிகழ்ச் சியை மணம் என்று பெயரிட்டமை ஏற்புடைத்தாகும்.[1]

அறிஞர் ஞா. தேவநேயன் அவர்கள், ''ஓர் ஆடவனும் ஒரு பெண்டும் கணவனும் மனைவியுமாக இல்லறம் நடத்த இசைந்து ஒன்று சேருவதே மணமாம். மணத்தல் கலத்தல் அல்லது கூடுதல் மணவாழ்க்கைக்கென்றே இறைவன் மக்களை ஆணும் பெண்ணு மாய்ப் படைத்திருப்பதாலும், அதனிடத்து மிகுந்த அறப்பொறுப் புள்ளமையாலும், அது ஆயிரங்காலத்துப் பயிர் ஆகையாலும் வாழ்க்கைத் துணைவர் இருவரும் தெய்வத்தின் முன் அல்லது தெய்வத்தின் பேரில் பலரறிய ஆணையிட்டுக் கூடுவதாலும் மணம் தெய்வத்தன்மை பெற்றுத் திருமணம் எனப் பெற்றது.''[2] என்பர்.

''திருமணம் இரண்டு தனிப் பட்டவர்களுக்கிடையே நடை பெறும் உடன்படிக்கையன்று, இரண்டு குழக்களிடையே இணைப் பை, நெருக்கத்தை, ஏற்படுத்தும் உறவுத்தளை என்பது நியதி'' என்ற கருத்துடையவர் சி.என் நடராஜன் அவர்கள்.[3] திருமணம் என்பது ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் இணைந்து வாழ்வதற் காகச் சமுதாயத்தால் ஏற்படுத்தப்பட்ட வினைமுறையாகும்.[4] திருமணம் என்பது மனிதனுக்காக மனிதனால் நடத்தப்படும்

---

1. பக். 351. சரவண ஆறுமுக முதலியார் தமிழர் திருமண முறைகள் (கட்டுரை)
2. பக். IV தமிழர் திருமணம்
3. பக். 296 இந்தியப் பல்கலைக்கழகக் தமிழாசிரியர் மன்றம் முதலாவது கருத்தரங்கு 1969.
4. பக்.33 டாக்டர் க. காந்தி தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்

ஒருவகைச் சடங்கு என்பர்[5] திரு. ஏ.எம். சலீம், 'திருமணம் என்பது சமூகத்திலுள்ள ஒரு வகை வழக்கு ஆகும். இது சமூகத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஆண்-பெண் உறவு நிலையைக் குறிக்கிறது. அத்தோடு திருமணம் என்பது ஒரு புதிய சந்ததி தோன்றுவதற்குரிய ஒருவித பிணைப்பு.[6] என்றும் கூறுகிறார். திரு.அ.கி. பரந்தாமனார் அவர்களோ, 'திருமணம் என்பது ஆணும் பெண்ணுமாகிய இருவரை ஒருவராகச் சேர்க்கும் இணைப்பு. நார் ஒழுக்க வேலி. மணம் என்னுஞ் சொல்லுக்குக் கூடுதல் என்பது பொருள்''[7] என்பர். டாக்டர். அம்பேத்கார் அவர்களுடைய கொள்கைப்படி, திருமணம் என்று சொன்னால் ஓர் ஆணும் ஒரு பெண்ணும் கூடி வாழ்க்கை நடத்துவதுதான். அதற்கு ஒரு குறிப்பு இருக்க வேண்டும் என்பதுதானே தவிர மற்றபடி வேறு ஒன்றும் வேண்டியது இல்லை. 'விவாகம் அல்லது திருமணம்' என்று சொல்லப்படுவதெல்லாம் ஒரு ஆணும் பெண்ணும் சேர்ந்து ஒருவர்க்கொருவர் கட்டுப்பட்டு, அவர்களது வாழ்க்கையைக் கூட்டுப்பொறுப்பில் நடத்துவதற்குப் பலர் அறியச் செய்து கொள்ளும் காரியமே ஆகும்.''[8]

வழங்கும் வேறு பெயர்கள்:

இருமணம் இணையும் மணவினை திருமணம் என்ற சொல்லால் சுட்டப்படுகிறது. இன்றைய தமிழ்ச் சமுதாயத்தின் பெரும் பகுதியினர் திருமணத்தைக் கல்யாணம் என்ற சொல்லாலேயே குறிப்பிடுகின்றனர் வடமொழியில் திருமணத்தைக் கலியாணம் என்பர். கல்யாணம் என்பதற்கு மங்களம் என்று பொருள். இச்சொல்லாட்சி தமிழில் இலக்கிய வழக்குப் பெற்றதனைப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் தெரிவிக்கின்றன. இச்சொல்லாட்சி நாலடியாரில் 'கல்யாணம்' (86) என்றும் ஆசாரக் கோவையில் 'கல்யாணம்' (85) கலியாணம் (48) என்றும் பயின்று வந்துள்ளமை கொண்டும் இவ்விரு நூல்களின் காலகட்டத்தில் இச்சொல்லாட்சி வழங்கத் தொடங்கியிருத்தல் வேண்டும்.

---

5. பக். 87 தொகுதி 3. பதினோராவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை
6. பக். 42 இலங்கை முஸ்லிம்களின் திருமண சம்பிரதாயங்கள்
7. வாழ்க்கைக் கலை
8. பக். 184 பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள் பாகம் I

திருமணம் என்ற சொல்லுக்குப் பண்டைத் தமிழரால் வழங்கப்பெற்ற வேறு சொற்கள் எவை எனக்காண்போம். அவை கடி, மணம், மன்றல், வதுவை, வதுவைமணம், வரைவு என்பவையாகும். பொதுவாக இவற்றுள் தொல்காப்பியர் உரிச்சொல்லாக உணர்த்தும் 'கடி' என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் கூறுகிறார். அவற்றுள் நீக்குதல், காப்பு என்றும் பொருள்களோடு பிற்காலத்தில் 'மணம்' என்னும் பொருளும் சேர்த்திருக்கலாம். 'மண்ணுதலாகிய' நீராடுதலாகிய சிறப்பால் மணமும்; மன்றில் நடைபெறும் மாட்சியால் மன்றலும் வரையறை செய்வதால் வரைவும் அமைந்தன எனலாம்.[1] வதிதல் என்பதோடு தொடர்புடையதாகக் கருதி வதுவை என்றசொல் அமைந்ததாகக் கொள்ளலாம்,

சான்றுகள் :

''நாடறி நன்மணம் அயர்கு'' (குறிஞ் 232)
''வதுவை அயர விரும்புதி'' (ஐங். 61-5)
''தொன்றியல் மரபின் மன்றல் அயர'' (அக. 112 : 16)
''வதுவைநன்மணம்'' (அக. 136)

வழங்கப் பெறுமிடங்கள்

மணம் : மது. 578 : குறி 232, வெண்பா-2-3;
பட். 116 : குறுந். 330 5, 347-5, 364-8;
ஐங். 399-2 ; பதிற்று. 21-32 ; பரி. 1-24, 19-89;
கலி. 41-44; 93-11 96-33, 114-17.21;
புறம். 266-5; நாலடி. 25-2; ஐங்.எழு. 15-2;
ஏலாதி. 62-1,
சிலப், 1-44, 5-197. 7-14-1, 7-39-2, 14-131
24-16-4 (2), 24-17-4, 24-18-4 (2)
29-8-3; மணி: 5-35, 22-151. 27-212.

மன்றல்; தொல். 111 89-4
குறி. 21; ஐங். 253-4; பரி. 8-32, 34
அகம். 112-16, 318-8; புறம். 287-11
களவியல். 1.2

---

1. பக். 37 டாக்டர். ந. சஞ்சீவி. மங்கல மனைமாட்சி

வதுவை : தொல், III-170-1; முருகு, 117
மலை. 30; நற். 125-7, 386-10;
ஐங். 61-5, 294-4; பரி. 5-28, 19-7
கலி. 39-37, 52-23, 66-12, 76-20, 98-3, 114-4, 115-20
அகம். 36-12, 46-10. 66-8, 70-8, 206-12, 221-4;
புறம். 372-10

வதுவை நன்மணம் : ஐங். 399-2; அகம் 36-17

வரைவு : தொல்- II-383-2,

III. 105-12, 109-15, 25, 110-1, 112-40 (2), 43,
120-2, 160-1. 221-6; 300-1, 303-1 (பா-பே)
308-1, 380-1, 627-1

பதிற்று. 43-17, 54-8: கலி. 8-16: இகம். 119-4;
குறள். 919-1; பழமொழி. 366-4; சிறுபஞ். 78-1;
களவியல். 16-2, 29-3, 32-1, 34-1, 49-1

கல்யாணம்: நாலடி. 86-2; ஆ. கோவை. 85-1;

கலியாணம்: ஆ. கோவை. 48-1;

திருமணப் பொருத்தம்

திருமணம் பேசுவதற்கு முன்னர் மணமகனுக்கும், மணமகளுக்கும் மணப்பொருத்தம் இருக்கிறதா என்று ஆராய்ந்து பார்க்கின்ற பழக்கத்தை இக்காலத் தமிழரிடையே நாம் காண்கிறோம். இது பிற்காலத்தில் வேற்றினத்தாரால் இடையிலே புகுத்தப்பட்ட வழக்கம் என்று இந்நாளில் நாம் கூறிவருகின்றோம் அப்படியெனின் பழந்தமிழர்கள் திருமணப் பொருத்தம் என்ற ஒன்றையே சிந்திக்கவில்லையா? சங்க இலக்கியங்களைப் படிக்கும் பொழுது களவு மணம் சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டதை அறிகிறோம். எனினும் அக்களவு இருசாராரின் பெற்றோரின் சம்மதத்தோடும் திருமண உறவாக, நிறைவான ஒப்புதலோடும், வாழ்த்தோடும், மணம் பெற வேண்டும் என்பதும் பழந்தமிழர் களின் முடிந்த முடிபாகும். தலைவனும் தலைவியும் களவில் ஈடுபடுவது மட்டுமே வாழ்வாகும் என்று தமிழர் யாருமே என்றும் ஏற்றுக்கொண்டதில்லை என்று ஐயமறக்கூறலாம். இதனைக் கற்

பியல் நூற்பாக்களும், திருக்குறளின் இல்லறவியல் செய்யுட்களும் மற்றும் பிறவும் நன்கு விளக்கும்.

பழைய இலக்கண நூலாக அனைவராலும் ஏற்றுக்கொள்ளப் படும் தொல்காப்பியத்தில்—மெய்ப்பாட்டியலில் இரண்டு அருமை யான நூற்பாக்கள் திருமணப் பொருத்தங்கள் எப்படி அமைய வேண்டும் என்பதையும், எப்படி அமையக்கூடாது என்பதையும் தெளிவாக வரையறுத்துக் கூறுகின்றன. இவற்றின் மூலம் பொருத்தம் பார்க்கும் பழக்கம் மிகப்பழைய தமிழர் வழக்கம் என்பதையும், தொல்காப்பியருக்கு மிகப்பல நூற்றாண்டுகட்கும் முற்படவே தமிழகத்தில் வேரூன்றியிருந்த நல்ல வழக்கங்கள் என் பதையும் தெளிவாகக் காட்டும் அந்நூற்பாக்கள் என்ன கூறுகின் றன என்பதைக் காண்போம்.

பத்துப் பொருத்தங்கள்:

தொல்காப்பியத்தில் இல்லற வாழ்வில் இணையும் தலைவன் தலைவியரிடையே என்னென்ன பொருத்தங்கள் அவசியம் இருக்க வேண்டும் என்று மிகத்தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளன. இப்பொருத்தங்கள் சமுதாயத்தின் நன்மையையும், இல்லறம் மேற்கொள்ளும் மணமக்களின் நல்வாழ்வையும் கருத்திற் கொண் டவை. அன்றைக்குப் போலவே இன்றும், என்றும் யாவருக்கும் பொருந்தக்கூடியவை. அந்த பத்து பொருத்தங்கள் பின்வருமாறு:

''பிறப்பே, குடிமை, ஆண்மை, ஆண்டோடு
உருவு, நிறுத்த, காம வாயில்
நிறையே, அருளே, உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே!''

(தொல். பொருள் 273)

1. **பிறப்பு:** பெருமை சான்ற குடியிலே பிறத்தல் அல்லது தம் தகுதிக்குக் குறையாத குடிப் பிறப்பு உடையவர்களுடன் திருமண உறவு கொள்ளல்.

2. **குடிமை:** பிறந்த குடியினது ஒழுக்கங்களினின்றும் வழுவாமை

3. **ஆண்மை:** முயற்சியோடு செயற்படும் ஊக்கத்தைக் குறிக்கும்.

4. ஆண்டு : பெரும்பாலும் தமிழ் மரபு ஆண் எப்பொழுதும் பெண்ணைவிடப் பெரியவனாக இருத்தல்.

5. உருவம் : இருவரும் உடல் அமைப்பு வளமாக நல்ல நலத்தோடும் அழகோடும் பொருத்தமாக அமைதல்.

6 நிறுத்தகாமவாயில் ; இன்பம் நுகர்வதற்கு வேண்டிய உணர்வும், சக்தியும், அன்பும் இருவரிடமும் சமமாக இருத்தல்.

7. நிறைப்பொருத்தம் : இருவரும் தமது குடும்பச் செய்திகளைப் போற்றிக் காத்தல்.

8. அருள் ; இருவரும் எல்லா உயிரிடமும் அன்புகொண்டவர்களாக இருத்தல்.

9. உணர்வு : வாழும் உலகத்தில் செய்யக் கூடியவை இவை என அறிந்து செய்தல். அதாவது உலகத்தோடு ஒட்ட ஒழுகல் என்று பொருள் அல்லது கணவனும் மனைவியும் ஒத்த உணர்வு(விருப்பு வெறுப்பு) உள்ளவர்களாக அமைதல்.

10. திருப்பொருத்தம் : இருவருமே செல்வநிலையில் சமதகுதி உள்ள குடும்பத்தவராக இருத்தல் சிறந்தது.

இவ்வாறு இந்தப் பத்து நிலைகளிலும் பொருத்தம் பார்த்து இணையும் தலைவர் தலைவியது இல்லறமே இனிய நல்லறமாகும் என்று தொல்காப்பியர் வகுத்துக் கூறியுள்ளார்.

**பொருந்தாத தன்மைகள் பத்து :**

நிம்புரி, கொடுமை வியப்பொடு புறமொழி
வன்சொல் பொச்சாப்பு மடிமையொடு குடிமை
இன்புறல் ஏழைமை மறப்போ டொப்புமை
என்றிவை இன்மை என்மனுர் புலவர்.

1. நிம்புரி : தற்பெருமை கூடாது. இக்குணம் யாரிடத்தில் இருந்தாலும் வாழ்க்கை நலமாக அமையாது.

2. கொடுமை : தீங்கு செய்கின்ற மனப்பான்மை கூடாது

3. வியப்பு : இருவரும் தம்மை ஒருவருவருக்கொருவர் இணையாகக் கருதாமல் தன்னை வியத்தல் கூடாது.

4. புறமொழி : புறங்கூறுமை

5. வன்சொல் : இரக்க உணர்வு இல்லாமல் கடிந்து பேசுதல் கூடாது.

6. பொச்சாப்பு : உறுதியினின்று தளர்ச்சி அடைதல் கூடாது.

7. குடிமை : கணவனோ, மனைவியோ தன் குடிப்பிறப்பை உயர்த்திப் பேசல் கூடாது.

8. ஏழைமை : வருவாய்க்கு ஏற்ப வாழுதல் வறுமை நினைத்து வருந்துதல் கூடாது.

9. மறதி கூடாது.

10. ஒப்புமை : கணவனோ மனைவியோ ஒருவரை ஒருவர் மற்றவரோடு ஒப்பிட்டுப் பேசுதல் கூடாது. இது வீணான ஐயத்திற்கு இடமளிக்கும்.

இவ்வாறு இல்லற வாயிலில் நுழைய இருப்பவர்களிடையே இருக்க வேண்டிய பொருத்தங்களையும்; இருக்கக் கூடாத தன்மைகளையும் தொல்காப்பியம் வரையறுத்துக் கூறியுள்ளது. எனவே திருமணம் என்னும் சமுதாய விழாவினை ஓர் ஆண் பெண் இருவரின் இல்லறவாழ்விற்குத் தொடக்க விழாவாக ஊரும் உறவும் அறியச் செய்வது என்று வகுத்த காலத்திலேயே அந்த உறவு நீடித்து நிலைப்பதற்கான பொருத்தங்களையும் பார்த்தே இருவரையும் இணைக்கும் வழக்கத்தையும் தமிழ்ச் சமுதாயம் வகுத்து விட்டது.

---

இன்றைய நாளில் வைதிக நெறி திருமணத்தில் மணமக்களுக்கிடையே விவாக தசவித பொருத்தங்கள் பார்ப்பது வழக்கம் அவையாவன தினம், கணம், மஹேந்திரம், ஸ்திரீ தீர்க்கம், யோனி, ராசி, வசியம், ரஜ்ஜு, வேதை, நாடிப் பொருத்தம் என்பன.

திருமண காலமும் பொழுதும் :

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த பண்டைத் தமிழர் இயற்கைக் கூறுகளின் செயற்பாடு கொண்டே தங்களது செயல்களைச் செய்யத் தொடங்கினர். திருமணத்திற்குரிய காலமாகப் பண்டைத் தமிழர் வேங்கை மலரும் இளவேனிற் காலத்தையே கொண்டனர் என்பதை "வேங்கை தந்த வெற்பணி நன்னாள்" (நற் :369 :3) என்ற பாடலடியால் உணரலாம்.

திருமணவினை மேற்கொள்ளும் நற்பொழுதாக மிக்க இருள் நீங்கிய அழகுடைய விடியற்காலத்தையும்; திங்கள் உரோகிணியுடன் சேர்ந்த நாளையும் சிறப்பாகக் கொண்டனர்.

> "கனையிருள் அகன்ற கவின்பெறு காலைக்
> கோள்கால் நீங்கிய கொடுவெண் டிங்கள்
> கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென" (அகம்.86:5:8)

மேற்கூறிய சான்றுகளினின்றும் பண்டைத் தமிழர் இளவேனிற் காலத்தையும், திங்கள் உரோகிணியுடன் கூடிய நாளையும், இனிய காலைப் பொழுதையும் மணவினைக்குரிய பொழுதுகளாகப் போற்றியமை புலனாகின்றது.

நாளடைவில் இவற்றிலும் சில மாற்றங்கள் அவரவரது குலத்திற்கு ஏற்றவாறு அமைந்தன. பொதுவாக கொங்கு வேளாளர் சித்திரை மாதத்தில் திருமணம் நடத்துவதுஇல்லை. இப்பொழுதுகூட அநேக இனத்தவர்கள் ஆடி மார்கழி மாதங்களில் திருமணம் நடத்துவதில்லை. பெருவாரியான திருமணங்களை வைகாசி, ஆனி, ஆவணி மாதங்களில் நடத்துகின்றனர். மற்ற மாதங்களில் அவ்வளவாக நடைபெறுவதில்லை. இதற்குக் காரணம் இம்மாதங்களில் பருவநிலை சிறிது பக்குவமாக இருக்கும். மேலும் திருமண வினைக்கு வேண்டிய மணமுள்ள மல்லிகை மலர் இம்மாதங்களில் ஏராளமாகக் கிடைக்கும்.

ஒரு சிலர் கால நெருக்கடியை மனத்தில் கொண்டு ஆடி மாதத்தில்கூடத் திருமணங்களை வைத்துக்கொள்வதுண்டு. தற்காலத்தில் சீர்திருத்த மணங்கள் வழக்கில் வந்த பிறகு நாளென் செயும் கோள் என்செயும் எனத் துணிந்து திருமணம் செய்வதற்குப் பொருத்தமான அதாவது எல்லோர்க்கும் வசதியான நாளில், நேரத்தில் திருமணம் நடத்துகின்றனர்.

**திருமணம் நடைபெறுமிடம் :**

பண்டைத் தமிழர் திருமணம் மணமகள் இல்லத்திலேயே நடைபெற்றதற்கான குறிப்புகள் கிடைக்கின்றன. ஒரேவழி மணமகன் மனையிலும் நிகழ்வதுண்டு. உடன்போக்கிற்குப் பின் நிகழும் திருமணம் தலைவன் இல்லில் நிகழும். அவ்வாறு நிகழினும் பின்னர்த் தலைவியின் பெற்றோர் மீண்டும் தமது இல்லில் தமர் அறிய மணஞ்செய்விப்பர்.

நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும்
எம்மனை வதுவை நன்மணம் கழிகெனச்
சொல்லின், எவனோ மற்றே வென்வேல்
மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை ஈன்ற தாய்க்கே... (ஐங் 399)

மணக்காலத்தில் வீட்டுச் சுவர்களுக்கெல்லாம் செம்மண் பூசி, மனையில் புதுமணல் பரப்பி மாலை தொங்கவிடுவர். மணமகள் இல்லத்தில் திருமணம் நடைபெறும் மரபு அன்றிலிருந்து இன்று வரை மாறாமலிருந்து வருகிறது. இதற்கான இலக்கியச் சான்றுகளையும் நம்மால் காணமுடிகிறது. தற்காலத்தில் மணமகள் வீட்டார் திருமணம் நிகழ்த்தும் பொறுப்பை ஏற்றுக் கொண்டு, ஏராளமான உற்றாரும் உறவினரும் ஒன்றுகூடி மகிழும் நன்னாள் ஆதலால் தாராளமான இடவசதி கருதிப் பொதுவாகக் கட்டப் பட்டுள்ள திருமண மண்டபங்களில் திருமணம் நடத்துகின்றனர்.

ஒருசிலர் கோயில் மண்டபத்தில் திருமணம் நடத்துவர். பெரும்பாலும் நாட்டுப்புற மக்கள், ஏழை மக்கள் இன்றும் கோயிலை திருமணம் நடத்தும் இடமாகக் கொள்கின்றனர். செல்வந்தர் வீடுகளிலும் வேண்டுதல் காரணமாகக் குறிப்பிட்ட கோயிலில் திருமணம் செய்தல் உண்டு

இன்றைய நாளில் பதிவுத் திருமணங்கள் திருமணப் பதிவாளர் அலுவலகத்தில் நடைபெறுகின்றன.

**திருமண வயது :**

பழந்தமிழர் வாழ்வில் குழந்தைத் திருமணம் நடந்ததற்கான சான்றுகள் இல்லை. சங்க இலக்கிய அகப்பாடல் சிலவற்றுள் விளையாட்டுப் பொருட்களைத் துறக்காத பருவத்தி

லேயே பெண்களும் ஆண்களும் காதல் கொண்டமையும் தலைவி தலைவனுடன் சென்றமையும் கூறப்பட்டுள்ளன. எனினும் பண்டைத் தமிழரின் திருமண வயது இன்னது என்பதைக் குறித் தற்கான சான்றுகள் கிடைக்கவில்லை இவற்றை அடுத்துத் தோன்றிய சிலப்பதிகாரத்தில் திருமண வினைகள் பல புதிதா கப் புகுந்தமை ஆசிரியரால் அழகாகக் கூறப்பட்டுள்ளன. சிலப் பதிகாரத் திருமணத்தால் நமக்குத் தெரியும் சிறந்த குறிப்பு மணமகன் வயது பதினாறு, மணமகள் வயது பன்னிரண்டு ஆக இருந்திருத்தல் வேண்டும் என்பதாகும்.

''மாகவான் நிகர்வண்கை மாநாய்க்கன் குலக்கொம்பர்
ஈகைவான் கொடியன்னாள் ஈராறாண்டு அகவையாள்''

என்றும்

''இருநிதிக் கிழவன் மகன் ஈரெட்டாண்டு அகவையான்'' என்றும் சிலப்பதிகாரத்துள் மணமக்கள் வயது கூறப்பட்டுள்ளது. இதைப் போலவே சேக்கிழார் அருளிய பெரியபுராணத்தில் திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில் அவரது தமக்கையார் திலகவதியாரின் திருமணக் குறிப்பு வருகிறது. அப்பகுதியில் திலகவதியாருக்கு ஆண்டு பன்னிரண்டு ஆனதால் திருமண ஏற்பாடு செய்தனர் என்ற குறிப்புக் காணப்படுகிறது.

''அந்நாளில் திலகவதி யாருக்கு ஆண் டாறிரண்டின்
முன்னாக ஒத்தகுல முதல் வேளாண் குடித்தலைவர்''

பெரிய.பு. 27 : 23 :

இச்சான்றுகளை ஆதாரமாகக் கொள்ளுமிடத்து இளைஞர்கள் பதினாறு வயதிலும் இளநங்கையர் பன்னிரண்டு வயதிலும் மணப்பருவம் எய்தினர் என்று கருதலாம்.

காலப்போக்கில் திருமண வினைகளுள் பல புதிய சடங்குகள் புகுந்தன. திருமணம் செய்து வைக்கும் பெரும்பொறுப்பு மண மகளின் பெற்றோரைச் சாரும். அதனால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு விரைவில் பெண்ணுக்குத் திருமணத்தைச் செய்து விட்டு நிம்மதியாக இருக்கலாம் என்ற எண்ணம் பெற்றோர் களுக்கு இருந்தது. அதன் விளைவாக ஆறு அல்லது ஏழு வயது பெண்களுக்கும் பத்து அல்லது பன்னிரண்டு வயது பிள்ளைக்கும் திருமணம் செய்து வைத்தனர். ஒருசாரார் தம்முள் சொந்த பந்தம் விட்டுப் போகக்கூடாது என்பதற்காகவும் சிறுவயதாக

இருக்கும்போதே திருமணம் செய்து வைத்தனர்.* தமிழ் இலக்கியங்களுள் பால்ய விவாஹம் நடந்ததற்கான சான்றுகள் இல்லை. ஆனால் அவ்வகைத் திருமணம் பற்றிய செய்திகள் மனுஸ்மிருதியிலே காணப்படுகின்றன. பெற்றோரும் உற்றோரும் கூடி இத்தகைய திருமணங்களை ஐந்துநாள் விழாவாகக் கொண்டாடினர்.

இவ்வாறு செய்யப் பட்ட குழந்தைத் திருமணம் ஒரு சமூகக் கேடாக பத்தொன்பதாம் நூற்றாண்டில் கருதப்பட்டது. மேலும் இம்முறை திருமணம் பெண்ணின் உடல்நலத்திற்குக் கேடுவிளைவிக்கும் என்று கி.பி 1891-ல் இக்குழந்தைத் திருமணத்தைத் தடுக்க சட்டம் கொண்டுவரப்பட்டது, பெண்ணுக்கு 12 வயது ஆகுமுன் மணம் செய்விப்பது இதன் மூலம் தடுக்கப்பட்டது. கி.பி.1925.ல் பெண்ணின் வயது 13 ஆக உயர்த்தப்பட்டது. 1929-ஆம் ஆண்டு சாரதா சட்டத்துக்கு இது முன்னோடியாக அமைந்தது. 1929-ல் சாரதா சட்டம் நடைமுறைக்கு வந்தது. அச்சட்டத்தின் மூலம் பெண்ணின் திருமண வயது 14 ஆக நிர்ணயிக்கப்பட்டது. 1949 ஆம் ஆண்டு இச்சட்டம் திருத்தப்பட்டு பெண்களின் வயது 15 ஆக உயர்த்தப்பட்டது. மீண்டும் 1956-ல் செய்யப்பட்ட சட்டம் மணமகள் வயதை (16) பதினாறாகவும், மணமகன் வயதைப் (19) பத்தொன்பதாகவும் உயர்த்தியது.

1954-ல் வெளியிடப்பட்ட விசேஷ திருமணச் சட்டம் மூலம் எந்த விதமான வேறுபாடுகளும் தடையுமின்றி வயது வந்தவர்களிடையில் திருமணம் நடைபெற வழிவகுத்தது. இதன் படி பெண்கள் பதினெட்டு (18) வயதையும் ஆண்கள் இருபத்தொரு (21) வயதையும் பூர்த்தி செய்திருக்க வேண்டும்.

> திருமணம் தும்மல் போன்றது எப்போது
> வருமென்று சொல்ல முடியாது. — ரஷ்யப் பழமொழி

---

* மெகஸ்தனிஸ் என்ற மேனாட்டறிஞர் பெண்கள் ஏழு வயதில் திருமண வயதடைகின்றனர் என்று கூறுகிறார் பக் 202. Mecrindle's Ancient India Megasthenes and Arrivan

# தொல்காப்பியம் காட்டும் திருமண முறைகள்

தமிழ் மொழியின் தலைசிறந்த இலக்கணம் தொல்காப்பியம். பின்வந்த தமிழ் இலக்கண ஆசிரியர்கட்கெல்லாம் ஒரு கலங்கரை விளக்கம் போலிருந்து அவர்கட்கு வழிகாட்டியாய்த் திகழ்வது இந்நூல். இவ்வரும் பெரும்இலக்கண நூல் தொல்காப்பியனாரால் இயற்றப்பட்டது. இந்நூலின் தொன்மையும், நூலில் பொதிந்துள்ள பொருட்செம்மையும் நம்மை அதன்பால் இன்றும் என்றும் ஈடுபடச் செய்வது திண்ணம். இவ்விலக்கண நூல் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்ற முப்பிரிவுகளை உடையது. எழுத்துப்பற்றிய இலக்கணச் செய்திகளை நெறிப்படுத்தி எழுத்ததிகாரம் எனப்பெயரிட்டுள்ளார். சொல்லதிகாரம் பெயர், வினை, இடை, உரி என்ற நான்கு வகைச் சொற்கள் பற்றியும், அவற்றோடு இயைபுள்ள வேற்றுமை போன்ற மொழி மரபுகளைப் பற்றியும் கூறுவது. பொருளதிகாரத்தில் மனித வாழ்க்கைக்கு நன்மை பயப்பனவும், உயிர்க்கு உறுதி பயப்பனவும் கூறப்பெற்றுள்ளன. அறிய விழையும் எல்லாப் பொருட்களையும் இம்மூன்று பிரிவுகளில் அடக்கிவிடலாம் என்பதை இத்தொல்காப்பிய இலக்கண நூலைப் படிக்கும்போது நம்மால் உணரமுடியும்.

தொல்காப்பியப் பொருளதிகாரம் பண்டைத் தமிழர்களின் பண்பாட்டினையும், பழக்க வழக்கங்களையும், பிற சிறப்புகளையும் அறிவதற்கு ஒரு சிறந்த கருவூலமாய்த் திகழ்கின்றது. ஐம்பொறிகட்கும் புலனாகக் கூடியவை யாவற்றையும் பருப்பொருட்கள் அல்லது காட்சிப் பொருள்கள் என்று கூறலாம். ஐம்பொறிகட்கும் எட்டாதவற்றை உருவில் பொருட்கள் அல்லது கருத்துப் பொருள்கள் என்றும் குறிப்பிடலாம்.

தமிழர்கள் பொருள்நிறை பொருட்களை அகம் என்றும், புறம் என்றும் இரண்டு பிரிவாக்கி அவற்றில் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் அடக்குவர். மக்களுக்கு

உறுதி பயக்கக்கூடிய இந்நான்கு குறிக்கோட் பொருட்களில் இன்பம் அகப்பொருளிலும், மற்ற அறம், பொருள், வீடு ஆகிய மூன்றும் புறப்பகுதியிலும் அடங்கும்.

உயிர்கள் அனைத்தும் இன்பத்தை நாடுதல் இயற்கை. இவ்வின்பம் காரணமாகத் தலைவன் தலைவியர்க்குள் ஒத்த அன்பின் வாழ்க்கையைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற ஐந்து திணைகளுள்ளும்; ஒவ்வாத அன்பினைக் கைக்கிளை, பெருந்திணைகளுள்ளும் தொல்காப்பியர் அமைத்துள்ளார். இக்கருத்துக்கள் பொருளதிகாரத்தின் முதல் இயலாம் அகத்திணையியல் காணக்கிடக்கின்றன. மக்களின் காதல் வாழ்க்கையை அகப்பொருள் நூலார் களவு என்றும் கற்பு என்றும் இரண்டாகப் பகுப்பர். தொல்காப்பியர் தம்நூலில் இவற்றைக் களவியல், கற்பியல் என்று இருபிரிவுகளாக அமைத்துள்ளார்.

**களவும் கற்பும்:**

தொல்காப்பியர் கூறும் 'பால்வரைத் தெய்வம்' என்ற ஊழின் துணையால், காதலனும் காதலியும் முன்பின் அறியாதவர்களாய் இருந்தாலும் ஓரிடத்தில் எதிர்ப்பட்டு காதல் கொள்கின்றனர். உள்ளம் ஒன்றுபடுகின்றனர். இதனை அகப்பொருள் இலக்கணம் 'களவு' என்ற பெயரால் கூறும். இவ்வாறு களவு முறையில் அன்பால் கட்டுண்ட தலைவனும் தலைவியும் பின்னர்த் தமரும் பிறரும் அறியத் திருமணம் செய்துகொண்டு இல்வாழ்க்கையை மேற்கொள்வர். இதனைக் கற்பு என்பர் அகப்பொருள் நூலார். களவொழுக்கமே மேற்கொள்ளாது பெற்றோர் நடத்தி வைக்கும் திருமணமும் அந்நாளில் வழக்கில் இருந்தது. இதனைக் 'களவின்வழி வாராக் கற்பு' என்று குறிப்பிடுவர். இவை இரண்டிலும் களவின் வழி வந்த கற்பே சிறப்புடையதாகப் பண்டைத் தமிழ் மக்களால் பெரிதும் போற்றப்பட்டுள்ளதையும் அறிய முடிகின்றது.

**களவுநெறி:**

களவொழுக்கமாவது அன்பு, அறிவு, அழகு, குடிப்பிறப்பு, முதலியவற்றால் ஒத்து விளங்கும் தலைவனும் தலைவியும் நல்லூழின் செயலால் பிறர் கொடுப்பவும், அடுப்பவுமின்றித் தாமே எதிர்ப்பட்டு உலகத்தார் அறியாது மறைந்தொழுகுதலாகும். பொதுவாகக் களவு என்பது ஐம்பெருங் குற்றங்களில் ஒன்றாகக் கூறப்படும். ஆனால் இங்கு களவு என்பது அத்தன்மையதன்றி ஒத்த அன்புடைய தலைவியினது இசைவறிந்து தம்

சுற்றத்தார் அறியாது காதலால் உளங்கலந்து பழகும் சிறந்த நட்பாதலால் சிறப்புடைய அறம் எனவே கொள்ளப்படும். அறநிலை வழுவாமல் ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியுமாகிய இருவரும் தமது நெஞ்சக் கலப்பினைப் பிறர், உலகத்தார் அறியாதபடி மறைந்து ஒழுகினராதலின். கரந்த உள்ளத்தாராகிய அவ்விருவரது ஒழுகலாறு 'களவு' என்ற சொல்லால் வழங்கப்படுவதாயிற்று. இக்களவினை மறைந்த ஒழுக்கம், மறை, அருமறை என்ற சொற்களாலும் தொல்காப்பியனார் குறிப்பிட்டுள்ளார்.

களவும் கந்தருவமும்;

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டம் காணும் காலை,
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறை அமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே.
(தொல், கள. 1)

களவொழுக்கத்தினைத் தொல்காப்பியர் ஆரியரது எண்வகை மணங்களுள் காந்தருவத்தின் இயல்பினதாகும் என்கிறார்.

கந்தர்வர்களில் ஒருவனும் ஒருத்தியுமாக எதிர்ப்பட்டார் இருவர். புனலொடு புல்சாய்ந்தாற்போல மெய்யுறுபுணர்ச்சியிற் கூடி மகிழும் இயல்பே கந்தர்வ மணமாகும். இங்ஙனம் புணர்ந்தோர் இறுதிவரை கூடிவாழ்வர் என்ற உறுதி இல்லை. எதிர்ப்பட்ட அளவில் வேட்கை மிகுதியால் கூடிப் பின் அன்பின்றிப் பிரிந்து செல்லும் மனப்பான்மையும் இவ்வகை மணத்திற்கு உண்டு. ஆனால் தமிழரின் களவொழுக்கமோ ஒத்த அன்பினால் கூடிய இருவரும் ஒருவராய் ஒழுகும் உள்ளப் புணர்ச்சியாகும். இவ்வுள்ளப் புணர்ச்சி நிகழ்வுற்ற பின்னர் ஒருவரை ஒருவர் பிரிதலின்றி உலகோர் அறிய மணந்து இல்லற வாழ்வை மேற்கொள்ளும் கற்பென்னுந் திண்மை தமிழரின் களவொழுக்கத்தின் முடிந்த பயனாகும். களவொழுக்கத்தின் சிறப்பியல்பாகும். இதுவே களவொழுக்கத்திற்கும் கந்தர்வ மணத்திற்கும் உள்ள உயர்நிலையான வேற்றுமையும் ஆகும். இவ்வாறு தமிழரின் களவுப் புணர்ச்சியைக் காந்தருவமாகத் தொல்காப்பியர் கூறினார் எனினும் தமிழர்க்கு அவ்வொழுக்கம் ஆரியரிடமிருந்து வந்தது என்பது அவர் கருத்தன்று. இதனால்தான் களவொழுக்கத்

திணை மெய்யொடு புணர்ந்த என்று கூறாமல், 'அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின் காமக் கூட்டம்' என்று குறிப்பிடு வதனின்றும் நாம் உணரலாம்.

**திருமண முறைகள்:**

தலைவியுடன் களவொழுக்கம் பூண்ட தலைமகன் பின்னர் அவளை மணந்து கொள்வதை இரண்டு முறைகளாக ஆசிரியர் தொல்காப்பியனார் பகுத்துள்ளார், அவை களவு வெளிப்படு வதற்கு முன் வரைதல், களவு வெளிப்பட்ட பின் வரைதல் என் பனவாகும். இங்கு வரைதல் என்ற சொல் திருமணவினையைக் குறிக்கும். இதனை.

"வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று
ஆயிரண் டென்ப வரைதல் ஆறே."[1]

என்ற தொல்காப்பிய களவியல் நூற்பாவால் அறியலாம்.

**களவு வெளிப்பட வரைதல்:**

தலைவி அறத்தொடு நின்றதை எல்லோரும் ஏற்றுக் கொண்ட பின்னர் ஊரறிய மணந்து கொள்ளுதல்களவு வெளிப் படவரைதலாகும்.

ஒருவனும் ஒருத்தியும் கூடி வாழும் இல்லறத்தின் பயனாக அவ்விருவரையும் பிறவிதோறும் சேர்த்து வைப்பதும், பிரித்து விலக்குவதுமாகிய இருவகை ஊழினும் இருவருள்ளமும் எப் பொழுதும் எக்காலத்தும் கூடிக் கருத்தொருமித்து வாழ்வதற்கு ஏற்ற நல்லூழின் ஆணையால் ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் தம்முள் எதிர்ப்பட்டுக் காண்பர். அன்பு முதலிய வற்றில் தலைவன் மிக்கவனாயினும் குற்றமில்லை.

"ஒன்றே வேறே என்று இருபால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோன் ஆயினும், கடிவரை இன்றே."[2]

---

1. கள. நூற் 49
2. „ „ 2

ஒத்த அன்பினால் நிகழ்தற்குரிய இக்களவொழுக்கம் தலைமகளது உள்ளக் கருத்தைத் தலைமகன் அறிந்து கொள்ளுதலே முதற்கண் வேண்டப்படுவதாகும்.

"பெருமையும் உரனும் ஆடூஉ மேன"[1]

அதாவது தன்னைத்தான் கொண்டொழுகும் பெருமையும், சென்ற இடங்களில் எல்லாம் மனதைச் செல்ல விடாது கட்டுப் படுத்தி, தீமையின் நீக்கி நல்ல வழியில் செலுத்தும் நல்லறியும் ஆடவரது சிறப்பியல்புகளாவன, அதுபோல பெண்ணியல்பாகிய தனது நிறை காவலுக்கு ஊறுநேருமோ என்னும் அச்சமும், நாணமும், தான் மேற்கொண்ட கொள்கையை நெகிழவிடாமை யாகிய மடனும் மகளிரது பெண்மைக்குரிய குணங்களாவன.

"அச்சமும் நாணும் மடனுமுந் துறத்த
நிச்சமும் பெண்பாற் குரிய என்ப"[2]

இத்தகைய பண்புள்ள தலைவனும் தலைவியும் ஒருவர் வேட்கை போல மற்றவர்க்கும் வேட்கை உளதாகுங்கொல்லோ என ஐயுற்று நின்ற இருவரது அறிவினையும் ஒருப்படுத்தற்கு அவ் விருவர் கண்களும் வேட்கையினால் ஒருவர் ஒருவர்க்குரைக்குங் காமக்குறிப்புரையாகும். கண்ட அளவிலே அன்பு தோன்றி ஒருவரது உள்ளக் குறிப்பினை மற்றவர் ஏற்றுக்கொண்ட நிலையில் தான் கண்ணினால் வரும் இக்குறிப்புத் தோன்றும்.

நாட்டம் இரண்டும் அறிவு உடம்படுத்தற்குக்
கூட்டி உரைக்கும் குறிப்புரையாகும்"[3]

இயற்கைப் புணர்ச்சியின் பின்னர்த் தலைவனது சொல்லின் எல்லையைக் கடத்தல் தலைமகளுக்கு அறனன்று. ஆதலின் தாங்கள் மீண்டும் கண்டு அளவளாவுதற்கு ஏற்ற ஓரிடத்தை அறிவிக்கும் பொறுப்பு தலைமகளைச் சார்ந்ததாகும். இத்தரு களவுப் புணர்ச்சி தலைவிதன் ஆருயிர்த் தோழியின் துணையின்றி மூன்று நாளைக்கு மேல் நிகழ்தலில்லை.

"முந்நாள் அல்லது துணையின்று கழியாது"[4]

---

1. களவு. நூற் 7
2. களவு. நூற். 8
3. ,, ,, 5
4. ,, ,, 31

எனவே தலைவன் தலைவியது இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் என்னும் மூன்றுநாள் எல்லையளவும் தலைவன் தோழியின் உதவியின்றி அவளறியாது தலைமகளைக் கண்டு மகிழ்தல் கூடும் என்பதும், மூன்று நாளைக்கு மேலாயின் தோழியின் உதவியின்றித் தலைவி எதிர்ப்படுதற்கு அரியள் என்பதும், அம்மூன்று நாளைக்குள்ளேயே தோழியின் உடன்பாட்டைப் பெறுதலும் உண்டு என்பது ஆசிரியர் கருத்தாதல் உய்த்துணரப்படும்.

**வரைவு கடாதல்:**

பெறுதற்கரிய குணங்கள் யாவும் வாய்க்கப்பெற்றவளே தோழியெனப் பாராட்டுதற்குரியவள் என்பதை "தாங்கருஞ் சிறப்பின் தோழி" என்று கூறுவர் தொல்காப்பியர். இத்தகைய தோழி, தலைவன் தலைவியின் களவொழுக்கத்தினை அதிகமாக நீட்டிக்க விரும்பாள். பகல், இரவு காலங்களில் அவர்கள் அடிக்கடி சந்திக்கும் வாய்ப்புக்களை ஏற்படுத்த விரும்பமாட்டாள். விரைவில் அவர்கள் ஊரறியத் திருமணம் புரிந்துகொண்டு கற்பு நெறியில் வாழ்க்கை நடத்த வேண்டும் என்ற பெருவிருப்பினை உடையவளாக இருப்பாள். எனவே தோழி தலைவனிடம் களவில் தலைவியைக் கூடும் வழக்கத்தை விடுத்து விரைவில் மணம் செய்து கொள்ளுமாறு வேண்டுவாள். இதுவே வரைவு கடாதல் எனப்படும்: தலைவன் தலைவியது களவு வெளிப்பட, அவளது சுற்றத்தார் இற்செறிப்பரோ என்றும், வழியாலும் பொழுதாலும் ஏதம் வருங்கொல் என்றும் தோழி அச்சமுற்று, இவ்வாறு களவொழுக்கம் ஒழுகல் நுங்குடிப்பிறப்புக்கும், சிறப்புக்கும் பொருந்தாமையின் இனி நீவிர் இவளை மணந்து கொள்வதே தகுதி என்று தலைவனை வரைவு கடாவத் தொடங்குவாள்.

> "பொழுதும் ஆறும் காப்பும் என்று இவற்றின்
> வழுவி னாகிய குற்றம் காட்டலும்,
> தன்னை அழிதலும், அவன் ஊறு அஞ்சலும்,
> இரவினும் பகலினும் நீவர என்றலும்
> கிழவோன் தன்னை வாரல் என்றலும்
> நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்,
> புரைபட வந்த அன்னவை பிறவும்
> வரைதல் வேட்கைப் பொருள என்ப."[1]

1. தொல். பொருள் நூற் 16

என்று வரைதல் வேட்கைப் பொருளாக வரும் இடங்களைக் காட்டுவர் தொல்காப்பியர்.

அறத்தொடு நிற்றல்:

தோழி தலைமகனை வரைந்து கொள்ளுமாறு பலவிதமாக வேண்டியும் அவன் அங்ஙனம் செய்யாது களவொழுக்கத்தையே நோக்கமுடையவனாக இருப்பான். இந்நிலையில் தலைவிக்கு ஆற்றாமை மிக்கு ஏதம் பலவாக வரல் கூடும். அதனால் தோழி 'இனி இக்களவினை உறவினர்க்கு வெளிப்படச் செய்து அவரால் குறித்த தலைவனுக்கே கொடுக்கச் செய்தல் தக்கது' என்று நினைத்து அவர்களுக்குக் களவொழுக்கத்தை மெல்ல வெளிப் படுத்தத் தொடங்குவாள். இதனையே அறத்தொடு நிற்றல் என்று கூறுவர், 'அறம்' என்பது இங்கு முறை, தக்கது என்ற பொருளில் அமையும். சிலசமயம் அம்பலும் அலருமே களவு வெளிப்படுதற்குக் காரணங்களாய் அமையும்.

"அம்பலும் அலருங் களவுவெளிப் படுத்தலின்
அங்கதன் முதல்வன் கிழவ னாகும்."[1]

இந்த இரண்டிற்கும் தலைவனே காரணம் என்று கூறுவர் ஆசிரியர். தலைவனை அறிந்துழியல்லது அம்பலும் அலரும் தோன்றா.

இக்களவு வெளிப்படுதலிலும் ஒரு வரையறை உண்டு. ஒழுங்கும் உண்டு. தலைவியின் களவு ஒழுக்கத்தை அவளது தந்தையும் தன்னையரும் குறிப்பினாலேயே உணர்வர் என்பது "தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப"[2] (முன்னம்- குறிப்பு) தொல்காப்பியர் கருத்து. தோழி செவிலித் தாய்க்கு அறத்தொடு நிற்க, செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நிற்பாள். இவ்வாறு தலைவி அறத்தொடு நின்றதை எல்லோரும் ஏற்றுக்கொண்ட பின் மணந்து கொள்ளுதல் 'களவு வெளிப்பட வரைதல்' என்ற பிரிவிலடங்கும். களவு வெளிப்பட்ட தலைவி யின் சுற்றத்தார் உடன்பட்டுக் கொடுத்தலே முற்காலத்துப் பெரு வழக்காய் இருந்தது என்பதை 'மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்'[3] எனும் தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம்.

---

1. தொல். கள. நூற் 49
2. ,, ,, 47
3. ,, கற் ,, 2

**களவு வெளியாவதற்கு முன்வரைதல்;**

களவு வெளிப்படா முன் வரைதல் அல்லது திருமணஞ் செய்தல் என்பது தலைமகள் அறத்தொடு நில்லாமுன், தலைவன் தலைவியை உடன்கொண்டு சென்று தன்னூரில் மணந்து கொள்வதாகும். இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, நிகழ்ந்த பின் மணந்து கொள்வதும்; தலைவன் தலைவியரது பகற்குறி, இரவுக்குறி சந்திப்புகளுக்குப் பின்னர் ஆருயிர்த் தோழியால் வரைவு கடாவப் பெற்று மணம் நிகழ்வதையும் இதற்பாற் படுத்தலாம். இந்நிகழ்ச்சிகளுக்குப் பின் தலைவனும் தலைவியும் வரைந்து கொள்வதில் தலைவிக்கு உடன்போக்கில்லை என்பது அறியத் தக்கது.

**உடன் போக்கு:**

தலைவனும் தலைவியும் பகற்குறியினும், இரவுக்குறியினும், பலகாலம் கூட்டம் நிகழ்த்தி வருவதனால், அவர்களது களவொழுக்கம் வெளிப்பட்டு அலராகும். இதனை அறிந்த தோழி. அவ்வலர் அடங்கச் சிலநாள் ஒருவழித்தணத்தல் அல்லது தலைவியை உடன்கொண்டு செல்லல் அல்லது வரைந்து கோடல் என்ற இம்மூன்றினுள் ஒன்றை மேற்கொள்ளுமாறு செய்வாள்.

சிலநேரம் தலைவியும் தலைவனுடன் செல்லத்துணிவதுண்டு அச்செயல் எவ்வெப்பொழுது நிகழுமெனின்,

'ஒருதலை உரிமை வேண்டினும் மகடூஉப்
பிரிதலச்சம் உண்மை யானும்
அம்பலும் அலருங் களவுவெளிப் படுக்கு மென்று
அஞ்ச வந்த ஆங்கிரு வகையினும்
நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்
போக்கும் வரைவும் மனைவிகண் தோன்றும்,''[1]

என்ற நூற்பாவால் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். களவொழுக்கத்தில் இன்பம் நுகர்தலோடு இல்லறம் மேற்கொள்ளும் உரிமையை விரும்புதலானும்; வினைசெய்தலில் ஆர்வமுள்ள ஆண்மக்கள் பிரிவர் எனக்கருதி அஞ்சும் அச்சம் மகளிர்க்கு இயல்பாய் அமைதலானும்; களவுப் புணர்ச்சியைப் பிறர் அறியக்கூடும் என்று அஞ்சும்படித் தோன்றிய அம்பல் அலர் என்ற இருவகைக்

1. தொல். பொருள் நூற் 29

குறிப்பினாலும், தலைமகனது வரைவினை எதிர்நோக்கி இருந்த நிலையில் ஏற்படக்கூடிய இடையூறுகள் காரணமாகவும் உடன் போக்கும் வரைவும் தலைவியிடம் தோன்றும் என்பது தொல் காப்பியர் கருத்து. இவ்வாறு களவுப் புணர்ச்சிக்குரிய தலைவி யைத் தலைவன் தன்னுடன் தன்பதிக்கு அழைத்துச் செல்லு வதுவை செய்தல் பண்டைய தமிழ் வழக்காக இருந்தது. அது உயர்ந்த நெறியாகவும் கருதப்பட்டது. தொல்காப்பியரும்.

> 'கொடும்போர் இன்றியும் கரணம் உண்டே
> புணர்ந்துடன் போகிய காலை யான''[2]

என்று இதற்கு நூற்பா அமைத்துள்ளார்,

களவு வெளிப்படுவதற்கு முன் மணஞ்செய்யும் நிகழ்ச்சியில் தலைவன் தலைவியை மணம் பேசி அவள் தமரை வேண்டுவான். அவர்கள் மிகுந்த பரியங் கேட்பர் அதை நிறைவேற்றுவதற் காகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிவான். இப்பிரிவு 'வரை பொருள் பிரிவு' எனப்படும். இங்ஙனம் சென்றவன் வேண்டும் பொருளை ஈட்டிக் கொண்டுவந்து தன் உறவினருடன் தலைவி யின் இல்லம் அடைந்து மணமுரசொலித்துப் பெண் கேட்பான்.

இவ்வாறெல்லாம் களவொழுக்கத்தில் ஈடுபட்டு, களவு வெளிப்பட வரைதல், படாமை வரைதல் என்றெல்லாம் இல்லா மலே மணம் நடத்தும் முறையும் அக்காலத்து இருந்தது. அது 'களவின்வழி வாராத மணம்' எனப்பட்டது. இதிலும் மண மக்களை எதிர்ப்படச் செய்து அவர் சம்மதம் பெற்றே மணம் புரிவிப்பர். இம்முறை இன்றும் தமிழ் மக்களிடையே இருந்ததை அறிவோம்.

**கற்பு:** ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் நல்லூழின் ஆணையால் எதிர்ப்பட்டு உள்ளப் புணர்ச்சியில்கூடி ஒழுகின ராயினும், தலைமகன் தன்னிடம் அன்புகொண்ட தலைவியைப் பெற்றோர் கொடுப்பப் பலரறிய மணந்து வாழும் மனை வாழ்க்கையே கற்பென வழங்கப்பெறும்.

> ''கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
> கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
> கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே.''[1]

---

1. தொல். கற் நூற் 2
2. தொல். கற். நூற் 1

என்பது தொல்காப்பிய நூற்பா. எனவே தலைமகளின் பெற்றோர் உடன்பாடின்றி அவ்விருவரும் மனைவாழ்க்கை மேற்கொள்வது இயலாது. ஆகவே இருவரும் இறுதிவரை பிரியாது வாழ்தற்குரிய உள்ளத்துறுதியை உலகோர் அறியவெளிப்படுத்தும் நியதியாகிய மணச்சடங்குடன் தலைவியை மணந்து கொள்ளுதல் இல்லற நெறிக்கு இன்றியமையாத சிறப்புடைய நிகழ்ச்சியாக அமைந்தது எனலாம். இவ்வாறாகத் தொல்காப்பிய நூற்பாக் களைக் கற்றறியும் போது களவுப் புணர்ச்சியில் உரிமை கொண்ட தலைவனும் தலைவியும் உலகத்தார் அறிய இல்லறம் நடத்த உரிமை செய்தளிக்கும் செயல்முறையே பண்டைத் தமிழரின் திருமணச் சடங்காகும். இதனைத் தொல்காப்பியர் 'கரணம்' என்ற சொல்லால் வழங்குவர்.

### பலர் அறிய மணச்சடங்கு ஏன்?

பண்டைய நாளில் தம் வாழ்க்கைத் துணைவரைத் தாமே தேர்ந்தெடுத்து வாழ்க்கை நடத்தி வருங்கால் காலப்போக்கில் ஒரு சிலர் நெறி தவறி நடக்கத் தலைப்பட்டனர். காதலித்த தலைவியை காதலிக்கவில்லை என்றனர். களவொழுக்கம் பூண்டு வாழ்க்கை நடத்திய பிறகு துணைவியைக் கைவிடவும் துணிந்தனர். தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் பிரியேன் என்று உறுதிமொழிகூறி உடன்பட்டனர். அவ்வுறுதி மொழிக்கு அவ்விருவரது மனசாட்சி தவிர புறச்சாட்சி ஏதுமற்றநிலை. தவறு நேரிட்டால் தட்டிக்கேட்க முடியாத நிலை ஏற்படலாயிற்று. இதனால் காதலில் பொய்யும் வழுவும் தோன்றின. அதுகண்ட சான்றோர் இக்குற்றம் மேன்மேலும் பெருகாவண்ணம் ஒருவிதக் கட்டுப்பாட்டை ஏற்படுத்தினர். பலர் முன்னிலையில் தலைவியைப் பெற்றோர் உடன்பட்டுக் கொடுக்க வேண்டும் என்ற முறையை உண்டாக்கினர். இதையே தொல்காப்பியர் 'கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வது' எனக் குறிப்பிட்டுள்ளார். இக்கட்டுப்பாட்டு நெறியைப் பின்னர் வந்த எல்லாத் தமிழரும் மேற்கொண்டொழுகினர். இதையே,

> ''பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
> ஐயர் யாத்தனர் கரணம் என்ப''

என்று தொல்காப்பியர் கூறினர். இதற்கு உரையாசிரியராகிய இளம்பூரணர் பொய்யாவது 'செய்ததனை மறைத்தல்! வழுவா

1, தொல். கற் நூற் 4

வது-செய்ததன்கண் முடிய நில்லாது தப்பியொழுகுதல்' காரணத்தோடு முடிந்த காலையின் அவை இரண்டும் நிகழாவாம் ஆதலால் கரணம் வேண்டியதாயிற்று என்று உரை கூறுவர்.

இவ்வாறாக ஒழுக்கக் கேடுகள் இந்தக் களவழி மணத்தில் ஏற்பட்ட பின்பு சமுதாயத்தில் பெரியோர்கள் ஏற்படுத்திய திருமணச் சடங்கையே தொல்காப்பியர் கரணம் என்ற சொல்லால் குறிப்பிட்டார். அதுதான் தலைவியின் பெற்றோர் கொடுப்பக் கொள்ளும்முறை. அதை ஆசிரியர் பிறவாய்க் கேள்வியாக, நூல் வழக்காகக் கேட்டமையின் 'என்ப' என்ற சொல்லால் குறித்தனர் போலும்.

இங்குக் குறிக்கப்பட்ட மணவினையில் இக்காலத்திலுள்ளது போல எவ்வகைச் சடங்கும் இல்லை. மணமக்கள் பெற்றோர் உடன்பட பலர் அறிய இல்லறம் மேற்கொள்ளுதலே அம்மண வினையாகும். இக்கட்டுப்பாட்டு வாழ்க்கை தொல்காப்பியருக்கு நெடுங்காலத்திற்கு முன்னரே ஏற்பட்டிருத்தல் வேண்டும். இம் மாற்றம் தமிழர் சமுதாய வாழ்வில் ஒரு திருப்பு மையமாய் அமைந்தது எனலாம். பலர் அறிய மேற்கொள்ளும் இல்லறநெறியைத் தலைவனும் தலைவியும் தம் வாழ்நாள் முழுவதும் பொன்னே போல் போற்றிக் காக்கவேண்டும். 'கரணத்தைக் காக்கத் தவறினால் மரணம் ஏற்படும். அந்த அளவிற்குக் கரணம் தெய்வீகத் தன்மை வாய்த்ததாய்க் கருதப்பெற்றது. தொல்காப்பியருக்கு நெடுங்காலத்திற்கு முன்னரே சான்றோர் கரணம் அமைத்திருப்பதால் அதற்குமுன் வாழ்ந்த தமிழர் களவும் கற்புமாகிய வாழ்க்கை நெறியைக் கடைப்பிடித்து வந்தமை புலனாகும்.

இந்தக் கட்டுப்பாட்டு முறையில் அமைந்த மணவினை 'ஐயர்' எனத் தொல்காப்பியர் குறிப்பிடும் குலப்பெரியோர் கரணம் யாத்த காலந்தொட்டு அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வகைப்பட்ட தமிழ்ப் பிரிவினர்க்கும் ஒன்றாக நடந்து வந்தது. இவர்களிடையே கொண்டு கொடுத்து வந்த முறை வழக்கில் இருத்திருத்தல் வேண்டும். நாளடைவில் முதல் மூவ் வகுப்பினராகிய அந்தணர், அரசர், வணிகர் ஆகிய மூவரும் வேளாளருடன் கொண்டு கொடுக்கும் வழக்கம் அருகிற்று எனலாம். முதல் மூவரும் தம்மொடு தாமே கொண்டு கொடுப்பராயினர்.

''மேலோர் மூவருக்கும் புணர்ந்த கரணம்
கீழோர்க் காகிய காலமும் உண்டே''[1]

என்ற தொல்காப்பிய நூற்பாவால் உணரலாம். இச்சூத்திரத்தில் 'மேலோர்' மூவர் என்றது முதல் மூன்று வருணத்தாரையும், 'கீழோர்' என்பது வேளாளரையும் சுட்டுகிறது, 'காலமும் உண்டே' என்ற தொடரால் தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே இவ்வழக்கம் இருந்தது என்பது புலனாகும். இந்நூற்பாவை நன்கு ஆய்ந்து அறியும் பொழுது பழந்தமிழ் மக்களிடையே நால் வகை வருணாத்தாருள்ளும் மண வேற்றுமை ஏற்படாது ஒன்றாகக் கலந்து மணந்து கொண்டு வாழ்க்கை நடத்திய காலமும் இருந்திருக்கிறது என்பது தெளிவாகும்.

எனவே ஆசிரியர் தொல்காப்பியரின் நூற்பாக்களைக் கொண்டு அவர் காட்டும் தமிழர் திருமண முறைகள் என்ற கருத்தை ஆயும்பொழுது பழந்தமிழரிடையே களவொழுக்க காலத்தில் காதலால் கட்டுண்ட தலைவனும் தலைவியும் தமது களவொழுக்கம் பெற்றோர்க்கும் உற்றார்க்கும் எட்டும் முன்னர் வரைதல் என்றும்; களவு வெளிப்பட்ட பின் தலைவியின் பெற்றோர் அனுமதியுடன் சுற்றம் சூழ வரைதலும்; சிறுபான்மை களவொழுக்கம் இன்றித் திருமணம் செய்து கொள்ளுதலும் ஆகிய முறைகள் இருந்திருப்பது புலனாகும்.* பொய்யும் வழுவும் தோன்றஆரம்பித்த காலத்து அதை மேலும் வளரவிடாது தவிர்க்கக் கருதிய தமிழ்ச் சான்றோர் மணச் சடங்கினை நிகழ்த்தி, தலைவனும் தலைவியையும் இல்லற வாழ்க்கையில் ஈடுபட வைத்தனர். தலைவனும் தலைவியும் பலர் அறியத் திருமணம் புரிந்து கொண்டு வாழ்க்கை மேற்கொள்வது இல்லறவொழுக்கம் என்று கற்றுணர்ந்த பெரியோர் குறிப்பிட்டுள்ளனர். ஆசிரியர் தொல்காப்பியரும் இவ்வாறாகத் தலைமக்கள் மேற்கொள்ளும் முறையான இல்லற நெறியை அல்லது கற்பினை விளக்கும்பொழுது

''மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்
இவைமுத லாகிய இயல்நெறி பிழையாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே''[2]

என வரையறுத்துள்ளார்.

---

1. தொல். கற். 3.
2. தொல். செய். 179
* பலதார மணம் பற்றய தொல்காப்பியனார் கருத்தைச் சங்க காலத் திருமணம் என்ற கட்டுரையில் காண்க

**எண் வகைத் திருமணம்**

பழம்பெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் திருமண முறையைக் கண்டோம். ஆசிரியர் நூல் செய்த காலத்தே தமிழ் மக்களிடையே ஆரியர் பழக்க வழக்கங்கள் கலக்கத் தொடங்கியிருந்தன. எனவே தமிழரின் களவொழுக்கத்தில் ஒருவனும் ஒருத்தியும் தாமே எதிர்ப்பட்டுப் புணரும் இயற்கைப் புணர்ச்சிக்கு உவமை கூறும்பொழுது ஒரு புடை ஒப்புமையாக ஆரியரின் கந்தருவ மணத்தைக் கூறுகிறார். அவ்வாறு கூறுமிடத்தில் ஆரியன் எண்வகை மணங்களைக் குறிப்பிடுகின்றார்.

> இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
> அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
> காமக் கூட்டம் காணுங் காலை
> மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
> துறையமை நல்லியாழ்த் துணைமையோர் இயல்பே.[1]

இன்பமும் பொருளும் அறனும் என்ற இம்மூவகைப் பொருள்களுள் ஒருவன் ஒருத்தியிடத்துத் தோன்றிய இன்பத்தின் பகுதியாகிய புணர்தல் முதலிய ஐவகை ஒழுக்கத்தினுள் இயற்கைப் புணர்ச்சியை ஆராயுங் காலத்து, ஆரியரிடத்து நிகழும் எண்வகை மணங்களுள் ஒன்றாகிய கந்தருவ ஒழுக்கத்தைப் போன்றதே என்பது இந்நூற்பாவின் பொருளாகும். எனவே களவொழுக்கம் ஒழுகிக் காதல் முதிர்ந்து மணஞ்செய்து கொண்டு, பொருளீட்டி, அறநெறி பிழையாது இன்பம் நுகர்தலே வாழ்க்கை பயன் என்பதாகும்.

ஆரிய மணம் எட்டாவன: அவை முறையே 1. பிரமம் 2. பிரசாபத்தியம் 3. ஆரிடம் 4. தெய்வம் 5. கந்தருவம் 6. அசுரம் 7. இராக்கதம் 8. பைசாசம் என்பன.

**பிரமம் :**

*பிரமசரியம்—மணமின்றிக் கற்கும் நிலை.*

ஒத்த கோத்திரத்தானாய், 48 ஆண்டு பிரமசரியம் காத்தானுக்கு 12 ஆண்டுப் பருவமுள்ள பூப்பெய்தியாளை, இரண்டாம் பூப்பெய்து முன்னர் அணிகலன் அணிந்துகொடையாகக் கொடுப்பது.

---

1, தொல். கள. 1

''முறைப்படி தகுந்த வரனைத் தேர்ந்தெடுத்து தன்மகளைக் கன்னிகாதானம் செய்து கொடுப்பதே பிராஹ்மம் ஆகும். உதாரணம்: மீனாட்சி கல்யாணம் உலக நாயகியே அரசன் மகளாக அவதரிக்கின்றாள். திக்கு விஜயம் செய்து வெற்றிகொடி நாட்டியிருக்கிறாள். அத்தகைய மகளுக்குத் தகுந்த நாயகன் ஈசுவரே என்பதை உணர்ந்து சுந்தரபாண்டியனாக வந்த சொக்கு நாதருக்கு மீனாட்சியை மணம்புரிவித்து மகிழ்கிறான் மலயத்து வச பாண்டியன்.

பிராஹ்ம விவாகத்தால் பிறக்கும் புத்திரன் தனக்கு முன் உள்ள பத்து தலைமுறை பின்வரும் பத்து தலைமுறை தான் ஆக 21 தலைமுறைகளைப் பாபத்திலிருந்து விடுவித்து நன்மை செய்வான்''.[1]

**2. பிரசாபத்தியம்:**

'மகட்கோடற்குரிய கோத்திரத்தார் மகள் வேண்டிய வழி இருமுது குரவரும் இயைந்து கொடுப்பது'

மணமகன் கொடுத்த பரிசத்தைப்போல் இரு மடங்கு கொடுத்துப் பெண்ணைக் கொடுப்பது. இன்று தமிழ் வகுப்பினரிடையே நடைபெறும் திருமணங்கள் இப்பிரசாபத்தியத்தின் இனமே ஆகும். பரிசம்—பரியம். மாப்பிள்ளை வீட்டாரிடம் பரியம் வாங்குதலும், பெண்ணுக்குச் சீர்கொடுத்தலும் இன்று எல்லாத் தமிழ் வகுப்பாரிடையும் நடைபெற்று வருகின்றன, ''இல்லற தருமத்தை நடத்துவதற்காகவே செய்யும் திருமணம். இதனால் பிறந்தவன் 13 தலைமுறைகளைப் பாபத்திலிருந்து விடுவிப்பான். உதாரணம் சீதா கல்யாணம். 'இல்லற தருமம் மிகவும் உயர்ந்தது. உலகில் எல்லாத் தருமங்களுக்கும் அவளே ஆதாரம். அறத்தை உணர்ந்து அதன்படி நடந்தவள் சீதை. இவளை மணந்து கொண்டு நீங்கள் இருவரும் தர்மஸ்தாபனம் செய்வீர்களாக' என்று தன்மகளின் கையை ராமன் கைகளில் ஒப்படைக்கிறார் ஜனகர்''.[2]

**3. ஆரிடம்**

''ஒன்றானும் இரண்டானும் ஆவும் ஆனேறும் வாங்கிக் கொடுப்பது'[3]

---

1. பக். 29 நஜன். கல்யாணமே வைபோகமே
2. பக். 30 ,, ,, ,,
3. பக். 160 தொல். பொருள் இளம்பூரணர் உரை.

ஆண் பெண் மாடுகளிரண்டின் கொம்புகளுக்கும், குளம்பு களுக்கும் பொற்பூணணிந்து, அவற்றின் நடுவில் மணமக்களை நிறுத்திப் பொன் பூட்டி, நீவிரும் இவைபோல் பொலிந்து வாழ் விராக என நீர்வார்த்துப் பெண்ணைக் கொடுப்பது. "பெண்மை யின் உதவி இல்லாமல் ஆண்மகனால் தனித்து வாழ முடியாது என்பதை உணர்கிறான். பெண்ணைப் பெற்றவரிடம் சென்று, என் கடமைகளைச் சரிவர செய்வதற்கு உன் பெண்ணை எனக் குக் கொடு. அதற்குப் பதிலாக இரு பசுக்களைத் தருகிறேன் என்று கூறி, பண்டமாற்று முறையில் விவாகம் செய்து கொள் கிறான். இது பழங்கால சம்பிரதாயம். இதனால் ஜனிக்கும் புத்திரன் 7 தலைமுறைகளைப் பாபத்திலிருந்து விடுவிப்பான்".[4]

## 4. தெய்வம்

வேள்வி வேட்பிக்கும் ஆசிரியனுக்கு, வேள்வித் தீ முன்னர்ப் பெண்ணைக் கொடுப்பது.

"உயர்ந்த பொருளை உயர்ந்தோருக்கு அளித்தல் என்னும் இம்முறைப்படி தன் மகள் சாந்தையைத் தன்னால் யாகத்தில் குருவாக வரிக்கப்பட்ட ருஸ்யசிங்கருக்குப் பாணிக்கிரகணம் செய்து வைக்கிறான் ரோமபாத மகாராஜன். இந்த விவாகத்தில் பிறக்கும் புத்திரன் 15 தலைமுறைகளைப் பாபத்தினின்றும் விடுவிப்பான்."[5]

## 5. கந்தருவம்

'ஒத்த இருவர் தாமே கூடுங்கூட்டம்;
ஒருவனும் ஒருத்தியும் தாமே எதிர்பட்டுக் கூடிப் பிரிவது.

உதாரணம் பராசரர் மச்சகந்தியைக் கூடிப் பிரிந்ததும், துஷ்யந் தன் சகுந்தலையைக் கூடிப் பிரிந்தது போன்றவையாகும்.

பண்டைத் தமிழரின் களவொழுக்கத்தின் முதற்படியாகிய இயற்கைப் புணர்ச்சிக்கு ஒரு புடை ஒப்புமை உடையதாகக்

---

1. பக். 30 கல்யாணமே வைபோகமே
2. பக். 30 ,, ,,

கருதப்படும். இந்த ஆரிய கந்தருவ மணத்தையே உவமையாகத் தொல்காப்பியர் எடுத்துக்காட்டினர். இயற்கைப் புணர்ச்சியும் கந்தருவமும் ஒருவனும் ஒருத்தியும் தாமே எதிர்ப் பட்டுப் பிரிதல் என்னும் ஒருகூறொத்தலால் அவை இரண்டும் ஒருபுடை ஒப்புமை உடையன என்பதே ஆகும். கந்தருவத்தால் கண்டவர் கண்டயிடத்துக் கூடிப் பிரிந்து செல்வர். ஆனால் தமிழர் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் களவொழுக்கம் ஒழுகி மணஞ்செய்து கொண்டு வாழ்க்கை நடத்துவர். இயற் கைப் புணர்ச்சிக்குப் பின்னர் களவொழுக்கம் ஒழுகி மணஞ் செய்து கொண்டு வாழ்க்கை நடத்துவர். இயற்கைப் புணர்ச் சியில் பெரும்பாலும் உள்ளப் புணர்ச்சியே நிகழும். ஆனால் கந்தருவமோ மெய்யுற்றுப் புணர்வதாகும். இயற்கைப் பணர்ச்சி களவொழுக்கத்தின் முதற்படி ஆனால் கந்தருவத்துக்கு முதலும் முடிவும் அதுவேயாகும்.

> ''காமக் கூட்டம் காணுங்காலை
> மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
> துறையமை நல்லியாழ்த் துணைமையோர் இயல்பே''

எனும் தொல்காப்பிய நூற்பாவில் காமக் கூட்டம் என்ற தொடர் இயற்கைப் புணர்ச்சியையும்; மறையோர் — ஆரியரையும்; தேயத்து — இடத்து; மன்றல் — மணம்; துறையமை நல்யாழ்-பண்ணமைந்த நல்யாழ்; யாழோர் — தமிழிசை வல்ல ஒரு குறிஞ்சி வகுப்பார்; யாழ் — இசை. புணர்தல் என்று சொல்லப் படும் ஒழுக்கம் குறிஞ்சித்திணை ஒழுக்கமாதலாலும், இசை காதலின்பத்தை வளர்க்கும் ஒன்றாகையாலும் குறிஞ்சி வாணராகிய இவ்விசையாளரைக் களவுக் குரியராகக் கூறுதல் மரபு. கந்தருவரும் இசை வல்லார் ஆதலால் அவ்வொப்புமை பற்றி ஆரிய கந்தருவரைத் தமிழ்ப் பெயரால் 'யாழோர்' எனத் தொல் காப்பியர் குறிப்பிட்டுள்ளார் போலும்.

அசுரம் :

1. வில்லேற்றுதல் 2. கொல்லேறு கோடல் 3. திரிபன்றி எய்தல் போன்றன செய்து பெண்கொள்ளல்.

1. இது தசரத ராமன் சீதையையும்; அர்ச்சுனன் துரோ பதையையும் வில்லேற்றி மணந்தனர். 2. இது வலிய காளையை அடக்குதல் நப்பின்னை வளர்த்த முரட்டுக் காளைகளை அடக் கிக் கண்ணன் அவளை மணந்தனன் என்கிறது பாகவதம்.

3. மூன்று பன்றிகளை ஒரே அம்பால் எய்தல். அர்ச்சுனன் மீன் பொறி வீழ்த்தியது திரிபன்றி எய்தேலோடு ஒக்கும்.

**இராக்கதம் :**

'தலைமகள் தன்னினும் தமரினும் பெறுது வலிதிற் கொள்வது.'[1]

பெண் விரும்பாமலும், பெற்றோர் கொடாமலும் வலிதிற் கொள்வது. வீடுமன் அம்பை முதலிய பெண்களை வலிதிற் கொண்டு வந்து தன் தம்பியர்க்கு மணமுடித்தது இதன் பாற்படும்.

**பைசாசம் :**

களித்தார் மாட்டுந் துயின்றார்மாட்டுங் கூடுதல்.

1 மூத்தாளையும் 2. கள்ளுண்டு களித்தாளையும் 3. துயின்றாளையும் புணர்தலும் 4. இழிந்தாளை மணத்தலும் 5. ஆடை மாற்றுதலுமாம். இவற்றிற்குப் புராணங்களில் எடுத்துக்காட்டுகள் உள்ளன.

ஆரிய மணங்கள் எட்டனுள்ளும் தமிழ்க் களவொழுக்கத்தின் உயிர் நாடியான ஒத்த அன்பு அதனுல் ஒன்றுபட்ட உள்ளங்கள், அவ்வாறு ஒன்றிய உள்ளங்களின் உயர் நோக்கு ஆகியவை காணப்படாமை தெள்ளிதின் புலனுகும்.

'காதல் இருவர் கருத்து ஒருமித்து - ஆதரவு
பட்டதே இன்பம்' — ஔவையார்.

---

1. பக். 160. தொல். பொருள். இளம்பூரணர் உரை

## தொல்காப்பியம்

வரைதல், வரைவு, வதுவை, கரணம், மன்றல் என்ற சொற்கள் தொல்காப்பியத்துள் வருமிடங்கள்:

| | | | |
|---|---|---|---|
| வரைதல்; | களவியல். நூற். | 17-11 | வரைதல் வேண்டி |
| | ,, ,, | 24-36 | வரைதல் வேண்டினும் |
| | ,, ,, | 50-1-2. | வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று ஆயிரண்டு என்ப வரைதல் ஆறே. |
| | பொருளியல் | 15-8 | வரைதல் வேட்கைப் பொருள |
| | மெய்ப்பாட்டியல் | 12-3 | வரைதல் |
| வரைவு: | கள. நூற். | 17-13 | வரைவு உடன்படுதலும் |
| | | 21-15 | வரைவு வரின் |
| | | 21-25 | வரைவு தலைவரினும் |
| | | 22-1 | வரைவு இடைவைத்த |
| | | 24-40 | வரைவு ஆயினும் வரைவு மறிப்பினும் |
| | | 24-43 | வரைவு உடன்பட்டோர் |
| | பொன்: நூற் | 29-6 | வரைவும் |
| வதுவை: | கற்பியல், நூற். | 31-1 | வதுவை |
| கரணம்: | கற். நூற் | 1-1 | கரணமொடு புணர |
| | | 2-1 | கரணம் உண்டே |
| | | 3-1 | புணர்த்த கரணம் |
| | | 4-2 | கரணம் என்ப |
| | | 5-1 | கரணத்தின் அமைத்து |
| மன்றல்; | கள. நூற். | 1-4 | மன்றல் எட்டனுள் |

# சங்க காலத் திருமணம்

பண்டைத் தமிழ் மக்களிடத்தே அவர்தம் வாழ்க்கையில் இயற்கையாக நிகழ்ந்தனவாகிய பழக்க வழக்கங்கள், ஒழுக்கங்களையே தமிழ் இலக்கியங்கள் பாராட்டிச் சிறப்பித்தன. அன்பு நெறியில் ஓர் ஆணும் பெண்ணும் கூடி இன்புற்று வாழ்வதைப் பற்றியனவெல்லாம் அகப்பொருள் என்று கூறப்பெற்றன. இல்வகை வாழ்க்கையின்முடிந்த பேறாகிய வீடுபேற்றைப்பற்றியதும், அதற்குக் கருவியாகிய அறஞ்செய்தல், அதற்காகப் பொருளீட்டல், அதற்கு இடையூறு வந்த விடத்துப் போர் செய்து வெல்லுதல் ஆகிய செய்திகள் 'புறப்பொருள்' என்று கூறப்பெற்றன. இவ்விரண்டையும் அடிப்படைகளாகக் கொண்டு பண்டைத் தமிழ் இலக்கியங்கள் அகப்பாடல்கள் புறப்பாடல்கள் என்றும் இருவகையாகப் பிரிக்கப்பட்டன. அகம், புறம் என்று இருவகையாகப் பிரிக்கும் முறை தமிழ் மொழிக்கே அமைந்ததொரு தனிச்சிறப்பாகும். நமக்குக் கிடைத்திருக்கும் நூல்களுள் மிகப்பழையனவெனக் கருதப்படுவன சங்க நூல்கள் எனவும், சங்கம் மருவிய நூல்கள் எனவும் வழங்கப்பெறும் பதினெண் மேற்கணக்கும் பதினெண் கீழ்க்கணக்குமாகிய முப்பத்தாறு நூல்கள் ஆவன. மேற்கணக்கு நூல்கள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை எனப்பட்டன. நாலடியார், நானாற்பது, திருக்குறள் போன்ற பதினெட்டு நூல்கள் பதினென் கீழ்க்கணக்கு எனப்பட்டன. 'கணக்கு' என்பது நூல் என்னும் பொருளில் அன்றும் இன்றும் பயின்றுவரும் ஒரு தூய தமிழ்ச் சொல்லேயாம்.

சங்க இலக்கியங்களில் அகப்பாடல்களின் எண்ணிக்கையே புறப்பாடல்களின் எண்ணிக்கையைவிட மிகுந்துள்ளன. இவ்வகப் பொருளானது களவொழுக்கம் கற்பொழுக்கம் என இருவகைத்தாம். முதல், கரு, உரி என்ற மூன்று பிரிவுகளை உடையது. அகத்திணை வடித்துக்காட்டும் காதற் பாங்கு அன்பின் ஐந்திணை நெறி எனப்பட்டது. ஐந்திணை நெறி குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம் நெய்தல் என்ற ஐவகை நிலங்களில் நிகழ்வதாகச் சான்றோர் செய்யுள் புனைவது மரபு. சங்க இலக்கியப் பாடல்களின் துணை கொண்டு அக்காலத் திருமண நிகழ்ச்சிக்

கான அடிப்படைக் கூறுகள் திருமண வகைகள், அவை நடை பெற்ற முறைகள் ஆகியவற்றைக் குறித்து ஈண்டு ஆய்வோம்.

**திருமண வகைகள் :**

சங்க காலத் தமிழர் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தவர் எனினும் அத்தமிழர் வாழ்ந்த சூழலுக்கேற்ப அவர்களது திருமண முறைகள் வேறுபடலாயின. பலவகையான திருமணங் கள் நடைபெற்றதைச் சங்கப் பாடல்கள் துணைகொண்டறிய லாம். அவற்றைக் களவு மணம், கற்புமணம் என்ற இரு பெரும் பிரிவுகளில் அடக்கினும், அவற்றை விரித்துப் பாகுபாடு செய்கையில் பின்வரும் வகைகளாகக் கூறலாம். அவையாவன :

1. களவுமணம்
2. தொன்றியல் மரபின் மன்றல்
3. பரிசங் கொடுத்து மணத்தல்
4. சேவை மணம்
5. திணைக் கலப்பு மணம்
6. ஏறுதழுவி மணமுடித்தல்
7. மடலேறி மணமுடித்தல்
8. போர் நிகழ்த்தி மணமுடித்தல்
9. துணங்கையாடி மணத்தல்
10. பலதார மணம்

**களவு மணம் :**

(படர்மை வரைதல்; வெளிப்பட வரைதல் சிலம்பு கழி நோன்பு; மலரணியும் உரிமை; திருமணமுறை)

ஐவகைத் திணைகளுள் குறிஞ்சியைப் புணர்ச்சிக்குரிய நில மாகக் கொண்டனர். குறிஞ்சி இயற்கை வளம் செறிந்தது. இன்பத்தைத் தரவல்லது. சந்தனமும் மலைநிலத்தை மணக்கச் செய்வன. கோங்கும் வேங்கையும் அழகூட்டுவன. இயற்கைச் சூழல் மிக்க குறிஞ்சி நிலத்தில் ஒத்த நலனுடைய தலைவனும் தலைவியும் முதலில் சந்திக்கின்றனர். அன்பு கொள்கின்றனர். இவை ஒருவரை ஒருவர் முன்பின் அறியாத நிலையில் தோன்று வதாகும். இவ்வாறு தலைவனும் தலைவியும் காணுதல் தொடங்கி, மணம் புரிந்து இல்லறம் மேற்கொள்ளும் வரை

நிகழும் செயல்களை எல்லாம் களவொழுக்கத்தின் பாற்படுத்திக் கூறுவர் புலவர்.

தலைவனும் தலைவியும் அடுத்தடுத்துச் சந்திக்கின்றார்கள் எனினும் என்று பிரிய நேரிடுமோ என்று தலைவி அஞ்சுகின்றாள். தலைவன் அவளது உள்ளத்தை உணர்ந்து தேற்றுகிறான் எனக் குறுந்தொகைப் பாடல் கூறுகிறது.

யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே. (குறுந்.7)

முதல் பார்வையிலேயே நம் காதல் நெஞ்சங்கள் செம்மண் நிலத்தில் பெய்யும் மழைநீர் கலப்பது போலக் கலந்து விட்டன. ஆனால் உன்னைச் சந்திக்கும் முன்னர் உன்தாயும் என் தாயும் உறவினர் அல்லர். என் தந்தைக்கும் உன் தந்தைக்கும் என்ன உறவு இருந்தது. நீயும் நானும் எவ்வாறு ஒருவரை ஒருவர் அறிந்து கொண்டோம். அது வினைப்பயனோ என்னவோ எனக் கூறி அவளது அச்சத்தைப் போக்குகின்றான்:

தலைவி தன்னுடைய காதலைத் தன்தோழியிடம் கூறுவாள் தலைவனோடு தனக்கேற்பட்ட நட்புறவு நிலத்தினும் பெரியது; வானினும் உயர்ந்தது: கடலினும் ஆழ்ந்தது' என்றெல்லாம் பெருமிதத்துடன் கூறுவாள். பிறகு இவர்கள் அன்பு வளரத் தோழியின் துணை பெரிதும் உதவுகின்றது. தலைவியை வழக்கம் போல் எப்போதும் சந்திக்கும் இடத்திற்குத் தலைவன் வருகின்றான், ஆனால் தலைவி வரவில்லை. அவளுடைய தோழி அங்கே வருகின்றாள். தலைவிக்குக் கட்டுப்பாடுகள் அதிகமாகி விட்டன பகலிலே வீட்டைவிட்டு வெளியில் வரமுடியவில்லை, இரவுப் பொழுதில் தலைவன் தலைவியைச் சந்திக்க வருவதும் சரியில்லை மேலும் ஆபத்தான மலைக்காட்டு வழியில் தலைவன் வருவதையும் விரும்பாத நிலையில் தோழி, தலைவனிடம் களவு முறையில் தலைவியைச் சந்தித்து இன்பங் கொள்வது சரியன்று. அதனால் விரைவில் திருமணத்திற்கு ஏற்பாடு செய்தல் நல்லது என்று கூறுவாள். இக்கருத்தை அகநானூற்றுப் பாடல் ஒன்று அழகுற எடுத்துரைப்பதைக் காண்போம்.

''நாளிடைப் படின் என் தோழி வாழாள்
தோளிடை முயக்கம் நீயும் வெய்யை
கழியக் காதல ராயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்
வரையின் எவனோ வான்தோய் வெற்ப!
கணக்கலை இருக்கும் கறிஇவர் சிலம்பின்
மணப்பருங் காமம் புணர்ந்தமை அறியார்
தொன்றியல் மரபின் மன்றல் அயரப்
பெண்கொள் ஒழுக்கம் கண்கொள நோக்கி
நொதுமல் விருந்தினம் போல இவள்
புதுநாண் ஒடுக்கமும் காண்குவம் யாமே.[1]

'தலைவனே தலைவியை மணப்பதில் நினக்கு என்ன தடை இருக்கிறது? அவளை மணக்க நீ விருப்பம் தெரிவித்தால் அவளின் உற்றார் உறவினர் உவகையுடன் உனக்கு மணமுடிப்பார்கள். மான்கூட்டம் நிறைந்த மேகஞ்சூழ்ந்த மலைச்சாரிவில் நீ கொண்ட களவொழுக்கத்தை அவர்கள் அறியமாட்டார்கள். இருந்தாலும் அவர்கள் உனக்கு மகிழ்ச்சியுடன் தொன்மை வழக்கப்படி சிரும் சிறப்புடனும் மணஞ்செய்து வைப்பார்கள். எங்களுக்கும் தலைவியின் வெட்கமும் அடக்கமும் புதுமை விருந்தாக இருக்கும்,' என அன்போடு தோழி தலைவனை வரைவு கடாவுகின்றாள். இத்தகைய அவசியக்கட்டம் நெருங்கும் போது தலைவனும் திருமண நிகழ்ச்சியின் முக்கியத்துவத்தை உணர்ந்து செயல்படுவான், சில நேரங்களில் தலைவியின் பெற்றோர் சம்மதம் கிடைத்தல் அரிது என்று அறியும் போது தலைவன் தலைவியைத் தன்னுடன் தன்னூர்க்கு அழைத்துச் சென்று ஆங்கு தன் இல்லில் மணம் புரிந்து கொள்வதும் உண்டு.

இவ்வாறாகத் தலைவியுடன் களவுக்கூட்டம் நேர்ந்த தலைவன் அவளை மணந்து கொள்வதில் இருமுறைகள் உள்ளன. அவையே களவு வெளிப்படுவதற்கு முன் வரைதல், களவு வெளிப் பட்ட பின் வரைதல் என்பனவாகும்.

**படாமை வரைதல் :**

சங்க இலக்கியப் பாடல்களில் களவொழுக்கப் பாடல்களை நன்கு ஆராய்ந்தால் பெற்றோர்க்கும், ஊரார்க்கும் களவை

1. அகம் : 112-9-19

அடியோடு மறைத்து, விரைவில் திருமணம் என அப்பெண்டி ருக்கு இருந்த நாணமும், கவலையும், விருப்பமும் நன்கு புலப் படும். இம்மறைவு முயற்சியைத் தான் தொல்காப்பியம் 'படாமை வரைதல்' என வழங்கும். மரபு மணத்தைத் தமரிற் பெறுதல் என்று ஆசிரியர் தொல்காப்பியர் கூறுவர். களவை வெளிப்படுத்தாமல் அல்லது வெளிப்படுத்தியோ எவ்வாறேனும் பெற்ரோரின் இசைவையும் வாழ்த்தையும் பெற்று மரபு மணம் முடித்தல் வேண்டும் என்ற பேரார்வம் அகத்திணைப் பெண்டி ரிடம் காணப்பட்டது என்பது அறியத்தக்கது,

கலித்தொகையுள் ஒரு பாடலில் தலைவன் தலைவியது திருமணம் களவு வெளிப்படா முன்னரே பெற்ருேர் நடத்தும் திருமணமாக அமைந்துள்ளதைக் காணலாம். தோழியும் தலைவி -யும் பாடிய வள்ளைப்பாட்டு ஒளிந்து நின்ற தலைவன் நெஞ் சத்தைத் தாக்க, அவன் களவு நீளாது மணமுடித்தலே தகும் என்று மணம் பேச ஏற்பாடு செய்தான். தலைவியின் தந் தையோ அங்ஙனம் மணம் பேசிவந்த தலைவனிடம் தன்மகளுக்கு உறவுண்டு என்பதை அறியாத நிலையிலேயே தலைவனது விருப்பத்திற்கு இசைவு தெரிவித்தனன். இந்நல்லிசைவால் தோழி பெருமகிழ்ச்சி அடைந்தாள் 'தோட்கிழவனும் வந்தனன், நுந் தையும் மணம்நயந்தனன்' என்ற நுட்பமான சொன்னடையால் களவு வெளிப்படவில்லை என்ற குறிப்பு புலனுகும். இதோ அந்தக் கலிப்பாடல்

நன்ரு கின்ருல் தோழிநாம் வள்ளையுள்
ஒன்றிநாம் பாட மறைநின்று கேட்டருளி
மென்ருேட் கிழவனும் வந்தனன் நுந்தையும்
மன்றல் வேங்கைக் கீழிருந்து
மணநயந் தனன் அம் மலைகிழ வோற்கே2:

இதே போல ஐந்திணை எழுபதில் ஒரு பாடலும் களவுவெளிப் படுமுன் வரைந்தமையைக் குறிக்கின்றது.

,கொல்லைப் புனத்த அகில்சுமந்து கற்பாய்ந்து
வானின் அருவி ததும்பக் கவினிய
நாடன் நயனுடையன் என்பதனுல் நீப்பினும்
வாடன் மறந்தன தோள்!3

---

2. கலி 41.
3. ஐந். எழு 2.

இதுதோழி முதலாயினோர் தலைமகளின் வரைவினை எதிர் நோக்கிய காலத்து வரைதலை வந்தமை கூறியதாக அமைந்த தாகும். இத்தகு மணநிகழ்ச்சிகளையே தொல்காப்பியர் குறிப் பிடும் 'படாமை வரைதல்' என்பதற்கு ஏற்ற சான்றுகளாகக் கொள்ளலாம்.

**வெளிப்பட்டபின் வரைதல் :**

இதன் கருத்து - தலைவி அறத்தொரு நின்றதை அனை வரும் ஒப்புக்கொண்டபின் மணந்து கொள்ளுதல் களவு வெளிப் பட வரைதலாகும். காட்டாகக் குறுந்தொகைப் பாடலொன் றால் அறியலாம்

"எந்தையும் யாவும் உணரக் காட்டி
ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்
மலைகெழு வெற்பன் தலைவந் திரப்ப
நன்றுபுரி கொள்கையின் ஒன்றுகின்றே.[4]

இதுபெற்றோர்க்குக் களவை வெளிப்படுத்தி முடித்துக் கொண்ட திருமணமாகும். களவொழுக்கத்தை 'ஒளித்த செய்தி' என்றும் பெற்றோர் உடன்பட்டதை 'நன்றுபுரி கொள்கை' என்றும் இப்பாடல் குறிப்பிடப்படுவதினின்றும் அறியலாம். மேலும் உடன்போக்கின் இறுதியில் தலைவியின் சுற்றத்தார் அவள் சென்ற இடத்தைத் தேடிச்சென்று தலைவனை அணுகி அவனைத் தம் ஊரகத்தே வந்து, திருமணம் செய்து கொள் ளும்படி வேண்டுவர். இதனை

"நும்மனைச் சிலம்பு கழீ இய அயரினும்
எம்மனை வதுவை நன்மணம் கழிகென"[5]

எனவரும் அடிகளால் அறியலாம். இம்மண நிகழ்ச்சிக்கு முன்னர் சிலம்பு கழி நோன்பு என்பதொரு சடங்கு செய்தல் பண்டைய தமிழர் மரபாக இருந்தது. இங்ஙனம் தலைவன் தலைவியை அவள் தமர் அறியாமல் உடன் அழைத்துச் சென்று, சுற்றத்தார் மரபுப்படி திருமணம் செய்வித்தலின்றியே மணம் செய்து கொள் வது முற்காலத்தில் அறநெறியாகவே கருதப்பெற்றது இதனையே தொல்காப்பியர்,

---

4. குறுந் : 374.
5. ஐங் : 399.

"கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான"[6]

எனக் கூறியுள்ளார். எனினும் களவு வெளிப்பட்ட பின் தலைவியின் சுற்றத்தார் உடன்பட்டுக் கொடுத்தலே அந்நாளில் பெருவழக்காக இருந்தது.

**சிலம்பு கழி நோன்பு:**

சங்க காலச் சமுதாயத்தில் பெண் குழந்தைக்குப் பாலுண் பருவத்தில் கால்களில் சிலம்பணிவிப்பார்கள். இப்பெண் குழந்தை வளர்ந்து கன்னியாய் இருக்கும் வரை சிலம்பணிந்து கொள்ளும் பழக்கம் இருக்கும். இக்குழந்தை காற்சிலம்பு ஒலிக்க சிறுதோழியருடன் பந்து விளையாடுவதைக் கண்டு பெற்றோர் மகிழ்வர். இக்காற் சிலம்பின் இன்னோசை இக்குழந்தை வளர்ந்து இளம்பருவ வாயிலை அடைந்து தன் உள்ளங்கவர்ந்த தலைவனோடு கூடிப்பழகுதற்கு இன்னா ஓசையாய் அமைகிறது, இரவுக்குறியில் தலைவனும் தலைவியும் சந்திக்கின்றனர். தனது நடமாட்டத்தைத் தன்வீட்டார் தன் சிலம்பின் ஒலியால் அறிந்து விடக்கூடாது என்று அச்சிலம்பின் ஒலியைக் கட்டி அடக்கி வந்து செல்கின்றாள்.

இதை 'அஞ்சிலம்பு ஒடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்'[7]

என்று தலைவன் தலைவியின் அன்பையும் அறிவையும் வியந்து கூறும் கூற்றால் அறியலாம்.

குறுந்தொகைத் தலைவி ஒருத்தி தன் திருமணம் பெற்றோரால் தடைப்படுமோ என்ற ஐயம் எழுந்தபோது தலைவனுடன் தன்தமர் அறியாவாறு செல்கின்றாள். பாலை நிலத்தைக் கடந்து தலைவனும் தலைவியும் போகிறார்கள். அவ்வாறு செல்கையில் வழியில் எதிர்ப்பட்டோர் இவர்களைக் காண்கின்றனர். இவர்கள் யாரோ என எண்ணுகின்றனர்.

'வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலவும் சிலம்பே நல்லோர்
யார்கொல் அளியர் தாமே[8]

6 தொல். கள. 2.
7. அகம். 198.
8. குறுந் : 7

என்ற குறுந்தொகைப் பாடலில், வில்லேந்திய இவன் காலில் வீரக்கழல்கள் உள்ளன, வளையலணிந்த இவள் மெல்லடிகளில் சிலம்புகள் உள்ளன. என்று வரும் அடிகளிலிருந்து இன்னும் இவர்கள் திருமணம் ஆகாமையை உணர்த்துதல் காணலாம். எனவே சங்ககாலப் பெண்களுக்குத் திருமணம் நடைபெறும் வரை காலில் சிலம்பணிந்தனர் என்பது பெறப்படும்.

அதேசமயம் திருமணம் ஆன பெண் என்பதற்கு அடையாளமாக சிலம்பினை அகற்றுதல் இன்றியமையாத செயலாக இருந்தமையும் சங்கப் பாடல்களின் துணைகொண்டு அறியலாம் அந்நாளில் இது ஒரு சமுதாய மரபாகவும் கடைபிடிக்கப்பட்டது இதுவே சிலம்புகழி நோன்பு என்ற சடங்காகவும் மேற்கொள்ளப் பட்டது. தலைவி பெற்றோர் அறியாது தலைவனுடன் சென்றாலும் தலைவன் வீட்டிலே சிலம்புகழி நோன்பு நடைபெறும்.

'நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்
எம்மனை வதுவை நன்மணம் கழிக'[9]

என்ற பாடலடிகள் ஒரு நற்றாயின் விருப்பத்தை உணர்த்து கின்றது. சிலம்புகழி நோன்பு தலைவன் இல்லத்தில் நடந்தாலும், வதுவைமணம் தலைவியின் இல்லத்தில் நடைபெறுதலே பழக்கம், சிறப்புடைத்துமாம். இங்கு நற்றாய் சிலம்புகழி நோன்பு தலைவன் இல்லத்தில் நடந்தாலும் திருமணமாவது தன் இல்லத்தில் நடைபெற வேண்டுமென்று விரும்புகின்றாள். எனவே சங்ககால மகளிர் சிலம்பினைக்களைதல் திருமணத்தின் அறிகுறியாயிற்று எனலாம்.

"தமிழர் திருமணம் பற்றி ஆராய்ந்த எஸ். சுப்பிரமணிய பிள்ளை பின்வருமாறு கூறுவர், 'குமரிக்கு அடையாளம் சிலம்பு எனக்கொண்டனர் குமரிமை கழிவிற்குச் சிலம்பு அகற்றப் படுகிறது இவ்வாறு சிலம்பு அகற்று வதையே சிலம்பு கழி நோன்பு எனக்குறிப்பிடுகின்றனர். இது திருமணத் தில் ஒரு சடங்காகவும் மாறியது இது சங்கச் சமுதாய வழக்காகவும் திகழ்ந்தது எனலாம். உடன் போக்கின் போதும் உறவினரால்லாத விடங்களில் மணம் செய்வதாயினும் அங்கே சிலம்பு அகற்றும் தன்மை காணப்படுகின்றது ஆயினும் இதனைச் சோமசுந்தர பாரதியார் இடைச்சுரம் கடக்கும் தன்மை எனச் சுட்டிக் காட்டுகின்றனர். எனினும் யான் கொண்ட முடிவு

---

9. ஐங் : 399

இது ஒருசடங்கேயாம். இச்சடங்கைப் பார்க்க வேண்டுமென்று பெண்ணைப் பெற்றதாய் பெரிதும் விரும்புகின்றாள் என்பது சங்கப்பாடலால் உணரலாம். சிலம்பு அகற்றுவதன் மூலம் இவள் மணமானவள் என்பது தெளிய இயலும். சிலம்புகழி நோன்பு குறித்துப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. எனினும் சிலம்புகழி நோன்பு சிலம்பை அகற்றுதல் என்பதேயாம்,'' [10]

**திருமண முறைகள் ;**

சங்க இலக்கியங்களை ஆழ்ந்து படிக்கும் போது பண்டைய நாளில் தமிழர் மேற்கொண்ட திருமண முறைகளை நன்கு உணர முடியும். தொல்காப்பியர் 'ஐயர் யாத்தனர் கரணம்' என்று குறிப்பிட்டுள்ளாரே அன்றித் திருமணச் சடங்குகள் இவையெனக் குறிப்பிடவில்லை ஆனால் கரணம் பற்றி கற்பியலின் முதல் ஐந்து நூற்பாக்களும் வலியுறுத்துகின்றன. இனி சங்கப்பாடல்களின் துணைகொண்டு பழந்தமிழர் திருமண விழா நடத்திய முறையை அறிவோம்.

**மணமனை அலங்கரித்தல் :**

திருமணக் காலத்தில் மணமக்கள் வீட்டுச் சுவர்களுக் கெல்லாம் செம்மண் பூசி, வீட்டில் புதுமணல் பரப்பி, மாலை களைத் தொங்கவிட்டு, மகிழ்ச்சியோடு முதல் செயலாக மண மனை அழகு படுத்தப்படும்.

> புனைமாண் இஞ்சி பூவல் ஊட்டி
> மனைமணல் அடுத்து மாலை நாற்றி
> உவந்தினிது அயரும் என்ப.''[11]

திருமணம் நடக்கும் வீட்டில் சங்கொலியும் பறையொலியும் முழங்கும்

> ''பறைபடப் பணிலம் ஆர்ப்ப விறைகொள்பு.''[12]

தலைவன் ஏவல் இளைஞரொடு பெண்டிர் காணும்படி தேரேறி மணமகள் வீட்டிற்குச் செல்லுதல் உண்டு.

---

10. பக் 56. பழந்தமிழர் திருமண நடை முறைகள்
11. அகம் , 195 : 3-6
12. குறுந் : 15

அன்றைய தமிழகத்தில் நடந்த திருமண நிகழ்ச்சியைப் பற்றி அகநானூறு 86,136 ஆகிய இருபாடல்கள் விரிவாகக் கூறுகின்றன. ஆசிரியர் நல்லாவூர் கிழார் வருணிக்கும் திருமணவிழாவை முதலில் காண்போம்.

'மிக்க இருள் நீங்கிய அழகுடைய விடியற்காலையில் தீய கோள்கள் தன்னை விட்டு நீங்கப் பெற்ற வளைந்த வெள்ளிய திங்களானது தீமையில்லாத சிறந்த புகழுடைய உரோகிணி எனும் நாள் (நட்சத்திரம்) வந்து அடைந்த நல்ல நேரம்.

அப்பொழுது இல்லத்தில் உழுந்தம் பருப்பு பெய்து சமைத்த செவ்விய குழைதலையுடைய பொங்கலொடு மிக்க சோற்றினையும் சுற்றத்தாரும் பிறரும் உண்ணுதலாலே உண்டாகும் ஆரவாரம் இடையறாது ஒலிக்கின்றது.

வரிசையாக நடப்பட்ட கால்களையுடைய குளிர்ந்த திருமணப்பந்தரின் கீழெல்லாம் புதிதாகக் கொண்டுவந்த மணலைப் பரப்புகின்றனர்.

இல்லத்தில் திருவிளக்கேற்றி வைத்து மலர்மாலை சூட்டுகின்றனர். பின்னர் தலையில் குடத்தை உடையவரும், கையில் புதிய அகன்ற வாயையுடைய மட்பாண்டத்தை உடையவருமாகிய, பொறுப்பணி செய்வதில் ஆர்வமும் ஆரவாரமுடைய, மங்கலமுடைய முதிய மகளிர் முன்னே கொடுப்பனவும், பின்னே கொடுப்பனவும் ஆகியவற்றை அறிந்து முறையே கொண்டு வந்து கொடுக்குந்தொறும் வாங்கி, மக்களைப் பெற்ற தேமல் படர்ந்த அழகிய வயிற்றையும், சிறந்த அணிகலன்களையுமணிந்த மங்கல மகளிர் நால்வர் ஒன்றாக இருந்து, கற்பொழுக்கத்தினின்றும் சிறிதும் வழுவாமல் நல்ல பலவாகிய உதவிகளையும் செய்து உன்னை மனைவியாகப் பெற்ற நின் கணவனை நீ பெரிதும் விரும்புகின்றவள் ஆருக என்று சொல்லி வாழ்த்தி, மலரிதழ்களும் நெல்லும் இடப்பெற்ற மங்கல நீரை மணப்பெண்ணின கரிய கூந்தல் ஒளிவிடும்படி பெய்தனர். இவ்வாறு வதுவையாகிய நல்ல திருமணச் சடங்குகள் செய்து முடித்த பின்னர், சுற்றத்தார் மகிழ்ச்சி ஆரவாரத்தோடு விரைந்து வந்து தலைவியை நோக்கி, 'நீபெரிய மனைவாழ்க்கைக்கு உரியை ஆவாயாக' என்று கூறி வாழ்த்துகின்றனர். மணவினை நிறைவேறிய இராக்காலத்தில் அயலிலே உள்ள பெண்கள் கூடி மணமகளைப் புத்தாடை முதலியவற்றால் அலங்கரித்து தலைவனிடத்தளிப்பார்[13] (பண்

13. அகம் 86

டைத் தமிழர் திருமணத்திற்குத் திங்களும் உரோகிணியும் சேர்ந்த நாளைச் சிறப்பாகக் கொண்டனர் என்பது இங் குணரப்படும்.)

அகநானூற்று மருதத்திணைப் பாடல் ஒன்றில் புலவர் மூதெயின்னார் பண்டைத் தமிழர் திருமணச் சடங்கு முறையைச் சித்தரித்துள்ளமையைக் காண்போம்.

'திருமண நேரத்தில் குற்றம் உண்டாகாதபடி சமைக்கப் பட்ட இனிய நெய் மிக்க வெள்ளிய சோற்றினை வரையறை யின்றி வள்ளன்மையுடன் எல்லோருக்கும் வழங்கினர். சான் றோர் கூற்றினை மேற்கொண்டு புள் நிமித்தம் இனிதாகப் பொருந்த, அழகிய இடத்தையுடைய பெரிய வானம் முழு வதும் தனது தெளிந்த ஒளியாலே விளங்கும்படி தங்கள் மண்டிலம் உரோகிணியைக் கூடிய குற்றம் தீர்ந்த கூட்ட முடைய நல்ல நாளிலே, திருமண இல்லத்தை அழகுபட அலங்கரித்து, அதன்கண் முதலில் இறைவழிபாடு செய்கின்றனர்.

பின்னர் மண முழவும், பெரிய முரசும் ஒலிக்க, திருமண மங்கல நீராட்டினை மணமகளுக்குச் செய்த மங்கல மகளிர் மணமகளின் திருமணக் கோலத்தைக் காண்பதற்குப் பெரிதும் விருப்பமுற்று நோக்குவர்.

### காப்பு நூல் அணிவித்தல்

மணமகளின் சுற்றத்தார் விருப்பமுண்டாகக் கூடி இவட்கு மெல்லிய மலரையுடைய வாகை மரத்தினது புல்லிய புறத்தை உடைய கவைத்த இலையை அங்குள்ள முதிர்ந்த கன்றால் கறிக்கப்பட்ட, பள்ள நிலத்திலே படர்ந்த அறுகம் புல்லினது மழைபெயலால் தோன்றிய கழுவிய நீலமணி போன்ற நிற முடைய இதழ்களையுடைய கிழங்கின் கண்ணுள்ள நறுமண மிக்க அரும்புகளோடு விரவித் தொடுத்த வெள்ளிய காப்பு நூலை அணிந்து, தூய திருமண உடையால் அழகு பெறும் படிச் செய்து, மழை பெய்தாற் போன்ற ஒலியையுடைய புது மணல் மிக்க மணப்பந்தலிலே, திருமணச் சின்னமாகக் கருதப் பட்ட இழை அணிவித்து விழாக்கொண்டாடியதன் காரணமாக மணமகள் உடலில் அரும்பிய வியர்வையை விசிறியால் வீசி நீக்கி. அவளைத் தலைவனுக்கு அளித்தார்கள்.'[14]

14. அகம்: 136

சங்க நூல்களில் அகநானூற்றுப் பாடல்களாகிய இவை இரண்டு மட்டுமே பண்டைத் தமிழரின் திருமண முறையை விரிவாகக்கூறியுள்ளன. "இம்முறையே தமிழரின் தன்னேரிலாத தனியுரிமை உடைய திருமணமுறையாகும். இது மிகுதொல் பழங்காலத்தே தமிழகத்து நிலவிய ஈருயிர் ஒன்றுசேர் ஒருயிர்க் கிழமை எனப்படும் திருமணமாகும்."[15]

இத்தகைய தொகை நூல்கள் வாயிலாகப் பழந்தமிழரின் திருமண நிகழ்ச்சிகளால் அறியவல்ல செய்திகள்.

1. மணமக்கள் இல்லம் செம்மண் பூசி, புதுமணல் பரப்பி, மாலைகள் தொங்க விடப்பட்டு அலங்கரிக்கப்படுதல்.
2. மணம் நடக்கும் வீட்டில் சங்கொலி, பறையொலி முழங்கும்.
3. மணத்திற்கு முன் தலைவிக்குச் சிலம்புகழி நோன்பு நடைபெறும்.
4. மணத்தில் முதல் நிகழ்ச்சியாக சிறந்த விருந்து அளித்தல்.
5. மணப்பந்தலில் புதுமணல் பரப்பப்பட்டு விளக்கு வைக்கப் படுகிறது.
6. இறைவழிபாடு செய்தல்
7. புள்நிமித்தம் பார்த்தல்
8. இளங்காலை நேரத்தில் திங்கள் உரோகிணியுடன் சேரும் நல்லோரையில் திருமண விழா நடைபெறல்.
9. திருமணமுழவும், பெரிய முரசும் முழங்கும்.
10. மங்கலப் பெண்டிர் குடங்களில் நீரேந்தி வருவர்.
11. அந்நீர்க் குடங்களில் நெல்லும், மலரும் தூவி மக்கள் ஈன்ற மங்கல மகளிர் நால்வர் மணமகளை வாழ்த்தி மண நீராட்டுதல்.
12. காப்பு நூலைக் கட்டுதல்.
13. புத்தாடை அணிவித்தல்.
14. இழை அணிவித்தல்,
15. பெற்றோர் மணமகளைத் தலைவனுக்கு வாழ்த்தி அளித்தல் போன்றனவாகும்.

---

15 பக். 66. வே. முனுசாமி. வாழ்வும் இலக்கியமும்.

மணநாளில் இடையர்கள் செம்மறியாட்டின் பழுப்புநிறம் வாய்ந்த முதிர்ந்த தயிராகிய உலையில் வரகரிசியோடு, புற்றி லிருந்து வெளிப்பட்டொழிந்த ஈயலையும் இட்டுச் சமைத்த இனிய புளிப்பு வாய்ந்த விருப்பந்தருஞ் சோற்றினை, பசுவின் வெண்ணெய் சூடான அச்சோற்றின் மேலே கிடந்து உருக அதன் மேல் வார்த்து விருந்துணவாகக் கொடுப்பர், என்ற செய்தியை அகநானூற்றுப் பாடல் (394) ஒன்றால் அறியலாம்.

மலரணியும் உரிமை :

மகளிர் மலரணியும் உரிமையைத் திருமணநாள் தொடங்கிப் பெறுகின்றனர். திருமணம் ஆனதற்கு அடையாளமாக பூவணியும் கரணம் செய்யப்பெறும் செய்தியாகும்.

"எரிமருள் வேங்கை இருந்த தோகை
இழையணி மடந்தையில் தோன்றும் நாட
இனிதுசெய் தனையால் நுந்தை வாழியர்
நன்மனை வதுவை அயிரயிவள்
பின்னிருங் கூந்தல் மலரணிந் தோயே"[16]

அதாவது தலைவன் தலைவியைத் திருமணம் செய்யும் பொழுது திருமணச் சடங்கில் ஒன்றாகிய தலைவியின் கூந்தலிலே மலர் சூடுதலை நிகழ்த்தக் கண்ட தோழி எல்லையற்ற மகிழ்ச்சி யுடையவளாய்த் தலைவனைப் பாராட்டுகின்றாள்.

பெண்கள் கன்னிப் பருவத்து மலரணிதல் சமுதாய விலக்கன்று. எனினும் பெண்கள் மலரணியும் வழக்கம் ஒரு மங்கலச் சின்னமாகத் திருமண நாள் தொடங்கி மேற்கொள்ளப்பட்டது.

2. மரபு மணம் :

கற்பியலாம் இல்லறம் புகுதற்கு இருமுறைகள் சிறப் பாகக் கொள்ளப்பட்டன. ஒன்று களவின் வழிவந்த திருமணம் மற்றொன்று தமரிற் பெறுதல் எனத் தொல்காப்பியர் குறிப் பிடும் மரபுவழித் திருமணம் இதையே அகநானூற்றுப் பாடலடியொன்று 'தென்றிபல் மரபின் மன்றல் அயர' என்று மரபுவழித் திருமணத்தைக் குறிப்பிடுவதைக் காணலாம்.

16. ஐங் : 294.

இதனையே இயல்பு மணம், பலரறிமணம் என்றுங் கூறுவர். மரபினைப் பின்பற்றுதல் பண்டைத் தமிழரிடையே இருந்தமை யைச் சங்கப் பாடல்களின் துணைக்கொண்டு உணரலாம். மரபு நெறிக்கிருந்த நன்மதிப்பும் வெளிப்படும். இத்தகைய நெறி யொன்று நிலவியமையைப் புறப்பாடல்களும் அரண்செய் கின்றன. சங்கச் சான்றோராகிய கபிலர், களவியல் பாடிய புலவர், வள்ளல் பாரி பெற்ற மகளிரை விச்சிக்கோவிடமும் வேள்பாலும் கொண்டு சென்று 'யான் கொடுப்ப நீ மணந்து கொள்' என்று வேண்டிய செய்திகள் மரபுவழி மணத்திற்குச் சான்றாக அமைகின்றனவல்லவா?

**சான்று :**

வள்ளல் பாரி இறந்த பிறகு அவன் மகளிரைத் தக்க அரச குமரர்கட்கு மணம் புரிவித்தல் கருதி, கபிலர் 'விச்சிக்கோ' என்பானை அணுகினார். யான் ஒரு பரிசிலன். அந்தணன். யான் மகட்கொடை புரிதற்குத் தகுதியுடையேன். இவரை மணந்து கோடலே யான் நின்பால் பெறும் பரிசில் என்று வேண்டுகின்றார். இதைப் போலவே இளங்கோ வேளிடமும் வேண்டுகின்றார்.

> 'பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர்
> யானே, பரிசிலன் மன்னும் அந்தணன். நீயே
> வரிசையில் வணக்கும் வாள்மேம் படுநன்
> நினக்கியான் கொடுப்பக் கொண்மதி. [17]
>
> ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல் !
> யான்தர, இவரைக் கொண்மதி ! [18]

புலவர் கபிலரின் இப்பாடல்கள் தொல்காப்பியர் கூறும் கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே' (கற் : 19) எனும் அகத்திணை நெறியுடன் பொருந்துவதைக் காணலாம். இதனால் பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் களவின் வழித் திருமணம் போற்றப்பட்டு ஆதரிக்கப்பட்டது போலவே தமர் கொடுப்பக் கொள்ளும் மரபும் பழமையுடையதாய் போற்றப் பட்டதை அறியலாம். மரபுநெறிக்கு அந்நாளில் மதிப்பில்லை என்றிருந்தால் வள்ளல் பாரியின் பெருமைக்குக் கபிலர்

---

17. புறம். 200 : 12, 15
18. புறம் : 201 : 15-16.

இழிவினைத் தேடியிருக்க மாட்டார். மேலும் காதலொலழுக்கத்தைக் கவினுறக் கூறும் கபிலரின் குறிஞ்சிப்பாட்டில் களவுக் காலத்தில் நிகழும் செய்திகளை திரல்படக் கூறினும் அந்நெடும் பாடலின் இறுதியில் மரபு மணத்தின் இன்றியமையாமை தோன்ற பின்வருமாறு பாடியுள்ளது குறிப்பிடத்தக்கது.

"நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மணம் அயர்கம்"[19]

இதில் 'நாடறி நன்மணம்' என்றது சுற்றத்தார் சூழ்ந்திருக்கும் அவையில் அவர்கள் சாட்சியாக தலைவியின் பெற்றோர் அவள் கையைப்பற்றித் தலைவன் கையிற் கொடுத்து ஓம்படை செய்தல். இதனையே நன்மணம் எனப் போற்றினர்.

இவ்வாறாக, சங்கத் தமிழரிடையே போற்றப்பட்ட, பின்பற்றப்பட்ட களவுநெறியும், கற்புநெறியும் ஆகிய இரண்டு நெறிகளின் செல்வாக்கு இன்றும் தொடர்ந்து வழக்கிலிருப்பதை நாம் அறிவோம்.

### 3. பரிசங்கொடுத்து மணத்தல் :

சங்க நூல்களின் துணைகொண்டு பழந்தமிழரிடையே வழக்கிலிருந்த வேறுபல திருமண முறைகள் எவை என்பதையும் அறிவோம். அவற்றுள் ஒன்று மணமகளுக்கு அதாவது அவளது பெற்றோரிடம் பரிசம் வழங்கப்படும். இப்பரிசம் அணிகலன்களாகவோ அல்லது பணம், நிலம் போன்ற சொத்தாகவோ வழங்கப்பெறும். மணமகளின் பெற்றோர் கேட்கும் பரிசத் தொகை எவ்வளவோ அதைக் கொடுத்தால்தான் திருமணம் நடக்க ஒப்புதல் அளிக்கப்படும்.

அகநானூற்றுப் பாடல் ஒன்றில் மதுரை மருதனிள நாகனார் என்னும் புலவர் தலைவிக்கு ஈடான பரிசத்தொகையைக் குறிப்பிடும் பொழுது,

அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணாஅது
பெருங்கடல் முழக்கிற் றாகி யாணர்
இரும்பிடம் படுத்த வடுவுடைய முகத்தர்
கடுங்கண் கோசர் நியமம் ஆயினும்

---

19. குறிஞ் : 231-32.

உறுமெனக் கொள்ளுநர் அல்லர்
நறுநுதல் அரிவை பரிசிழை விலையே[20]

எனப்பாடியுள்ளார். அதாவது தலைவியின் தந்தை இவளது பசிய அணிகட்கு வாழும் புதுவருவாயை உடைய நியமம் என்னும் ஊரினைக் கொடுப்பினும் அமையும் எனக் கொள்வார் அல்லர் எனக் கூறுகிறார்.

சிலநேரங்களில் மணம் பேசி வரும் தலைவனை யாதேனும் காரணங் குறித்துப் பிடிக்கவில்லை என்றால் தலைவியின் பெற்றோர் அவன் கொண்டுவந்த பரிசத்தை ஏற்க மறுத்து மகளைக் கொடுக்க மறுப்பர்.

"முழங்கு கடல் முழவின் முசிறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்து கொடுப்பினும்
புரையர் அல்லோர் வரையலள் இவள் எனத்
தந்தையும் கொடா அன்"[21]

எல்லாவளங்களும் நிறைந்த, ஒலிக்கின்ற கடலாகிய முழவை யுடைய முசிறி நகரத்தை ஒத்த, நலஞ்சார்ந்த உயர்ந்த பொருள் களைக் கொண்டு வந்து உவகையுடன் கொடுத்தாலும், இவள் ஒப்போரும் உயர்ந்தோரும் அல்லாதாரை மணந்துகொள்ளாள் என்று சொல்லி தந்தையுங் கொடுக்கமாட்டான் எனப்பொருள் படும். அப்பொருளினுஞ் சிறந்தவள் மகள் என்பது பெறப்படும்.

**4. சேவை மணம் :-**

இவ்வாறு தலைவியை மணமுடிக்கக் கொடுக்கப்படும் பரிசம் அணிகலன்களாகவோ அல்லது பொருள்களாகவோதான் இருக்க வேண்டும் என்ற நியதில்லை. சிலசமயம் தலைவன் தலைவியின் தந்தையின் உள்ளத்தில் இடம் பெறுமளவிற்கு அவனிடம் பணி செய்து தலைவியை மணமுடித்தலும் உண்டு. தலைவன் தான் விரும்பிய தலைவி ஒருத்தியை எவ்வாறேனும் மணங்கொள்ள விழைகிறான். அதற்கு என்ன வழி? எதைச் செய்தால் தன் உள்ளங்கவர்ந்தவளைப் பெறலாம் என்று சிந்திக்கின்றான். பொன் போன்ற ஒளிபொருந்திய செருந்தியினது மலர்களை அணிந்தும் அழகு பெற்ற மாலையையும் உடையவளாய், விளையாடி இன்

20. அகம் : 90 : 9-14
21. புறம் : 343 : 10-13

புற்றிக்கும் அழகிய தொடி அணிந்த இளமை உடையவள் அவன் காதலி. அவளை மணப்பதற்குப் பரிசிலாக நன்மை பொருந்திய பொன்னும் மணியுமாகிய சிறந்த பொருள்களோடே அணிகலன் களையும் நிறையக்கொடுத்தாலும் பெறுதற்கு அரியள் ஆனதால் இனி என்செய்வது என நினைத்து ஒரு முடிவுக்கு வருகிறான் தலைவன்.

தலைவியின் தந்தையோ முத்துக்களை வாரிக்கொணர்ந்து வண்டுகள் ஒலிக்கின்ற அகன்ற சோலையை உடைய கரையினி டத்தே பலருக்கும் பகுத்துக் கொடுக்கும் நெய்தல் நிலப்பரப்பின் பெரிய கடல்துறையை உடைய பரதவன். இதனால் பொருளும் அணிகலன்களும் நிறையக் கொடுப்பினும் அவள் பெறுதற்கரிய வள் என்றாதற்குக் காரணம் கூறினானும் ஆயிற்று. இனி இன்னது செய்தால் இவளைப் பெறலாம் என்று கூறுகின்றான்.

இனி ஒரோவழி நாம் நம்முடைய இடத்தில் இருத்தலைத் தவிர்ந்து போய் அப்பரதவனோடு பெரிய நீர்ப்பரப்பாகிய கடற்கரையில் உப்புக்கு வித்தலில் அவனோடு உதவிசெய்தும் அவனோடு கடலில் தோணியில் சென்றும், அவனோடு மீன் வேட்டம் ஆடி மீனைப்பிடித்தும், அவனுக்கு இரக்கம் வரும் படி வணங்கியும், அவனையே அடுத்து வாழ்ந்தும் இருப்போ மேயானால் அறத்தினை நினைந்து பார்த்து தன் மகளை வழங்குவானல்லவா என்று எண்ணுகின்றான். இவ்வாறு பொருள்களைப் பரிசமாகக் கொடுப்பது மட்டுமன்றி மண மகளின் பெற்றோர்க்குப் பலவகையில் உதவிகள் செய்தும் மண முடிப்பதுண்டு. பெற்றோர்க்கும் மணமகளைக் குறித்தறிய இம் முறை உதவுகின்றது.

……… ……… … ஆய்தொடிக் குறுமகள்
நலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்
பெறலருங் குரைய ளாயின் அறந்தெரிந்து
நாமுறை தேஎம் மரூஉப்பெயர்ந் தவனொடு
இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழந்தும்
பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்
படுத்தனம் பணிந்தனம் அடுத்தனம் இருப்பில்
தருகுவன் கொல்லோ தானே விரிதிரைக்
கண்டிரள் முத்தங் கொண்டு ஞாங்கர்த்

தேனிமிர் அகன்கரைப் பகுக்குங்
கானலாம் பெருந்துறைப் பரதவன் நமக்கே.[22]

திருமணம் முடிக்கும் பொழுது தலைவன் தலைவிக்குக் கூறையாடை கொடுத்தலும் பரிசம் எனப் பொன் வழங்கலும் இன்றும் நடைமுறையிலுள்ளது. வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல் என்பது அக்காலத்தில் இருந்து வந்த வழக்காகும். ஒரு தலைவன் மணம் முடிக்க வேண்டுமெனின் தானே பொருளீட்டி வந்து பரிசம் கொடுத்து மணம் முடிக்கும் பழக்கம் வழக்கில் இருந்தது. இப்பரிசம் முலைவிலை தழை விலை, தண்டழை விலை என்றும் குறிப்பிடப்பட்டதை சங்கப் பாடல்களின் துணைகொண்டு அறியலாம்.

5. **திணைக்கலப்பு மணம்:**

ஐந்நில மக்களுக்குள்ளும் கலப்பு மணம் இருந்த நிலையினை அகநானூற்றுப் பாடல்களிலிருந்து அறியலாம். புலவர் அம்மூவனாரின் பாடலொன்று தலைவன் தன் எண்ணத்தைப் பாங்கனிடம் சொல்வது போல் அமைந்துள்ளது, அதில் பாங்கனே! உவர் நிலத்தில் விளைந்த உப்பினது விலையைக்கூறி நெறிகளிற்படும் புழுதியையுடைய நெடிய சேய்மைக்கண் செல்லும் செறிந்த கோல்களைக் கொண்டு செல்லும் உப்பு வணிகர் போவதாகிய நீண்ட நெறிகளில் அக்கூட்டத்துடன் சேர்ந்து வாழும் வாழ்க்கை சிறந்தது போலும்.

வளைந்த சுருண்ட கூந்தலின் முடிமுழுவதும் பெரிதும் அலையக் கொண்டு, அழகுபெறத் தரித்த பலதளிருடன் கூடிய தழையுடை அசையுமிடத்துஅசைந்து நடந்துஊரவரே! நெல்லும் உப்பும் விலை ஒன்றாகும் கொள்வீராக என்று சேரிகள்தோறும் கூறி விற்கும் அழகிய வளைந்த உந்தியினையும் மூங்கில் போன்ற தோளினையும் உடையாய்! நினது உடலின்கண் உளதாம் இன்பத்திற்கு விலையினை அறிந்திலமே என்றுயாம் கூறிச்சிறிது தடைப்படுத்தினேமாக,

தனது பெரிய, படர்ந்த மையுண்ட கண்ணினால் மாறுபட்டனள் போல நோக்கி எம்மைத் தடுப்பீர் நீவிர் யாரோ என்று கூறி இளநகையுடையாளாய்ச் சிறிது பெயர்ந்து நின்ற, சிலவாய நிறைந்த வெள்ளிய வளைகளாற் பொலிவுற்ற பலமாண்பும்

---

22. அகம் : 280

உடைய பேதையின் பொருட்டு என் நெஞ்சம் தன் வலியினை இழந்துவிட்டது,'' எனக் கூறுகிறான். வளையணிந்த அப் பேதைக்குத் தன் நெஞ்சை அவன் பறிகொடுத்துவிட்டான்.

நெய்தலும் மருதமும் ஒன்றை ஒன்று அடுத்திருக்கும் நிலங்கள் நெய்தல் நிலத்தில் உப்பு விளைவிக்கப்படுகிறது. இவ்வுப்பினை வண்டிகளில் ஏற்றிக்கொண்டு மற்ற நிலங்களுக்குச் சென்று விற்கும் உப்பு வணிகர்கள் தம்முடன் தம்குடும்பத்தையும் அழைத்துச் செல்வர். அப்போது உப்புவணிகரின் இளம்பெண் பக்கத்து ஊருக்குள் சென்று உப்பு விற்பாள். அவளை மருதத் தலைவன் ஒருவன் கண்டு காதல் கொள்கிறான் தனக்கு அவளிடத்து எவ்வாறு காதல் அரும்பியது என்பதைத் தலைவன் பின்வருமாறு கூறுகின்றான். ''பெருங்கடலில் மீன்வேட்டையாடும் சிறுகுடிப் பரதவரின் உப்பங்கழியிலே விளைந்த உப்பினை விலை கூறிக் கொண்டு வருகின்றனர் உமணர்கள். அவ்வுமணரின் அன்பிற்கு உரிய இளையமகள் சிலவாகிய அழகிய ஒளிபொருந்திய வளையல்கள் ஒலிக்கும்படி கையை வீசிக்கொண்டே நடந்து நெல்லுக்கு நிகர் வெண்கல் உப்பு என்று விலை கூறுகின்றாள். அவ்வோசையினைக் கேட்ட நாய் குரைக்கவே, அவளது அஞ்சுகின்ற, மதர்த்த கயல் மீன்கள் ஒன்றுடனொன்று பொருவது போன்று கண்கள் மருண்டன. இதனைக் கண்ட நான் உள்ளம் பறி கொடுத்தேன். எனக்கு இக்காதல் பெருமூச்சு விடும் பெரியதொரு நோயாகி விட்டது.''[23]

இவ்வாறு நிலம் விட்டு நிலம் வாழும் மக்களிடையே ஏற்பட்ட காதல் பற்றி அகநானூற்றுப் பாடல்களிலன்றி வேறு சங்கப் பாடல்களில் காணயியலவில்லை. புலவர் அம்மூவனாரின் இவ்விரண்டு பாடல்களிலும் இத்தகைய கருத்துக் காணப்படுவதால் அந்நாளில் திணைக் கலப்புக் காதல் மணமும் இருந்திருத்தல் வேண்டுமெனத் துணியலாம்.

### 6. ஏறுதழுவி மணமுடித்தல் :

காடும் காடு சூழ்ந்த இடமும் முல்லை எனப்பட்டன. இந்நிலத்தில் ஆநிரைகள் மிகுதியாக இருந்தன. இந்நிலமக்கள் இடையர், ஆயர் எனப்பட்டனர். இவர்களுக்கு உரிய தொழில்கள் ஏறு தழுவுதல், குரவைக் கூத்தாடுதல், கொன்றைக் குழல் ஊதுதல் முதலியன.

---

23. அகம் : 140

ஏறுதழுவி வெற்றி பெற்று மணமுடிக்கும் ஒரு முறை குறிப்பாக முல்லைத்திணை மக்களிடையே காணப்படுகிறது. முல்லைத்திணை ஆயர்களில் இவ்வேற்றினைத் தழுவி அடக்கிய வனுக்கு இவள் உரியள் என்னுங் குறிக்கோளுடன் ஏறு வளர்த்துள்ளவரும், அவ்வேறுகளைத் தழுவி அவற்றிற்குப் பரிசுப் பொருளாகிய ஆயர் மகளிரை மணத்தற்குத் துணிந்த இளைஞராகிய ஆயர்களும் இருந்தனர்; என்பது தொகை நூல்களில் கலித்தொகை முல்லைக்கலி பாடல்கள் (101, 102, 103, 104) மூலம் அறியலாம். இச்சான்றுகளைத் தவிர வேறு எந்த சங்க நூலிலும் இதற்கான குறிப்புக் காணப்பெறவில்லை.

சங்கத் தொகை நூல்களுள் ஒன்றான கலித்தொகையில் முல்லைக்கலி முல்லைநில மக்களின் வீரவிளையாட்டைக் கூறுகிறது. அவர்களது வீர விளையாட்டு 'ஏறு தழுவல்' ஆகும். ஏறுதழுவல் என்பதை ஜல்லிக்கட்டு, காளைவிரட்டு, மஞ்சுவிரட்டு என்றும் சொல்வார்கள், முல்லை நிலத்திலே வாழ்ந்த செல்வப் பெருங்குடி மக்கள் தங்கள் வீட்டில் பெண் குழந்தை பிறந்தால் தங்கள் மந்தையிலே உள்ள காளைக்கன்று ஒன்றைத் தனியே பிரித்து செல்வமாக வளர்க்கத் தொடங்குவார்கள் ஏறுதழுவலுக்காக. வீட்டிலே அருமையாக வளர்வாள் பெண்: மந்தையிலே காளை செல்வமாக வளரும். மங்கைக்குப் பருவம் வரும். காளைக்கும் பருவம் வரும். இந்தக் காளையை அடக்கி வெற்றி கொண்டவன் எவனோ அவனுக்கு இவளை மணம் செய்து கொடுப்பேன் என்று அப்பெண்ணின் தந்தை பறையறைந்து செய்தி தெரிவிப்பான். அதுகேட்ட அப்பெண்ணின் காதலனும் முன்வருவான். காளையைத் தழுவி அடக்கி வெற்றி கொள்வான். காதலியைப் பரிசாகப் பெற்று மணமுடிப்பான். இங்குக் காதலும் வீரமும் இணைந்து காணப்படுகின்றன. இந்த இணைப்பை முல்லை நிலத்தில் காணலாம். முல்லை நில மக்களின் வாழ்க்கையை அதன் உண்மை வடிவில் வடித்திருப்பதை முல்லைக்கலிப் பாடல்கள் வாயிலாக அறியலாம். சான்றாக ஒரு சில பாடல் அடிகளைக் காண்போம்.

> "அவ்வழி முள்ளெயிற்று ஏஎர் இவளைப்பெறும் இதோர்
> வெள்ஏற்று எருத்து அடங்குவான்;
> ஒள்ளிழை வாடுறு கூந்தல் துயில்பெறும் வைமருப்பிற்
> காரிகதன் அஞ்சான் கொள்பவன் ஈரரி
> வெரூஉப் பிணைமான் நோக்கின் நல்லாட்
> பெறூஉம், இக்

குருஉக் கண்கொலை ஏறு கொள்வான் வரிக்குழை
வேயுறழ் மென்தோள் துயில்பெறும் வெந்துப்பிற்
சேஎய் சினனஞ்சான் சார்பவன் என்றாங்கு
கரைவனர் நல்லாரை யாயர் முறையினால்
நாண்மீன்வாய் சூழ்ந்த மதிபோல் மிடைமிசைப்
பேணி நிறுத்தார் அணி:
அவ்வழிப். பறையெழுந் திசைப்பப் பல்லவ ரார்ப்பக்
குறையா மைந்தர் கோளொதி ரெடுத்த
நறைவலஞ் செயவிடா இறுத்தன ஏறு;

வீரர்கட்கும் காளைகட்கும் இடையே போர் நடக்கிறது. தலைவனும் காளையைக் கட்டி அடக்கினான். வெற்றி கொண்டான். விளையாட்டு முடிந்தது. மகிழ்ச்சியில் குரவைக் கூத்தாடுகின்றனர்.

தொழிஇஇ, ஒருக்குநா மாடுங் குரவையுள் நம்மை
அருக்கினான் போல்நோக்கி யல்லனோய் செய்தல்
குருஉக்கட் கொலையேறு கொண்டேன்யா னென்னுந்
தருக்கன்றோ ஆயர் மகன் ;
நேரிழாய், கோளரி தாக நிறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
ஆர்வுற் றெமர் கொடை நேர்ந்தார் அலரெடுத்த
ஊராரை உச்சி மதித்து.[24]

ஏறுதழுவி வெற்றி பெற்ற தலைவன் அந்தக் காளையை வென்று விட்டேன். இனி நீ எனக்குரியவள் என்பது போல் தலைவியை நோக்குகின்றான் இதனால் காதல் தலைவியின் உள்ளம் மகிழ்கிறது. "காளையும் அடக்கி விட்டான். ஊரார் நாவையும் அடக்கிவிட்டான்" என்று உள்ள மகிழ்வோடு குரவைக் கூத்தாடி முடிக்கின்றனர்.

முல்லைநில ஆயர்கள் ஆடு, மாடு, போன்ற விலங்கினங்களைப் பாதுகாக்குந் தொழிலுடையராதலாலே அவற்றிற்குப் புலி முதலிய வல்விலங்குகளாலே துன்பம் நேராமல் காத்தற் பொருட்டும், கள்வரால் அவை கவர்ந்து கொள்ளாமைப் பொருட்டும் இவர்தம் வீரமறவராகவும் இருத்தல் இன்றியமை

24. கலி ; 104

யாததாயிற்று. இக்காரணத்தாலே ஆயர்கள் தம் மகளிரைத் திருமணஞ் செய்ய முன் வருவாரின் ஆற்றலை அறிந்தே மகட் கொடை நேரும் வழக்கத்தையும் உடையராகவும் இருந்தனர். இக்குல மகளிரும் காதல் வயப்பட்டாலும் அத்தகைய தறு கண்மை (வலிமை) உடையானையே கணவனாக ஏற்குமொரு கோட்பாடு உடையவராகவும் இருந்தனர். இக்கருத்தைக் கலிப் பாடல் ஒன்று அழகாக எடுத்தியம்புகின்றது.

தலைவியின் உள்ளங் கவர்ந்த தலைவனும் அன்று ஏறு தழுவல் நிகழ்ச்சியில் பங்கு கொள்கின்றான். தன்னை எதிர்த்த காளையை அடக்கி வெற்றி கொள்கிறான். அன்று அவளது களவொழுக்கத்தை அறிந்து அலர் தூற்றியவர்கள் இன்று தலைவன் அடக்கிய காளை போலத் தலைகுனிந்து அடங்கிக் கிடப்பதைப் பாரவெனச் செருக்குடன் கூறுகிறாள் தலைவி. அதற்குள் பறையொலி கேட்டது. அவளை அவனுக்கு மணஞ்செய்யத் தீர் மானித்து விட்டனராம் அவளது பெற்றோர். அச்செய்தியே பறையறிவிக்கப்பட்டது. அப்போது தலைவி 'அவனைக் கண்ட அன்றே என்நெஞ்சு பறிகொடுத்து விட்டேன் நான். அவன் துணையாகிவிட்டேன்' இவர்களோ இப்போதுதான் புதிதாகச் செய்தி அறிவிக்கின்றார்கள் என்றாள். இக்கருத்தை,

> ஒன்றிப் புகர் இனத்து ஆயமகற்கு — ஒள்ளிழாய்
> இவன் எவன், என்னை எமர்கொடுப்பது — அன்றுஅவன்
> மிக்குத்தன் மேற்சென்ற செங்காரிக் — கோட்டிடைப்
> புக்கக்காற் புக்கதென் நெஞ்சு.[25]

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

## 7. மடலேறி மணமுடித்தல் :

சங்கப் பாடல்களில் மடலூர்ந்த தலைவியை அடைந்த தலைவனொருவன் தான் மடலூர்ந்த விதத்தினையும் அவளை எய்தியவாறுந் தனக்குப் பாங்காயினார்க்குக் கூறியது போல சில பாடல்கள் அமைந்துள. அதாவது தலைவன் தான் விரும்பிய தலைமகளை அடைதல் அரிது என்ற நிலை வரும் பொழுது, எப்படியேனும் அவளை அடைந்தே தீர்தல் வேண்டும் என்று எண்ணி அவளது ஊரேயறியும்படி மடலூர்ந்து அவன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்வான்.

---

25. கலி 105: 66-69

மடலூர்தல் என்பது தலைவன் பனை ஓலையினால் ஒரு குதிரை செய்வான். காதலியின் ஊருக்குச் சென்று முச்சந்தியிலே இப்பனைவோலைக் குதிரையை நிறுத்தி அதன்மேல் ஏறிக்கொள்வான். கையிலே காதலியினுடைய உருவத்தை வரைந்த படம் ஒன்றைப் பிடித்துக் கொள்வான். அதைப் பார்த்து வருந்துவான் தான் எண்ணும் எண்ணம் ஈடேறப் பலநாட்களானாலும் உண்ணாமலும் உறங்காமலும் இருப்பான். இதைக் கண்ட ஊரார் இரக்கப்பட்டு அவன் விரும்பிய பெண்ணை அவனுக்கே மண முடித்து வைப்பர். இதையே மடல்ஏறல், மடல்ஊர்தல் என்று சொல்வர். கலித்தொகை தலைவன் ஒருவன் மடலேறி மண முடித்த திறத்தைக் காண்போம்.

''வாழிய சான்றீர்! குதிரைமேல் ஏறி நின்று போர்செய்பவன் நான். இப்போது போர்களத்தே நிற்கவில்லை. ஊரின்கண் நிற்கின்றேன். குதிரையேறி வரவில்லை, மடல் ஏறி வந்திருக்கின்றேன். காரணம் என்ன? அவள் தான். ஆனால் அவளோ பெறமுடியாதவளாக இருக்கின்றாள். நீரிலே தோன்றுகிறது நிழல். தண்மதியின் நிழல். அதை எடுத்துக் கொண்டு வர முடியுமா? முடியாதல்லவா! நான் விரும்பும் அவளும் அதைப் போன்றிருக்கின்றாள்.

உலகத்தை எல்லாம் பாதுகாக்க வேண்டும் என்ற உள்ளம் உடையவன் நான். இப்போது இரந்து நிற்கின்றேன். இதற்குக் காரணம் அவளே. ஞாயிறு மண்டலத்தை நான் பெற விரும்பினால் அது முடிகிறகாரியமா? முடியாது அல்லவா? அதைப்போல் அவளை அடைவது அரிதாகிறது.

வாழ்க சான்றீர்! வழுவிய சொல் நான் ஏதுங்கூறவில்லை. நாவலர் முன்னே நானும் பேசவல்லேன். ஆனால் ஒன்றுங் கல்லாதவள் போல என்னைச் செய்தவள் எவள்? அவளோ மழைக் காலத்திலே தோன்றும் மின்னல் போல இருக்கிறாள். மின்னலைப் பெறுவது எளிதோ? அருமையன்றோ? அப்படித் தான் இருக்கிறது எனக்கும் அவளை அடைதல்.'' இவ்வாறு கூறி மடலேறி நின்றான் அவன். ஊரார் கண்டனர். அவள் தமர் அஞ்சினர். கொண்டனர் இரக்கம். அவளை அவனிடம் சேர்த்தனர். எப்படியெனின் பாண்டியனுக்குக் கப்பம் செலுத்துவது போல.[26]

---

26. கலி : 141.

இப்பாடலின் தொடக்கத்தில் பெறுதற்கு அரிதாகத் தோன்றிய மக்கள் யாக்கை முற்பிறப்பில் தாம் மனம் வேறு பட்டு, விரும்பின தீவினைகளைச் செய்து, அறம்- பொருள் இன்பம் என்று சொல்லப்பட்ட அம்மூன்றில் அறமாகிய ஒன்றன் கூற்றைச் சாராதவர்கள் இப்பிறப்பில் செய்து திரியுந் தொழில் களில் ஒன்றாகிய அழகினை உடைத்தாகிய நிலைமையினை யுடைய பனைமடல் ஏறி அவ்வூரிடத்தே எல்லார்க்குங் காட்டி ஒருத்தியை அழகினையுடைய நலத்தைப் பாடி வருவதற்கு நூல்கள் சாற்றிற்று : ஆதலால் நானும் அதுவே துணிந்து மடலேறிப் பாடுவேன் என்றான்.

'அரிதினில் தோன்றிய யாக்கை புரிபுதாம்
வேட்டவை செய்தாங்குக் காட்டிமற் றாங்கே
அறம்பொரு ளின்பமென் றம்மூன்றி னொன்றன்
திறஞ்சேரார் செய்யுந் தொழில்கள் அறைந்தன்
றணிநிலைப் பெண்ணை மடலூர்ந் தொருத்தி
அணிநலம் பாடி வரற்கு.'[27]

இவ்வாறு தலைவியின் ஊரிலே தெருவிலே கண்டார் வருந்த மடன்மாவை ஏறிப்பாட இழையினை உடையாளைத் தான் பெறுதற்குப் பொருந்தின வார்த்தைகளைத் தான் கூறக் கேட்டுப் பகைவர் போர்த்தொழிலை வல்ல பாண்டியனுக்கு அஞ்சி அரிய கப்பம் செலுத்துவது போலத் தமர்குடிப்பழுதாம் என்று அஞ்சி அவளை அவ்விடத்தே கொடுத்தார், ஈதோர் மகட் கொடை இருந்தவாறு என் எனக்கண்டார் வியந்து கூறினர்.

''வருந்துமா ஊர்ந்து மறுகின்கண் பாடத்
திருந்திழைக் கொத்த கிளவிகேட் டாங்கே
பொருந்தாதார் போர்வல் வழுதிக் கருந்திறை
போலக் கொடுத்தார் தமர்'[28]

## 8. போர் நிகழ்த்தி மணமுடித்தல் :

சங்க இலக்கியப் பாடல்களை ஆயும்போது புறநானூற் றுப் பாடல்கள் சிலவற்றின் மூலம் பண்டைய தமிழ்ச் சமு தாயத்தில் ஒருவன் தான் மணக்க விரும்பும் பெண்ணை பெற

27. கலி : 141 ; 1-6
28 கலி : 141 : 22-25

தல் அரியது என்றநிலை வரும்போது போரிட்டு வெற்றி பெற்றுத் தான் விரும்பியவளை மணம் கொள்ளல் காணப்படுகிறது.

மாந்தளிர் போன்ற மேனிநலஞ் சிறந்த இளமகள் ஒருத்தியைக் கண்ட தலைவன் ஒருவன் அவளை மகட்கொடையால் பெறக்கருதி அருகிருந்த சான்றோரை நோக்கி அவளுடைய பெற்றோர் திருவும் குடிமையும் பிறவும் கேட்டவிடத்து, அவற்கு இளமையழகும் மாந்தளிர் மேனியுமுடைய இம்மகள் யார் மகள் எனக் கேட்கின்றாய். யான் கூறுவதைக் கேள். இவள் தந்தை இவளைக் கருங் களிறு பெயர்க்கும் கைவேல் மன்னருக்கு மகட்கொடை நேர்தல் வேண்டுமென வரைந்து கொண்டுள்ளான் என்று கூறுகின்றனர்.

"இரும்பனை யன்ன பெருங்கை யானை
கரந்தையஞ் செறுவிற் பெயர்க்கும்
பெருந்தகை மன்னர்க்கு வரைந்திருந் தனனே."[29]

அதாவது இப்பெண்ணின் தந்தை பெரிய வேந்தருள்ளும் யானையை வெல்லும் பெருவலிமை உடைய வேந்தர்க்கே இவளை மணஞ்செய்து தர வரைந்துள்ளான். பெருவன்மையே வேந்தர்க்கு அழகும் தகுதியும் ஆகும்.

சிலசமயம் பெண்ணின் தந்தை தன் மகளை மணம் முடித்துக் கொடுக்க மறுத்தால் போர் நிகழ்தல் உண்டு. சான்றாகப் பரணர் பாடியுள்ள பாடலொன்றைக் காண்போம்.

ஒரு தலைவனிடத்து அழகிய மகளொருத்தி நலஞ்சிறந்து விளங்கக் கண்ட வேந்தனொருவன் அவளைத் தனக்கு மகட்கொடை நேருமாறு வேண்டினான். தந்தையோ மகளைத் தர மறுக்கின்றான். வேந்தன் தன் வேட்கை மிகுதியால் அவனை இரந்து பின்னின்று குறைமொழிந்து கேட்டான். அதற்கும் அத்தந்தை கொடுத்தற்கு இசையவில்லை. வேந்தற்குச் சினம் பொங்கியது. இருவர்க்கும் போா மூண்டது அப்பொழுது வேந்தன் 'நாளை இம்மாமகளை மணம் புணரும் நாளாதல் ஒன்று; விழுப்புண் பட்டு மேம்படு வடுவுடன் விண்ணுலகு புகும் நாளாதல் ஒன்று. இரண்டினுள் ஒன்று நிகழ்தல் வேண்டுமென வஞ்சினம் மொழிந்து வாளைக் கையிற் கொண்டான் இக்கருத்தினை.

29. புறம் 340:7-9

'விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு வைக லாகுதல் ஒன்றோ
ஆரமர் உழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை எஃகம் அறுத்த வுடம்பொடு
வாரா வுலகம் புகுத லொன்றெனப்
படைதொட் டனனே குரிசில்'' [30]

என்று வீரவுணர்ச்சி எழுமாறு பாடியுள்ளார்.

மற்றொரு பெண்ணின் தந்தையோ,
'முழங்குகடன் முழவின் முசிறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்து வந்து கொடுப்பினும்
புரைய நல்லோர் வரையலள் இவளெனத்
தந்தையுங் கொண்டான்'' [31]

அப்பொருளினுஞ் சிறந்தவள் மகள் என்பது தேர்ந்தமையும் விழுப்பொருளோடு பணிவுதேற்றுவிப்பின் தந்தை மகட் கொடைக்கு உடன்படுவன் என உணர்ந்தமையும் இப் பாடலால் அறியலாம்.

இத்துறையில் அமைந்த பாடல்களைத் தொல்காப்பியனார் ''நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி மகட்பா டஞ்சிய மகட்பா லானும்'' என வகுத்துள்ள மகட்பாற்காஞ்சி எனும் துறையிலடக்கலாம். அதாவது வலிய வந்த அரசனுக்குத் தன் மகளைக் கொடுத்தலை மறுத்து, அவனோடு போர் செய் தேனும் இறப்பதேயன்றி அவனுக்குக் கொடுக்கக் கூடாது என எண்ணுவதால் மகட்பாற் காஞ்சி ஆயிற்று.

9. துணங்கையாடி மணத்தல் :

''A duel between wrestlers as a type of tunnukai dance occurred inorder to attain the hand of a girl in marriage can be inferred from kur : 364'' [32]

---

30. புறம் : 341 : 10-16
31. ,, 343 : 10-13
32. பக் 334 : Tamil Culture Vol. II. 1964.

'வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர்
துணங்கை நாளும் வந்தன வவ்வரைக்
கண்பொர மற்றதன் கண்ணவர்
மணங்கொளற் கிவரும் மள்ளர் போரே'' [33]

இதன் பொருள் மூங்கிலைப் போன்ற தோள்களையும், ஒளி பொருந்திய வளையை அணிந்த மகளிர்க்குரிய துணங்கைக் கூத்தாடும் நாட்களும் வந்தன. அக்காலத்தில் ஒருவர்கண் மற்றொருவர் கண்ணொடு மாறுபடும்படி அத்துணங்கைக் கூத்தினிடத்து, அம்மகளிரது மணத்தைக் கொள்ளும் பொருட்டு மள்ளர்களுடைய சேரிப்போரானது விரும்பிக் கொள்ளப்படும். துணங்கை—மகளிர் விளையாட்டில் ஒன்று. அத்துணங்கையில் தலைவன் தலைக்கு தருவான். விழாவில் துணங்கையும் மள்ளர் போரும் ஒருங்கே நிகழும்.

10 பலதார மணம் :

இதனையே **மகப்பேறு மணம்** என்றும் சொல்வர். பழந் தமிழ்ச் சான்றோர் மகப்பேறு கருதித் தலைவன் இரண்டாம் முறை திருமணம் செய்து கொள்ளல் முறையே என்னுங் கொள்கையுடையார் என்பதனையும், அத்திருமணத்தைச் சிறந்த குணமுடைய குலப்பிறப்பாட்டியராகிய தொன்முறைக் கிழத்தியர் (முறைப்படி மணந்த முதல் மனைவி) மனமுவந்து ஏற்றுக்கொள்வர் என்பதனையும் தொல்காப்பிய நூற்பா கருத்தினின்றும், ஐங்குறுநூற்றுப் பாடல் ஒன்றானும் அறிய இயலுகிறது. ஆனால் இப்பலதார மணமுறை அருகியே காணப் படுகிறது

'அவனறிவு ஆற்ற அறியு மாகலின்
ஏற்றற் கண்ணும் நிறுத்தற் கண்ணும்
உரிமை கொடுத்த கிழவோன் பாங்கில்
பெருமையிற் றிரியா வன்பின் கண்ணும்' [34]

இந்நூற்பாவில்,

தலைவன் காமம் பொருளாகவன்றி அறமே பொருளாகக் கொண்டு மகப்பேறு கருதிச் செய்யும் இரண்டாவது திருமணத்

33. குறுந் : 364 : 5–8
34. தொல். கற். 6.

தைத் தலைவி அவனறிவு ஆற்ற அறியுமாகலின் அறங்கருதி அவன் செய்யும் செயலை எல்லாம் தான் ஏற்றுக் கொள்ளு தலும் முறைமையாகும் என்றும், அங்ஙனம் வழிமுறைக் கிழத் தியைத் தொன்முறைக் கிழத்தி ஏற்றுக்கொள்வதற்குக் காரணம் அவளது ஒப்பற்ற குணநலச் சிறப்பேயாகும் என்றும் உணர்த்துவதற்காகவே தொல்காப்பியனார் இவ்வாறு நூற்பா செய்தருள்பவர், தலைவியின் அன்பினை உரிமைகொடுத்த கிழவோன் பாங்கில் பெருமையில் திரியா அன்பு என்றும், அவளது அறிவுத் திறந்தோன்ற 'அவனறிவு ஆற்ற அறியும் ஆகலின்' என்றும் சிறப்பித்துக் கூறியிருத்தலால் உணரலாம். மேலும் இதனையே,

> "பின் முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவைத்
> தொன்முறை மனைவி எதிர்ப்பா டாயினும"[35]

எனவும்,

> தாய்போற் கழறித் தழீஇக் கோடல்
> ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்து"[36]

எனவும்,

> அவன் சோர்பு காத்தல் கடனெனப் படுதலின்
> மகன் தாய் உயர்பும் தன்னுயர் பாகும்."[37]

எனவரும் நூற்பாக்களும் இக்கருத்தை நன்கு அறியத் துணை செய்வன. தலைவன் இரண்டாமுறைத் திருமணம் செய்தல் மகப்பேற்றின் பொருட்டே என்றுணர்தற்கு 'பெரும்பொருள் வதுவை' (இளமைப் பருவம் கழியாத காலத்து அக்காதல் மீளா தாகலின் பெரும்பொருள் எனப்பொருள் கூறுவர் நச்சினார்க் கினியர்.) என்று கூறியிருத்தலும் 'மகன்றாய்' என வழிமுறைக் கிழத்தியைக் குறிப்பிட்டிருத்தலும் இதனை நுண்ணிதின் உணர்த்தும்.

இத்தொல்காப்பிய நூற்பாக்களுக்குச் சான்று கூறுமுகமாக ஐங்குறுநூற்றுப்பாடல் ஒன்று அமைந்துள்ளமையைக் காண்போம்.

---

35. தொல். கற் 31
36. ,, ,, 32
37. ,, ,, 33

மகப்பேறு இல்லாத காரணத்தால் தலைவனொருவன் தான் முறையாக மணந்த மனைவி இருக்கும் பொழுதே, தனது தகுதிக்கேற்ற குலப்பிறப்பாட்டி மற்றொருத்தியைத் திருமணம் செய்து கொண்டு தன்னில்லத்திற்கு அழைத்து வருகிறான். அதுகண்ட நற்குணக்கூடலாகிய தொன்முறைக் கிழத்தி, தலைவன் செயலைத் தானும் விரும்பி, அவளை வரவேற்றற்கு விளக்கு முதலிய மங்கலங்களோடு எதிர்செல்வோள் தன் தங்கையாமப் பின்முறைக் கிழத்தியைக் கண்டு பெரிதும் மகிழ்ந்து தலைவனை நோக்கிக் கூறியது போன்று இப்பாடல் அமைந்துளது.

''மயில்க ளாலப் பெருந்தே னிமிரத்
தண்மழை தழீஇய மாமலை நாட
நின்னினுஞ் சிறந்தனள் எமக்கே நீநயந்து
நன்மனை யருங்கடி யயர
வெந்நலஞ் சிறப்பயா மினிப்பெற் றோளே''[38]

இதன் பொருள் மழைப் பருவம் வேண்டியிருக்கின்ற மயில்கள் மகிழ்ந்து கூத்தாடவும், பெரிய தேனீக்கள் இன்னிசை முரலவும், குளிர்ந்த முகில் தழுவியிருக்கின்ற பெரிய மலையினையுடைய சிறந்த குறிஞ்சிக் கோமானே! நீ அறத்தையே பெரிதும் விரும்பி இவள் தந்தையினது நல்ல இல்லத்தினின்றும் அரிய பின்முறை வதுவையைச் செய்ததால், நின்னில்லத்தில், வாழ்பவர்களாகிய எம்முடைய அறம் மேன்மேலும் சிறப்புறும்படி, யாம் இப்பொழுது எம்மருமைத் தங்கையாகப் பெற்ற இத் திருவாட்டி எங்கட்கு நின்னைக்காட்டிலும் பெரிதும் போற்றுதற்குரியள் ஆயினள் காண் என்பதாகும்.

மகளிர்க்குக் கணவனிற் சிறந்த கேளிர் இல்லை என்பது பற்றி நீ எமக்குச் சிறந்தனை. நின் கருத்தினை இவள் மகப் பெற்று நிறைவுபடுத்துவள் ஆதலால் இவள் நின்னினும் எமக்குச் சிறந்தனள் என்றாள். எமது குறையை இவள் நிறை வேற்றுதலின் எமக்கு இவள் நின்னினும் சிறந்தனள் என்பது கருத்து. இத்தகைய பின்முறை வதுவை உலகில் நிகழ்வது அருமை ஆகலின் 'அருங்கடி' எனப்பட்டது.

'பத்தாவுக்கு ஏற்ற பதிவிரதை உண்டானால்
எத்தாலும் கூடி இருக்கலாம்' —ஔவையார்

38. ஐங்.: 292

## சங்க இலக்கியத்தில் திருமணம் குறித்து வருமிடங்கள்

மண அணி ; கலி. 39-41
மண இல் : மலை. 151
மணந்த ; நற். 394,1; குறுந். 25.6, 36-4; 50-5; 68-4;
186-1; 281-5;
பதிற்று. 51-15; பரி. 9-8; கலி. 24-6; 45-22
அகம். 99-9; 105-17, 236-15; 242-22
புறம். 118-1

மணந்தவன் ; கலி. 131-2
மணந்தனை : ஐங். 83-1: கலி. 125-24; அகம். 240-15
மணநாள் : அகம். 232-7
மணம் : மது, 578; குறி. 232, வெண்பா. 2-3; பட். 116;
குறுந். 330-5; 347-5, 364-8;
ஐங், 399-2; பரி. 1-24; பதிற்று. 21-32;
கலி. 41-44, 93-11, 96-33, 114-17. 21;
புறம். 266-5

மணமகடூஉ : அகம். 141-14
மணமனை : கலி.68-18; 70-10
மணமுரசு ; பரி. 22-15
மணமுழ : கலி. 70-10
மணமுழவு : அகம். 136-7

மன்றல் : அகம். 112-16: 318-8; ஐங். 253-4; பரி. 8-30, 34
புறம். 287-11
வதுவை : திருமுருகு. 117, மலை. 30; நற். 125-7: 386-10;
ஐங். 61-5; 294-4; பரி. 5-28; 19-7;
கலி. 39-37, 52-23, 66-12, 76-20, 114-4, 115-20.
அகம். 36-12, 46-10, 66-8, 70-8. 206-12, 221-4;

வதுவை ஈரணி : அகம் 166-13
வதுவை நன்மணம் : ஐந். 399-2 ; அகம். 86-17

| | | |
|---|---|---|
| வதுவை நாண் ஒடுக்கம் | : | நற். 393. 13 ; கலி 52-25 |
| வதுவை நாள் | ; | கலி 69-3, 75-11. அகம் ; 352-11 |
| வதுவை நாளணி | : | அகம். 56-9 |
| வதுவை நாற்றம் | ; | அகம். 25-5 |
| வதுவை மகளிர் | : | பதிற்று 89-17 ; அகம். 378-2 |
| வதுவை மண்ணியமகளிர் | : | அகம். 136-8 |
| வதுவை விழவணி | : | கலி. 98-3 |
| வதுவை விழவு | : | புறம் 372-10 |
| வரைந்த நாள் | : | மலை 557 ; அகம், 282-16 |
| வரைவு | : | அகம் 119-4 ; பதிற்று 43-17, 58-4 ; கலி. 8-16 ; |

# சிலப்பதிகாரம்

## மணிமேகலை காலத் திருமண முறை

சிலப்பதிகாரம் என்பது செந்தமிழ் இலக்கியங்களுள் மிக்க தொன்மையும் சிறப்பும் அமைந்த பேரியலக்கியமாகும். தமிழ் நாட்டின் பண்டைச் சிறப்பினை எடுத்தோதும் இனிமை உடையது. இந்நூல் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியதாகக் கருதப்படும். ஐம்பெரும் காப்பியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரம் செந்தமிழ்த் தேனை சிந்தையில் நிரம்பும் இனிய பாடல்களைக் கொண்டது. நல்ல அறங்களைப் போதிப்பது. நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் என்று பாரதியார் பாடியிருப்பதை மறுக்க முடியாது.

இவ்வினிய காவியத்தில் அமைந்த திருமண விழாவைக் காண்போம். இக்காவியத் தலைவன் கோவலன் என்பான் அவன் தலைவி கண்ணகி என்பாள். இவ்விருவரது திருமண நிகழ்ச்சியோடு சிலப்பதிகாரத்தின் முதல் காதை ஆரம்பமாகிறது. சங்க காலத்தில் கூட, பெருமளவு பழக்கத்திலிருந்து, போற்றப் பட்ட களவு மணம் கொண்ட தலைமகன், மணமகளின் பெற்றோரை அணுகி பெண் கேட்டு மணந்து கொண்டான். அல்லது தலைவியின் பெற்றோரே களவு மணம் கொண்ட மணமக்களை அழைத்துத் தம்மில்லில் ஊரார் அறியமணவினை நிகழ்த்தினர். இம்முறையே சிறந்தது என்று கொண்டனர்.

ஆசிரியர் தொல்காப்பியர் காலத்தும், சங்க நூற்காலத்தும் திருவள்ளுவர் காலத்தும் இருந்த தூய தமிழர் திருமண முறை இச்சிலப்பதிகார காலத்தில் மாறியிருக்கிறது. சங்க கால களவு வழி வந்த காதல் திருமணம் இளங்கோவடிகள் காலத்தே இல்லை என்பதை கோவலனுக்கும் கண்ணகிக்கும் நடந்த திருமணவினை காட்டுகின்றது. சிலப்பதிகார காலத்தில் பெண்ணின் பெற்றோரும் ஆணின் பெற்றோருமே கொள்வினை கொடுப்பினை செய்து கொண்டனர். அன்று தமிழகத்தில் நிலவிய நிலையே சிலப்பதிகார ஆசிரியர் இப்படியே எடுத்துக்

காட்டியிருத்தல் வேண்டும். மணவினை தொடங்குமுன்பு முதலில் மணமக்களையும் அவர்களது பெற்றோரையும் ஆசிரியர் அறிமுகப்படுத்துகின்றார்.

"'போதிலார் திருவினாள் புகழ் உடை வடிவு என்றும்
தீது இலா வடமீனின் திறம் இவள் திறம் என்றும்,
மாதரார் தொழுது ஏத்த வயங்கிய பெருங் குணத்துக்
காதலாள், பெயர் மன்னுங் கண்ணகி என்பாள் மன்னோ"

என்று கண்ணகியின் பெயர், பண்பு ஆகியவற்றைக் கூறுகிறார். ஒரு பெண் மணமற்றொரு பெண் புகழ்வது அரிது. ஆனால் இங்கு 'பெண்கள் எல்லாம் கண்ணகியைத் தொழுது ஏத்தினர் இலக்குமியின் வடிவமே இவள் வடிவம், குற்றம் அற்ற அருந்ததியின் கற்பே இவள் கற்பு. இவள் சிறந்த குணங்களை எல்லாம் விரும்புகின்றவளாய் இருந்தாள். இவள்தான் கண்ணகி என்றும் பெயர் உள்ளவள் இவ்வாறு இவளது அகப்புற அழகுகள் போற்றப் படுகின்றன,

'மண் தேய்த்த புகழினான், மதிமுக மடவார்தம்
பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டி,
கண்டு ஏத்தும் செவ்வேள் என்று இசைபோக்கிக்
காதலால்
கொண்டு ஏத்தும் கிழமையான் கோவலன் என்பான்
மன்னோ"

'உலகம் சிறியது' என்று சொல்லத் தக்க அளவு பெரும்புகழ் உடையவன், இனிய மொழியுடைய பெண்கள் அவனைச் செவ்வேள் என்றுகூறிப் பாராட்டி அவன் மேல் காதல் கொள்வர். அவன்தான் கோவலன் என்பான்' என்று கோவலன் பாராட்டப் படுகின்றான்.

திருமணத்திற்கு முன்பு, தமிழர் மரபைப் பின்பற்ற வேண்டும் என்ற நோக்கத்தில் கோவலன் கண்ணகி காதலித்தனர் என்ற குறிப்பு சிலப்பதிகாரத்தில் எங்கும் காணப்படவில்லை, இதற்குக் காரணம் ஆசிரியர் தன் காலத்திலிருந்த நாகரிகப் பண்பாடுகளை அப்படியே உரைக்க வேண்டும் என்று எண்ணிய எண்ணமாயிருக்கலாம்.

கோவலன், கண்ணகி இருவரது பெற்றோருமே பெருநிதி படைத்தவர்கள் இருவரும் பெருங்குடி வணிகர்கள். ஒத்த சிறப்பு

டையவர்கள். இவர்கள் இருவரும் சேர்ந்து கோவலன் கண்ணகிக்குத் திருமணம் செய்ய முடிவெடுக்கின்றனர். இதனை இளங்கோவடிகளார்.

> "இருபெரும் குரவரும் ஒருபெரு நாளின்
> மணவணி காண மகிழ்ந்தனர், மகிழ்ந்துழி
> யானை எருத்தத்து அணியிழையார் மேலிரீஇ
> மாநகர்க்கு ஈந்தார் மணம்"[1]

இரு பக்கத்துப் பெற்றோர்களும் ஒரு நல்ல நாளிலே தங்கள் பிள்ளைகளுக்குத் திருமணம் செய்து. அவ்விழாவைக் காண மகிழ்ச்சியுடன் விரும்பினர். அதனால் உடனே அவர்கள் செயலில் ஈடு பட்டனர். யானையின் மேல் அணிகலனணிந்த பெண்களை அமர்த்தி அவர்கள் மூலம் நகர மக்களுக்கு இந்த மகிழ்ச்சியான மணவினைச் செய்தியை அறிவித்தனர்.[2] இதனின்றும் பெற்றோர்களின் விருப்பப்படி கோவலன்-கண்ணகி திருமணம் முடிவு செய்யப் பட்டதை அறியலாம். இது ஒரு வருணத்துக்குள்ளாக நடைபெற்ற திருமணம்.

அவ்வாறு திருமணச் செய்தி அறிவித்தபின் குறித்த நாளிலே முரசு முதலியன முழங்கின. சங்குகளின் ஒலி முறைப்படி எழலாயின. மங்கல மரபினவாகிய வெண்குடை முதலியன அரசன் திருவுலாப் போதரும் போது எழுமாறு போல மிகுதியாக எழலாயின. இவ்வாற்றால் அப்புகார் நகரமெங்கும் திருமண விழாவின் அழகு தோனறலாயிற்று.

மலர் மாலைகள் தொங்கவிடப் பட்ட உச்சியினை உடையவாய் வயிர மணிகள் பதிக்கப்பட்டனவுமாகிய தூண்களையுடைய ஒரு அழகிய மண்டபத்தில் நீலப்பட்டினால் இயன்ற மேற்கட்டியின் கீழே முத்து மாலைகளால் அமைக்கப் பட்ட அழகிய திருமணப் பந்தலின் கீழே, வானத்திலே திங்களானது உரோகிணி என்னும் விண்மீனைக் கூடுகின்ற அந்த நல்ல நாளிலே அவ்வானத்தே தோன்றுகிற ஒப்பற்ற புகழுடைய அருந்ததி என்னும் மீனையொத்த கற்பென்னும் பெருந்தகைமையுடைய அக்கண்ணகியை அம்மாசாத்துவான் என்பான் மகனாகிய கோவலன் அறனறிந்து மூத்த சிறப்புடைய பார்ப்பனன் திரு

1. சிலப் 1: 41-44
2. பல்லார் அறியப் பறையறைந்து நாள் கேட்டுக் கல்யாணம் செய்து. நாலடியார் (9:6)

மணத்திற்கு மறைநூலிற் சொன்ன நெறியைச் செய்து காட்ட, திருமணம் செய்து கொண்டு அவ்விருவரும் வேள்வித் தீயை வலஞ்செய்கின்றனர். இக்காட்சியை அங்கிருந்து காண்கின்றவர்கள் கண்கள்தாம் முற்பிறவியில் என்ன தவம் செய்தனவோ என ஆசிரியர் வியக்கின்றனர்.

இவ்வாறு இருவரும் தீ வலஞ்செய்து தொழுத பின்னர் ஆங்குத் தளிரெனத் திகழும் மேனியையுடைய மங்கைப் பருவத்து மகளிர் விரையேந்தினர். மலரேந்தினர், புகழெடுத்தோதி வாழ்த்துப் பாடல் பாடினர்; ஒசிந்த நோக்குடைய மடந்தைப் பருவ மகளிர் சாந்தேந்தினர், நறுமணப் புகையேந்தினர், விளங்குகின்ற மலர் மாலை ஏந்தினர், அரிவைப் பருவத்து மகளிர் இடிக்கப் பட்ட சுண்ணமேந்திலர், விளக்கேந்தினர். அணிகலன் ஏந்தினர், தெரிவைப் பருவத்து மகளிர் விரிந்த முளைகளையுடைய பாலிகை ஏந்தினர், நிறைகுடம், ஏந்தினர், இவ்வாறு மங்கலப் பொருளேந்தி வந்த மகளிர் குழவொடு, செம்முது பெண்டிராகிய மலரொடு விரிந்த கூந்தலையுடைய பொன்னிறமான நறிய பூங்கொடியைப்போல்வாராகியம் செம்முது பெண்டிர், அழகிய இடங்களையுடைய இந்நிலவுலகத்தே தோன்றிய அருந்ததி போல்வாளாகிய கண்ணகியை நோக்கி, இந்நங்கை நல்லாள் தன் காதற்கணவனை எஞ்ஞான்றும் பிரியாமல் புணர்வோளாக என்றும், இவள் காதலன்றானும், அவளை அகத்திட்ட கை நெகிழாமல் எஞ்ஞான்றும் இவள்பாலே உறைவானாக என்றும் சிலவாகிய மலர்களைத் தூவித் தம் வழிபடு தெய்வத்தை வாழ்த்தி முன்னரே கோவலன் ஏறியிருந்த அழகிய திருமணக் கட்டிலின்

மேலேற்றினர்.[1] இவ்வாறாக இளங்கோவடிகள் கோவலன் கண்ணகிக்கு நடைபெற்ற மணவிலனயை மாண்புற விவரித்துள்ளார்.

இதைப்படிக்கும் பொழுது கோவலன் கண்ணகி திருமணம் வைதீக முறைப்படி தான் நடைபெற்றது. வேதங்களின் முறைகளை நன்றாக அறிந்த வயது முதிர்ந்த புரோகிதரால் இத் திருமணம் நடத்தி வைக்கப் பட்டது. திங்கள் உரோகிணியுடன் கூடிய நல்ல நாளில் திருமணம் நடைபெறுகிறது. இக்கருத்து சங்க காலத் தமிழரிடையேயும் உள்ளது.

எனவே, கி.பி. இரண்டாம் நூற்றாண்டினது என்று ஆராய்ச்சியாளர்கள் கூறும் சிலப்பதிகாரத்தில் சொல்லப் படும் கோவலன் கண்ணகி திருமணத்தில்தான் முதன் முதலில் மாமுது பார்ப்பான் மறைவழி காட்டத் திருமணம் நடந்தது என்றும், மண மக்கள் தீவலம் வந்தனர் என்றும், முளைப்பாலிகை

---

1. அவ்வழி,

முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன பணிலம் வெண்குடை
அரசெழுந்ததொர் படியெழுந்தன அகலுள் மங்கல அணி யெழுந்தது.

நீல விதானத்து நித்திலப் பூம் பந்தர்க் கீழ்
வான் ஊர் மதியம் சகடணைய வானத்துச்
சாலியொரு மீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலம் செய்வது காண்பார்கண் நோன்பென்னை
விரையினர் மலரினர் விளங்கு மேனியர்
உரையினர் பாட்டினர் ஒசிந்தநோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு கோதையர்
ஏந்திள முலையினர் இடித்த சுண்ணத்தர்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்
போதொடு விரிகூந்தல் பொலன் நறுங் கொடியன்னார்
காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்
தீதறு கென ஏத்திச் சின்மலர் கொடுதூவி
அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை
மங்கல நல்லமளி ஏற்றினார்

(மங்கல வாழ்த் : 45-64)

இருந்தது என்பதும் கூறப் பட்டுள்ளன. இச்சிலப்பதிகாரத்தில் தான் மணமகன் கோவலனுக்கு வயது பதினாறு என்றும் மண மகள் வயது பன்னிரண்டு என்றும் திருமணவயது கூறப் பட் டுள்ளது இத்தகைய, ஆண்டு வரையறை இருந்ததாக சங்க இலக்கியங்களினின்றும் அறியமுடிய வில்லை. இத்திருமணத்தில் நடைபெற்ற சடங்குகள் இன்று நடைமுறையிலிருக்கும திரு மணச் சடங்குகளை ஒட்டியே காணப்படுகின்றன. இவை மங்கல வாழ்த்துக்காதையிலே காணப்படும் செய்திகள். பின்னர் வரந் தருகாதையில் தேவந்தியின் திருமணத்தைப் பற்றிக் குறிப்பிடும் இடத்திலும் புரோகித மணமே குறிப்பிடப் பட்டுள்ளது.

தேவந்திகை யைத் தீவலம் செய்து
நால் ஈர் ஆண்டு நடந்ததன் பின்னர்
(வரந்தரு 84-85)

இவ்வடிகளும் புரோகித மணத்தையே குறித்தது. இதுவும் தமிழகத்தில் நடந்த திருமணமே. சிலப்பதிகார காலத்தில் நாகரிகம் பெற்ற சமூகத்தில் நடைபெற்ற மணங்கள் எல்லாம் வேதமுறையை ஒட்டிய வைதீக மணங்களாகவே நடைபெற்றிருத் தல் வேண்டும் புரோகிதர்களாலேயே மணச் சடங்குகள் செய்து வைக்கப் பட்டன. தம் மக்களின் நல்வாழ்வைக் கரு தியே பெற்றோர்கள் திருமணப் பொறுப்பை மேற்கொண்டனர். மண வாழ்வில் ஈடுபடும் மணமக்கள் இல்லறம் சிறப்புற வேண் டும் என்ற நல்லெண்ணத்துடன் தெய்வீகத் தன்மையுள்ள பல சடங்குகளை நிகழ்த்தினர். எனவே சிலப்பதிகார காலத்தில் தமிழ் மக்கள் இம்முறையைப் பின்பற்றினர் என்று சொல்லு தலே பொருத்தமானதாகும்.

**உறவு முறை மணம் :**

துறவறத்தைச் சிறப்பித்துக் கூறும் மணிமேகலைக் காப்பிய மும், சமூக நடை முறையிலே முக்கியப் பண்பாகிய திருமணம் பற்றிக் குறிப்பிடுகின்றது. அதிலும் மாமன் மகளை மணக்கும் உறவு முறைத் திருமணத்தைப் பற்றிய குறிப்பு மணிமேகலையில் காணப்படுகிறது. இப்பழக்கம் தமிழகத்தில் எப்பொழுது முதல் வழக்கில் இருந்தது என்பதை அறியமுடியாவிட்டாலும் மணி மேகலை காலத்தில் இத்திருமண வழக்கம் தமிழ்நாட்டில் இருந் தது என்பதற்கு இந்நூலில் சான்று காணப்படுகிறது. மணி மேகலை சிறை செய்காதையில்

'தரும தத்தனும் தன்மா மன்மகள்
பெருமதர் மழைக்கண் விசாகையும் பேணித்
தெய்வங் காட்டும் திப்பிய ஓவியக்
கைவினை கடந்த கண்கவர் வனப்பினர்
மைத்துனன் முறைமையால் யாழோர் மணவினைக்கு
ஒத்தனன் என்றே ஊர் முழு தலரெழ'[3]

என்று கூறப் பட்டுள்ளது. தரும தத்தன் என்பானுக்கு விசாகை மாமன் மகள். விசாகைக்கு தரும தத்தன் மைத்துனன். மைத்துனன் என்று சொல்லின் பொருள் மணம் புணர்தற்கு உரியவன் என்பதாகும். வடமொழியாளர் மாமன் மகளை 'மைத்துனன்' என்பர். ஆண்டாள் திருமொழியிலும் 'மைத்துனன் நம்பி' என்ற தொடர் அமைந்துள்ளதைக் காணலாம். மைத்துனன் என்ற சொல்லே பிற்காலத்தில் மச்சான் எனத் திரிந்தது.

மேற் கூறப்பட்ட மணிமேகலைப் பாடலில் விசாகையும் தரும தத்தனும் மணஞ் செய்து கொள்வது இயற்கையான வழக்கமாக அக்காலத்தில் அனுமதிக்கப் பட்டது அப்படியிருக்கையில் யாழோர் கூட்டமாகிய கந்தருவ மணத்திற்கு விசாகை உடன் பட்டது முறையான செயலாகக் கருதப் படவில்லை. அதன் விளைவாக ஊர் முழுவதும் அலரெழுந்தது.

மணிமேகலை காலத்தில் தமிழகத்தில் மாமன் மகளை மணஞ்செய்யும் பழக்கம் வணிகர் குடியில் தோன்றியிருக்கலாம். இதற்கு முக்கியகாரணங்கள் தம்முடைய செல்வம் தம் குடியிலேயே எக்காலத்தும் இருக்க வேண்டும் என்பதும், வருணப் பாகுபாடு குலப்பாகுபாடுபோன்றவை என்றும் அழியாமல் இருக்க வேண்டும்என்பதும் ஆகும். இவ்வகைகளில் உறவுமுறைத் திருமணம் பயன்பட்டிருக்கலாம். உறவு முறையில் கொள்வதும் கொடுப்பதும் தமிழர்களிடையே இன்றும் வழக்கிலுள்ளது.

---

3. அடிகள் 83-88

# இடைக்காலத் திருமண முறைகள்

கி.பி. 6 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு முடிய இடைக்காலப் பகுதியாகக் கொள்ளப்படுகிறது. இக்காலப் பகுதியில் நாயன்மார் ஆழ்வார் பாடல்கள், சூளாமணி, சிந்தாமணி, பெரியபுராணம், கந்தபுராணம், கம்பராமாயணம் என்னுங் காவியங்களிலும், நந்திக் கலம்பகம், நளவெண்பா போன்ற சிற்றிலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ள திருமணம் பற்றிய செய்திகள் இப்பகுதியிலே தொகுத்தும் வகுத்தும் கூறப்படுகின்றன.

## திருமண வகைகள்

சங்க இலக்கியங்களுள் பல்வேறு வகைப்பட்ட திருமணங்கள் காணப்பட்டதைப் போலவே இடைக்காலப் பகுதியிலும் பலவகையான திருமண முறைகள் காணப்படுகின்றன. அவை பெற்றோர் நிச்சயிக்கும் திருமணம், மகட்கொடை மணம், வீரமணம், உறவு முறை மணம், கந்தருவ மணம், சுயம்வரமணம் என்பன. இவற்றுள் கந்தருவ மணமும் சுயம்வர மணமும் வடநாட்டுக்கே உரியவையாகும். இம்மண முறைகளை அவ்வவ்விலக்கிய வழிநின்று காண்போம்.

## பெருங்கதை

பெருங்கதை அல்லது உதயணன் கதை சேர்ந்து நாட்டில் தோன்றிய ஓர் ஒப்பற்ற இலக்கியம். அதன் ஆசிரியர் கொங்குவேளிர். தமிழ் இலக்கிய வரலாற்று அறிஞர்களின் கருத்துப்படி இதன் காலம் 7 அல்லது 8ஆம் நூற்றாண்டு எனக் கொள்ளலாம். பெருங்கதையின் காலத்தைக் கணிப்பதில் வேறுபாடுகள் தோன்றினாலும், பொதுவாக இந்நூல் சிலப்பதிகாரத்திற்குப் பின்னரும் பக்தி இலக்கியங்கள், சீவக சிந்தாமணி இவற்றிற்கு முன்னரும் தோன்றியது என்பதை அனைவரும் ஏற்பர். வாழ்க்கைக்குத் தேவையான பல உண்மைகளும் அறிவுரைகளும் நிறைந்த பல கதைகளைக் கொண்ட நீண்ட கதைத் தொகுதி என்பதால் இந்நூல் பெருங்கதை எனப்பட்டது. இதில் உதயணனுடைய

கதை பெரும்பகுதியும், அவன் மகன் நரவாணதத்தன் கதை சிறுபான்மையும், இடம் பெற்றுள்ளன.

**பெருங்கதையில் திருமணம்**

பழந்தமிழர் மணவினையில் எரி ஓம்பல், தீயினை வலம் வருதல் போன்ற வைதிகச் சடங்குகள் இடம் பெறவில்லை. ஆனால், இலக்கியச் சான்றுகளின் நெறி நின்று பண்டைத் தமிழர் திருமண முறை அதன் வளர்ச்சி இவற்றை ஆராயும் போது முதன் முதலில் சிலப்பதிகாரத்தில், மணமக்களாகிய கோவலனும், கண்ணகியும் மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத் தீவலம் செய்வதாக ஆசிரியர் இளங்கோவடிகள் கூறியுள்ளார். இவ்வாறு சிலப்பதிகாரத்தில் கூறப் பெற்றுள்ள சில வைதிகச் சடங்குகளோடு இன்னும் விரிவான முறையில் திருமணச் சடங்குகள் பல பெருங்கதையில் கூறப்பட்டுள்ளன. பல்வேறு புறத் தொடர்புகளின் தன்மையால் காலந்தோறும் திருமணத்தில் புதுமுறைகள் புகுவது இயற்கை.

சங்க காலத்தில் களவு மணம் பெருவழக்கிலிருந்தது. களவு வாழ்க்கையின்றித் திருமணம் நடைபெறவில்லை என்றுகூடக் கூறலாம். இதை அடுத்துத் தோன்றிய சிலப்பதிகாரத்தில் இம்முறை காணப்படவில்லை. ஆனால் பெருங்கதையில் சங்க காலத்தில் திருமண மரபை ஒட்டியே ஆசிரியர் உதயணன் திருமணத்தைக் கூறுகிறார். காவியத் தலைவன் உதயணன் செய்து கொண்ட திருமணங்களுள் உதயணன் வாசவதத்தை திருமணம், உதயணன் பதுமாவதி திருமணம், உதயணன் மானனீகை திருமணம், ஆகிய மூன்று திருமணங்களும் களவு மணமாகவே அமைந்துள்ளன.

சங்க காலத்தில் சிறுபான்மை வழக்கிலிருந்த களவு மணம் அன்றி, பெற்றோர் பெண் கேட்டு மணம் முடிக்கும் நிலையும் பெருங்கதையில் காணப்படுகிறது. உதயணன் மகன் நரவாணதத்தன் மதன மஞ்சிகை, என்பாளின் அழகைக் கேட்டுக்காதல் கொள்கின்றான். அவன் காதலையறிந்த உதயணன் மதன மஞ்சிகையின் தாயிடம் சென்று பெண்கேட்டு மணமுடிக்கின்றான். இப்பெருங்கதையில் வரும் மற்றொரு பெண் விரிசிகை என்பாள். இவள் ஒருசமயம் மலர்ப்பொழிலில் உதயணன் மாலைத் தொடுத்துத் தந்தது முதற்கொண்டு அவனையே நினைந்து காதல் கொண்டாள். அவளுடைய தந்தை தன்மகள் விரிசிகையின் நிலை கூறி, வேண்ட உதயணனும். அவளை மணந்தான். அவ்வாறு பெருங்கதையுள் சங்கத் தமிழரிடையே இருந்த இரண்டு மணமுறைகளும் காணப்படுகின்றன.

இனிப்பெருங்கதையின் காவியத் தலைவனும். தலைவியு மாகிய உதயணன் வாசவதத்தை திருமண நிகழ்ச்சியைக் கூறும் வகையில் ஆசிரியர் கொங்குவேள் அக்காலத்திய திருமண முறைகளை முறைப்படுத்திக் கூறியுள்ளதைக் காண்போம் ஆசிரியரே.

வளப்புவீற் றிருந்த வாசவ தத்தை
வதுவைச் செல்வம் விதியிற் கூறுவென்

என்கிறார். (பெருங் : 2;2: 8-9)

**மணநாள்:**

உதயணன், வாசவதத்தைக்கு மணம் நிகழ்த்த உகந்த நன்னாளை சோதிடர் கணித்துத் தருகின்றார். அதை வள்ளுவன் யானை மீதிருந்து முரசறைந்து நகர மக்கட்கு அறிவிக்கின்றான். இவ்வாறு மணம் நிகழப் போகும் செய்தியை ஊரார்க்கு அறிவித்தலை சிலப்பதிகார மணவினையிலும் கண்டோம்.

வாசவ தத்தையொடு வதுவைக் கூடிக்
கோல நீள்மதிற் கொடிக்கோ சம்பி
மாலை மன்னவன் மணமகன் ஆகும்
காலை இதுவென (பெரும் 2:2:49-52)

**நகர் அலங்காரம்**

நகர் அலங்கரிக்கப்பட்டது. வாயில்தோறும் தோரண கம்பங்கள் வானளாவ நடப்பட்டு, அவற்றில் பொன் மாலைகளும் முத்து மாலைகளும் ஒருங்கே வளைத்துக் கட்டப்பட்டன: எல்லா வீடுகளும் அலங்கரிக்கப்பட்டன.

**மங்கல நீர் கொண்டு வருதல்**

பெருமிதங்கொண்ட யானைகளின் மீது கொண்டு வரப் பட்ட மங்கல நீரினால் உதயணனும் வாசவதத்தையும் நீராட்டப் பட்டனர். இம்மங்கல நீர் கொண்டு வரும் செயல் யாரால் எவ்வாறு கொண்டு வரப் பெற்றது என்பது மிக விரிவாக இக் காவியத்தில் கூறப்பட்டுள்ளது. மணமக்களை நீராட்ட மங்கல நீர் கொண்டு வர இல்லந்தோறும் ஒரு கன்னிப்பெண் அழைக்கப்படுவாள். மங்கல நீர் ஒரு குறிப்பிட்ட குளம் அல்லது கிணற்றிலிருந்து எடுக்கப்படும். இதைக் கொணர, ஐம்பெருங்குழு, எண்பேராயிரம், உறவினர், விருந்தினர், எனப் பலரும் நெருங்கிச் சென்றனர். ஆயிரத்தெட்டு யானைகளில் ஒவ்வொன்றின் மீதும் ஒரு கன்னிப் பெண் அமர்ந்து குடத்தைப் பிடித்துச்

சென்றாள். அப்பொழுது பல்வேறு இசைக் கருவிகள் முழங்கின. பின்னர் சான்றோர் மணமகனையும், முதுபெண்டிர் மணமகளை யும், நீராட்டினர்.

## முழுத்தம் அறிந்து கூறல்

திருமணம் பற்றிய ஆரவாரம் எங்கும் எழுந்தது. கணியன் நாள், கோள் முதலியவற்றை விழிப்புடன் ஆராய்ந்து உதயண னுக்கும் வாசவதத்தைக்கும் உயிர் ஒன்று என்னும் உரிமை யைத் தருகின்ற திருமணவேள்வி நடத்த நல்ல முகூர்த்தத்தை அறிந்து அறிவித்தான். இங்கு ஈருயிர்கள், ஒன்றுபட்டு, ஓரு யிராக விளங்குகின்ற தன்மையைத் தருவது திருமணம் என்பதை 'ஒருயிர்க் கிழமை' என்ற சொற்கள் புலப்படுத்துகின்றன.

இடிஉறழ் முரசின் ஏயர்பெரு மகற்கும்
பிடிமகிழ் யானைப் பிரச்சோ தனன்மகள்
வடிமலர்த் தடக்கை வாசவ தத்தைக்கும்
ஒருயிர்க் கிழமை ஓரை அளக்கும்
பேரியலாளர்
(பெருங் 2 : 2 : 2-6)

## மணப்பந்தலும் வேள்வித்தீயும்

வேள்வித் தொழிலின் கண் சிறப்புடையவனும், வேதம் ஓதுவதில் தேர்ச்சியுடையவனும் தூயவனுமாகிய பார்ப்பனன் மலரால் அலங்கரிக்கப் பட்ட பந்தரிடத்து நல்லிலக்கணமமைத்த நிலத்தை ஆராய்ந்தறிந்து அங்கு வெள்ளிய மணலைப் பரப்பி முக்குழி அமைத்து அவற்றில் சமிதைகளை (வேள்வித் தீயிலி டும் விறகு) இட்டு அவியாத வேள்வித் தீயை வளர்த்தான்.

'அறுதொழிலின் முத்தீ அருந்துறை போகிய
மறைநவில் நாவின் மரபியல் அந்தணன்
பல்பூம் பந்தருட் செல்வஞ்சிறக்கும்
இருநிலத் திலக்கணம் இயற்பட நாடி
வெண்மணல் நிரப்பங் கொளீஇக் கண்ணுறப்
புண்ணியப் பலாசின் கண்ணிறை சமிதை
முக்குழிக் கூட்டத் துட்பட ஒக்கி
ஆற்றாச் செந்தீ அமைத்தனன்",
(பெருங் 2:3:9-16)

**நிறைகுடம் வைத்தல்:**

மணப் பந்தலில் இருந்த நாற்பத்தைந்து கால்கள் ஒவ்வொன்றும் ஒரு தெய்வம் நிலைபெற்றதாகக் கருதி அக்கால்கள் தோறும்'' கூலமுளைகளையுடைய நிறைகுடங்களை அழகுற அமைத்தனர்.

'ஐஒன்ப தின்வகைத் தெய்வ நிலைஇய
கைபுனை வனப்பில் கான்முதல் தோறும்
ஆரணங் காகிய அணிமுளை அகல்வாய்ப்
பூரண பொற்குடம் பொலிய இரீஇ''

(பெருங்:2:3:17-20)

மணல் பரப்பப்பட்ட இப்பந்தலில் நெய்யோடு கலந்த ஐந்து வகைப்பட்ட சிற்றுண்டிகளோடே தாளிப்பு வளமுடைய அறுசுவை அடிசிலாகிய பெருஞ்சோற்றுத் திரளை அந்தணர் பலரும் பரவ இருந்து உண்டனர். எஞ்சிய உணவுப் பொருள்கள் ஒரு பக்கத்தில் குவிந்து கிடந்தன.

**அம்மி மிதித்து அருந்ததி வாழ்த்தல்**

அப்பந்தலில் கீழ்த்திசையின் மூலையில் அம்மி இடப்பட்டது. அங்கே மேடையின் மேல் அரசாணி இருந்தது. முற்கூறப்பட்ட பார்ப்பன முதுமகன் அரசாணி முன்னர் வணங்கினான். ஆவிரை மலர் முதலியவற்றை இடையிடையே வைத்துத் தொடுத்த மாலையினைத் தூக்கி அருந்ததியையும், வசிட்ட முனிவனையும் பொருந்தும் மொழிகளாலே வாழ்த்தினான். அந்தணர் பலரும் மணமக்களைப் புறநிலை வாழ்த்தாக வாழ்த்தினர்.

......அம்மிக் குணதிசைக் கோணத்
திடமை பீடிகை பாடுபெற இருந்த
பொன்னயி ராணி முன்வயிற் பேணிப்
பன்னிய பனுவற் பார்ப்பன முதுமகன்
அந்தண் ஆவிரை அலகும் அறுவையும்
நந்தி வட்டமும் இடையிடை வலந்த
கோல மாலை நாற்றி வானத்து
அருந்ததி அரிவையோ டாணிகற் பரவும்
பொருந்துமொழிப் புறநிலை புணர்ந்துபலர் வாழ்த்தி''

(2:3: 27-35)

### தெய்வங்கட்கு உணவுப் பலி

பால் உலையில் வெந்த வெண்சோறு, தேனுலையில் வெந்த தேன்சோறு, புளிநீரில் வெந்த பொன்னிறமான புளிஞ்சோறு, கருப்பஞ்சாற்றில் வெந்த இன்னடிசில், நெய்ப்பொங்கல், ஆகிய வற்றைப் பொன், வெள்ளி, மணி செம்புகளாலான அகல்களில் நிறைத்துத் தெய்வஙகட்கு உணவுப் பலி கொடுத்தனர்.

### தெய்வங்களை வழிபடுதல்

தக்கோலம், ஏலம், இலவங்கம், சாதிக்காய், கற்பூரம் எனும் ஐவகை மணப்பொருட்களோடே வெற்றிலையையும் வலப் பக்கத்தே வைத்து, சந்தனத்துடன் மஞ்சளையும் நடவி இரும்பாற் செய்த அகலிடத்தே நிறைக்கப்பட்ட நெருப்பு நிறை களைச் சுற்றி நறும்புகை கொடுத்து. தேவீர்! நீவிர் மலையிடத் திருந்தாலும், மண்ணிடத்திருந்தாலும், விண்ணிடத்திருந்தாலும் இங்கு வந்து இந்தப்படையலைப் பெற்றுமணமக்களுக்குமங்கலத் தைக் கொடுக்க வேண்டும். எனத் தேவர்களை வேண்டினர். பந்தக்கால்கள் தோறும் நான்முகக் கடவுள் முதலிய தெய்வங் கட்கு அமைந்த இடங்களைச் செம்முது பெண்டிர் தம்மைக் கன்னிப்பெண்கள் சூழ்ந்திருக்க வலம் வந்து உழுந்தும், நெல்லும், உப்பும், மலரும், வெற்றிலைச் சுருளும், சந்தனமும் ஆகிய மங்கலப் பொருள்களைத் தமது அங்கையில் அடக்கிக் கொண்டு, காந்தள் இதழ் போன்ற தம் மெல்லிய விரல்களைக் குவிந்த மொட்டுப்போலக் குவித்து 'எல்லீரும் இங்஧னம் ஏழுமுறை வணங்குமின்' என உழுந்து முதலியவற்றைத் தூவி வணங்கிக் காட்டா நிற்பர் அக்கன்னிமகளிரும், அவ்வாறே வணங்கித் தெய்வங்கட்கு மடை கொடுத்தனர்.

### மணச்சடங்கு

பின்னர் மணக்கோலம் பூண்ட வாசவதத்தையைக் காஞ்சனை என்பாள் அழைத்து வந்து பேரழகுடைய உதயணன் பால் இருக்கச் செய்தாள், மணவறைக்குப் பக்கத்தில் மணையின் மேலிருந்த பார்ப்பன முதுமகன் கீழ்த்திசையை நோக்கிச் சமிதைத் தொழிலை நிறைவுடன் செய்தான். மந்திர வழிப்படி அகப்பையிற்றோய்த்த பசு நெய்யினை வேள்வித் தீயில் பெய்து 'போகமும் கற்பும் ஒருங்கே கூடி நிலைநிற்பனவாக' என்று அச்சடங்கினது குறிப்புப் பொருளைக் கூறினான். பின்னர் உத யணன் கையாலே வாசவதத்தையின் அடியைப் பற்றுவித்து,

அதைத் தூக்கி அம்மியின் மேல் வைக்கச் செய்தான். மணமக்களின் கைகளிலே மங்கலப் பொரியினைக் கொடுத்து வேள்வித் தீ பொலிவுறும்படி அதை பெய்விக்கச் செய்தான்.

"போகமும் கற்பும், புணர்ந்துடன் நிற்கென
ஆகுபொருள் கூறி அம்மிமுதல் உறீஇ
நன்னெய் தீட்டிய செம்மலர் அங்கைப்
பொம்மல் வெண்பொரி பொலியப் பெய்தபின்"
(பெருங் 2 : 3 : 87–90)

அந்தணன் வாழ்த்தல்

பின்னர் அப்பார்ப்பன முதுமகன்

"நன்னிலை உலகினுள் நாவல் போலவும்
பொனணி நெடுமலை போலவும் பொழில்வயின்
மன்னுக இவரென"

என்று வாழ்த்தித் திருமணச் சடங்குகளை முறை பிறழாமல் செய்து முடித்தான்.

**மைத்துன முறைமை கொண்டாடல் :**

மணமகனும் மணமகளின் உடன்பிறந்த ஆடவரும் ஒருவர் தோளில் கிடக்கும் மாலையை எடுத்து மற்றவர் தோளில் அணிவித்து மைத்துன முறை கொண்டனர்.

**தீ வலம் வருதல்**

இதையடுத்து உறவினர் சூழ்ந்து நிற்க மணமகளின் பெற்றோர் தீ முன்பு நின்று தம்மகளை மணமகனிடம் ஒப்படைக்கின்றனர் பின்னர் மணமகன் மணமகள் கையைப் பற்றித் தீயினை வலம் லருகின்றான். தீயினை வலம் வந்ததும் உதயணன் வாசவதத்தையை நோக்கி "நீ குற்றமற்ற நன்மக்களைப் பெறுவாயாக" வறுமைக்காலம்வந்துற்றாலும் வேறுபடாத அன்புகொண்டுவிளங்குவாயாக" என்று கூறினான். பின்னர்த் தென்திசையில் பரப்பிபிருந்த தருப்பைபின் மீது அவளை நடக்கச் செய்ய திரும்ப மணத் தவிசிற்கு அழைத்து வந்த அமர்ந்தான். அந்தணர் அவர்களை வாழ்த்தினர்.

யாயும் எந்தையும் தீ முன் நின்று
வாயிற் கூடுதல்.........
.................. மடத்தகை மாதரை
வளைபொலி முன்கை வருந்தப் பற்றித்
தளையவிழ் தாரோன் வலமுறை வந்து
தென்மருங்கு மடுத்த தீர்த்தப் புன்மிசை
மென்மருங்கு எழிலியை மெல்லென நடாஅய்
வதுவைத் தானம் பொதுவந்தொன்றி
அந்த ணாளர் ஆசிடை கூற

(பெருங் 2 : 3 : 108-119)

### அருந்ததி காட்டல் :

பின்னர் உதயணன் வட திசையில் ஒளிமிக்கு விளங்கிய சிறந்த வடமீனாகிய அருந்ததியை வாசவதத்தைக்குக் காட்டி, அவளை நெற்றிக்கு மேலாக கைகுவிக்கச் செய்து யான் நின்னைப் போன்று மாசறு கற்புடையேன் ஆகும்படி அருள்வாயாக என்று மும்முறைவணங்கச் செய்தான்.

வடபான் மருங்கில் சுடர்மீக் கூறிய
கற்புடை விழுமீன் காணக் காட்டிப்
பொற்றொடி நுதன்மிசைப் புனைவிரல் கூப்பி
மன்னிய உலகினுள் நன்னியல் பாக
என்வயின் அருளென மும்முறை இறைஞ்சுவித்து.

(பெருங்2 : 3 : 125-29)

### சதுர்த்தி நோன்பிருத்தல்

பின்னர் மணமக்கள் அவாவினை அடக்கி நான்கு நாட்கள் சதுர்த்தி நோன்பிருந்தனர். புதுமணமக்கள் "மூன்று இரவின் முயக்கமின்றி ஆன்றோர்க்கு அமைந்த வகையால் பள்ளி செய்து ஒழுகி, நான்காம் நாள் பகல் எல்லை முடிந்த காலத்துக் (தொல் கற். சூ 4. நச் உரை) கூடினர்.

### மணவறைக் கட்டில்

சதுர்த்தி நோன்பு முடிந்த நான்காம் நாள் இரவில் பள்ளிக் கட்டிலைச் சுற்றிலும் மலர் மாலைகளைத் தொங்கவிட்டு கண்ணையும் சாக்கையும் கவரக் கூடிய வகையில் ஒப்பனைத்

தொழில்களைச் செய்தனர். வாசவ தத்தையை அவளுடைய தோழி கையால் தழீஇ அழைத்து வந்த அக்கட்டிலின் மேல் அமரச் செய்தாள், பின்னர், உதயணனை அழைத்து வந்து அவளருகே அமரச் செய்தனர். பிறகு உதயணனுடைய கையைப் பற்றி வாசவதத்தையின் உச்சி முதல் அடிவரை தீண்டச் செய்தனர். பின்னர் பொன் தட்டில் மங்கலச் சோற்றினை எடுத்து வந்து இருவர்க்கும் முறைப்படி ஊட்டினர்.

''தகைமலர்த் தாரோன் தடக்கை பற்றியவள்
முகைமலர்க் கோதை முடிமுதல் தீட்டிச்
செம்பொற் றாலம் மலிரப் பெய்த
மங்கல வயினி மரபுளி யுறீஇ

(பெருங்2 : 3 : 158-61)

வாசவதத்தையொடு வத்தவர் இறைவனை
முட்டில் செல்வமொடு முறையிற் பிழையாது
கட்டில் ஏற்றினர்.......... ... (பெருங் 2 : 3 : 165-67)

இவ்வாறாக மணமக்களைப் பள்ளிக் கூட்டில் ஏற்றினர்.

திருமணம் நடந்த பின்னரே, பலவகைச் சிறப்புடன் ஆறாம் மாதத்தில் செய்யப் படுவதொரு மங்கல காரியம் விதிப்படி செய்யப் பட்டதை பெருங்கதையின் அடுத்த இரண்டு காதைகளிலும் கூறுகின்றன.

**உடல் மயிர் களைதல்**

திருமணம் முடிந்த ஆறாம் மாதம் பந்தலிட்டு, மணவறை அமைத்து அதில் மணமக்களை இருக்கச் செய்து, மகளிர் அவர்கட்கு உணவூட்டிய பின் அந்தணர் நெருங்கி வந்து வாழ்த்தி மறையிற் கிரியயை முறை அறிந்து ஓதுகின்றனர். பின்னர் மண்ணுவினை மயிர்த்தொழில் நன்னல நாவிதன் மணமகன் முகத்தில் மயிர் களைந்தான். பிறகு உதயணனையும் வாசவதத்தையையும் பலவகைச் சிறப்புடன் நீராட்டியபின் அலங்கரிக்கின்றனர். இருவரும் இன்புற்றிருக்கின்றனர். திருமணத்திற்குரிய செயல்களுள் ஆலயம் வலம் வருதலை உதயணன் மேற்கொண்டமையும் இதில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. மணமக்கள் ஆலயம் சென்று இறைவனை வணங்கி நகரை வலம் வருவது முறையாயிருந்தது.

சங்க காலத் திருமண முறைகளோடு இன்னும் பல சடங்குகள் சேர்த்து உதயணன் வாசவதத்தை திருமணத்தை ஆசிரியர் நிரல் பட படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

சில சொற்றொடர்களைக் கொண்டு பெண்கள் மங்கல நாணாகிய தாலி அணிந்திருந்தனர் என்று அறிய முடிகிறதே அல்லாமல் திருமணச் சடங்கு நிகழும் போது தாலி கட்டியதாக சிலப்பதிகாரக் காவியத்தில் சான்று கிடைக்கவில்லை. அதுபோலவே அதைவிட விரிவாகத் திருமண நிகழ்ச்சிகளைக் கூறும் இப்பெருங்கதையிற் கூட தாலி கட்டும் நிகழ்ச்சி கூறப் பெறவில்லை.

சங்க இலக்கியங்களில் போற்றப் பட்ட ஒரு சடங்காக இருந்த 'சிலம்பு கழி நோன்பு' சிலப்பதிகாரத்திலும் இப்பெருங்கதையிலும் கூறப் படவில்லை. சங்காலத் திருமண நிகழ்ச்சிகள் இயற்கையோடு பொருந்தி நடந்தவை. சிலப்பதிகாரத்தில் வேள்வித் தீயை வலம் வரும் புதிய செய்தி கூறப் பட்டுள்ளது. பெருங்கதையில் அவற்றுடன் அம்மி மிதித்தல், அருந்ததி காட்டல் போன்ற பல சடங்குகள் இடம் பெற்றுவிட்டதைக் காண முடிகிறது.

# நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்

## ஆண்டாள் கண்ட திருமணம்

கண் நிறைந்த கணவனை அடையவே பெண்கள் விரும்புவர். களவு மணமானாலும் கற்பு மணமானாலும் நல்ல கணவனை அடைய வேண்டும் என்பதற்காகச் சில நோன்புகளை நம் முன்னோர்கள் ஏற்படுத்தினர். துளசி பூஜை, திருவாதிரை நோன்பு, பாவை நோன்பு, காமன் நோன்பு போன்றவை இதனடிப்படையில் தோன்றியவையே.

சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாகிய ஆண்டாள் தன் திருப்பாவையில் நல்ல கணவனை அடைய வழி கூறுகின்றாள். மார்கழித் திங்களில் அதிகாலையில் எழுந்து, நதியில் நீராடி, மணலில் பாவை அமைத்து; அதைத்தேவியாகக் கருதி வழிபடல் வேண்டும். நோன்பின் நோக்கம் நாட்டில் நல்ல மழை பெய்ய வேண்டும். தனக்கு நல்ல கணவன் அமைய வேண்டும் என்ற இவ்விரண்டுமேயாகும். பாவை நோன்பு இருத்தற்குறிய விதி முறைகளையும் கூறியுள்ளார்.

பெண்கள் நல்ல கணவனை அடைய வேண்டும் என்பதற்காக காமன் நோன்பு நோற்கின்றனர். இக்கருத்தினை ஆண்டாளின் திருமொழியில் காணலாம். தெருவினை வெண்மணல் கொண்டு அலங்கரிகின்றனர். தரையை மெழுகி வட்டமான கோலமிடுகின்றனர்.

"வெள்ளை நுண் மணற்கொண்டு தெருவணிந்து
வெள்வரைப் பதன்முன்னம் துறைபடிந்து,
முள்ளுமில் லாச் சுள்ளி யெரிமடுத்து
முயன்றுன்னை நோற்கின்றேன காமதேவா"

(திவ், பி.505)

ஆண்டாள் கண்ணனையே கணவனாக வரித்து அவனையே அடைகிறாள். அவள் அனுபவங்களை வெளிப்படுத்துவதே

திருப்பாவையாகும். மேலும் ஆண்டாள் தனது நாச்சியார் திருமொழியில் கண்ணன் தன்னை மணஞ்செயக் கண்ட தூய நற்கனவை தோழிக்குரைப்பது போலப் பத்துப் பாடல்களைப் பாடியுள்ளார். அப்பத்தும் ஆண்டாள் நாரணனை மணந்தாள் என்பதற்கான சான்றுகளாக மட்டும் அமையாமல் அவை ஆண்டாள் வாழ்ந்த காலத்தில் வழக்கிலிருந்த திருமணச் சடங்குகள் எவை என்பதையும் அறியவும் மிகவும் துணைபுரிகின்றன.

ஆண்டாள் இளமை முதலே ஆண்டவனையே எப்பொழுதும் நினைந்து நினைந்து மகிழ்ந்தவள். அவள் வளர்ந்து திருமணப் பருவம் அடைந்த காலத்திலும் திருமணம் செய்துகொள்வதென்றால் அப்பரமனையே மணாளனாகக் கொள்ள வேண்டும் என்ற மனவுறுதியோடு இருந்தாள்.* அவள் நினைவிலெல்லாம் அப்பரமனே இருக்கின்றான். அவள் உள்ளத்து உணர்வுகள் விருப்புகள் கனவில் வெளிப்படுகின்றன. கனவில் அப்பரமனோடு அவளுக்குத் திருமணமே நடந்து விடுகிறது தன்தோழிக்குச் சொல்வதுபோலத் தனக்கும் நாரணனுக்கும் நடந்த திருமணத்தைக் கோதையாகிய ஆண்டாள் விவரிக்கின்றாள்.

அக்காலத்து வாழ்ந்த செல்வந்தர்களால் மேற்கொள்ளப் பட்ட விரிவான வைதிக முறைத் திருமணச் சடங்குகள் எவை எவை என்பதை ஆண்டாள் அருளிய நாச்சியார் திருமொழியின் 'வாரணமாயிரம்' எனத் தொடங்கும் ஆறாம் பகுதி மிகத் தெளிவாக விளக்குகிறது. ஒருசில கருத்துக்கள் பாடல் அமைப்பில் இடம் மாறி இருந்தாலும், திருமண வினையில் மேற்கொள்ளப் படும் சடங்குகள் எல்லாம் இனிய எளிய சொற்களால் கூறப் பட்டுள்ளன. மணமகன்-நாரணன் மணமகள் ஆண்டாள்.

**மணமகன் ஊர்வலம்**

மணமகன் ஊர்வலம் வருகிறது. அந்த நாரணன் ஆயிரம் யானைகள் சூழ வருகிறான். அவனை வரவேற்குமுகமாக நகர முழுமையும் அலங்காரத் தோரணங்கள் கட்டப்பட்டுள்ளன. (பொற்குடங்களில் பூரண கும்பம் வைத்து) அவனை எதிர்கொள்கின்றனர்.

---

* வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே திவ்.பி 504
மானிடவர்க்கென்று பேச்சுப் படிதல்
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே! திவ்.பி. 508

வாரணமாயிரம் சூழ வலம் செய்து
நாரண நம்பி நடக்கின்றா னென்றெதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக் கண்டேன்'' (6-1) (556)

நாளை திருமணம் என்று நாள் குறித்துள்ளனர். பாளை, கமுகு, முதலியவற்றால் மணப்பந்தல் அலங்கரிக்கப்பட்டுள்ளது. மாதவன் சிங்க நடை போட்டு மிடுக்குடன் பந்தற்குள் நுழைகிறான். இந்திரனுள்ளிட்ட தேவர்கள் வந்து முறைப்படி மணம் பேசிய திருமணம் இது. மணமகளின சகோதரி அந்தரி (துர்க்கை) மணமகளுக்கு மணக்கோலம் செய்விக்கின்றாள். புத்தாடை அணிவித்து, மணமகளின் கழுத்தில் மணமாலை சூட்டுகின்றாள்.

''இந்திரன் உள்ளிட்ட தேவற்கு ழாமெல்லாம்,
வந்திருந்தென்னைம கட்பேசி மந்திரித்து
மந்திரக் கோடியு டுத்திம ணமாலை,
அந்தரி சூட்டக்க னாக்கண்டேன்'' (558)

வேதவிற்பன்னர்கள் பலர் கூறும் வேதவொலி முழங்க மணமக்கள் இருவரையும் தூய நறுமணமுள்ள நீரால் மஞ்சனமாட்டிக் காப்பு நாண் அணிவிக்கின்றார்கள் பின்னர்

''மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமநி ரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பிம துசூதன் வந்து என்னைக்
கைத்தலம் பற்றக்க னாக்கண்டேன்'' (561)

என்று ஆண்டாள் கூறுகிறாள்.

அக்கினி சாட்சியாக நாரணன் அவள் கைப்பற்றி தீவலம் வந்து மணந்து கொண்டதைக் கூறுகிறாள்.

''காய்சின மாகளி றன்னானென் கைப்பற்றி
தீவலம் செய்யக் கனாக்கண்டேன்'' (562)

மதுசூதனன் ஆண்டாளின் கரங்களைப் பற்றி தீவலம் செய்ததோடு ,ள்வஅ ப்ளகைல்ாக பற்றி அம்மியின் மீது எடுத்துவைத்ததைக் கூறுகிறாள்.

''இம்மைக்கும் ஏழேழ்பி றவிக்கும் பற்றாவான்,
நம்மையு டையவன் நாராய ணன்நம்பி,

செம்மையு டையதி ருக்கையால் தாள்பற்றி,
அம்மிமி திக்கக்க னாக்கண்டேன் தோழி நான்'' (563)

பிறகு அவளது சகோதரர் வந்து தீமுகம் நோக்கி நிற்க வைத்து நாரணனின் கைமேல் அவளது கையை வைத்து பொரியை எடுத்துக்கொடுத்து தீயிலிடச் செய்தனர்.

'வரிசிலை வாள்முகத் தென்னைமார் தாம் வந்திட்டு
எரிமுகம் பாரித்தென் னைமுன்னே நிறுத்தி
அரிமுக னச்சுதன் கைம்மேலென் கைவைத்து
பொரிமுகந் தட்டக்க னாக்கண்டேன்'' (564)

என்றும் பாடியுள்ளார். திருமணம் முடிந்ததும் இருவரும் ஆனையின் மேலமர்ந்து ஊர்வலம் வந்து, மஞ்சள் நீர் ஆடியதாக அடுத்த பாடலில் கூறுகிறாள்.

குங்குமம் அப்பிக் குளிர் சாந்தம் மட்டித்து.
மங்கல வீதி வலஞ்செய்து, மாமண நீர்
அங்கு அவனோடும் உடன் சென்று, அங்கு ஆனைமேல்
மஞ்சனம் ஆட்டக் கனாக்கண்டேன் (6-10)

ஆண்டாளின் பாசுரங்களினின்றும் அவள் காலத்துத் தமிழ்ச் சமுதாயத்தில் வழக்கத்திலிருந்து திருமணச் சடங்குகள் எவை என்பதை உணர்ந்தோம். இப்பாடல்களில் மணமாலை அந்தரி சூட்டக் கனாக்கண்டேன் என்று ஓரடி வருகின்றது, இதில் வரும் 'மணமாலை' திருமணச் சின்னமாகிய தாலியைக் குறிக்கும் என்பர் சிலர். மணமகனின் சகோதரி மணப்பெண்ணுக்குத் தாலி அணிவிக்கும் பழக்கமும் ஒரு சிலரிடையே உள்ளது. இதைக் கொண்டு அந்தரி ஆண்டாளுக்குச் சூட்டிய மணமாலை மங்கல வணியே ஆகும் என்பர்.

சமூகத்தின் நாகரிக முன்னேற்றத்திற்கு ஏற்ப திருமண முறைகளும் சடங்குகளும் வேறுபடுகின்றன. சில முறைகள் புதி தாகச் சேர்க்கப்படுகின்றன. சமுதாய முன்னேற்றம் ஏற்படாத ஒருசில இனத்தாரிடம் திருமண முறையிலும் பெரிய மாற்றம் எதுவும் ஏற்படுவதில்லை. ஒருவனும் ஒருத்தியும் சேர்ந்து வாழத் தொடங்குவதே திருமணச் சடங்காகக் கருதப்படுகிறது. இக்கருத்தினை பெரியாழ்வார் பாடிய பாடலடிகளால் உணர லாம். "வேடர் மறக்குலம் போலே வேண்டிற்றுச் செய்து என்

மகளைக் கூடிய கூட்டமாகக் கொண்டு கூடிவாழுங்கொல்லோ?''
என வினவுகிறார் பெரியாழ்வார்.

பெரியாழ்வார் திருமொழி 3:8:6

அதே சமயம் எல்லாத் துறைகளிலும் வளம் பெற்ற சாதிகள் நாடும் நகரும், தமரும், பிறரும் அறியத் திருமணம் செய்தனர். இக்கருத்தினைப் பெரியாழ்வார் பின்வருமாறு பாடியுள்ள அடிகளினின்றும் அறியலாம்.

'குமரி மணஞ்செய்து கொண்டு
கோலஞ்செய் தில்லத் திருத்தி
தமரும் பிறரும் அறியத்
தாமோத ரற்சென்று சாற்றி,

துமிலப் மெழப்பறைகொட்டித்
தோரணம் நாட்டுங் கொல்லோ'' 3:8:3

நாடு நகரு மறிய
நல்லதோர் கண்ணாலஞ்செய்து
சாடிறப் பாய்ந்த பெருமான்
தக்கவா கைபற்றுங்கொல்லோ'' 3:8;6

திருமணம் செய்யும்பொழுது மணமகள் வீட்டாரே அக்காலத்திலும் திருமணச்செலவை ஏற்றனர் என்பதை.

''கைத்தலத் துள்ள மாடழியக்
கண்ணா லங்கள் செய்து, இவளை
வைத்து வைத்துக் கொண்டென்ன
வாணிபம்''

என்ற அடிகளாலும்,

திருமணமான பெண்ணை வீட்டிலேயே வைத்துக் கொள்ளும் வழக்கமும் அக்காலத்தில் இருந்ததென்பதை

''பெருப்பெ ருத்தகண் ணாலங்கள் செய்து
பேணிநம் மில்லத் துள்ளே
இருத்துவான் எண்ணி நாமிருக்க'' (3:7:10)

என்ற பெரியாழ்வாரின் பாடலடிகளாலும் அறியலாம்.

சங்க காலத் தமிழரிடையே களவு மணம் பெருமளவு பழக்கத்திலிருந்தது. சிலப்பதிகாரம் காட்டும் திருமணம் பெற்றோர் முயற்சியால் நடைபெற்ற திருமணமாகவே அமைந்துள்ளது. 'பெண் தன்னுடைய கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளசமுதாயம் அனுமதிக்கவில்லை. அவ்வாறு ஒரு பெண் தான் விரும்பியவனை மணக்கத் துணிந்தால் அந்தச்செயல் பழிக்கப்பட்டது' என்ற கருத்தினை ஆண்டாள் அருளிய திருமொழியினின்றும் அறியலாம்:

"தந்தையுந் தாயுமுற் றாரும் நிற்கத்
தனிவழி போயினாள்! என்னுஞ் சொல்லு
வந்தபின் னைப் பழி காப்பரிது

நாச்சியார் திருமொழி (12:3)

"நாட்டில் தலைப்பழி எய்தியுங்கள்
நன்மை யிழந்து தலியிடாதே...உய்த்திடுமின்
(12:9)

எனவரும் அடிகளும் இதனை வலியுறுத்துகின்றன.

**சீர் வரிசை :**

ஆண்டாள் வாழ்ந்த காலத்தில் மாமியார் மருமகளுக்குச் சீர்வரிசை தரும் பழக்கம் இருந்துள்ளமையையும் அறியலாம். இந்தச் சீர்வரிசை மணாட்டுப்புறம் எனப் பட்டது.

"பெருமக ளாய்க்குடி வாழ்ந்து
பெரும்பிள்ளை பெற்ற அசோதை
மருமக ளைக்கண்டு கந்து
மணாட்டுப் புறம் செய்யுங் கொல்லோ" 3 : 8 : 4

**ஆண்டாள் உணர்த்தும் திருமண முறை :**

1. சுற்றம் சூழவரும் மணமகனை வழிநெடுக தோரணங் கட்டி பூர்ணகும்பம் வைத்து வரவேற்றல்.

2. திருமணப் பந்தலை பாளைகமுகு கொண்டு அலங்கரித்தல்.

3. பெரியோர்கள் வந்திருந்து மகட்பேசல்.

4. மணமகனின் சகோதரி மணமகளுக்குப் புத்தாடை அணிவித்து, மணமாலை சூட்டல்.

5. நாற்றிசையிலுள்ள புண்ணிய தீர்த்தங்களிலிருந்து கொண்டு வந்த நன்னீரால் அந்தணர்கள் மந்திரங்கள் கூறி மணமக்களை ஆசிர்வதித்தல்

6. மணமக்களுக்கு காப்பு நாண் அணிவித்தல்

7. திருமணத்தின் போது மத்தளங்கொட்டி சங்கொலிக்க வேண்டும்.

8. கைத்தலம் பற்றல் (பாணிக்கிரகணம்)

9. தீ ஓம்பல்

10. தீவலம் வருதல்

11. மணமகன் தன் கையால் மணமகள் அடியை எடுத்து அம்மி மீது வைத்தல்.

12 மணமகளிடன் சகோதரர் மணமக்களை ஓமாக்கினிக்கு எதிரில் நிற்கச் செய்து மணமகனின் உள்ளங் கையில் மணமகளின் கையை வைத்து, நெற்பொரியை இட்டு, அதைத் தீயில் சேர்க்கச் செய்தல்.

13. மணமக்கள் நகர் வலஞ்செய்து மஞ்சள் நீர் ஆடவேண்டும் (மஞ்சள் நீர் கரைப்பது என்று கூறப்படுவது)

## சூளாமணி

செந்தமிழ் மொழியின் ஐஞ்சிறு காப்பியங்களுள் சூளாமணியும் ஒன்று: இதன் ஆசிரியர் தோலாமொழித்தேவர் ஆவார். இக்காப்பியத்தில் மகளிர் திருமணம் குறித்துக் கூறுவன இக்காலக் கொள்கைகட்கு மிகவும் பொருத்தமானவையாக உள்ளன. பெண் மக்கள் ஒரு குடியில் பிறந்து வளர்வதால் அக்குடி விளக்கம் பெறும் என்பர். நாஙக குழமி நீ வளர நம்குடி, தான் அகத்து இருள்கெடத் தயங்குகின்றதே'' என்கிறார். (91) மகளிர் தம் பெற்றோர் தேர்ந்துரைக்கும் ஆடவரையே மணத்தற் குரியர் என்பதை ''தந்தை தாய் கொடுப்பின்தையலார் சிந்தை தாய் இலாதவர் திறத்தும் செவ்வனே'' என்றும் கூறுகிறார். இனி இக் காவியத்தில் கூறப்பெறும் கதை மாந்தர்கள் யாவர் என்பதை உணர்ந்து அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்களின் திருமணவினை குறித்துக் காண்போம்.

சுரமை நாட்டின் தலைநகரமான போதனமா நகரத்தைச் சிறப்புல ஆண்டவன் பயாபதி என்ற அரசன், அவன் மிகாபதி சி என்ற இருவரை மணந்து ''மங்கையர் இருவராகி மன்னவன்

ஒருவனாகி'' சிறப்புற அரசோச்சினான். இவர்களுள் மிகாபதிக்கு விசயன் என்பவனும், சசி என்பவளுக்கு திவிட்டன் என்பானும் மக்களாகப் பிறந்தனர். போத நகரத்தில் இவ்வாறிருக்க, இரத நூபுரச் சக்கரவாளம் என்ற நகரத்தின் அரசனாகிய சுவலனசடி என்பானுக்கும் வாயுவேகை என்னும் கோப்பெருந்தேவிக்கும் அருக்க கீர்த்தி என்ற மகனும் சுயம்பிரபை என்ற மகளும் பிறக்கின்றனர். இப்பெண் மணப்பருவமடைந்த போது அந்நாட்டு நிமித்திகன் சுயம்பிரபையை, பயாபதியின் மகன் திவிட்டன் என்பானே இன்னும் ஒரு மாதத்தில் ஒரு சிங்கத்தின் வாயைப் பிளந்து தன் வீரத்தை உலகிற்குணர்த்தி மணஞ்செய்து கொள்வான் என்று கூறுகிறான். நிமித்திகன் கூற்று உண்மையாகிறது. பின்னர் சுயம்பிரபையின் தந்தை அவளை அழைத்துக் கொண்டு திவிட்டன் வாழும் நகரத்திற்கு வருகிறான். சுயம்பிரபை திவிட்டனைத் தன் விமானத்தில் இருந்தபடியே கண்டு அவன் பாற் பெரிதும் காதல் கொண்டாள். திவிட்டனும் சுயம்பிரபையின் ஓவியத்தைக் கண்டு காதல் கொள்வாயினான். இவ்வாறு காதல் கொண்ட சுயம்பிரபைக்கும் திவிட்டனுக்கும் பின்னர் மறைவிதிப்படி திருமணம் நிகழ்வதாயிற்று. இவ்விருவரது திருமண நிகழ்ச்சியை விரிவாக விவரித்து கல்யாணச் சருக்கம் என்னும் ஒரு பகுதியையே ஆசிரியர் இந்நூலில் சேர்த்துள்ளார். இதில் ஆசிரியர் கூறும் திருமணச் சடங்கினை அவர் வழி நின்று காண்போம். சுயம்பிரபையின் தந்தை சடிவேந்தன் தன் மகளை 'உரியமா லவற்குச் சென்று கொடுப்பல் என்று உலகம் காக்கும். பெரியவன் தமரொடு எண்ணிக் கடிவினை பெருக்க லுற்றான்'. மகளை உற்றர் உறவினர் புடைசூழ அழைத்துக் கொண்டு பாயாபதி ஆசாளும் நகர்க்கு வருகின்றான். அப்போது சுயம்பிரபை தான் வந்து தங்கியிருந்த கன்னிமாடத்தின் மேல் நிலை மாடி முற்றத்தினின்று தெருவிற் சென்ற திவிட்டனைக் கண்டு காதல் கொள்கின்றாள்.

> ''சிறையென்பது இல்லைச் செவ்வெ செம்புனல் பெருகுமாயின்
> நிறை நின்றது இல்லைக் காமநேர்நின்று சிறக்கு மாயின்
> இறை நின்றது உளது என்பார்சென்றரும்பெற விவளதுள்ள
> நறை நின்று கமழங் குஞ்சி நம்பிபாற் பட்ட தன்றே'' (155)

அதே சமயம் திவிட்டனும் சுயம்பிரபையின் ஓவியத்தைக் கண்டே பெருங்காதல் வயப்படுகின்றான்.

"கண்ணினிற் காதலாடன் கண்ணிய உருவங் கண்டே

வெண்ணையின் குன்றத் தீயால் வெதும்புகின்றதனோ டொத்தான்" (193) முடிவில் ஞாயிறு எழுந்து நல்லொளி பரப்புகின்றது. இதனை ஆசிரியர்,

> தூண்டிய சுடர்விளக் கன்ன கன்னியோடு
> ஆண்டகை அழல்வலஞ் செய்யு மாரணி
> காண்டகை யுடைத்தது காண்டு நாமென
> வீண்டிய கதிரவ னுதய மேறினான்.

பண்டைத் தமிழர் மரபினைப் பின்பற்றி ஆசிரியர் களவு இன்பத்திற்குத் தம்நூலில் முதலிடம் தருகின்றார். சூளாமணியின் நாயகனாகிய திவிட்டனுக்கும் சுயம்பிரபைக்கும் திருமணம் நிகழும் என்ற செய்தியை முன்கூட்டியே நிமித்திகன் வாயிலாக ஆசிரியர் கூறுகின்றார். இருபக்கத்துப் பெரியோர்களும் கூடி திருமணவினை நிகழ்த்தும் முன்னர் திவிட்டனும் சுயம்பிரபையும் ஒருவர்மேல் ஒருவர் ஆராக் காதல் கொள்வதற்கான நிகழ்ச்சிகளையும் இணைக்கின்றார். இச்சூளாமணியின் மற்றொரு சிறப்பு, இதில் வித்தியாதர ருலகத்தையும் நில்வுலகத்தையும் ஒன்றாக இணைப்பதனைக் காணலாம். இக்காவியத் தலைவன் இந்நிலவுலக மன்னனாக காவியத் தலைவியோ வித்தியாதர ருலகத்து வேந்தன் ஒருவன் மகளாகத் திகழ்கின்றாள். இவ்விருவருக்கும் சான்றண்மையால் சிறந்த பெரியோர் திருமணமாகிய மங்கலச் செயலுக்குரிய முறைமையாலே கூறியபடியே அச்செயல் நடைபெறுவதாயிற்று என்று ஆசிரியர் கூறி மேலும் அந்நிகழ்ச்சியை யாம் சொல்ல மறந்துவிட்டோம். அவ்வுரையைச் சொல்வதாயின் பேராற்றலுடையோர் சொல்வராக என்கிறார்.

திவிட்டன், சுயம்பிரபை திருமணவினையின் தொடக்க நிகழ்ச்சியாக அருகக் கடவுளின் திருவடிகளைப் போற்றுதற் பொருட்டு இன்னியங்கள் கறங்க விழா வெடுக்கின்றனர். அதே சமயம் மாசுதீர்த்த மணியை ஒப்பாளாகிய சுயம்பிரபையின் திருமண நன்னாளை இசை எழுப்புதலையுடைய முரசு எவ்விடத்தும் அறவித்தது.

திவிட்டநம்பி, அழகிய கண்களையுடைய யானைகளிரண்டு ஒருசேர எடுத்த, மணிகள் பதிக்கப்பட்ட குடங்களின் நிறைந்த கடவுட்டன்மையுடைய நீரைப்பொழிய மங்கல நீராடுதலைச்

செய்து, அரசர்கள் பொழிந்த நீலமணிபோல் தெளிந்த நீர் அருவியில் குளித்து, பின்பு விண்ணவர் மலர் மழை பொழிய தனது திருமேனியில் பொன்னால் செய்யப்பட்ட அணிகலன், ஆடை முதலியவற்றை அணிந்து கொண்டு புதியதாக இயற்றப் பட்ட திருமண வேள்வி மன்றத்தை அடைந்தான்.

பொன்னணிபு னைந்துபுது வேள்விநகர் புக்கான் (263) அது போல விஞ்ஞையர் கங்கை முதலியவற்றின தீர்த்தங்களைக் கொணர்ந்து விசும்பில் இடமின்றி நெருங்கி சுயம்பிரபைக்கு மணமங்கல நீராட்டுவிழாச் செய்கின்றனர். மங்கல நீராட்டிய பின்னர் நறுமலர் மழை பெய்கின்றனர். அழகிய ஒப்பற்ற புத்தாடை உடுத்தி, அவ்விடத்தே அமரர்கள் கொடுத்த அணி கலன்களை அணிந்து, அழகிய மகளிர் பல்லாண்டு பாடி வாழ்த்த சுயம்பிரைபை திருமண வேள்வி மன்றத்தை எய்தினள்.

சுயம்பிரபை திருமண வேள்வி மன்றத்தை அடைவதன் முன்னரே மிக்க புரிநூல் பூண்ட தீயோம்பாளர்கள், தாமரை மலர் வடிவினதாக இயற்றிப் பொருந்திய மணமங்கல வினைக்கு வேண்டிய மங்கலங்கள் எல்லாம முறையாக வைக்கப்பட்ட அம்மணமன்றத்திற்குச் சென்று அவ்விடத்தே வேள்வித்தீயை வளர்ப்பதற்கு அமைந்தனர்.

முன்னரே நறுமணச் சாந்தால் நன்கு மெழுகப்பட்டு விரிந் துள்ள சிறந்த மணிகள் பதித்த தரையை அடைந்து, பொன்னால் செய்யப்பட்டதொரு கோலினால் கோடுகள் வரைந்து காட்டி, மீண்டும் அவ்விடத்தை மணப் பொருள் கூட்டிய சாந்தாலே மெழுகும் படிச் செய்தான்.

பின்னர் அவ்விடத்தில் பெரிய நன்முத்துக்களையே மண லாகப் பரப்பி, அம்மணற் பரப்பைச் சதுர வடிவமாக செய்த மைத்து, ஒரு முறை மங்கலச் சங்கை முழங்கும்படிச் செய்கின் றான். அம்மணற் பரப்பைச் சூழத் தருப்பைப் புல்லின் நுனிப் பகுதிகள் வடதிசைக் கண்ணும் கீழ்த்திசை கண்ணும் கிடக்கப் பரப்பி அச்செயலுக்கும் ஒரு முறை மங்கலச் சங்கங்களை ஒலிக்கச் செய்தான். இவ்வாறு ஒவ்வொரு கரணத்திற்கும் ஒவ்வொரு முறை மங்கலச் சங்கை ஒலிப்பித்தல் காணப்படுகிறது.

பிரமனுக்கு உரித்தாகிய வலப்பக்கத்தினாகிய சிறந்த இடத்திலும் ஒரு காப்பு மறைமொழி ஓதியிட்டு மேற்றிசையிலிருந்து கீழ்த்திசைவரை வறிதே கிடக்கவிட்டுப் பின்னர், கூறு கூறாகப் பகுத்துப் பயின்றனவாகிய மறைமொழியை ஓதி வேள்வித் தீயை இட்டு, அவ்வேள்வி-யாசன் முறைப்படி மந்திரமோதுற்குரிய வேள்வி விறகுத் தொகுகிடந்த இடத்தை அடைந்தான். இப்பொழுது சிறப்புடை அணிந்த கணிவன் மணவேள்வி நிகழ்த்துதற்குரிய முழுத்தம் (முகூர்த்தம்) இதுவென வேள்வியாசானுக்கு உணர்த்தினான்.

**தாரை வார்த்தல்:**

அத்திருமண வேள்வி மன்றத்தே முன்னர் ஆசானால் வளர்க்கப்பட்ட தீயே இறைவனாக திருமணங் காணவந்த கூட்டத்தின் முன்னிலையில் மணமகளின் தந்தை சடியரசன், மணங்கமழும் மாலையணிந்த திவிட்ட நம்பிக்கு நங்கை சுயம்பிரபையை நீர்வார்த்து ஈந்தான், பெருங் கதையில் மணமகள் தந்தை நீர்வார்த்து மகளைக் கொடுக்கும் சடங்கு கூறப்பெறவில்லை.

பின்னர் பிணைக்கப்பட்ட தருப்பைகள் பிடித்து தீயையுடைய மணவேள்விக்கண் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து முடித்து, அவ்விடத்தே அன்னம் போன்ற சுயம்பிரபையுடன் திவிட்ட நம்பி வீற்றிருக்கின்றான். வேள்விப் புகைகள் பெருகவும், வேள்வித் தீ மிக்கு ஓங்கி வலப்புறத்தே திரிந்து சுழலுமாறு வேள்வியாசானும் அவ்விடத்தை தீயோம்பி வேள்வி செய்தான்.

**தீவலம் வருதல்:**

மிக்கொழுதலையுடைய தீயாற் செய்யும் வேள்விச் சடங்கு அனைத்தும் செய்து முடித்தவுடன், மணத்தவிசினின்று எழுந்து, சுயம்பிரபையின மோதிரம் அணிந்த மென்விரலை, தனது அழகிய கையாலே பற்றிக்கொண்டு மங்கையொடு திவிட்ட நம்பி வலஞ்சுற்றி வந்தான். இக்காட்சி கங்கையாற்றொடு பொருந்தி, புடைபெயர்ந்து வருகின்ற கரியகடலை ஒத்து இருந்தது. பின்னரும் செய்யக்கடவுனவாகவுள்ள வேள்விச் சடங்குகள் மறைகள் விதித்த முறைப்படி இவ்வாறு நிகழ்ந்தன.

தீயோம்புந் தொழிலுடைய அந்தணர்க்கு மணமக்களைச் சார்ந்தவராகிய இருதிறத்தாரும் ஒருங்குகூடி, பொன் குவியலும், மணிக்குவியலும் ஆகிய உயரிய பொருள்களை முன்வந்து வழங்கினர். மறை வல்ல வித்தையெல்லாம் கரைகண்ட அவ்வாசாற்கு சங்கநிதி பொழியுமாப் போல நிதி வழங்கினர். பின்னர் மயில் போலும் சாயலையுடைய சுயம்பிரபைக்கு விசும்பில் இயங்கும் ஒளியுடைய அருந்தியைக் காட்டினர். இவ்வாறாக திருமண வினை நிகழ, இங்ஙனம் பெருஞ் செல்வ நுகர்ச்சியை யாமும் பெறக் கடவேம் என்று எண்ணி தவம் செய்யப் போவாரும், இப்படிக் கனவிலும் செல்வம் எய்தினாருண்டோ என்பாரும், காண்பாரும் மீள்வாரும் ஆயினர். இதனை ஏசுவதில்லா வாசகத்தையும்...... வத்தவர் இறைவனும், முற்பான் முயன்ற, அத்தவம் அறியின் எத்திறத்தாயினும், நோற்றும் என்னும் கூற்றினராகி'' என வரும் பெருங்கதை அடிகளோடு (2 : 7 : 120. 25) ஒப்பிட்டுக் காணலாம்.

**சுயவரத் திருமணம் :**

குளாமணி சுயம்வரச் சருக்கத்தில் திவிட்டன் சுயம்பிரபைக்குப் பிறந்த விசயன் சோதி மாலைக்கும், அருக்ககீர்த்தி சோதிமலைக்கும் பிறந்த அமிததேசன், சுதாரைக்கும் சுயம்வர முறையில் நடைபெறும் திருமண நிகழ்ச்சிகள் கூறப் பட்டுள்ளன.

திவிட்டநம்பி தன் மகள் சோதிமாலை மணப்பருவம் அடைந்ததை அறிந்து மகிழ்ந்து தன் அமைச்சர்களைக் கலந்தெண்ணி, சுயம்வரம் ஏற்படுத்தி சோதிமாலைக்குத் திருமணம் புரிவித்தலே சிறந்ததெனை முடிவு செய்து அதற்கு வேண்டியவற்றைச் செய்கின்றான். முரசு அறிவித்து சுயம்வரச் செய்தியை மக்களுக்கு அறிவிக்கச் செய்கின்றான். இந்த நாள் தொடங்கி வரும் பத்து நாட்களும் திருமணத்திற்குக் காரணமான சுயம்வரத்திற்கு என்று குறிக்கப்பட்டுள்ளமையால், நட்புக் கொண்டு வாழ்கின்ற மன்னர்களுடனே இவ்வுலகில் வாழ்வோரெல்லாம் வருக என்று கூறி வள்ளுவன் முரசறைகின்றான்.

''இன்றைநாள் உள்ளுறுத்து ஈரைஞ் ஞான்களும்
மன்றலம் சுயவரம் வரைந்தது : ஆதலால்

ஒன்றி வாழ் அரசரோடு உலகம் ஈண்டுக
என்றுதான் இடிமுரசு அறைந்தது என்பவே.

சுயம்வரத்திற்காக விஞ்ஞையரும் மண்ணவருமாக வேந்தர் எண்ணிறந்த பேர் வருகின்றனர். திவிட்டனுடைய மைத்துனனாகிய அருக்ககீர்த்தி தன் மகனோடும் மகளோடும் வருகின்றான் திவிட்டன் இவர்கள் அனைவரையும் வரவேற்று உபசரிக்கின்றான்.

**சுயம்வர மாளிகை**

திவிட்டன் மகள் சோதிமாலையின் சுயம்வரம் நிகழ்த்துதற் பொருட்டு மணியழுத்திய செம்பொற் கோபுரங்களை உடையதாய்த் தளமிடப்பட்ட துணை மாளிகையைப் புதுவதாகத் தோற்றுவித்தனர். அம்மாளிகை பளிங்கினால் இயன்ற பலகைகளாலும், பவழத் தூண்களாலும் பொன்னாலான அணிகலன்களாலும், வெள்ளித் தகடு வேயப்பட்ட மாடங்களாலும், முத்துக்களாலும், இயற்றப்பட்டு அழகுடைத்தாய் விளங்கியது. அங்கு அரியணைகளும், மகர வடிவ ஆசனங்களும், மயிலின் கழுத்தை ஒப்பனவும் பொன்னாலியன்ற கொட்டைகளை உடையனவும் அன்னத்தின் மெல்லிய தூவிகள் செறிக்கப்பட்டனவும் உள்ளம் சென்று பதிவதற்குரிய மணிகள் பதிக்கப்பட்டனவுமாக அமைக்கப் பட்டன. சுயம்வர மாளிகை அமைத்தவுடன் இசைக் கருவிகள் முழங்கின.

"இப்பொழுது நல்ல முழத்தம், இவ்விழாவிற்கு வந்துள்ள மன்னர்கள் இம்மண்டபத்தே எழுந்தருள்க" என்று அறிவித்தவுடனே மங்கலச் சங்குகள் முழங்கின. பெரிய மணமுரசுகள் ஒலித்தன. மன்னர்கள் அம்மண்டபத்தே வந்து புகலானார்கள். அயோத்தி அரசன், அத்தினபுரத்தரசன், குண்டலபுரத்துக் கோமான், வாரணவாசி மன்னன், சூரியபுரத்துத் தோன்றல், மதுரை மன்னன் போன்ற ஐம்பெருங்குலத்து மன்னர்களும் பிற வேந்தர்களும் வந்து மஞ்சங்கள் திகழும்படி வீற்றனர். கடவுளாகிய முருகனை ஒத்த அமிததேசன் தன்னொளி சுடர்வீச, வேந்தர் ஒளி மழுங்கச் சென்று அமர்ந்தான்.

**மணமகள் வருகை :**

மஞ்சங்கள் திகழுமாறு மன்னர்கள் வந்து அமர்ந்த பொழுதில் திவிட்டன் மெல்லியல்புடைய சோதிமாலை இம்மண்டபத்

திற்கு வருக எனப் பணித்தானாக, அப்பொழுது முரசு முழக்கமும் சங்கு, கொம்பு இவற்றின் முழக்கமும் விரவி முழங்கின.

'வரைசெறிந் தனைய செம்பொன்
மஞ்சங்கண் மலிரத் தோன்றி
அரைசர்க ளிருந்த போழ்தின்
ஆழியந் தடக்கை வேந்தன்
விரைசெறி குழலங் கூந்தன்
மெல்லியல் வருக வென்றான்
முரைசொலி கலந்த சங்கு
வயிரொடு முரன்ற வன்றே. (சூளா : 10: 239)

திங்களைச் சூழ்ந்த விண்மீன்கள் போலத் தோழியர் சூழச் செல்லும் சோதிமாலை, தன் பிலனே வண்டுகளும் மலையொடு டைய மனங்களும், கண்டவர் கண்களும் வரவும் ஏத்தொலியும் இன்னிய ஒலியும் முன்னே செல்லவும மலரின் அகவிதழ் மேலே மிதித்து மெல்ல நடந்து சுயம்வர மண்டபம் எய்தினள்.

**அரசர்கள் அறிமுகம் :**

உருகிவடியும் செவ்வரக்கினால் மேற்புறம் வழிக்கப்பட்டு, கரிய கணுக்கள் தோறும்பொற்பூண் செறிக்கப்பட்ட பிரம்பினைப் பற்றிக் கொண்டு, மன்னர் மரபின் வரலாற்றினை நன்கு ஆராய்ந் தறிந்த தன்மையுடைய தோழி ஒருத்தி, அங்கு வீற்றிருந்த வேந்தர்களை காட்டும் முறையானே காட்டி, சோதிமாலைக்கு மெல்ல மெல்ல இன்னோரன்ன மொழிகளை இயம்புவாளா யினாள்.

அங்கு அரியணை மேல் அமர்ந்து தோன்றி நிழற்றுந் தடவரை மார்பன், நிகரில்லா இக்குவா குலத்திறைவன கோ என்றாள். இவன் இரத்தினகிரீடன், இவன் பரதன் வழித் தோன்றல், இவன் குருகுலத்தார் கோமான் என அரசர்தம் சிறப்பெல்லாம் வரிசையாகக் கூறிக் காட்டி வருங்கால் விஞ்சை வேந்தர் இருந்த வரிசையைக் காட்டுகின்றாள் அவ்விடத்தே அந் தந்த அரசர்களுடைய வளநகரையும் மரபையும் உறுப்பின் நலங் களையும் தோழி கூறி வருகின்ற சமயத்தில், இவ்வரசன் அருக்க கீர்த்தியின் மகனாகிய அமிததேசன் என்னும் இளவரசன் என்று தோழி எடுத்துச் சொல்லு முன்பே கரிய கூந்தலையுடைய சோதி மாலையின் மிகப்பெரிய கண்கள் நீலோற்பல மாலை போல அமிததேசன் தோள்களிலே வீழ்ந்தன. சுயம்வரத்தில் மாலை

சூட்டும் மரபிற்கேற்ப இங்கு ஆசிரியர் இவ்வாறு கூறினர் எனலாம். 'தோழி அச்சுயம்வரத்தில் காட்டும் மரபு கருதிக் காட்டிய தனையே அல்லால், இவள் காட்டும் காரணமன்று, அமிததேசனைச் சோதிமாலை விருப்பியதற்கு ஊழே காரண மாம் எனக் கூறவிழைந்த ஆசிரியர் ''பாட்டினால் என்னை போக பான்மையே பலித்த தன்றே'' எனப்பாடியுள்ளார்.

(சோதிமாலை நிறையழிந்தவளாய் நடுங்கி நாணித் தன் கையிலுள்ள மாலையைப் பார்த்து, தன்தோழியின் பின்னே மறைந்தவளாய் தன் உள்ளங் கவர்ந்த முருகன் போன்ற அமித தேசனுடைய திரண்ட தோளின் மிசை மாலையைச் சூட்டினாள். அப்பொழுது உலகம் முழுதும் இசையால் நிரம்பிற்று. மற்ற மன்னர்கள் ஊழினது முறைமை இத்தன்மைத்து என்று ஆராய்ந்து தெளிந்து மனம் ஆறுதல் அடைந்தனர்.)

இதைக் கண்ட திவிட்ட மன்னன், கையிடத்தே வேற்படை யைக் கொண்ட அமிததேசனுக்கு திருமண வினையை எஞ்சாது நிகழ்த்தி முடித்தான்.

'கைத்தலை வேலினாற்குக் கடிவினை முடிவித்தானே'
தேவரும் புகழ்தற்குரிய சிறந்த கலங்களைப்

பரப்பி வைத்து அவை நிறையுமாறு உலகிலுள்ள அரசர்களாலே ஆடுதற்குரிய கடவுட் தன்மையுடைய நீர் கொணர்வித்து அமித தேசன் சோதிமாலையாகிய இருவரையும் அழகு மிளிர நீராட்டி, திவிட்ட மன்னன் இரவலர்க்கும் பொன்மாரி பொழியச் செய் தான்.

முத்துக்களையே மணலாகப் பரப்பி, அரிசியைப் பரப்பி, காட்டாற்றின் கரைகளிலே முளைத்த தருப்பைப் புற்களையும் பரப்பி அதன் மேலே ஓமத்தீயை இட்டு பெரிய திருமணச்சடங் கினை அரசற்கென நூல் கூறிய முறையே, பலாசம் முதலிய சுள்ளிகளாலே மிகுதியாக வளர்க்கப்பட்ட சிறந்த மணி போன்ற செவ்விய வேள்வித் தீ தனக்குரிய எல்லா நலனும் பெற்றுச் சிறந்து விளங்குவதாயிற்று. தீயாய் செய்யும் வேள்வியினை முடியப் பெற்று சோதிமாலை அந்த அமித தேசனோடும் மிகுகின்ற தீயை வலம் வரும் போது, தோடுகள் மிளிரும் அவள் முகத்தில் பொடித்த வியர்வை நீர்த்துளி திங்கள் மண்டிலத்தே முகிழ்த்த அமிழ்தப் புள்ளி போலே அவள் முகத்தை அழகு செய்தன.

இதைப் போலவே அருக்க கீர்த்தி தன் மகள் சுதாரைக்குச் சுயம்வரம் வைக்கின்றான். அவள் விசயனை விரும்பி மாலை சூட்ட உறவினர் கூடி செல்வமிக்க திருமண வினையை நிகழ்த்தி முற்றுவித்தார்.

**நந்திக் கலம்பகம் :**

சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று கலம்பகம் என்பது. கலம்பக வகையில் முதல் இலக்கியமாகக் கருதப்படுவது நந்திக் கலம்பகம் என்பதாகும். இந்நூல் மூன்றாம் நந்திவர்ம பல்லவ அரசனின் மீது பாடப்பட்டதாகும். இது ஒரு வரலாற்று நூலாகவும் விளங்குவது இதன் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு. இதன் ஆசிரியர் யாரென அறிதற்கில்லை.

**மகண் மறுத்தல் :**

'கலம்பகம்' எனப்படும் சிற்றிலக்கியம் தோள்வகுப்பு, அம்மானை மதங்கு போன்ற பதினெட்டு உறுப்புகளைக் கொண்டது. அவற்றுள் ஓர் உறுப்பு மறம் என்பது. இதில் வரும் மறமகன் ஒருவன் தன் பகைவேந்தர் ஒரு தூதுவனை அனுப்பித் தனக்குப் பெண் கொடுக்குமாறு திருமுகம் தீட்டியதைக் கண்டு வெகுண்டுரைக்கின்றான். இதனை 'மகட்கொடை மறுத்தல்' என்னும் துறைப்பாற்படுத்துவர் புறப்பொருள் வெண்பாமாலையார். நந்திக் கலம்பகத்தில், மறமகன் தன் பகைவேந்தர் தூதுவனை நோக்கி, 'மன்னர் தூதா! அம்பினைக் கொள்ளும் என் வில்லானது ஒடிந்துள்து, அதன் நாண் தேய்ந்துவிட்டது. நானோ மூப்படைந்தேன். தளர்ந்துள்ளேன் என்று கருதியோ என் அரிய புதல்வியைத் திருமணம் பேசி முடிவு செய்வதற்கு அம்மன்னர் உன்னை இங்கே வரவிட்டார்கள் என்று சினத்தோடு வினவுகின்றான்.

''அம்பொன்று வில்லொடிதல் நாண் அறுதல் நான் கிழவன்
அசைந்தேன் என்றோ
வம்பொன்று குழலாளை மணம்பேசி வரவிடுத்தார்
மன்னர் தூதர்'' (நந்தி. கலம். 82)

இம்முறையை ஒட்டித் திருவரங்கக் கலம்பகத்தில் தன் மறப் பண்பை போர் மறவன் கூறுவதும் இக்கருத்தோடு ஒத்திருப்பதைக் காண்போம்.

"பேசவந்த தூதசெல் லரித்தஓலை செல்லுமோ
பெருவரங்கள் அருளரங்கர் பின்னைகேள்வர் தாளிலே
பாசம் வைத்த மறவர்பெண்ணை நேசம் வைத்து முன்னமே
பட்டமன்னர் பட்டதெங்கள் பதிபுகுந்து பாரடா
வாசலுக்கி டும்படல் கவித்துவந்த கவிகைமா
மகுடகோடி திரையளக்க வைத்தகாலும் நாழியும்
வீசுசாம ரங்குடில் தொகுத்தகற்றை சுற்றிலிம்
வேலியிட்ட தவர்களிட்ட வில்லுவாளும் வேலுமே"
(திருவ. கலம் 53)

என்று மகட்கேட்டு வந்தவரை இகழ்ந்துரைப்பனவும் படித்து மகிழ்தற்குரியன.

**சீவகசிந்தாமணி**

தமிழ் மொழியில் சிறந்த விளங்கும் பெருங்காப்பியங்கள் ஐந்தனுள் சீவக சிந்தாமணி ஒன்று, இக்காப்பியம் பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இயற்றப் பெற்றது என்பர். இதன் ஆசிரியர் திருத்தக்கதேவர். இவர் வடமொழிக் கதையைத் தம் காப்பியத்தின் அடிப்படையாகக் கொண்டிருப்பினும், இந்நூல் முழுமையும் தமிழ் நாட்டிற்கும், பண்பாட்டிற்கும் உரிய முறையில் இயற்றியுள்ளார். இக்காவியத் தலைவன் சீவகன் என்பான். இவன் எந்திழையார் எண்மரைக் காதலித்து மணந்து கொண்ட வரலாறு இக் காவியத்தின் தனிச் சிறப்பாகும். இவ்வரலாற்றின் மூலம் திருத்தக்கதேவர் இரண்டு பெரிய உண்மைகளை உலகுக்கு உணர்த்துகின்றார்.

* 'இவ்வுலக இன்பத்தினை நிறைபடத் துய்த்தால் அன்றி மக்கள் மனம் பண்படாது என்பது ஒன்று. எனினும் அவ்வின்பத்திலேயே ஆழ்ந்து விடல் ஆகாது என்பது மற்றொன்று. இவையே இக் காப்பியத்தின் அடிப்படைக் கருத்துக்களாகும்.''

காதல் மணமே அக்காலத்தில் பெரிதும் நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது காப்பியத்தினின்றும் அறியக் கிடக்கின்றது.

---

* பா. நாராயண வேலுப் பிள்ளை, சிந்தாமணி 1979.

தலைவனும் தலைவியும் முதலில் கண்டு காதல் கொள்வர். பின்பு அக் காதல் செய்தி அவர் தம் பெற்றோர் செவிக்கு எட்டும். இருதிறத்தாரும் ஒன்று கூடி பேசி மண முடிப்பர். சீவகனின் பெரும்பாலான திருமணங்களும் இவ்வாறே நடைபெறுகிறது: இச் சீவகசிந்தாமணிக்கு 'மணநூல்' என்ற மற்றொரு பெயரு முண்டு.

சீவகன் இவ்வெண்மரையும் தானே வலிந்து சென்று காதல் கொண்டு திருமணம் செய்யவில்லை என்பதை இக்காப்பியத்தைப் படிக்கையில் உணரலாம். காந்தருவதத்தை யாழில் வல்லவள். அவளை யாழிசையில் வெல்வோரே அவளை மணஞ் செய்தற் குரியர் என அறிவிக்கப்பட்டது. சீவகன் தன் யாழ்நூல் புலமை யைத் தோற்றிவிக்க எண்ணி அவளுடன் போட்டியிட்டு வென் றான், காநதருவத்தை அவனுக்கு மாலையிட்டாள்.

குணமாலை :

அசனிவேகம் என்னும் பட்டத்துயானை செருக்குற்றுக்குண மாலையைக் கொல்ல வந்தபோது அதன் செருக்கை அடக்கி அவளைக் காத்துக் காதலித்து திருமணம் புரிந்தனன். பின்பு பல்லவ நாட்டில் பாம்பினால் கடியுண்ட பதுமை என்ற அரசிளங் குமரியை விடந்தீர்த்துத் திருமணம் செய்து கொண்டனன். அதன் பின் தக்க நாட்டிலுள்ள கேமமாபுரத்தை அடைந்து வணிகன் சுபத்திரன் மகள் கேமசரியை மணந்தனன். அடுத்து மத்திமதேயம் சென்று அந்நாட்டு மன்னன் மகள் கனகமாலை யைத் திருமணம் கொண்டான். பின்னர் இராசமாபுரத்து வணிகன் மகள் விமலையை மணந்து பின் அதே ஊரிலுள்ள சுரமஞ்சரியையும் மணந்தான். பிறகு தன் மாமன் கோவிந்த ராசன் மகளாகிய இலக்கணையை மணக்கின்றான். இவ்வாறு சீவகன் மங்கையர் எண்மரை மணந்தவனாயினும் காதலுக்கு இரையாகாமல் தன் கடமையை ஆற்றிய பெருவீரனாகத் திகழ் கின்றான்.

குலமுறை :

அக்காலத்தில் குலமுறை வழக்கில் இருந்தது என்பதற்கு சிந்தாமணியில் சான்றுகள் உள்ளன. சீவகன் வேடர்களை வென்று ஆநிரையை மீட்டு வந்ததற்கான ஆயர் தலைவனாகிய நந்தகோன் தன் மகள் கோவிந்தையை அவனுக்கு மணமுடித்துத் தர விழைந்தான்.

'பாடகஞ் சுமந்த செம்பொற் சீறடிப் பரவை அல்குற்
சூடக மணிந்த மின்கைச் சுடர்மணிப் பூணினாளை
ஆடகச் செம்பொற் பாவை ஏழுடன் தருவ லைய
வாடலில் வதுவை கூடி மணமக னாக வென்றான்'' (479)

மேலும் அரசர்க்குத் தாழ்ந்த இடையர் குலமென்று நினையாதே மணமுள்ள கடப்பமாலை அணிந்த முருகக் கடவுள் வேடர் குலத்தில் வளர்ந்த வள்ளியை மணந்தான். திருமால் ஆயர்குல நப்பின்னையைப் புணர்ந்தான். ஆதலால் குலத்தின் தாழ்வு கருதாது ஒழிக. இனியான் கூறினவெல்லாம் திருவுளம்பற்றி நின்னடித்தியைக் கோதை சூட்டுவாயாக. அப்பொழுது நெய்யும் பாலும், தயிரும் பாதாளமெல்லாம் நிறைப்பேன் என்றான்.

சீவகன் அரச குலத்தவர் தம்மினும் உயர்ந்த குலத்தில் தோன்றிய கன்னியரை மணத்தலன்றித் தாழ் குலத்தவரை மணப்பது பொருந்தாது என்று எண்ணினான். எனவே கோவிந்தையைத் தான் ஏற்றுத் தன் தோழன் பதுமுகனுக்கு அவளைக் கொடுக்க முடிவு செய்தனன். கோவிந்தையின் தந்தை நந்தகோனும் இதற்கு உடன்பட்டு மணவினைக்குரிய ஏற்பாடுகள் செய்தான்.

**வாழ்த்தும் ஒப்பனையும் :**

ஆய்ச்சியர் கோவிந்தையை நீயும், நின் கணவனும் பசுவும் தொழுவும் போன்று நீடு வாழ்க'' என வாழ்த்தினார். பின்பு நெய்யிழுதை புல்லால் தோய்த்து அந்நெய்யை அவள் தலையிலே வார்த்து அகப்பையால் நீரைச் சொரிந்து அவளை நீராட்டினர். அவள் காதுகளினின்றும் தோடும், குழையும் நீக்கிக் கடிப்பிணை என்ற காதணியை அணிந்தனர். மாலையைச் சூட்டினர்; அவள் அழகைக் கண்டு ஆய்ச்சியர் திகைத்தனர்.

**திருமண விழா :**

ஏறுகோட்பறை முழங்கிற்று. மூதூர் எங்கும் திருமண விழா கொண்டாடப் பெற்றது. நந்தகோன் கோவிந்தையை அழைத்துச் சென்று கந்துகன் மனையிலே புகுந்தனன். அங்குத் தன் கையிலே கலசத்தை ஏந்திச் சீவகன் கையில் நீரைச் சொரிந்தான். சீவகனும் கோவிந்தை தன் தோழன் பதுமுகனுக்கு உரியவள் என்று கூறி நீரை ஏற்றான். நந்தகோன் கோவிந்தைக்குப் பசு இரண்டாயிர

மும், பொற்பாவை ஏழும் கொடுத்து அகன்றான். பசுமுகன் சீவகனிடமிருந்து கோவிந்தையை ஏற்றான்.

இந்நூலில் கோவிந்தையார் திருமணத்துடன் சீவகனது திருமணங்களும் சேர்த்து ஒன்பது திருமணங்களின் நிகழ்ச்சிகள் விரித்தும், சுருக்கியும் கூறப்பட்டுள்ளன. மணநூல் எனப் பெயரிடப்பட்ட இந்நூலின் இருந்து அறிய வரும் முக்கிய மணநிகழ்ச்சிகளாவன: மணநாள் குறித்தல், முரசறைந்து செய்தி கூறல்; நகரை அலங்கரித்தல், மணமக்களை பயிர்வினை மணம் செய்தல் நீராட்டுதல்; மணக்கோலம் செய்தல்; எரி ஓம்பல், காப்புக் கட்டுதல், தாரை வார்த்துக் கொடுத்தல்; தீ வலம் வருதல்; ஆசி கூறல்; அருந்ததி காட்டுதல் போன்றவையாகும்.

இந்த ஒன்பது திருமணங்களில் எதிலுமே மங்கல அணி அணிவிக்கப்பட்ட செய்தி இடம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது, மற்றெறிப்படி விரிவாக இந்நூலில் பதுமையார், இலக்கணையார் திருமண நிகழ்ச்சிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அதிலும் இந்நூலின் நடைபெறும் கடைசி திருமணமான இலைக்கணை, சீவகன் திருமண நிகழ்ச்சி தற்காலத்தில் நாம் தொலைக் காட்சியில் காணும் நேர்முக வருணனைக் காட்சி போன்று ஒவ்வொரு சிறு சம்பவமும், ஒவ்வொரு பொருளும, நேரில் கண்டு களிப்பது போன்ற இன்பந்தோன்றும் வகையில் ஆசிரியர் திருத்தக்கதேவர் படம்பிடித்துக் காட்டி நம்மை வியப்பிலாழ்த்துகின்றார். இத்தகு பயனுள்ள வருணைகள் என்றென்றும் படித்து மகிழும் வகையில் இருப்பதோடு அக்காலத்திய தமிழர் பழக்க வழக்கங்கள். திருமணம் நடைபெற்ற முறை ஆகியவற்றை அறிந்து கொள்ளப் பெரிதும் பயன்படுகின்றன. இனி, தேவரின் இனிய செயயுட்கள் வழி நாமும் சீவகநம்பி-இலக்கணையின் திருமண நிகழ்ச்சியை அறிந்து மகிழ்ச்சி அடைவோம். இது இளவரசியின் திருமணமானதால் மணவினையில் அந்நகர முழுமையும் பங்கு பெறுகிறது. சோதிடரால் குறிக்கப்பட்ட ஏழு நாட்கள் இம்மணவினை நடைபெறுகிறது.

**இலக்கணையார் திருமணம் (முறை மணம்)**

கோவிந்த மன்னன் தன் மகளாகிய இலக்கணைக்குத் திருமணம் நிகழ்த்த எண்ணினான். மிகச் சிறந்த கணி, ஊழ்வினையால் தானே முதலன்றி இந்நல் வினையை நல்லோரையில் முடித்தற்கு களிற்றையுடைய மன்னர்க்கு நன்னாளை விளக்கிக் கூறினான்.

"வேழ வேந்தற்கு விழுப்பெருங் கணிருரித் துரைத்தான்"
(2386)

அந்தச் செய்தியை அறிவிக்கும் வள்ளுவன் வெண்மையான ஆடையுடுத்து, வெள்ளைச் சந்தனத்தை மெய்யில் பூசி, முத்து மாலை அணிந்து மணமுரசறைவதற்கு யானை மீது வண்முரசை ஏற்றினன். (மங்கலச் செய்திகளை அறிவிக்கும் வள்ளுவன் வெண் மலர், வெள்ளாடை அணிதல் மரபு.)

வள்ளுவன் முரசறைந்து கூறிய செய்தி

"கேண்மின் கேண்மின்கள் யாவரும் இனிய கேண்மின்
பூண்மின் நித்திய மணிவடம் பூசுமின் சாந்தம்
வாண்மி னுண்ணிடை வருந்தினுஞ் சூட்டணிந் தழகார்
ஆண யாகிய வருவிலை வண்ணப்பட் டுடுமின்" (2389)

"வள்ளல் வாய்மொழி ஆன்படு பாலமிர் தல்லால்
உள்ள மேவினும் பிறவுணப் பெறீரெழு நாளும்" (2390)

"மாலை வாண்முடி மன்னவன் மணவினை எழுநாள்
சீலம் இல்லன சினக்களி றகற்றுகென் றணிந்த
கோல யார்முர சிடியுமிழ் தழங்கென முழங்க
நீல மாக்கடல் நெடுநகர் வாழ்கென அறைந்தார்." (2392)

மேற்கூறப்பெற்ற பாடல்களினின்றும் நகரமும் நகர மக்களும் மனமகிழ்வோடு அணிசெய்துகொண்ட திறம், விளங்கும் மண வினை நிகழுமுன் எழு நாட்கள் பாற்சோறு, பாயசம் போன்ற உணவினை உண்ணுமாறு அரசன் மக்கட்கு வேண்டுகோள் விடுக் கின்றான். திருமண விழாவில் குழுமும் மக்கட்குத் தீங்கு செய் வன என நினைத்து சினக்களிறுகளை அகற்றுகின்றனர்.

முரசறைந்த ஆறுநாட்களுக்குப் பிறகு எங்கும் பரபரப்புடன் வெண்சங்குகள் முழங்கின. முரசுகள் முழங்கின. வெண்சாந் தினால் தரையை மெழுகி இல்லுறை தெய்வத்திற்கு மலர்ப் பலியை இட்டனர். நகரம் எங்கும் வானளாவ கொடிகள் நடப் பட்டு, தோரணம் கட்டப்பட்டு மணிக் குடங்கள் வரிசையாக வைக்கப்பட்டன,

சுந்த ரத்துகள் பூந்துகள் பொற்றுகள்
அந்த ரத்தெழு மின்புகை யால்ரோ

விந்தி ரன்னகர் சா றயர்ந் திவ்வழி
வந்தி ருந்தது போன் மலீ வுற்றதே. (2400)

அமராவதி நகரம் விழவு ஆற்றி இங்கு வந்து தங்கினாற்போல் இந்நகரம் பொலிவினால் பெருகியது.

நகர மக்கட்கு பாற்சோற்றையும், ஆடை அணிகலன்களையும் வேண்டுமளவு கொள்க என்று கொடுத்தனர். இவ்வாறு பல பாடல்கள் நகருற்ற பொலிவையும், மக்கட்கு வழங்கப்பட்ட இன்னுணவு வகைகளையும் அழகுறக் கூறுகின்றன.

தவிசிடல் :

வானம் பரவி மீன் மலர்வித்தது என்னுமாறு மேற்கட்டியைக கட்டி, சிறந்த ஒளியையுடைய அருங்கலன்களின் பொடியாலே, பொன் அணிந்த நிலமகளின் இடைபோல நுடங்கும்படி கோலம் இட்ட இடத்திலே மாலையணிந்த மகளிர் மங்கலமாக பெரிய தவிசை இட்டனர்.

மணவறை நிலத்தைத் திருமகளின் இடைபோலப் புனைதல் வழக்கம்.
இக்கருத்து பெருங்கதையிலும் (2,4:79-85) சொல்லப்பட்டுள்ளது (2409)

அழகு விளங்கும் பொற்காசும், மணியும், பொன்னும் முத்தும் குவிக்கப்பட்டன. எண் மங்கலமும் விளங்கின மணிவிளக்குகள் ஏற்றப்பட்டன. இனிய புகைகள் கலந்தன ஆயிரத்தெட்டு மகளிர் கவரி ஏந்தினர்.

மங்கலப் பொழுது கூறும் பெரிய கணி வகுத்துத் தந்த நல்ல வேளையில் மங்கல் வாழ்த்துக் கூற, வேந்தன் இருக்கையில் அமர்ந்தவுடன், மங்கலமாகிய அறுகையும் அரிசியையும் இட்டு மந்திரித்த மங்கலமாகிய பொன்கருவி (மயிர்க்கத்தி)யை நாவிதன் முன்னுறுத்த வாழ்த்தினார். இசைக் கருவிகள், சங்குகள் முழங்கின. பெண்கள் திருமயிரைப் பொன்னகலிலே பொருந்தக் கொண்டு மண்டபத்தினின்று இறங்கினர்.

மயிர்வினை மணம் :

அடுத்து பவளக் கொடி போன்ற மணமகள் இலக்கணைக்கு மண நாளிலே மயிர்வினை மணத்தைச் செய்தனர். இங்கு மயிர் வினை மணம் என்றது புருவம் ஒதுக்குதலைக் குறிக்கும்.

"நாட்கடி மயிர்வினை......ஆக்கினார்".

இங்ஙனம் மணமகட்குப் புருவம் ஒதுக்கும் வழக்கத்தினை

"எதிர்நோக் காற்றா இலக்கிழை முகத்தையும்
மதிமாசு கரீஇய வண்ணம் போலக்
கதிர்மேல் இலங்கக் கைவினை முடித்தபின்" (2.4:180-82)

எனவரும் பெருங்கதை அடிகளாலும் உணரலாம். இந்நாளில் நடைபெறும் திருமணங்களில் மணமகனுக்கு மட்டும் இம்மயிர் வினை மணம் நடைபெறுகிறது.

பின்னர் மணமக்களை நீராட்ட மஞ்சனநீர் கொண்டுவர முரசங்கள் முழங்க 1008 யானைகள் நிரையாக நின்றன. வேற் போன்ற கண்களையுடைய பெண்டிர் பொற்குடங்களிலே நீர் நிறைத்து, களிறுகளின் தலையிலே ஏற்றி கொணர்ந்து தந்தனர்.

பொன்னால் இழைத்த மண்டபத்திலே, வெள்ளியால் செய்த மணையிலே குழைபொலிவுற்று விளங்கும் காதினை யுடைய அரசன் அமர்ந்த பின்னர், நீலமணி போலும் நிறமுடைய அறுகினை நெய்யிலே தோய்த்து மகளிர் நெய்யேற்றத் தொடங்கினர். ஒளியை உடைய இமயம் என்கிற நீண்ட பொன்மலை போல, உலகில் நிலைபெற்று சக்கரவாளத்திற்குத் தலைவனாகி திருவுடன் (இலக்கணை) நிலைபெற்று வாழ்க என்று வாழ்த்தி நெய்யை ஏற்றினர்.

**சீவகனை மஞ்சன மாட்டல்**

இடை மின் போன்ற மகளிர் பூசும் நீரணவாகிய துவரானும் மண்ணாலும் அல்லனவற்றலும் தேய்த்து; கங்கை முதலிய தூய நீராலும் சந்திரகாந்தக் கல்லின் நீராலும் சூட்டினர். அப்போது தம்மில் அளவொத்த இனிய இயங்கள் கூடி ஒலித்தன. மன்னவன் முடியிலே தேர் வேந்தர் எடுத்த வெள்ளிக்குடம் சொரியும் மிகுந்த நீரானது சூரியனின் ஒளி மறையும்படி, திங்களின் இனிய கதிரின் தோற்றம் போன்று காணப்பட்டது.

**அணி செய்தல்**

நீராடிய பின்னர் மணித்தூண் நான்கினால் விளங்குகிற, வெள்ளியால் வேயப்பெற்ற மாலை சூழ்ந்த, மாமணிக் கூடத்

திலே சென்றிருந்தான். வெள்ளிக் கட்டிலின்மேல் முத்துப் பந்த லின் நிழலிலே இருந்தவனுக்கு ஒப்பனைக்குரிய மகளிர் அணியை ஏந்தினர்.

இருண்ட நீலமணியின் ஒளிபெற்ற இயல்பினையுடைய அவனது தலைமுடியை ஈரம் போக ஆற்றிய பிறகு அகிற்புகை யின் மணமூட்டி எழுதினது என்னும்படி அழகுபட முடித்தார். கண்ணியைச் சூடினான். அகன்ற மார்பின் மேலே வானவில் தோற்றும்படி முத்தாரம் முதலான அழகினையுடைய அணி கலன்களை அணிந்தான்.

செந்நிறமுடைய எலிமயிர் முதலியவற்றால் செய்த பட்டை உடையாக உடுத்து, ஒளி செய்யும் குழை கதிர்விச, வானவில் போல மாலை மார்பில் இலங்க அழகுடன் மன்மதன் போன்று சீவகன் விளங்கினான்.

அரிசியை நீரிலே இட்டுத் தெளித்த பின்னர் புகைக் கலத் திலே வாய்விட்ட புகையைச் சுழற்றி, கண்ணாடியையும், சுடரை யுடைய விளக்கையும் காட்டினர். (இவை காட்டல் இயல்பு, தற் காலத்தில் நாம் கண்ணேறு படாமல் திருட்டி கழித்தலை ஒத்தது) அறுகையும், மலரையும் கலந்த நறுமண நீரால் இறைவன் அடியைக் கழுவி எடுத்த* எண் மங்கலங்களையும் காட்டினர். அத்துடன் குற்றமில்லாத கைவினையுடைய மணக்கோலம் நிறை வேறியது.

**மணமகளின் மணக்கோலம்**

திருமகள் போன்ற இலக்கணையை, பலரும் வாழ்த்தி வெள்ளி மணையின் மேலிட்ட அழகிய அணையின் மேல் இருத்தினர் அவளைப் பலவாறு புகழ்ந்து, முழவு ஒலிக்க, நீலமணி போலும் விளங்கும் அவளுடைய ஐம்பாலிலே அறுகம் புல்லாகிய நெய்யை அணிந்தனர். வெள்ளணி அணிந்த மதயானைகள் இரண்டின் மேல் சிறந்த மணிக்குடங்களை ஏற்றி, தெளிந்த மஞ்சன நீரைக் கொண்டு, காவலனின் திருமகளை நீராட்டினர். இருபகசுமும் யானைகளை நிறுத்தி அவற்றின் மேலிருந்து நீராட்டுதலின் திருமகளைப் போன்றிலங்கினாள். பின்னர் அவளைப் பவளத் தூண் நாட்டப்பட்ட முத்து மண்டபத்தில் வட்ட அணையிலே,

* செங்கயல் (இரண்டு) கண்ணாடி, கொடி, முரசு, தோட்டி, கும்பம் (இரண்டு) இவை காண்டல் நல்ல சகுனமாகக் கருதப்பட்டது.

பொன்விதானத்தின் நிழலிலே அவளைக் கொண்டு சென்று இருந்தினர்.

இலக்கணையின் தோழியர் விலாசி, அலங்காரமாலை போன்றோர் இலக்கணையை ஒப்பனை செய்யத் தொடங்கினர். (இலக்கணைக்குச் செய்யப்படும் ஒப்பனை கேசாதி பாத வருணனையாக அமைந்துள்ளதைக் காணலாம்.) விலாசி என்பாள் இருளையொத்த இலக்கணையின் கூந்தலை வகுத்தும் தொகுத்தும், விரித்தும் தன் கைநூல் திறத்தின் வாரி, கத்தூரிக் கலவையும், அகிற் புகையும் கமழும்படி வியக்கத்தக்க நூல் முறைப்படி அளைந்து ஊட்டி, அழகிய எருத்தினையுடைய இமில் போல முகத்துக்கேற்ப முடித்தாள். இனிய மொழியை உடைய இலக்கணைக்கு திருந்திய திங்களைச் சூழ்ந்த மின்போல செம்பொன்னாலான பட்டத்தை அணிவித்து; அருப்பையும், இலையையும் இடையிட்டுக் கட்டின முல்லைச் சூட்டைக் கற்புக்குச் சூட்டி; முத்துமாலையைத் தொங்கவிட்ட பொன்னாலான மகரவாயான அணியை அணிந்தாள்.

மணங்கமழும் குவளை மலரைக் கூந்தலில் விளங்க வைத்து, மணிச்சுண்ணத்தாலே அமைந்த பொட்டை அழகிய நுதலிலே இட்டு, உள்ளத்தைக் கவரும் வாளனையை கண்ணை நிறமுடைய மையாலே புனைந்தாள்.

யானைத் தந்தத்தால் ஆன தோட்டையும், அழகுறும் மகரக்குழையையும் காதினின்றும் எடுத்துவிட்டு, ஒப்பற்றதாகி எரியும் மணியினாற் செய்யப்பட்ட குதம்பை என்னும் காதணி, யை வானவரும் கண்டு விரும்புமாறு அவள் அணிந்தாள். முன் கையில் சங்கினாலகிய வளையையும், பவளம் போன்ற விரலில் மணிமோதிரமும் மின்ன தோளிலும் கழுத்திலும் வலம்புரி முத்துக்களை அணிந்தாள். இலக்கணையின் அழகிய மார்பிலும், தோளிலும் மணக்கும் சாந்தினால் தூய அழகிய கொடி அசையும் படி எழுதினாள். நாணினையுடைய நங்கையின் இடை வருந்த பொன் நாணும், முத்துவடமும், புரளுமாறு அணிய, அதனைப் பார்த்து காமனும் மனம் உருகி இவள் மெய்யிலே மறைந்து வேட்கையை விளைத்திட்டான். பார்த்தவர் ஆவி தளரும் வண்ணம் காசுகள் அணிந்த இடையில் தெய்வத் தன்மை தோன்றும் இழை தெரியாத பட்டை உடுத்தாள். குறங்குசெறி என்னும் அணிகலனைத் துடையிலணிந்து, சிறிய கணைக்காலைப்

பற்றியவாறு கிண் கிணியும் சிலம்பும் ஒலிக்க சிற்றடியிலும், அழகிய விரல்களிலும் அணிவனவற்றை அணிந்து, பாம்பினது சிறு நாவைப் போலும் முந்தானையை விலாகி இருத்திட்டாள்.

பின்னர் அலங்கார மலை என்னும் தோழி வந்து இலக்கணனை அழகிய மலர்மாலை அணிந்த கழுத்தை உள்ளிட்டு மலரனைய அடியும், கையும், நெற்றியும், நகத்துடன் வியப்புற்று விரும்பும்படி ஒளியுடைய செந்நிறத்தை எழுதினாள். (இக் கோலம் பிற்காலத்தில் வழங்கப் பெறுவதாயிற்றென்பர்.)

**சடங்கு :**

**திருமணத்திண்ணை அமைத்தல் :**

புதிதாகக் கொண்டுவரப்பட்ட மணல், தருப்பை, சமிதை ஆகிய மூன்றினாலும் நிறைய மலர்களால் அலங்கரிக்கப்பட்ட திண்ணையை அமைத்தனர். ஒரு மணி அகலிலே ஆவின் நெய்யை வார்த்து, இருமணி அகலிலே நீரை வார்த்து ஒரு பொன் அகலிலே அகில் நெய் முதலிய மணம் நிறைந்த தூபத்தைப் பெய்து வைக்க வேண்டிய திசைகளிலே வைத்தனர். (86)

ஒரு பொற்கிண்ணத்திலே நெற்பொரியையிட்டு, கற்புரி கடவுளாகிய அம்பரியையும், ஆன்பாலாவி கலக்கும்படி வைத்து, பிரமனை வேண்டித் தருப்பையாலே பிரம முடியாக வைத்து, மூன்று பொன் வரையுங் கீறி, இரண்டு சமிதைகளையும் வைத்தனர். (87)

சிறு விரலாலே தருப்பையைச் சூழ்ந்து; மந்திர விதியினாலே சிறப்புற்ற நெய்யைத் தருப்பையினாலே மந்தரித்து, பொருந்த மும்முறை கழுவி அதனைச் செந்தீயில் இட்டு, மறைப்படியே சிந்தித்து அந்நெய்யை செந்தீக்கு அருகே தண்டிலத்தில் வைத்தார். (88) தண்டிலம் - தண்டிலமாவது தீயை வளர்க்குமிடத்தை சதுரமாகப் பரப்புகின்ற மணல் (அ) ஓமம் பண்ணுவதற்குக் குறிப்பிட்ட இடம்.

சமிதை பதினாறையும், துடுப்பினால் நெய்யையும் சொரிந்த அளவிலே சாண்மேல் எண்விரல் அகலமாகப் பரப்பிய (தண்டிலம்) மணற்பரப்பில் தீக்கடவுள் அவற்றைக் கொண்டு, எட்டுத் திசைகள்யில் உளவரும் புழும்படி வலப்பக்கம் சுழன்று எழுந்தது. (தீ

வலஞ்சுழன்று எழுந்தது உலகில் செல்வமிகுதற்குக் காரணமாகும் என்பர்).

சங்கும் முரசமும் முழங்க, அரசர்கள் ஆரவாரிக்க அரசர்க்கரசனான சீவகன் சிறந்த பொற்கலச நீரைக் கையிலேந்தினான். (90) இந்நிகழ்ச்சி வரை மிக விரிவாகக் கூறிவந்த ஆசிரியர் அடுத்த பாடலில் இலக்கணையுடன் தீவலம் வந்து அழகிய பொற்கட்டில் ஏறினான் எனக் கூறி முடித்து விடுகின்றார்.

"தளிர்புரை கோதை மாதர்
தாமரை முகத்தைச் சேர்ந்த
"தளிர்புரை கோதை மாதர்
தாமரை முகத்தைச் சேர்ந்த
ஒளிர்வளைக் கையைச் செல்வன்
விடுத்தவள் இடக்கை பற்றி
வலங்கொண் டாய்பொற்
கட்டிறான் ஏறி னானே." (91)

சாதகம் பார்த்தல்

அக்காலத்து சோதிடத்தில் மக்களுக்கு நம்பிக்கை இருந்தது என்பதற்கு இந்நூலில் பல சான்றுகள் கிடைக்கின்றன. பெற்றோர் குழந்தை பிறந்ததும் சாதகம் கணித்தலும்; திருமணம் செய்யும் போது பொருத்தங்கள் பார்ப்பதும் போன்றவை பழக்கத்திலிருந்தன. இந்நூலில் சீவகநம்பிக்கும் குணமாலைக்கும் திருமணம் நடத்த உடன்பட்டாலும் அவளது பெற்றோர் சோதிடரை வரவழைத்துப் பொருத்தமிருக்கிறதா என்று பார்க்கின்றனர். சோதிடரிடமிருந்து நல்ல பதில் வந்ததும் நிம்மதியடைகின்றனர்.

"திருவிற் கமைந்தான் திசைபத்து மறிந்த தொல்சீர்
உருவிற் கமைந்தாற் கமைந்தாளென யாரு மொட்டப்
பெருகுங் கணிபிற் கணிபேசிய பேதி னானாற்
பருகற் கமைந்த வமிர்தின்படர் தீர்க்க லுற்றார். (1062)

இதைப் போலவே பதுமையாரின் தந்தை சோதிடரிடம் தம் மகளின் மணப்பொருத்தம் குறித்து அறிதலைக் காணலாம். இலக்கணையார் இலம்பகத்தில், அரசன் கோவிந்தனின்

சோதிடர் இலக்கணைக்கும் சீவகநம்பிக்கும் நடைபெறவிருக்கும் திருமணத்திற்கு ஏழு நாட்களை மங்கல நிகழ்ச்சி நடைபெற பனித நாட்களாகக் கணித்துத் தருகிறார்:

**சீதனம் கொடுத்தல்:**

மணமகளின் தந்தை மணமகனுக்குத் தன் மகளைக் கொடுக்கின்ற பொழுதே சீதனமாக பொருளைக் கொடுப்பதும் அக்காலத்து வழக்கிலிருந்ததை இந்நூலிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இம்மண நூலில் நடைபெறும் முதல் திருமணமான கோவிந்தை-பதுமுகன் திருமணத்தில், கோவிந்தை தந்தை தன் ஆயர் குலச் செல்வமாகிய பசு இரண்டாயிரமும் பொற்பாவை ஏழும் மணமகனுக்கு உவந்தளிக்கின்றான். அதைப் போலவே குபேரமித்திரன் தன் மகள் குணமாலையைச் சீவகநம்பிக்கு மணமுடித்துக் கொடுக்கும் பொழுது.

''மழைமொக்கு ளன்ன வருமென்முலை மாதர்நல்லார்
இழைமுற் றணிந்தார் எழுநூற்றுவர் கோடிசெம்பொன்
கழைமுற்று தீந்தேன் கரும்பார்வய லைந்துமூதூர்
குழைமுற்று காதின் மணிக்கொம்பொடு நாய்க னீந்தான்''
(1064)

எழுநூறு இழை முற்றணிந்த மகளிர், ஒரு கோடி செம்பொன், ஐந்து மூதூர் ஆகியவற்றைப் பரிசிலாகக் கொடுக்கின்றான்.

**கந்தபுராணம்**

சிவபுராணங்களுள் தமிழிற் சிறந்தவை சிவபிரானது முக்கண்ணாகத் துலங்கும் பெரிய புராணம், கந்தபுராணம் 'திருவிளையாடற்புராணம் என்பவையாம். இவற்றுள் மிகவும் பாந்து பெருங்காப்பியக் கடலாய் நிலவுவது தமிழ்க் கந்தபுராணமே. இதில் சிவபிரானது திருவருட் சிறப்பு, சிவனடியாரது அன்புத் திறம் பக்தி விளைவிக்கும் தோத்திரப் பாக்கள் ஆகியவை நிரம்பப் பெற்றுள்ளன. அவற்றுடன் திருக்கோவையார் போல பொருளிலக்கணத்திற்கு இலக்கியமாக ஆன்ம ஈடேற்ற முறையை ஒருங்கே கூறுவது. இப்புராணத்தில் திருக்கலியாணப் படலம்; தெய்வயானையம்மை திருமணப் படலம்; திருமணப்படலம்; வள்ளியம்மை திருமணப்படலம் என்னும் நான்கு திருமணப் படலங்களை முதலிலும், இடையிலும், கடையிலும் கொண்டிருப்பது மங்களகரத்தைப் போற்றியதெனலாம்.

மேற்கூறிய நான்கு திருமணங்களுள் இரண்டு சிவபெருமானுக்கும் உமைக்கும் நடைபெறுவனவாகவும், மற்ற இரண்டும் முருகனுக்கும் தெய்வயானைக்கும், முருகனுக்கும் வள்ளிக்கும் நடைபெறும் திருமணமாகவும் அமைந்துள்ளன. இந்நான்கு திருமணங்களுள் முருகனுக்கும் வள்ளியம்மைக்கும் நடைபெற்ற திருமணம் பண்டைத் தமிழர் காலத்திலிருந்து போற்றப்பட்டு வழக்கிலிருந்து வரும் களவு மணத்திற்குச் சிறந்த சான்றாகவும் மற்ற மூன்றும் தமர் கொடுப்பக் கொள்ளும் கற்பு மணத்திற்குச் சான்றாகவும் அமைந்துள்ளன.

சிவபெருமானுக்கும் உமாதேவிக்கும், முருகனுக்கும் தெய்வயானைக்கும் நடைபெற்றதாக ஆசிரியர் வருணித்துச் சொல்லும் திருமண நிகழ்ச்சியில் மணம் பேச பெரியோர் செல்வது; பெண்ணின் தந்தை உடன்படல், நல்ல நாள் குறித்தல், மணமகனும் அவரைச் சார்ந்தவரும் ஊர்வலமாக மங்கள இசை முழங்க மணமகள் இல்லம் வருதல், மணப்பந்தல் அமைத்தல், திருமணச் செய்தியை யாவர்க்கும் தெரிவித்தல், மணமக்கள் மணக்கோலம் பூணுதல்; மணமகன் திருமணச் சாலையை அடைந்தவுடன் பாத பூசை செய்தல்; மணமகளின் கையை மணமகனின் திருக்கையில் வைத்து தாரை வார்த்துக் கொடுத்தல்; திருமண வேள்வி செய்தல் வாழ்த்துக் கூறல் போன்ற நிகழ்ச்சிகள் முறையாகக் கூறப்பட்டுள்ளன.

**சடங்கின் அவசியம்**

கந்தபுராணத்தில் அமைந்த முதல் திருமணக் காட்சி சிவபிரானுக்கும் மலையரசன் மகளாய் அவதரித்த உமாதேவிக்கும் நடைபெறுவதாம். இத்திருமண நிகழ்ச்சியைக் கூறும் போது ஆசிரியர் திருமண வினையில் சடங்குகளின் முக்கியத்துவத்தைக் கூறுமுகமாக ஒரு பாடலை அமைத்துள்ளார். அதில் 'நிலவுலகிலும்' விண்ணுலகிலும் உள்ளவர்கள் யாவரும் திருமணச்சடங்கைச் செயயும் வண்ணம், எல்லா உலகங்களுக்குந் தலைவராகிய தாங்கள் நடத்தியருளல் வேண்டும். ஆகையால் திருமண வேள்வி செய்யுமாறு கட்டளை தந்தருள்க என நான்முகன் இறைவனை வேண்டிக் கொண்டதாகக் கூறியுள்ளார்.

**தாலி இடம் பெறல் :**

முருகப்பிரானுக்கும் தெய்வயானைக்கும் நடைபெற்றதாக ஆசிரியர் கூறிச் செல்லும் திருமண வினையில் மற்ற இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளது போல எல்லாத் திருமண சடங்குகளும் கூறப்படுவதுடன் சிறப்பாக மங்கலச் சின்னமாகக் கருதப்படும் தாலி அணிவித்தமையும் கூறப்பட்டுள்ளது. திருமணச் செய்திகளைத் தரும் தமிழ் இலக்கியங்களுள், முதன் முதலாக கச்சியப்ப சிவாசாரியாரால்தான் கந்தபுராணத்தில், தெய்வயானையம்மை திருமணத்தில் முருகப்பிரான் தெய்வானையின மணிக்கழுத்தில் மங்கல நாணாகிய தாலிஅணிவித்தசடங்கு சொல்லப்பட்டுள்ளது.

**களவு மணம் :**

பழந்தமிழர் பண்பாட்டினையொட்டி முருகப்பிரான் வள்ளியம்மை திருமணத்தை களவு மண முறையில் அமைத்து 'வள்ளியை வதுவை செய்த மரபினை வழாது' சொல்லியுள்ளார்.

''இந்த முறையில் இவள் ஏனல் புனங் காப்ப
அந்த அளவில அவளுக்கு அருள்புரியக்
கந்தவரை நீங்கிக் கதிர்வேலவன் தனியே
வந்து தணிகை மலையிடத்து வைகினனே.'' (கந் : 55)

என்ற இந்தப் பாடலில் 'தனியே வந்து' என்ற தொடர் மூலம் ''அவ்வள்ளியம்மையார் வாயிலாகக் களவு கைகோளுலகத்தில் நிலைபெறச் செய்தருள வேண்டியென்று தொனித்தலுணர்க'' (பக். 49 ஆறுமுக நாவலர் உரை வள்ளியம்மை திருமணப் படலம்).

வள்ளியம்மை வேடர் குலத்தில் தோன்றி வளர்கிறாள். வேட்டுவர் மகளாகிய வள்ளி தினைப்புனத்தைக் காவல் செய்கிறாள். அறுமுகக் கடவுள் வேட்டுவக் கோலம்பூண்டு தினைப் புனத்தை அடைந்து வள்ளியம்மையைக் கண்டு இன்பவுரை பல கூறுகின்றார்.

'மொழியொன்று புகலாயாயின் முறுவலும் புரியாயாயின்
விழியொன்று நோக்காயாயின் விரகமிக்குழல் வேனுய்யும்
வழியொன்று காட்டாயாயின் மனமுஞ் சற்றுருகாயாயிற்
பழியொன்று நின்பாற் சூழும்பாராமுகந் தவிர்தி
யென்றான்.' (72)

வள்ளியம்மை முருகக் கடவுளைப் பார்த்து. 'நான் இழிகுலமாகிய வேட்டுவ குலத்தில் பிறந்தவள்' 'நீர் என்னை விரும்புதல் தக்கதன்று' என்று கூறுகின்றாள்.

'இழிகுலமாகிய எயினர் பாவைநான்
முழுதுல கருள்புரி முதல்வர் நீரெனைத்
தழுவுத லுன்னியே தாழ்ச்சி செப்புதல்
பழியது வேயலால் பான்மைத் தாகுமோ.' (90)

**வேழம் வினாதல் :**

வள்ளியும் தோழியும் தினைப்புனத்தில் இருக்கும் பொழுது முருகக் கடவுள் வேட்டுவக் கோலத்துடன் சென்று ''யான் எய்த யானை ஒன்று இங்கு வந்ததா? கூறுங்கள் என்றார். அவ்வேட்டுவக் கோல முருகனுடைய கேள்வியையும் வள்ளிநாயகியின் பார்வைக் குறிப்புகளையும் கண்ட பாங்கி, குறிப்பினால் உண்மையை உணர்ந்து கொண்டாள். இருவரும் தனித்து மகிழ்வதற்கான வாய்ப்புகளையும் ஏற்படுத்திக் கொடுத்தாள்.

**மடலேறுதல் :** முருகக் கடவுள் வள்ளியைக் காண முடியாத நிலையில் அவள் தோழியிடம் . . ''தோகையோடென்னைக் கட்டிடாயெனில் கிழிதனில் ஆங்கவள்கோலந் தீட்டிமாமட லேறிநும் மூர்த் தெருவதனில் ஓட்டுவேன் இது நாளையான் செய்வதென்று உரைத்தான்.'' (1 3 6)

**வெறியாடல் :** தினைக்கதிர்கள் முற்றி விளைந்தன. தினைப்புனம் அறுவடையாயிற்று. வள்ளியம்மை இல்லத்தை அடைந்தாள். முருகனைக்காணாது தன்னுடைய தன்மை வேறுபட்டாள், மகிழ்ச்சி குன்றினாள். உடல் மெலிந்து உள்ளம் வெதும்பினாள் நற்றாயும் செவிலித்தாயும் நம் பெண்ணைத் தெய்வம் தீண்டிற்று போலும் என்று எண்ணி,

'முந்தையின் முதியாளோடு முருகனை முறைபிற்கூவி
வெந்திறல் வேலினாற்கு வெறியயர் வித்தாரன்றே. (1 5 5)

**உடன்போக்கு :**

தினைப்புனத்தில் சென்று வள்ளியம்மையைக் காணாது முருகக் கடவுள் வருந்தினார். இரவில் சிற்றூரில் புகுந்து நம்பியின் சிறுகுடிலின் புறத்தே நின்றார். பாங்கி முருகனைக் கண்

டாள். யாவரும் நித்திரை செய்யும் பொழுதிலே வள்ளியை அழைத்துச் சென்று முருகனிடம் ஒப்படைத்தாள்.

"ஏத்தருஞ் சிறப்பின் நும் ஊர்க்கிங்கி டனைக் கொண்டேகிக்
காத்தருள் புரியுமென்றே கையடையாக நேர்ந்தாள். (186)

முருகனும், "மடந்தையோடு நள்ளிருளிடையே சென்று ஒரு சோலையுட் சென்றிருந்தனன்.

உண்மை நிலை அறிந்த வள்ளியின் சுற்றத்தார் அவ்விருவரும் இருந்த இடந்தேடிச் சென்று வள்ளியம்மையை எங்களுடைய சிற்றூரில்தானே திருமணஞ் செய்து கொண்டு செல்ல வேண்டுமென்று வேண்டிக் கொண்டார்கள்.

வள்ளியம்மை திருமணப் படலத்தில் மேற்கூறிய கருத்து வரை ஆசிரியர் சங்ககால அகத்துறைப் பாக்களின் அமைப்பு முறை ஒட்டியும் திருக்கோவையாரின் துறைகளைப் பின்பற்றியும் முருகக் கடவுள் வள்ளியம்மையின் களவொழுக்க நெறியினைப் பாடியுள்ளனர் எனலாம்.

திருமணம் :

தந்தையும் சுற்றத்தோரும் சண்முகன் பாங்கரேகிச்
சிந்தையின் மகிழ்ச்சியோடு சிறுகுடியோரை நோக்கிக்
கந்தவேள் நமது மாதைக் கவர்ந்தனனமது சொல்லால்
வந்தனன் மணமுஞ் செய்ய மற்றிது நிகழ்ச்சியென்றார்
(194)

நல்ல வேளையிலே வேட்டுவராசன் முருகக் கடவுளுடைய திருக்கையில் வள்ளியம்மையின் கையை வைத்து தாரை வார்த்துக் கொடுத்தான்.

அந்த நல்வேளை தன்னில் அன்புடைக் குறவர் கோமான்
கந்தவேள் பாணி தன்னிற் கன்னிகை கரத்தை நல்கி
நந்தவமாகி வந்த நங்கையை நயப்பாலின்று
தந்தனன் கொள்கவென்று தண்புனல் தாரைவார்த்தான்"
(199)

முருகக் கடவுளுடைய கட்டளைப்படி நாரதர் முன்னே திருமணச் சடங்கைச் செய்து முடித்தனன்.

மதுபருக்கமளித்தல் :

மணமகன் மணமகள் கழுத்திலே மங்கலநாண் அணிவித்த பிறகு மணமகளின் தந்தை மதுபருக்கம் வழங்கும்பழக்கம் குறித்து இந்நூலில் சொல்லப்பட்டுள்ளது. முருகக் கடவுள் தெய்வயானை அம்மையின் திருக்கழுத்திலே மங்கலநாண் அணிவித்து, அவருடைய முடியிலேநறுமணம் மிக்க மாலையையுஞ் சூட்டிய பின்னர் தெய்வ யானையின் தந்தை இந்திரன் முக்கனி, கரும்பு, தேன், காமதேனு வின் பால் ஆகிய மதுபருக்கங்களை முருகப் பெருமானுக்கு உண்ணும்படி அளித்தான் எனக் கச்சியப்பர் கூறுகிறார். இப்பழக் கம் மணமகனை வரவேற்கும் மணப்பெண்ணின் தந்தை செலுத் தும் மரியாதை எனக் கூறப்படுகின்றது.

## பெரியபுராணம்

எல்லாம் வல்ல சிவபெருமானின் மூன்று கண்களாகத் திருத் தொண்டர் புராணமும், திருவிளையாடற்புராணமும், கந்தபுரா ணமும் திகழ்வன என்று கண்டோம். இவற்றுள் மாக்கதை அல் லது பெரியபுராணம் என்று வழங்கப்பெறும் திருத்தொண்டர் புராணத்தைப் பாடியருளியவர் சேக்கிழார் அடிகளாவர். இந் நூலில் அறுபத்து மூன்று இறையருள் பெற்ற அடியார்களின் வர லாறு கூறப்பெற்றுள்ளது. இந்நூல் தோன்றிய காலம் கி.பி 12. ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். இவ்வரலாற்றுக் காப்பியம் அவ்வக்காலச் சூழல், மக்கட்சமுதாயம், நாகரிகப் பண்பாடுகளை அறிய ஏதுவாகின்றது. அறுபத்து மூன்று நாயன்மார் வரலாறு களினின்றும் ஒவ்வொரு அரிய செய்தி கிடைக்கின்றது. இவ்வடி யார்களுள் ஐந்து அடியார்கள் வாழ்க்கையில் நடைபெற்ற திருமண வினையும் குறிக்கப்பட்டுள்ளது. இக்குறிப்புகளைக் கொண்டு சேக்கிழார் காலத்தில் வழக்கிலிருந்த திருமணமுறை குறித்துக் காண்போம்.

பண்டைத் தமிழர் களவு மணத்திற்குப் பெருமளவு ஆதரவு தந்தனர். கற்புமணமும் வழக்கிலிருந்து களவுப்புணர்ச்சிப்போற்ற பட்டாலும் பின்னர் பெற்றோர் உற்றார் அறிய வதுவை மணம் நடத்தப்பட்டது. இந்த இரண்டு மணங்களும தொடர்ந்து வழக் கத்திலிருந்து வந்தமையை பெரிய புராணப் பாடல்களாலும் உணரலாம். களவுமணம் கற்புமணம் இரண்டிற்கும் சான்றாய்த் திகழ்வது சுந்தர மூர்த்தி நாயனார் வரலாறாகும். மற்ற அடியார் களான திருஞானசம்பந்தர், திலகவதி, மானக்கஞ்சாறர் மகள்,

காரைக்கல் புனிதவதி ஆகியோருக்கு நிகழ்ந்த திருமணம் கற்பு மணம் என்பதன்பாற்படும்.

**பொதுக் கருத்துக்கள் :**

திருமணவினை குறித்துப் பெரியபுராணத்தில் வரும் சான்றுகளை எல்லாம் தொகுத்துப் பார்க்கையில் சேக்கிழார் காலத்தில் பெரும்பான்மையான திருமணங்கள் பெற்றோர் பார்த்து செய்து வைத்த மணங்களாகவே காணப்படுகின்றன. முக்கிய மாகக் குலம், கோத்திரம், குணம் அறிந்தே மகள் கொடுத்தனர், கொண்டனர். நல்ல நாள் குறித்து திருமணவினை செய்தனர். இத்திருமணங்களில் கூறப்படும் அமைப்பு முறைகளும் ஒரே மாதிரியாகவே காணப்படுகின்றன.

அந்தணர், அந்தணர் குலத்திலும்; வணிகர் வணிக குலத்திலும்; வேளாளர், வேளாள குலத்திலுமாக ஒரே குலத்தில் மணம் நடைபெற்றது நோக்கத்தக்கது. சுந்தர மூர்த்தி நாயனார் திருமணங்களின் மூலம் கலப்பு மணமும் அந்நாளில் வழக்கில் இருந்திருத்தல் கூடுமென எண்ண இடமளிக்கின்றது.

ஒரு பெண்ணுக்கோ அல்லது ஆணுக்கோ மணப்பருவம் வந்த வுடன் தம்குலப் பெரியவர்களை அனுப்பி மகட் பேசலும்; மண மகன் குணம், குலம், கோத்திரம் ஆகியவற்றை எடுத்துச் சொல்லுதலும், திருமண நாள் குறித்து மணவோலை அனுப்பு தலுமாகிய செய்திகள் மேற்கூறிய ஐந்து அடியார்கள் திருமணத் திலும் கூறப்படுகின்றன.

மணமகனுக்குக் காப்புநாண் அணிவிக்கும் சடங்கு திருமண நாளுக்கு முன்னாள் நடைபெற்றதாகத் திருஞானசம்பந்தர், சுந்தரர் ஆகிய இருவரது திருமணவினையிலும் ஆசிரியர் குறிப் பிட்டுள்ளார். காரைக்கால் புனிதவதி, மானக்கஞ்சாறர் மகள் கல்யாண சுந்தரி ஆகியோரது திருமணத்தில் காப்பு நாண் அணி வித்தல் கூறப்படவில்லை. இவ்விடத்தில் காப்பு நாண் அணிவிக் கும் சடங்கு அந்தணர் குலத்தில் மட்டும்தான் இருந்ததா? வணிகர், வேளாளர் குலத்தில் இச்சடங்கு இல்லையா அல்லது ஒரே கருத்து மீண்டும் மீண்டும் இடம்பெற வேண்டாம் என்ற எண்ணத்தில் விடப்பட்டதா என்பது சிந்தனைக்குரியது.

திருமண நாளுக்கு முன்னர் மணமகன், பெற்றார், உற்றார், யாவரும் சூழ, மங்கல ஒலிகள் முழங்க மணப்பெண்ணின் ஊரைச் சென்றடைவர். இதை நாம் தற்காலத்தில் மாப்பிள்ளை ஊர்வலம், ஜானவாசம் என்றெல்லாம் கூறுகிறோம். இந்நிகழ்ச்சி பெரியபுராணத்தில் ஊர்வலம் என்ற சொல்லால் குறிக்கப்படாமல் திருமண எழுச்சி என்று குறிக்கப் பெற்றுள்ளது. இவ்வாறு நகர்வலம் வரும் மணமகனையும் மற்றவரையும் மணமகள் வீட்டார் பெருஞ்சிறப்புடன் இன்னியம் ஒலிக்க மகிழ்வோடு எதிர்கொள்வர். இக்காட்சி மிக விரிவாகத் திருஞான சம்பந்தர் திருமணத்திலும், சுருக்கமாகச் சுந்தரர், புனிதவதியார் திருமணத்திலும் வருணிக்கப்பட்டுள்ளது.

இதைப் போலவே மணமக்கள் நீராடி மணக்கோலம் பூணல் திருமணச் சடங்குகள் முறையாக நடத்தப் பெறுதல், போன்றவை விரிவாக சம்பந்தர் திருமணவினையில் ஆசிரியர் சேக்கிழார் கூறியுள்ளார்.

இச்சடங்குகளில் தாரைவார்க்கும் நிகழ்ச்சியில் மணப்பெண்ணின் தந்தை தன் குலம் கோத்திரம் ஆகியவற்றைத் தெளிவாகக் கூறி இன்னார்க்கு என் மகளைத் தருகிறேன் என்று முறையோடு கூறி தாரை வார்த்துக் கொடுக்கும் நிகழ்ச்சியைப் பெரியபுராணத்தில் காணலாம்.

இக்காப்பியத்தில் திருமணத்தைக் குறிக்கக் கல்யாணம், கலியாணம், திருமணம், பெருமணம், வதுவை, மணம், மன்றல் என்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். இந்நூலில் களவு மணம், கற்பு மணம் இரண்டுமே விரிவாகக் கூறப்பட்டிருந்தாலும் யாருடைய திருமணத்திலும் மணமகள் கழுத்தில் திருமணச் சின்னமாகத் தாலி கட்டும் சடங்கு கூறப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. எனினும் திருமணம் ஒரு பெண்ணுக்கு நடந்ததன் அடையாளமாக, மங்கலச் சின்னமாக நாம் குறிப்பிடும் மங்கலவணி, 'தாலி' என்ற சொல்லால் முதன் முதலாகப் பெரியபுராணத்துள் குறிக்கப்பட்டுள்ளமை நோக்கத்தக்கது. இதில் குங்குலியக்கலய நாயனார் புராணத்துள் 'கோதில் மங்கல நூல் தாலி' (11:9) என்ற தொடரில் தாலி என்ற சொல் வந்துள்ளமையைக் காணலாம்.

மேற்கூறப்பட்ட கருத்துக்களைத் தொகுத்துப் பார்க்கையில் சேக்கிழார் காலத்தில் பெரும்பான்மையான திருமணங்கள் பெற்றோர் பார்த்துச் செய்தவையாகவே உள்ளன. முக்கியமாகக்

குலம், கோத்திரம் அறிந்து மகள் கொடுத்தவர், கொண்டவர் என்றும் கூறலாம்.

## பெரியபுராண மணமக்கள்

| மணமகன் | மணமகள் | குலம் | மணம் |
|---|---|---|---|
| திருஞான சம்பந்தர் | நம்பாண்டார் நம்பி-மகள் | அந்தணர் | கற்புமணம் |
| சுந்தரமூர்த்தி | சடங்கவி சிவா சாரியார் மகள் | அந்தணர் | கற்புமணம் |
| " | பரவையார் | பரவையார் உருத்திரகணி கையர் குலம் | களவுமணம் |
| " | சங்கிலியார் | சங்கிலியார் வேளாளர் குலம் | களவுமணம் |
| ஏயர்கோன் கலிக் காமர் | கல்யாண சுந்தரி | வேளாளர் குலம் | கற்புமணம் |
| கலிப்பகையார் | திலகவதியார் | வேளாளர் குலம் | கற்புமணம் (திருமண நடை-பெறவில்லை) |
| பரமதத்தன் | புனிதவதியார் | வணிகர் குலம் | கற்புமணம் |

### திருஞான சம்பந்தர் திருமணம்

சிவபெருமான் உறையும் திருத்தலங்களுக்குச் சென்று வணங்கிப் பதிகங்கள் பலவும் பாடித் துதித்த ஆளுடைய பிள்ளை எனப் போற்றப்பட்ட திருஞான சம்பந்தர் சீகாழிப் பதியினை வந்தடைந்தார். அப்பொழுது பிள்ளையாரை வணங்கும் பொருட்டுத் திருமுருக நாயனார், திருநீலகண்ட நாயனார் போன்ற அடியார்களும் சுற்றத்தார்களுடன் சீகாழிக்கு வந்தனர். அக்காலத்தில் சம்பந்தரின் தந்தை சிவபாத விருதயரும் சுற்றத்

தார்களும் கூடித் திருஞானசம்பந்தர் திருமணஞ் செய்யும் பருவமீது என்று எண்ணி அவரிடம் 'மறை நூல் வழியே வேள்விகளைப் புரிவதற்கு ஒரு கன்னியைத் திருமணஞ் செய்தருள வேண்டும்'' என வேண்டிக் கொண்டனர். மறை வாழவும், வேதியர் ஒழுக்கத் துறை வாழவும் பிள்ளையார் உடன்பட்டருளினர்.

மறையவரில் பொருந்திய குலத்தின் இசைவினாலே திருநல்லூர் திருப்பெருமணத்தில் நம்பாண்டார் நம்பியின் மகளை *மகட் பேசுதல் பொருத்தமென எண்ணி, சிவபாதவிருதயரும் சுற்றத்தாரும் அவர்பாற் சென்று பேச. அவரும் பெருமகிழ்ச்சியோடும் இசைந்தனர். சிவபாதவிருதயர் மக்கட்பேசத் தொடங்குகையில் முதலில் மணமகனது தன்மைப் பற்றிக் கூற நினைந்து

> ''ஞானபோ னகருக்கு நற்றவத்தின் ஒழுக்கத்தால்
> ஊனமில்சீ லத்தும்பான் மகட்பேச வந்த''

தென உரைக்கின்றார்.

'திருமணம் நிகழப் போகும் கலியாணத் திருநாளையும், விளங்கும் நல்ல முகூர்த்த நேரத்தையும் கணித மங்கல நூலுணர்ந்த பெரியோர்கள் வகுத்துக் கூற, பெருகும் மணத் திருநாளோலையினைப் பெரிய சிறப்பினோடு மணமகள் வீட்டாருக்கும், ஏனைய சுற்றத்தார்க்கும் அனுப்பி, நல்ல நாளிலே அழகிய பாலிகைகளில் அழகிய முளைகளை விதைத்தார்கள்' (1168)

**விழாக்கோலம்**

நகரை அலங்கரித்தனர். சுற்றத்தார் பலரும் வந்து சேர்ந்தனர். திருமண நாளுக்கு ஏழு நாட்களின் முன்னாகிய நல்ல நாளிலே பல அழகிய மங்கல முரசும் பலவகை இயங்களும் நிறைந்து ஒலிக்க பொன்னிட்ட அழகிய பாலிகைகளின் மீது தூய முளையை நிறைத்துத் தெளித்தார்கள். பாலிகை விதைத்தல், முளை பூரித்தல் இவை மணச் சடங்கின் சிறந்த அங்கமாவன. திருமணங்களில் இந்த முளைகளின் செழுமை, வளர்ச்சி, செறிவு முதலியவற்றின் அளவே அவ்வம் மணங்களின் சிறப்பும் பயனும் ஆவன என்று அறிகுறியாகக் காணும் வழக்கமுண்டு.

---

* ... பெருஞ்சுற்ற மகிழ்சிறப்ப, மகட்பேசத்
தருவார் தன் பணைநல்லூர் சார்கின்றார்
தாதையார் 28:1162

மாடங்களையும், மண்டபங்களையும், மாளிகைகளையும் ஒப்பற்ற அழகு பெறும்படி அலங்கரித்தனர். வீதிகள்தோறும் தோரணங் கட்டினர். மணிமுத்துக்கள் நிறைந்த பெரும்பந்தர்கள் பலவற்றையும் அமைத்தனர்.

கலியாணச் செயல்களைத் திருமுளை பூரித்த ஏழாநாளாகிய நன்னாளிலிருந்து தொடங்கி வருகின்ற நாட்களிலெல்லாம் வீதிகள், மாடங்களின் முன்றில்கள் தோறும் தூய நீர் நிறைந்த பொற்குடங்களும்; நெருங்கிய ஒளியுடைய மாலைகளும் தூபங்களும் ஆகியவற்றை நெருக்க வைத்தனர்.

> 'மன்றல்வினைத் திருமுளை நா டொடங்கிவரு
> நாளெல்லாம்
> ... ... ... ... ... ... ...
> துன்றுசுடர்த் தாமங்கள் தூபங்கள் துதைவித்தார்' (1175)

ஆகுதிப் புகையும் அகிற்புகையும் விம்மி எழுந்தன. பண்டசாலைகள் பல்வேறு விதம் பயின்றன மறைவிதிச் சடங்கின் உபகரணங்களும் குங்குமக் கூட்டும், சாந்தும் பொற்சுண்ணமும் ஆக மணத்திற்குரிய பெருவளங்கள் யாவும் நிறைந்தன.

**காப்பு நாண் கட்டல்**

திருமண நாளுக்கு முன்னாளிலே திருக்காப்பு நாண் அணியும் சடங்கு நடைபெற்றது. ஐம்பெருங் காவியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரத்தில் திருமணம் நடைபெறுவதற்கு முன் நகர மக்கள் கண்டு ஆசி கூறி வாழ்த்தும் வகையில் மங்கலவணியை ஊர்வலமாக எடுத்துச் சென்ற காட்சியை இளங்கோவடிகள் சித்தரித்துள்ளார். அதைப்போல சம்பந்தர் திருமணத்தில் திருக்காப்பு நாணை நகர்வலஞ் செய்வித்து வேத முழங்க, மங்கல இயங்கள் இயங்கப் பிள்ளையாரது திருக்கையில் அணிவித்தார்கள்.

> ''மாதர் மைந்தர்பொற் காப்புநாண் நகர்வலஞ்
> செய்தார்.'' (1183)
> ''நகர்வ லஞ்செய்து புகுந்தபின்,
> பார்வ ழிப்பட வருமிரு வினைகளின் பந்தச்
> சார்பொ ழிப்பவர் திருக்கையிற் காப்புநாண் சாத்த''
> (1187)

திருமணங் காண வந்தவர்களும், தொண்டர்களும் மகிழ்ச்சியால் ஆரவாரித்தனர். திருஞான சம்பந்தர் முன்னர்ப் புன்னெறி களாகிய புறச் சமயங்களின் துன்பந்தரும் வலிய இருள் நீங்க வந்து அவதரித்து போலப் பரவிய இருளை நீக்கி வந்து சூரியன் எழுந்தான். எண்டிசையவர்களும் நெருங்குதலால் திருமணத்தில் வையம் தனது வரம்பில்லாத பயன்காட்டுவது போன்று விளங்கு கிறது. திருமண எழுச்சியின் முழக்குப் போன்று பெருமுழக்குடன் கடல்கள் எழுந்தன. மறையவர் ஆகுதி தொடங்கிடா முன்னம் வேதியில் தீ வலஞ்சிழித்து எழுந்தது. வாயு அன்பர்களும் அடியார் வேடங்கொண்டெழுந்தது. வெண்மேகங்களுடன் வானம் விளங்கிற்று.

இவ்வாறு விளங்கிய நல்ல நாளிலே திருஞானசம்பந்தர் காலை செய்வினை முடித்து, இறைவனைப் போற்றி சிவிகையில் அமர்ந்தனர். மங்கல இயங்கள் எழுந்தார்ப்ப, அடியவர் தொடர திருமணம் எழுந்தது. மணமகளின் ஊரான திருநல்லூர்த் திருப் பெருமணத்தை ஊர்வலம் சென்று அடைந்தது. அவ்வூர் இறை வனை வணங்கிப் பாடித் துதித்துப் பின் மணக்கோலம் புனைய வேண்டிப் புறத்தில் ஒரு மடத்தில் புகுந்தனர்.

**திருமணக்கோலம் :**

இங்கு, பெரியபுராண ஆசிரியர் சேக்கிழார் அடிகள் திருஞான சம்பந்தர் பூண்ட திருமணக் கோலத்தை பாதாதிகேச வருணனை யாகப் பத்துப் பாடல்களில் முறையாக அழகுபடக் கூறியுள் ளார்.

"பொற்குட நிறைந்த வாசப் புனிதமஞ் சனநீ ராட்டி,
விற்பொலி வெண்பட் டாடை மேதக விளங்கச் சாத்தி,
நற்றிரு உத்த ரீய நறுந்துகில் சாத்தி, நானப்
பற்பல கலவைச் சாந்தம் பான்மையின் அணிந்த பின்னர்
(1209)

திருவடி முதல் திருமுடி வரை தூய முத்துக்களாலாகிய உரிய அணிகளை அணிந்தார். அழகு மிகுந்த தெய்வத்தன்மை வாய்ந்த மணக்கோலத்தை அத்தொழில் வல்ல வேதியர்கள் செய்ய, சம்பந்தர் திருவுடையாள மாலையாகிய உருத்திராக்க மாலை யினை எல்லா உலகத்தவர்களும் துதிக்கும்படி தொழுது தாமே எடுத்து அணிந்து கொண்டனர்.

சம்பந்தர் மீண்டும் சிவிகையிலேற ஊர்வலம் புறப்பட்டது. திருமணத்தெதிர் சென்று மறைக்குல மைந்தர்கள் பொற்சுண்ணமும் நவமணியும் வீசினர். பெருமறையோர் அரசிலை தருப்பை தோய்ந்த கலச நீரினை வேத மந்திரங்கள் சொல்லி வீசினர். திருமணப் பூப்பந்தர் முன்பு சிவிகையினின்றும் இறங்கிப் பொற்சுண்ணம் பரந்த நடைபாவாடை மீது சென்றனர். அப்பொழுது மறையவர் மங்கல மகளிர் நிறைகுடம், தூபம், விளக்கு, மலர் மாலை முளைப்பாண்டில் முதலிய மங்கலங்களை ஏந்தி வரவேற்க, ஆதிபூமி என்னும் மணவறையினுள் சென்று மலர்த் தவிசில் சென்றமர்ந்தார்.

பாதபூசை :

மணப் பெண்ணின் தாய் பெருமகிழ்ச்சியுடனே பிள்ளையாரது பாதங்களை விளக்குவாராகி வெள்ளிய ஆன் பாலினையும் தூய நீரினையும் ஏந்தி வந்தார்.

> வந்துமுன் னெய்தித் தாமுன் செய்தமா தவத்தி னன்மை
> நந்துநம் பாண்டார் நம்பி ஞானபோ னகர்பொற் பாதங்
> கந்தவார் குழலி னார்பொற் கரகநீ ரெடுத்து வார்ப்பப்
> புந்தியா னினைதி யாலம் 'பிரிசடை யா'னென் றுன்னி
> விருப்பினால் விளக்கி மிக்க புனிதநீர் தலைமேற் கொண்டு
> .. ... ... ... ...
> அருப்புறு இளைஞர் மேலுந் தெளித்தனர் ஆர்வத் தோடும்
> (1233, 34)

தாரை வார்த்தல்

பாதபூசை செய்த பின்னர் பிள்ளையாரது மலர் போன்ற கையில் மணமுடைய நீர் நிறைந்த கமண்டலத்தினை ஏந்தி அதன் மங்கல நீரினை வார்ப்பாராகி,

> ''தருமுறைக் கோத்தி ரத்தின் தங்குலஞ் செப்பி' என்றன்
> அருநிதிப் பாவை யாரைப் பிள்ளையாக் களித்தேன்''
> என்றார் (1235)

திருமுறை - வழிவழி; அந்தணர் மரபின் பரம்பரை.
கோத்திரம் - மரபின் உட்பிரிவு
குலம் - கோத்திரத்தின் உட்பிரிவு

### கரம் பற்றல்

மணமகளின் கையினைத் திருஞான சம்பந்தர் தமது கரத்தினால் பிடித்தற்குரிய குற்றமற்ற நல்ல வேளை வந்து பொருந்த பெற்றாரும் உற்றாரும் சேர்ந்து மணமக்களை அழைத்து வந்து மணமகனாகிய சம்பந்தரின் வலப்பக்கத்தில் அமரச் செய்தனர். பின்னர் பவளக் கால்களையுடைய பந்தரின் நடுவே திருநீலநக்க நாயனார் ஆசிரியராக இருந்து சம்பந்தரின் முன்னால் மறை நூல் விதிச் சடங்குகளை முறைப்படிச் செய்தனர். மறையொலியுடன் மங்கல வாழ்த்தும் பெருக, நிறைந்த வளையல்களை அணிந்த மணமகளின் கைப்பிடித்துப் பொரியட்டி மந்திர வேள்வித் தீயினை வலம் வரும் சடங்கு செய்வதற்காக அம்மையாரின் திருக்கையினைப் பிள்ளையார் பற்றுகின்றார். அப்பொழுது இவருடனே அழிவில்லாத சிவனடி சேர்வேன் என்று எண்ணி மறையவர் குலத்துக்குரிய மணத்தினைச் செய்வித்தருளிய இறைவரது திருப்பெருமணம் என்னும் திருக்கோயிலை அடைகின்றார், இவ்வாறாகத் திருஞான சம்பந்தரின் வைதிக நெறித் திருமணம் மிக விரிவாக ஆசிரியரால் வருணிக்கப்பட்டுள்ளது.

### சுந்தரமூர்த்தி நாயனார் திருமணம்

சைவ சமயக் குரவர்களுள் சுந்தரமூர்த்தி நாயனாரின் வரலாறும் பெரியபுராணத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. தமிழர் மரபில் அந்நாளிலிருந்து இந்நாள் வரை போற்றப்பட்டு வரும் களவுமணம் கற்பு மணம் இரண்டிற்கும் ஆதாரமாக இவரது வாழ்க்கை அமைகிறது. முதலில் இவரது பெற்றோர் முறைப்படி மணமகளைத் தேர்ந்தெடுத்து மகட் பேசி மணமுயற்சியை மேற்கொண்டனர். திருமணத்திற்குச் செய்யவேண்டிய சடங்குகள் யாவும் செய்யப் பெற்றன. அப்போது, நம்பியாரூரராகிய சுந்தரர் முன்னர் வேண்டிக் கொண்ட வண்ணம் இறைவன் தடுத்தாட்கொள்கின்றார். சுந்தரர் வாழ்வில் முதலில் ஏற்பாடு செய்யப்பட்ட இத்திருமணம் கற்பு மணத்திற்குச் சான்றாக அமைகிறது.

பின்னர் இச்சுந்தரரே சிவபெருமானின் திருவருளினாலே உருத்திர கணிகையர் குலத்தில் பிறந்த பரவையார் என்பவரையும், வேளாளர் குலத்தில் வந்து பிறந்த சங்கிலியார் என்பவரையும் விதி கூட்ட எதிர்பட்டு ஒருவரை ஒருவர் விரும்பி, இவ்விரு பெண்களையும் சுந்தரர் திருமணம் செய்து கொள்கிறார். இவ்விரு திருமணங்களும் களவு மணத்திற்குச் சான்றாக அமைகின்றன.

ஒரு நாள் பரவையார் தம் தோழியருடன் ஒரு நாள் பூங்கோயிலில் எழுந்தருளிய பெருமானை வணங்கச் சென்றார். அப்பொழுது நல்வினை கூட்ட அங்குப் பரவையாரைச் சுந்தரர் காண்கிறார். அம்மையாரின் பேரழகில் ஈடுபட்டு மயங்கி நின்றார்.

"கற்பகத்தின் பூங்கொம்போ? காமதன் பெருவாழ்வோ?
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ?
அற்புதமோ? சிவனருளோ அறியேன் என்று அதிசயித்தார்"

சுந்தரர் பரவையார் அழகில் ஈடுபட்டதைப் போலவே, பரவையாரும் சுந்தரர் அழகில் தம் உள்ளத்தைப் பறிகொடுக்கின்றார்.

"முன்னே வந் தெதிர் தோன்றும் முருகனோ? பெருகோளி
யால்
தன்னேரில் மாரனோ? தார்மார்பின் விஞ்சையனோ?
... ... ... ... ...
என்னே! என் மனந்திரித்த இவன் யாரோ?

என நினைத்தார். இவ்வாறு பரவையார் நம்பியாரூரரை எண்ணி எண்ணி காதல் வேதனையில் வாடினார். இறைவனை நோக்கித் தம் வேதனையை நீக்கியருளும்படி வேண்டினார்.

சுந்தரரையும் பரவையாரையும் இம்மண்ணுலகில் வந்து தோன்றும்படி கட்டளையிட்டருளிய சிவபெருமான் தம்மருளால் திருவாரூரிலுள்ள அடியார்கள் கனவிலே தோன்றி பரவையாருக்கும் நம்பியாரூரருக்கும் திருமணம் செய்து வையுங்கள் எனக் கட்டளையிட்டார். மறுநாள் திருவாரூர் சிவனடியார்கள் யாவரும் திரண்டு வந்தனர். நம்பியாரூரருக்கும் பரவையாருக்கும் திருமணம் செய்து வைத்து மகிழ்ந்தனர்.

இதைப் போலவே சுந்தரர் சங்கிலியார் திருமணமும் களவு வழித் திருமணமாக அமைகிறது. திருவொற்றியூர் கோயிலில் சுந்தரர் தம் ஊழ்வினைப் பயனால் சங்கிலியாரைக் காண்கிறார். மலரோடு என் ஆருயிரையும் சேர்த்துக் கட்டுகின்ற இச்சங்கிலியாரைச் சிவபெருமான் திருவருளினாலே பெறுவேன் என்று கூறுகிறார். பரவையாருக்குப் சுந்தரருக்கும் திருமணம் நடைபெற்றது போலவே இத்திருமணமும் நடைபெறுகிறது. இத்திருமணங்கள் காதல் திருமணங்கள் என்பதைச் சேக்கிழார் சொல்லால் அறியலாம்.

"கந்த மாலைச் சங்கிலியார்
தம்மைக் காதன் மணம்புணர
வந்த பருவ மாதலால்" (29:224)

என்ற அடி சான்றாகும். சுந்தரருக்குப் பரவையார், சங்கிலியார் என்ற பெண்களுடன் நடைபெற்ற திருமணங்கள் இரண்டும் கலப்புத் திருமணத்திற்குச் சான்றாகவும் திகழ்கின்றன.

## புனிதவதியின் திருமணம்

பெருஞ் செல்வத்திலும், வாய்மையிலும் தருமநெறியிலும் சிறிதும் குறைபடாத பெருவணிகர்களின் குடிச்சிறப்பு காரைக் காலம்மையார் புராணத்தில் விளக்கப்படுகிறது காரைக்கால் நகரில் இவர்கள் குலத் தலைவனாக விளங்கிய தனதத்தனார் என்பவரின் அருந்தவப் புதல்வியாக பேரழகுமிக்க புனிதவதி பிறந்து சீராட்டி வளர்க்கப்படுகிறார். இவரது வாழ்க்கை வரலாற்றைக் குழந்தைப் பருவ முதல் சிவநெறி அடைந்தவரை சேக்கிழார் படிப்படியாக வருணித்துச் சொல்கிறார். அவ்வாறு புனிதவதியின குழந்தைப் பருவம் கடந்தபின் புனிதவதியின் திருமணப் பருவம் வருகிறது. இப்பகுதியில் ஆசிரியர் வணிகர் குல மரபில் அமைந்த திருமண முறைகளை ஒழுங்குபட கூறி யுள்ளார்.

## மணப்பருவம்

புனிதவதியார் இவையிவை நல்லன என்று எடுத்துக் கூறும் நலங்கள் எல்லாம் நிரம்பப் பெற்று பேரழகு மிக்கு வளர்கின்ற நாளிலே வீட்டினின்றும் வெளியில் செல்லலாகாத பருவத்தை அடைகிறாள். அதனால் இவர்களது வணிககுல மரபிற்கு ஏற்றப்படி பழங்குடியில் வந்த வணிகர்கள் பெண்பேசத் தொடங் கினார்கள் என்ற கருத்தோடு புனிதவதியின் திருமண நிகழ்ச்சியை சித்தரிக்கத் தொடங்குகிறார்.

பெண்மை நலம் நிரம்பப் பெற்ற பருவத்தின் பின் பெண் களை வீட்டைவிட்டு வெளியிற் செல்லவிடாது இற்செறிவித்து பாதுகாத்தல் முதறிவின் நமது முந்தையோர் கைக்கொண்ட நன் முறையாயிருந்தது. இதனை இற்செறிவித்தல் என்று அகப் பொருள் நூல்கள் கூறுகின்றன. மேலும் மரபும் குலமும் குடியும் தொன்மையும் பொருந்துமாறு பற்றியே மகட்பேசி மணம் முடித்

தல் நமது முன்னோர் வழக்கமாயிருந்தது. அதாவது மணமகன் வீட்டார் பக்கமிருந்து பெண் பெற்றார்பால் குலமுதியோர் வந்து மணப்பேச்சு தொடங்குதலே முறையாயிருந்தது. வணிக குல முறைப்படியே புனிதவதியின் திருமணம் ஏற்பாடாயிற்று என்பதைச் சேக்கிழார் அடிகள்

"வந்தமூ தறிவோர்கள் மணங்குறித்த மனைபுகுந்து
தந்தையாம் தனதத்தன் தனைநேர்ந்து, 'நீபயந்த
பைந்தொடியை நிதிபதிமைந் தன்பரம தத்தனுக்கு
முந்தைமர பினுக்கேற்ற முறைமைமணம் புரிகின்றார்
(1724)

எனத் தொடங்கிப் பாடியுள்ளார். இப்பாடலில் மூதறிவோர்கள் மகளைப் பெற்றோரிடம் சேர்ந்து பேசும் மரபு அறிவிக்கப்பட்டது. மேலும் மணமகன் பெயர், அவன் தந்தை பெயர் குலம் ஆகியவற்றைக் கூறி மணம் புரிக என்று வேண்டிக் கொள்கின்றனர். இத்திறத்தார்க்கும் மனமொவ்விய காரணத்தால் அவரவர் தத்தம் இல்லில் சிறப்பாக வதுவைவினை தொழிலை மேற்கொள்கின்றனர். அதாவது மனமகிழ்வோடு கலியாணத்திற்கு ஆக வேண்டிய காரியங்களில் ஈடுபடுகின்றனர்.

### மணவோலை அனுப்புதல்

தற்காலத்தில் திருமண அழைப்பிதழ் அனுப்புவது போலவே அந்நாளிலும் மணநாள் குறித்து மணவோலை அனுப்பும் பழக்கம் இருந்திருக்கிறது. மணமகனாகிய பரமதத்தன் வீட்டில் மணவோலை அனுப்பிவிட்டு, மணநாள் நெருங்கும்போது மணச்சடங்குக்குரிய செயல்கள் எல்லாவற்றையும் முறைப்படி செய்துவிட்டு, மலர்மாலை அணிவித்து மணமகனை மணக்கோலம் புனையும் அணிகளால் அழகு செய்து மணமுரசு முதலிய இசைக்கருவிகள் முழங்க மண எழுச்சி பெற கிளம்பி நிதிபதியும் சுற்றத்தாரும் பெண்வீடு இருக்கும் காரைக்கால் நகரத்திற்குள் சென்றனர். இங்கு வணிகர் குல மரபிற்கு அடையாள மாலையாகிய முல்லைமாலை மணமகனுக்கு அணிவிக்கப் பெற்றது.

"மணமிசைந்த நாளோலை செலவிட்டு, மங்கலநாள்
அணைய, வதுவைத்தொழில்களானவெலாம் அமைவித்தே
இணர்அலங்கல் மைந்தனையு மணவணியின் எழில்விளங்கிப்
பணைமுரசும் எழுந்தார்ப்பக் காரைக்காற் பதிபுகுந்து.
(1726)

அவ்வாறு காரைக்கால் பதியை அடைந்த மணமகன் வீட்டார் மணமகளின் அழகு பொருந்திய இல்லத்தினுள் சென்று தெளிவினை தரும் தரும நூல்களில் விதித்தபடியே மணத்திற்கு முன் செய்யத்தக்க சமாவர்த்தனம் முதலிய சடங்குகளை எல்லாம் செய்து முடித்து தளிர்போன்ற திருவடிகளையும், மென்மை பொருந்திய நகையினையும் மயில் போன்ற சாயலினையும் உடைய மணப்பெண் புனிதவதியை மாலையணிந்த காளை போன்ற மணமகன் பரமதத்தனுக்கு மனமகிழ்ச்சியோடு குழுமியிருந்த சுற்றத்தார் போற்றும்படி கலியாணம் செய்வித்தார்கள். இதையே,

அளிமிடைதார்த் தனதத்தன் அணிமாடத்து உட்புகுந்து
தெளிதருநூல் விதிவழியே செயன்முறைமை செய்
தமைத்துத்
தளிரடிமென் னகைமயிலைத் தாதவித்தார்க் காளைக்குக்
களிமகிழ்சுற் றம்போற்றக் கலியாணஞ் செய்தார்கள்
(1727)

எனப் பாடியுள்ளார். கலியாணத்திலும் பின்னும் தொடர்ந்து நிகழ வேண்டிய மணச் சடங்குகளைச் செய்த பிறகு இல் வாழ்க்கை மேற்கொண்டனர்.

இவ்வாறு புனிதவதியின் குழந்தைப் பருவம், மணப்பருவம் ஆகிய வாழ்க்கை நிகழ்ச்சிகளை சேக்கிழாரடிகள் படிப்படியாக வருணித்துச் செல்கிறார். இவர்கள் வாழ்க்கையில் ஒரு திருப்புமையம் அமைகிறது. புனிதவதியாரிடம் இறையருள் மிக்கிருப்பதை உணர்ந்த அவள் கணவன் பரமதத்தன் தன் மனைவி தெய்விகப்பெண் என வியந்து அவளைப் பிரிந்து செல்கிறான். பிறகு சிலகாலம் வெளிநாட்டில் வியாபாரம் செய்து கொண்டிருந்துவிட்டு தன் ஊர், தன் மனைவியிடம் திரும்பாமல் பாண்டி நாடு சென்று வணிகர் குலத்துதித்த மற்றொரு பெண்ணை திருமணம் செய்து கொள்கின்றார்.

''மெய்ப்புகழ் விளங்கும் அவ்வூர் விரும்பவோர் வணிகன்
பெற்ற
செப்பருங் கன்னி தன்னைத் திருமலி வதுவை செய்தான்.''
(1751)

இதனின்றும் அந்நாளில் திருமணமானவர் ஏதாவது ஒரு முக்கிய காரணத்தினால் தன மனைவியோடு சேர்ந்து இல்லறம் நடத்த முடியாத நிலையில் இரண்டாம் திருமணம் செய்து கொள்ளும் வழக்கம் இருந்திருக்கிறது என்பதும், அதை அறிந்த சுற்றத் தார் மறுப்பு தெரிவிக்காமல், முடிந்தால் குல முதல் மனை வியாரும் கணவனுடன் சேர்ந்து வாழ வகை செய்தனர் என்ற கருத்தும் இருந்ததைச் சேக்கிழாரின காரைக்காலம்மையார் புராணத்தினின்று அறிய முடிகிறது.

## கம்பராமாயணம்

கம்பனின் காவிய நாயகன் இராமன் தம்பியோடும் முனி வரோடும் மிதிலை மாநகரினுள் வருகையில் உப்பரிகையின் மேலுள்ள மணிக்கொடிகள் எல்லாம் "எல்லையற்ற பேரழ கியைக் கல்யாணம் செய்ய வருகிறான்" என்று வியந்து செயல் மறந்து ஆடுகின்றன. உருவிலும் குலத்திலும், குணத்திலும் ஒத்த சிறப்புடைய ஆண் பெண்கள் ஒருவரையொருவர் மணம் புரிதல் தருமத்தின் பயனாதலால். தகுதியுடையார் யாருமின் மையால் அறக்கடவுள் தானே தூது சென்றான் என்கிறார் கம்பர்.

"நிரம்பிய மாடத்து உம்பர்
நிரை மணிக் கொடிகள் எல்லாம்,
தரம் பிறர்இன்மை உன்னித்
தருமமே தூது செல்ல,
வரம்பில் பேரழகினாளை
மணம் செய்வான் வருகின்றான் என்று
அரம்பையர் விசும்பின் ஆடும்
ஆடலின் ஆடக் கண்டார்.

(கம் : பா : 10-2)

பழந்தமிழரால் போற்றப்பட்டு பெருமளவு வழக்கிலிருந்தது களவுமணம். தமிழர் பண்பாட்டிற்குச் சிறப்பளித்து அதைப் போற்றி பின்பற்றும் வகையில் கம்பநாடர் தமது காவியத் தைப் புனைந்துள்ளார். ஒவ்வொரு கருத்தையும் தமிழ் மரபை யொட்டிச் சொல்லியுள்ளார். இராமாயணத்தின் ஒரு சிறப் பான நிகழ்ச்சி காவியத் தலைவன் தலைவியது திருமணம். இத்திருமணவினையையும் பழந்தமிழரின் பாங்கினையொட்டி அமைத்துச் செல்கிறார். காவிய நாயகி சீதை. மிதிலை

நகரின் இளவரசி. சிவ தனுசை யார் வளைக்கின்றாரோ அவ் வீரனுக்கே இவளை மணமுடித்துத் தர வேண்டும் என்று கருதியுள்ளான் சனகமகாராசன். கதைக்கூறு அப்படியிருப்பினும் தமிழ் மணத்தைப் புகுத்த விழைந்த கம்பர், இராமன் தம்பிய ரோடும் முனிவரோடும் மிதிலை நகருக்கு வருகையில் பொன் னின் சோதியெனத் திகழும் காவியத் தலைவி சீதையைக் காண்பதாகவும் இருவர் உள்ளமும் ஒன்றிக் காதல்வயப்பட்ட தாகவும் கவினுறக் கூறியுள்ளார்.

எல்லா நலன்களும் நிரம்பிய சீதை கன்னிமாடத்து மேல் நிலையில் நின்றபோது அவளுடையவும் இராமனுடையவும் கண்ணிணைகள் ஓரிணையை மற்றோரிணை நுகர, இருவருடைய உணர்ச்சியும் அவரவரிடம் நில்லாது, நிலைபெயர்ந்து ஒன்று பட, இராமனும் நோக்கினான், சீதையும் நோக்கினாள்.

''எண்ணரு நலத்தினாள் இனைய நின்றுழி
கண்ணொடு கண்ணினை கவ்வி யொன்றையொன்று
உண்ணவு நிலைபெறா துணர்வும் ஒன்றிட
அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்.

(கம் : பா : 10 ; 35)

''தானே அவளோ தமியர் காண'' என்ற இறையனார் அகப்பொருளின் கருத்து நெறியை இங்கு காணலாம். காதலர் களின் முதல் சந்திப்பில் தலைவன் தான் முதலில் தலை வியைக் காண்கிறான். கம்பன் மேற்கூறிய பாடலில் அண்ண லும் நோக்கினான் என்கிறார். இக்காதல் நோக்கு ஒரு சிறிய போராகவே காட்டப்படுகிறது. இருவரிடமும் ஆயுதம் உண்டு. இராமனுக்கு வில். சீதைக்கு வாள். இப்போரில் இரு வருக்கும் வெற்றி இருவருக்கும் தோல்வி. தோற்றவரைப் பாசத் தால் பிணித்து தம் உள்ளமெனும் சிறையில் அடைத்து வைத்துக் கொள்கின்றனர் இத்தோல்வியும் வெற்றியும் இருவரும் விரும்பி வேண்டிய தோல்வியும் வெற்றியுமாகும்.

''பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து
ஒருவரை ஒருவர் தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்தினார்'

(10 : 37)

இராமன் விஸ்வாமித்ரனோடு கண்மறையச் சென்றுவிடுகின்றான். பின்னர் சீதை கன்னிமாடத்து பூம்பள்ளியில் தான் கண்ணுற்று விரும்பிய இராமனை நினைந்து தாபத்தால் வருந்துகின்றாள். சீதையைக் கண்டு காதல் கொண்ட இராமனும் விரகதாபத்தால் இரவில் உறங்காது வருந்தினான் என்று கூறுகிறார் கம்பர்.

**மகட்பேசல்:**

பெண் கேட்கும் வழக்கத்தை 'மகள் மொழிதல்' என்பது பண்டைய வழக்கம். மகள் பேசி வரும் பொழுது மணமகனின் குலப்பெருமையைக் கூறுவது வழக்கம். அதனால் தான் 'ஆதித்தன் குல முதல்வன்' என்று தொடங்கி, ஈதவன்றன் வரலாறும் புயவலியும் என்று கூறி முடிக்கின்றார் விஸ்வாமித்திரர்.

**திருமண எழுச்சி:**

மணமகன் வீட்டார் சுற்றத்தாரும் பிறரும் சூழ மங்கல ஓசை முழங்க மணமகள் இல்லம் நோக்கி ஊர்வலமாகச் செல்வர். இதுவே திருமண எழுச்சி என்று வழங்கப் பெறும் இராமனின் தந்தை அயோத்தி அரசன் தசரதசக்கரவர்த்தி மகிழ்ச்சியுடன் தன் பரிவாரங்கள் சூழ மிதிலைக்குப் புறப்பட்டான். இந்தப் பயண ஊர்வலம் பல பாடல்களில் மிக அழகாக கம்பரால் வருணிக்கப்பட்டுள்ளது.

**மணக்கோலம்:**

மணமகள் சீதையை அவளுடைய தோழியர் பலவகை அலங்காரங்களைச் செய்கின்றனர். கம்பர் இதை வருணிக்கக் கோலங்காண் படலம்' என்றே தனியாக ஒருபடலம் அமைத்துள்ளார்: அமிழ்தினைச் சுவை செய்து என்ன அழகினுக்கு அழகு செய்தார்.

சீதையின் கழுத்துக்குப் பொருத்தமான ஆபரணங்களை அணிந்தனர், சேடியர். மான்விழி மகளிர் கழுத்துக்கெல்லாம் சீதை மாங்கல்யமாக இருக்கும்போது அவளுக்கு கழுத்துக்கேற்ற அணியாவது யாதோ? ஏதுமில்லை.

> ''மாலணி நோக்கி னார்த மங்களக் கழுத்துக் கெல்லாம்
> தானணி யான போது தனக்கணி யாது மாதோ.
>
> (20 : 7)

* "சீதை திருமகளின் அவதாரமாகையால் அவளேதான் திருமாங்கல்யம். அதனால்தான் தாரை வார்த்தல், தீ வலம் வருதல், அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல் என்ற பல திருமண நிகழ்சிகளையும் கூறிய கம்பன் தாலி கட்டுதல் (திருப்பூட்டு) பற்றிக் கூறவில்லை."

**திருமணவினை:**

சனகன் திருமணத்திற்கு வந்தவர்களையெல்லாம் உயர்வு தாழ்வு இன்றி மணமகனான இராமனை உபசரிப்பதுபோல் உபசரித்தான். 'இழிந்துளார்க்கும் இராமர்க்கும் ஒத்ததே' என்கிறான் கவிஞன். மணமுரசு ஒலிக்கப் பெற்றவுடன் முதியவரும், இளையவரும், மகளிரும் கூடி நகரை அழகு செய்யத் தொடங்கினர். 'மேனுல கிலுமில்லாப் புதுமை யினுறுகோலம் புனைதல்' செய்தனர். தோரணம் கட்டுகின்றனர். தூண்களுக்குச் சித்திரச் சேலைகளால் உறையிடுகின்றனர். பூர்ண கும்பங்களுக்குப் பட்டாடை சுற்றுகின்றனர். மாளிகைகளை ஒளி மணிகளால் அலங்கரிக்கின்றனர். மலர்களையும் வாசனைத் திரவியங்களையும் தெருவில் தெளிக்கின்றனர். இளம் பாலிகை வகைகளை உயர் திண்ணைகளில் வரிசையாக வைக்கின்றனர். நகர மக்களும் மண விழா காணச்செல்வதற்குத் தங்களை அலங்காரம் செய்து கொள்கின்றனர். அந்தத் திருமண நாளில் மிதிலை நகரம் இருந்த பெருஞ்சிறப்பு இந்திரன் பட்டாபிஷேகம் செய்து கொள்ளும் நாளில் சுவர்க்கலோகத்தில் உள்ளதைப் போலிருந்தது.

"இந்திரன் முடிசூடும்
மண்ணுறு திருநாளே ஒத்தது அம்மண நாளே" (21:38)

திருமணத்திற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் நடைபெறுகின்றன. இராமன் முதலில் முறைப்படி மங்கல நீராடுகின்றான். மங்கல மஞ்சனம் மரபின் ஆடினான். 'மேனியில் சந்தனக் கலவை பூசி, வெண்பட்டாடை உடுத்து, அணிகலங்களைப் பூண்டான். "இராமன் தன்னையே அனையதோர்

---

* 1 : 197 எஸ் நல்ல பெருமாள், கம்பன் காவிய சாரம், வானதி பதிப்பகம் சென்னை-17 1973.

கோலம் தாங்கினான்'' இராமன் மேரு மலையை அடையும் செங்கதிரோன் போல மணமண்டபம் அடைந்தான். முதலில் பாற் கடலிலும், பின்னர் பூமியிலும் தோன்றிய சீதை இப்பொழுது மலையிலும் தோன்றுவது போல மண்டபத்தில் தோன்றுகிறாள்.

திருமணம் காண,
இந்திரன் சசியோடும் எய்தினானிளஞ்
சந்திர மௌலியுந் தைய லாளுடன்
வந்தனன் மலரயன் வாக்கி னாளுடன்
அந்தரம் புகுந்தனன் அழகு காணவே. (21:83)

திருமணச் சடங்குகளை வேதவிதிப்படி வசிட்டர் நடத்தி வைக்கின்றார்.

'வாய்ந்தநல் வேள்விக்கு வசிட்டன் மையற
ஏய்ந்தன கலப்பையோ டினிதி னெய்தினான். (21:84)

வசிட்ட முனிவன் அரிசியைக் கீழே பரப்பி, அல்லது மணலைப் பரப்பி தருப்பைகளை உரிய இடத்தில் வைத்து, அக்கினியை வைத்தற்குரிய வட்டமான இடத்தை வேதவிதியின் ஒழுகின்படி அமைத்து மென்மையான மலர்களைச் சுற்றிலும் தூவி ஓமாக்கினி நன்கு எரியும்படிச் செய்து வேதமந்திரங்களைக் கூறி திருமணச் சடங்கைத் தொடங்கினான்.

'தண்டுலம் விரித்தனன் தருப்பை சாத்தினன்
மண்டுலம் விதிமுறை வகுத்து மென்மலர்
கொண்டவை சொரிந்தெரி குழம மூட்டினன்
பண்டுள மறைநெறி பரவிச் செய்தனன் (21:85)

மணத்தவிசில் ஒன்றிய போகமும் யோகமும் ஒத்து மணத்தின் பொருட்டு வந்தமர்ந்தனர்.

**தாரை வார்த்தல்**

'கோமகன் முன்சனக ன்குளிர் நன்னீர்
பூமகளும் பொருளும்மென நீயென்
மாமகள் தன்னொடு மன்னுதி யென்னாத்
தாமரை யன்ன தடக்கை யினீந்தான். (21:87)

சனகன் சீதையை இராமனுக்குக் கன்னிகா தானஞ் செய்த பொழுது அந்தணர் ஆசி கூறினர். மகளிர் பல்லாண்டு பாடினர், மன்னர்கள், பண்டிதர் வாழ்த்தினர். சிறந்த சங்க வாத்தியங் களும் ஆரவாரித்தன. விண்ணவரும் மண்ணவரும் தூவியமலர் களும் முத்துக்களும் நிறைந்து பூமியானது நட்சத்திரங்களால் விளங்குகிற வானம்போல் விளங்கியது.

**கரம் பற்றல்**

அப்பொழுது இராமன் சீதையின் தளிர் போன்ற கைகளைத் தன் திருக்கையாற் பிடித்தான்.

'வெய்ய கனற்றலை வீரனு மந்நாள்
மையறு மந்திர முற்றம் வழங்கா
நெய்யமை யாவுதி யாவையு நேர்ந்தான்
தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான், (21:90)

**தீவலம் வருதல்**

ஓமம் முதலிய வைதிகச் செய்கைகளைச் செய்யத் தொடங் கின இராமனுடனே சீதையும் வெவ்விய அக்கினியை வலம் வந்தாள்.

'இடம்படு தோளவ னோடியை வேள்வி
தொடங்கிய வெங்கனல் சூழ்வரு போதில்'' (21:91)

காப்புநாணைப் பூண்ட அந்த இராமனும் சீதையும் தீயை வலம் வந்து வணங்கினர். பிறகு சீதை விளங்குகின்ற ஒளியை யுடைய அம்மிக் கல்லை மிதித்து, எதிரிலே நின்ற கலங்கு தலில்லாத கற்புநிலையயுடைய அருந்ததி நட்சத்திரத்தைப் பார்த்தாள்.

'வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம்புரி நூலவர் செய்பொருண் முற்றி
இலங்கொளி யம்மி மிதித்து எதிர் நின்ற
கலங்கலில் கற்பின் அருந்ததி கண்டாள். (21:92)

மணமக்கள் அம்மி மிதித்து அருந்ததி பார்க்கின்றனர். பொது வாக மணமக்கள் அருந்ததியை ஆகாயத்தில் பார்ப்பார்கள். ஆனால் இங்கு திருமணத்திற்கு வந்திருந்த அருந்ததியை நேரில் பார்த்தனர்.

திருமணமான உடன் சீதையோடு இராமன் தன் அழகிய மாளிகைக்குச் செல்கிறான். இராமன் தன் தாயார் மூவரையும் வணங்குகின்றான். சீதையும் உடன் வணங்குகின்றாள்.

### சீதனம்

**மருமகளுக்குப் பரிசு கொடுத்தல்**

இராமன் தாயர் இராமனுக்கு ஏற்ற பெண் சீதை என்று களிப்படைந்து, அளவில்லாத கோடிக் கணக்கான பொற்காசுகளையும், கோடிக்கணக்கான அரிய ஆபரணங்களையும், பரிவாரத்திற்குரிய பெண்கள் கூட்டத்தையும், இடமகன்ற சில நாடுகளையும், விலைமிக்க பட்டாடைகளையும் பெண்களுக்குத் தெய்வம் போலச் சிறந்த சானகி பெறுவாளாக என்று கூறிக் கொடுத்தனர்.

பங்குனி மாதம் உத்தரமான அந்தத் திருநாளில் இலக்குவன் ஊர்மிளையையும், பரதக் மாண்டவியையும், சத்துருக்கனன் சுருத கீர்த்தியையும் மணந்தனர்.

ஆசிரியர் கம்பர் இக்கடிமணப் படலத்தில் ஆண்டாள் கனவில் கண்டதாகக் கூறும் திருமணச் சடங்குகள் அனைத்தையும் கூறுகின்றான். மேலும் மாமியார் மருமகளுக்கு மணாட்டுப்புறம் தருவதை பெரியாழ்வார் தமது பாசுரத்தில் கூறியிருப்பது போலவே கம்பநாடாரும் இராமன் தாயார் சீதைக்கு எல்லையற்ற பொருள்களைத் தந்தமையைக் கூறுகின்றார்.

**மணப்பொருத்தமின்மை :**

அரச குலத்தார் அந்தணர் குலத்திலும் மணம் செய்து கொள்ளல் பொருத்தமில்லை என்ற கருத்தும்.

> "சுந்தரி மணத்திற் கொத்த
> தொன்மையின் துணிவிற் றன்றால்
> அந்தணர் பாவை நீயான்
> அரசரில் வந்தேன் என்றான், (கம்:ஆர;5:49)

அரக்கருக்கும் மானிடருக்கும் மணப்பொருத்தம் இல்லை என்ற கருத்தும்,

"...அரக்கர் தம்மின்
மானுடர் வண்த்த நங்கை
பொருத்தமன் றென்று சாலப்
புலமையோர் புகல்வர்" (5:51)

பஞ்சவடியில் அரக்கர் வேந்தனாகிய இராவணன் தங்கை சூர்ப் பனகை இராமனைக் கண்டு விரும்பிய போது இராமன், தன்னினும் மேற்குலத்துப் பெண்ணை மணத்தல் கூடாது என்பது மனுநீதியாதலால் தொன்று தொட்டு வரும் வழக்கத் திற்கு இது உறுதியளிப்பதன்று என்று கூறுவதாக அமைந்துள்ளன.

## நளவெண்பா

நளவெண்பா நூலுக்கு முதல் நூல் வடமொழி மகாபாரதத் தில் ஆரணிய பருவத்தின்கண் வரும் 'நளோ பாக்கியாநம்' ஆகும் தமிழகமக்கள் நளமன்னன் வரலாற்றை உணர்ந்து கொள்வதற்கு ஏற்றவண்ணம் புகழேந்திப் புலவர் என்பார் வெண்பாவினால் ஆக்கித் தந்தார். இவர் வாழ்ந்த காலம், கம்பர் இருந்த கால மெனக் கூறுவர். இரண்டாம் குலோத்துங்கன் காலமே அவர் வாழ்ந்த காலம் என ஆராய்ச்சியாளர்கள் உரைப்பர். இதைக் கொண்டால் இவர் காலம் பன்னிரெண்டாம் நூற்றாண்டெனக் கருதலாம்.

நளன் என்பான் நிடதநாட்டு வேந்தன். அவன் வேனிற் காலத்தே ஒருநாள் சோலைவளங் காணச்சென்றான். ஆங்கோர் அன்னப்பறவை தோன்றிற்று. அந்த அன்னம் நளனிடம் வீமன் மகள் தமயந்தி என்பாளின் அழகினைக் கூறுகிறது. நளன் அதைக் கேட்ட அளவில் தமயந்திபாற் காதல்கொண்டு, அந்த அன்னத் தையே தமயந்தியிடம் தூதாக அனுப்புகின்றான். அது தமயந்தி யிடம் சென்று அவள் உடன்பாடு பெற்றுவந்து கூறிற்று. பின் சுயம்வரம் நிகழ்ந்தது.

வீமமன்னன் தன்மகள் தமயந்தின் நிலை அறிந்து சுயம்வரம் ஏற்படுத்த எண்ணினான். உடனே,

"மங்கை சுயம்வரநாள் ஏழென்று வார்முரசம்
எங்கும் அறைகென்று இயம்பினான்"

மற்ற நாட்டு மன்னர்களிடம் செய்தி சொல்லத் தூதுவர்களை ஏவினான். அதன் காரணமாக தமயந்தியின் சுயம்வரத்திற்கு

வந்த மன்னர்களின் கூட்டம் நகர் முழுதும் நெருங்கிப் பரவி இருந்தது. நிடத நாட்டு மன்னன் நளனும் தூதுவன் மூலம் சுயம் வரச் செய்தியறிந்து தமயந்தி வாழும் குண்டினபுரத்தை அடைந் தான்.

சுயம்வரத்தைக் குறித்து அறிவித்து முரசு முழங்கிக் கொண் டிருந்த ஏழு நாட்களும் கழிந்தபின், மன்னர்கள் மாலையசைய, முடிகள் ஒளிவீச சுயம்வர மண்டபத்தில் வந்து கூடினார்கள். இந்திரன் முதலிய தேவர்களும் தமயந்தி சுயம்வரத்திற்கு வந்த னர். தமயந்தியும் சுயம்வர மண்டபத்தில் அமைக்கப்பட்ட பந்தலிட்த்தே வந்தாள். தோழி ஒருத்தி தமயந்திக்கு அரசர் களைக் குறிப்பிட்டுக் காட்டுகிறாள்.

தமயந்தியே! இவன் நீர்வளம் மிக்க சோழநாட்டிற்குரிய சோழ மன்னன்; இங்கு வீற்றிருப்பவன் பொன்மலையைச் செண் டால் அடித்து நிலை கலங்கச் செய்த பாண்டிய மன்னன்; இங்கு நிற்பவன் குன்றருவி பாயும் குடநாடன்; இவன் பாரதப்போர் வென்றவனான யதுகுல வேந்தன்; இவன் மருதநிலம் சூழ்ந்த குருநாட்டு மன்னன்; இவன் மத்திர நாட்டு மன்னன்; இவன் மச்ச நாட்டு மன்னன்; என்று ஒவ்வொரு நாட்டு மன்னனையும் சேடி தமயந்திக்கு அறிமுகப்படுத்துகின்றாள்.

மணமகள் தமயந்தியானவள், தன்தோழி சுயம்வரத்திற்கு வந்திருந்த அரசர்களை எல்லாம் இன்னார் இன்னார் எனக் காட்டத் தெரிந்துகொண்டு, பின்னர் அங்கு நளன் வடிவு கொண்டு வந்திருந்த இந்திரன் முதலிய தேவர்கள் நால்வரையும் இன்னின்னார் எனத்தெரியாமல் மனந்தடுமாறுகின்றாள். எனவே தெய்வத்தின் அருள் வேண்டுகின்றாள்.

> ‘மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்
> கன்னியான் ஆகிற் கடிமாலை—அன்னந்தான்
> சொன்னவனைச் சூட்ட அருளென்றாள் சூழ்விதியின்
> மன்னவனைத் தன்மனத்தே கொண்டு. (152)

இறையருளால் தமயந்தி, கண்கள் இமைத்தலாலும், நிலத்தில் படிதலாலும், அணிந்த மலர்மாலை வாடுதலாலும் ஆராய்ந்தறிந்து நளன் யார் என்பதை அறிந்துகொண்டாள். உடனே தமயந்தி நளமன்னனுக்கு மணமாலை சூட்டுகின்றாள்.

விண்ணரசர் எல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலம் களிகூர மண்ணரசர்
வன்மாலை தன்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன்.'' (154)

நளமன்னன் இளம்பசுவுடன் செல்லும் ஆனேறு போல் பெருமித நடையுடன் மகிழ்ச்சியோடு சுயம்வர மண்டபத்தினின்றும், புறப்பட்டுச் சென்றான். கதிர்களையுடைய ஞாயிறும் விதர்ப்ப நாட்டு வீமனுடைய செல்வ மகளாகிய தமயந்தியின் மங்கலநாள் காண வருவான்போல் நளமன்னனுக்கும் வஞ்சிக்கொடி போன்ற தமயந்திக்கும் உள்ளன்புடைய மனத்தில் காதல் தீத்தணிய தேர்ஏறிப் புறப்பட்டான்.

ஆடவர் 'தம் உயிரை ஒத்தது இவள் தன் புன்னகை ஒன்றே' என்று போற்றுகின்ற தமயந்திக்கு வண்ணமகளிர் மெல்லிய மலர் மாலை அணிவித்து, ஒளிவிடுகின்ற பல்வகை அணிகளையும் அணிவித்தார்கள். பின்னர் கணிதநூல் வல்லுநர் குறித்த நன்னாளில் அழகிய பேச்சினாளாகிய தமயந்திக்கும் பெருமை பொருந்திய நளமன்னனுக்கும் சிறப்புமிக்க திருமணம் செய்வித்தார்கள்.

'கணிமொழிந்த நாளில் கடிமணமும் செய்தார்
அணிமொழிக்கும் அண்ணல் அவற்கும்.'' (165)

---

'இல்லாள் அகத்திருக்க இல்லாதது ஒன்றில்லை''—
வாக்குண்டாம்.

# பிற்காலத் தமிழர் திருமண முறைகள்

கி.பி. 14ஆம் நூற்றாண்டிற்கும் கி. பி. 19ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலமே பிற்காலம் என்ற பகுதியிலடக்கி இங்குக் கூறப்படுகிறது. இக்காலப் பகுதியில் அரிச்சந்திர புராணம், திருவிளையாடற்புராணம், சீறாப்புராணம், பேரூர்ப் புராணம் பாரதிதாசன் கவிதைகள், பழமொழி, சுவடி ஆகியவற்றில் காணப்படும் திருமணவினை குறித்த செய்திகள் இடம் பெறுகின்றன. இடைக்காலத்து இதுவரை கண்ட திருமண முறைகளே பிற்கால இலக்கியங்களிலும் பயின்றுள. எனினும் பிற்கால இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள திருமணங்களிலெல்லாம் தாலி அணிவித்தலுக்கு முக்கிய இடம் கொடுத்துள்ளதைக் காணலாம்.

## பரஞ்சோதி திருவிளையாடல்

பதினாறாம் நூற்றாண்டில் பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தில் சிவபெருமானுக்கும் தடாதகைப் பிராட்டியாருக்கும் நடந்த திருமணம் பல பாடல்களில் விரிவாகத் 'திருமணப் படலம்' என்ற தலைப்பிலமைத்துப் பாடியுள்ளார். அத்திருமணத்தில் குறிக்கப்படும் முக்கிய நிகழ்ச்சிகளாவன :

சிவபெருமானின் பாதத்தில் தடாதகைப் பிராட்டியின் தமையனாரான திருமால் பூசை செய்தல், பிரமன் வேள்விச் சடங்கு செய்தல், சிவபெருமான் கையில் பிராட்டியின் கையை வைத்துத் திருமால் கரக நீர் பெய்தல்; மங்கலம் பாடுதல் ; மங்கல நாண் அணிவித்தல் பொரியிடல் ; தீவலம் வருதல் ; அம்மி மிதித்தல் ; அருந்ததி காட்டல் போன்றவையாகும்.

திருமணத்தில் திருநாண் பூட்டும் மரபை இந்நூல் ஆசிரியர் இக்காண்டத்தில் சிறப்பாக இரண்டு திருமணத்தில் பேசுகிறார்

**தடாதகைப் பிராட்டியின் திருமணம் :**

உலகங்களை எல்லாம் ஈன்ற தாயாகிய உமாதேவியார் மதுரையம்பதியில் இளங்கன்னியாக இருந்து மனுநூல் வழிதவறாது தனி அரசு புரிந்து வருங் காலத்திலே திருமணம் செய்யும் பருவம் வந்து எய்தியது.

திக்குவிசயத்தின் பொருட்டுத் தடாதகைப் பிராட்டியார் கயிலைமலையினைக் சென்றடைகிறார். அங்கு இறைவனை நேரே கண்டருளினார். போரிடச் சென்ற அன்னை ஐயனைக் கண்டு நாணி நின்றார். அப்பொழுது இறைவன் அருள் கூர்ந்து 'நான்மறை உரைத்தவாறு உன்னை வருகின்ற சோமவாரத் தன்று நல்ல முகூர்த்தம் கூடிய பொழுதிலே திருமணம் புரிய வருவோம் நீ உன் நகராகிய மதுரைக்குச் செல்வாயாக' என்றருளினார்.

''தொன்று தொட்ட நான் மறையுரை
வழிவரு சோமவா ரத்தோரை
நன்று தொட்டநாள் மணஞ்செய
வருதும்.'' (644)

இச்செய்தி அறிந்ததும் அமைச்சர்கள் திருமணவோலை எழுதி எல்லா நாடுகளுக்கும் விடுத்து, மதுரை மா நகர முழுவதும் மணமுரசினை யானைபின் மேலேற்றி சாற்றுவித்தார். திருமண முரசொலி கேட்டதும் மதுரை நகர மக்கள் தங்களையும் ஒப்பனை செய்து கொண்டு, நகர் முழுமையும். ஒவ்வொரு மனையையும் அலங்கரிக்கின்றனர். திருமண மண்டபத்தை அலங்காரம் செய்கின்றர். இவை எல்லாம் மிக விரிவாக ஆசிரியரால் வருணிக்கப்பட்டுள்ளன.

**திருமண வேள்வி செய்மிடம் :**

வேள்விச் சாலைகளையும், வேதிகைகளையும், ஓமகுண்டங்களையுல் அவ்வவற்றின் வரம்புகளோடு வேதாகமே விதிப்படி அமைத்துக் கண்ணாடி, இடபம், விளக்கு, திருமகன் வடிவாகிய பாவை, சாமரம், வலம்புரிச் சங்கு, மண்டப வடிவப்பொருள், நிறைகுடம் என்னும் அட்டமங்கலப் பொருள்களையும் இயந்திர வகையினால் அமைத்தனர். சந்தனத்தோடு குங்குமப்பூவையும், கத்தூரியையும் பனிநீரில் கரைத்துத் தரையை மெழுகினர். வரிசையாக விளக்கேற்றி வைத்தனர். நவமணிகள் பதித்த

கம்பளங்களை மேலே விரித்துக்கட்டினர். திருமண மண்டபத்தின் முன் தேவர் சிவனடியார் போன்றார் அமருவதற்கான ஆசனங்கள் இடப்பட்டன. திருமணம் காணவந்த பல்வேறு நாட்டு அரசர்களும் (673, 674) குறிக்கப் பெற்றுள்ளனர்.

### பொற்பீடம்

திருமண மண்டபத்தின் நடுவில் கற்பகத்தரு அளித்த வயிரத்தால் செய்யப் பெற்ற சிங்கத்தின் பிடரியிலே பொற்பலகையை அமைத்தனர். அதன் மேல் பவளத்தாலும், பளிங்கினாலும், சிற்பநூல் முறைப்படி விமானம் அமைத்தனர். அதன் உள்ளிடத்தே வேதாங்கம் ஆறுமே கால்களாகவும், பிரணவம் அழகிய பொற்பீடமாகவும், நான்கு வேதங்களே முத்தினால் தொடுத்த வடங்களாகவும் வடிவங்கொண்டு தங்கினாற் போல, நாயகனாகிய சோமசுந்தரக் கடவுள் தடாதகைப் பிராட்டியாரோடு வீற்றிருப்பதற்கு நவமணிகள் பதித்த பொற்றவிசு ஒன்றை அமைத்தனர்.

### சிவபெருமான் திருமணக் கோலங்கொள்ளல் :

தேவர்கள் முதலிய யாவரும் இன்னியம் ஒலிக்கக் கயிலை மலை வந்தடைகின்றனர். பிறகு சிவபெருமான் திருமணக் கோலம் கொள்ளும் பொருட்டு ஒரு மண்டபத்திற்குள் செல்ல, அளகைப் பதியின் தலைவனாகிய குபேரன் தனது தவத்திற்குப் பயன்கிட்டியது போல் மெய்யன்போடு அம்மண்டபத்திற்குச் சென்று யாவரும் தீண்டுதற்கரிய மேனியைத் தீண்டித் திருமணக் கோலஞ் செய்தான்.

> "தீண்ட அருந்திரு மேனியைத்
> தன்கையால் தீண்டிமங் கலஞ்செய்தான்." (695)

அழகிய ஆடையை முன்புறத்தில் கொய்சமாகவும், பின்புறத்தில் கோவணமாகவும், சாத்தி, அதன் மேல் இரட்டை அரைஞாணைப் பட்டிகையோடு இறுக்கினான். சிகையைக் கொண்டையாகப் புனைந்தான். திருவெண்ணீறு அணிந்த மேனியில் சந்தனத்தோடு கத்தூரியும் பனிநீரும் கலந்து பூசினான். திருச்செவிகளில் பொற்றோடும் குண்டலமும் அணிவித்து, கரிய திருமிடற்றில் வயிரக் கண்டிகையை அணிவித்தான். திருமார்பில் முத்து, மாணிக்க மாலைகளைத் தரித்து அழகு செய்தான். நான்கு திருத்தோள்களில் அங்கதம் பட்டிகைகளைத் தரித்தான். யானைத் தோலை அகற்றி அழகிய மேலாடையைச் சாத்தினான்.

மந்திர வடிவான பவித்திரத்தை (மோதிரம்) விரலில் அணி வித்து, உடுத்த சோவணம் மேல் அழகிய பொன்னாடை அணிந்து, அதன் மேல் ஐந்து தலைப்பாம்பு தொங்குவது போல ஒளிவீசும் மாணிக்கத்தலை கொடுக்கு இருபுறமும் தொங்க விட்டான். மலர்மாலைகளைத் திருத்தோள்களில் சாத்தினான், திருவடிகளில் சிலம்பையும் வீரக்கழலையும் சேர்த்துக் கட்டி னான். இவ்வாறு பெருநிதித் தலைவனாகிய குபேரன் சிவபெரு மானுக்குத் திருமணக்கோலஞ் செய்து அருந்தவப்பயனை அடைந்தான்.

அடுத்த பன்னிருபாடல்களில் திருமணக் கோலங்கொண்ட சிவபிரான், வலப்பக்கத்தில் நான்முகனும், இடப்பக்கத்தில் திருமாலும் துதித்துச் சூழவர மதுரை மாநகர் எழுந்தருளிய திறங்கூறப்படுகிறது மணமகனாக வந்தருளிய இறைவனைக் கண்டவர்கள்

''நங்கை என் நோற்றாள் கொல்லோ
நம்பியைத் திளைத்தற்கு? என்பார்
மங்கையை மணப்பான் என்றோ
வள்ளலும் தோற்றான்? என்பார்;
அங்கடி மதுரை என்றோ
ஆற்றிய தவம்தான் என்பார்;
இவர்இங்கு வதுவை காண்பான்
என்னநாம் நோற்றோம்? என்பார். (719)

அப்பொழுது மங்கல மகளிரோடு காஞ்சனமாலை வந்து இறைவனின் திருவடித் தாமரைகளை கங்கைநீர் கொண்டு விளக்கி, அந்நீரைத் தன்தலையிலே தெளித்து, உள்ளும் பருகி னாள். பின்னர்

அருமையால் அடியேன் பெற்ற
அணங்கினை வதுவை செய்து, இத்
திருநகர்த் திருவும், கன்னித்
தேயமும் கைக்கொண்டு ஆள்க! என்று
உரை செய்தாள்: அதற்கு நேர்வார்
உள் நகை உடையார் ஆகி
மருகனார் இயங்கள் ஆர்ப்ப
வதுவைமண்டபத்தைச் சேர்ந்தார். (749)

இதைப் போலவே அடுத்து வரும் பதினொரு பாடல்களில் தடாதகைப் பிராட்டியார் கொண்ட திருமணக்கோலம்

வருணிக்கப் பட்டுள்ளது. திருமகளும் கலைமகளும் பிராட்டிக்கு ஒப்பனை செய்கின்றனர்.

பிறகு திருமணத்திற்குரிய நல்ல முகூர்த்தம் வர, கலைமகளும், அலைமகளும் பிராட்டியாருக்கு மங்கல வாழ்த்துப்பாடி இருபக்கமும் வந்து தங்களுடைய கைகளை நீட்ட அவற்றைப் பிராட்டியாரும் முப்பத்திரண்டு அறங்களும் குடிகொண்டுள்ள தம் திருக்கரங்களால் பற்றிக் கொண்டு வேதங்கள் ஒலிக்க எழுந்தருளினார்.
அப்பொழுது,

> "அறைந்தன தூரியம்: ஆர்த்தன சங்கம்;
> நிறைந்தன வானவர் நீள்மலர் மாரி;
> எறிந்தன சாமரை; ஏந்திழை யார்வாய்ச்
> சிறந்தன மங்கல வாழ்த்துஎழு செல்வம் (765)

இந்திரன் தேவி அம்பொன் அடைப்பை எடுத்தனள்; திலோத்தமை ஆடி பிடித்தனள்; விந்தை (துர்க்கை) பொற்கோல் கொண்டு சூழ்ந்த நெருக்கினை விலக்கி நடந்தனள்; அரம்பை காளாஞ்சியை ஏந்தினள்; ஊர்வசி ஆலவட்டம் வீசினள் மேனகை பூந்தட்டை ஏந்தினள், சிலர் பனிநீருடன் சந்தனத்தையும் மெல்லிய மலரையும் இட்ட நடைப்பாவடையின்மீது பிராட்டியார் பாடகமணிந்த மென்மையான திருவடிகளை வைத்து நடந்து வந்தார்.

"திருமகளையும், கலைமகளையும் அம்மையாரின் கைகள்பற்றிக் கொண்டன. ஆதலின் செல்வம், கல்வி ஆகிய இரண்டையும் ஒரு சேரப் பெற விரும்புவோர்க்கு இதுவே சமயம்," என்று கூறுவது போல மணிகள் பதித்த நூபுரங்கள் ஒலித்தன. இவ்வாறு பிராட்டியார் மெல்ல ஒதுங்கித் தம்மேல் அன்பு நிறைந்திருந்த சிவபெருமான் பக்கலிற் சென்று அமர்ந்தருளினார்.

மணிகள பதித்த தவிசின் மேல் சிவபெருமானொடு பிராட்டியார் வீற்றிருந்த காட்சி,

> "பண்ணுமின் னிசையும் நீருந் தண்மையும் பாலும் பாலில்
> நண்ணுமின் சுவையும் பூவும் நாற்றமும் மணியும் அங்கேழ்
> வண்ணமும் வேறுவேறு வடிவுகொண் டிருந்தால் ஒத்தது;
> அண்ணலும் உலகம்ஈன்ற அம்மையும் இருந்தது அம்மா"
> (773)

## திருமணச் சடங்குகள்

வானுலகத்தில் உள்ளவர்களும், எட்டு திசையில் உள்ளவர்களும், பிற இடங்களிலுள்ளவர்களும்; நிலவுலகத்திலுள்ளவர்களும், மற்றையொரும் திருமண மண்டபத்திற்கு வந்து தம்முள் வேறுபாடின்றி ஒரு சேரக்குழுமியிருந்தனர்.

அப்பொழுது திருமால் பொற்கலசத்திலுள்ள நீரினால் சிவபெருமானுடைய சிவந்த திருவடிகளை விளக்கினார். மணங் கமழும் சந்தனம் பூசி, மலர் தூவி, தூபதீபங்கள் காட்டி அருச்சனை செய்து திருவருளைப் பெற்றார்.

## தாரை வார்த்தல்

பிறகு திருமால் தாமரை மலரில் ஒரு காந்தள் மலர் மலர்ந்ததைப் போலச் சிவபெருமானுடைய திருக்கரத்திலே தடாதகைப் பிராட்டியாரின் திருக்கரத்தை வைத்து வேத மந்திரங்கூறி, கரகத்திலுள்ள நீரைத் தாரை வார்த்தார். தேவர்கள் அப்பொழுது மலர்மாரி பொழிந்தனர்,

''அத்தலை நின்ற மாயோன், ஆதிசெங் கரத்து நங்கை
கைத்தலம் கமலப் போது பூத்ததோர் காந்தள் ஒப்ப
வைத்து, அருமனுவாய் ஓத கரகநீர் மாரிபெய்தான்
தொத்தவர் கண்ணி விண்ணோர் தொழுது பூ மாரி
பெய்தார்.'' (777)

தேவர்களும், முனிவர்களும், மற்றையரும் ஆசிகூறிக் குங்கும நீரில் கலந்த முத்துப்போன்ற அரிசியை வீசி இன்பவெள்ளத்தில் ஆழ்ந்தனர்.

''முனிவர் ஆனோர்
சுத்தநா ஆசிகூற, குங்குமத் தோயம் தோய்ந்த
முத்தவால் அரிசிவீசி மூழ்கினார் போக வெள்ளம்.'' (779)

பிறகு காமதேனுவின் இனிய பால், வாழைப்பழம், நெய், சருக்கரை கலந்த, நாவிற்குப் பொருந்திய சுவை தரக் கூடிய நல்ல இனிய அடிசிலை செம்பொன்னாலான மணிகள் பதித்த தட்டிலே வைத்து சிவபெருமானைத் ''திருக்கைத் தொட்டருளுக'' என வேண்டினர். முனிவர்களின் மனைவியரும் திருமகளும் கலைமகளும் சேர்ந்து மங்கலம் பாடினர்.

**மங்கல நாண் சூட்டல்**

பிரமன் தன்னுடைய புதல்வர்களோடு ஒருங்கே இருந்து துடுவையால் நறுமணங் கமழும் நெய்யை நிரப்பித் தீயினில் வார்த்தான். செந்தீயும் தன் ஏழு நாக்குகளில் நடுநாவால் சுவையறிய நிரம்ப நெய்யை உண்டு வலஞ்சுழித்து மேலெழுந்தோங்கியது.

''மாக்கடி முளரிவாணன் மைந்தரோடி ஒருங்கு வைகி
நாக்களின் நடுநா ஆரத் துடுவையால் நறுநெய் ஆர்த்தி
வாக்கிட, ஆரமாந்தி, வலஞ்சுழித்து அகடு வீங்கித்
தேக்கிடும் ஒலியின் ஆர்த்து, நிமிர்ந்தது தெய்வச் செந்தீ,
(7 8 3)

நாக்கு பக்கங்களினும் நான்கு வேதங்களும் முழங்கின. சங்குகளும் முரசங்களும் ஒலித்தன. பிரமன் திருமணச் சடங்குகளை வேத சிவாகம முறைப்படி குறைவின்றிச் செய்து முடிக்க பரம யோகியாகிய சிவபெருமான் தடாதகைப் பிராட்டியாருக்குத் திருமங்கல நாணைப்பூட்டி திருக்கரம் பற்றியருளினார்.

''சுற்றும்நான் மறைகள் ஆர்ப்ப,
தூரியம் சங்கம் ஏங்க,
கற்றநான் முகத்தோன் வேள்விச்
சடங்குநூல் கரைந்த ஆற்றால்,
முற்றமங் கலநாண் சாத்தி,
முழுதுலகு ஈன்றாள் செங்கை
பற்றினன், பற்றி லார்க்கே
வீடுஅருள் பரம யோகி. (7 8 4)

தீக்கடவுளும் தானே, எரிவளர்ப்பவனும் தானே, அவி உணவு கொள்பவனும் தானே ஆகிய சிவபெருமான் ஒருவனே உயிர்கள் போகத்தில் மூழ்கும் வண்ணம் ஆணும் பெண்ணுமாகித்திருமணச் செயலை முடித்தருளினர். அவருடைய செயலை அறியவல்லார் யார்?

... ... ... ... ''வையம்
புணர்வுறு போகம் மூழ் கப்
புருடனும் பெண்ணும் ஆகி
மணவினை முடித்தான் ;அன்னான்
புணர்ப்பையார் மதிக்க வல்லார்,'' (784)

பொரியிடல்

பின்னர் சிவபிரான், பிராட்டியாரோடும் திருக்கரத்திலே நெற்பொரியை வாங்கிச் செந்தீன் நாவில் ஓமஞ் செய்து, வேதங்களை உணர்ந்த முனிவர்களுக்குத் தக்க தானங்களை மகிழ்வுடன் கொடுத்துத் தீயினை முறைப்படி வலம் வந்தனர்.

"பின்புதன் பன்னி யோடு
    பிறைமுடிப் பெருமான் கையில்
நன்பொரி வாங்கி, செந்தீ
    நாமடுத்து, எனைத்தும் ஆன
தன்படிவு உணர்ந்த வேத
    முனிவர்க்குத் தக்க தானம்
இன்பகம் தளும்ப நல்கி.
    எரிவலம் முறையால் வந்து. (786)

அருந்ததி காட்டல்

தீயினை முறைப்படி வலம் வந்த பிறகு அம்மையாரது திருவடித் தாமரை மலரை திருக்கையால் பற்றி மந்திரத்தோடு அம்மியின் மேல் வைத்து, புண்ணிய வடிவாகிய வசிட்டன் மனைவி அருந்ததி எங்கே என்ன, அவ்வருந்ததி கைகளைக் கூப்பி எதிரே வர அவள் மீது அருட்பார்வையை வைத்தருளினார்.

பின்னர் விதிமுறை சிறிதும் தவறாது திருமணச்சடங்குகளை எல்லாம் நிறைவேற்றிக் கொண்டு உலகம் உய்யும் வண்ணம் மறைகள் முழங்க, மகளிர் வாழ்த்துக் கூறக் காமனைக் காய்ந்த கடவுளை பிராட்டியாரோடும் திருமண அறையில் புகுந்தருளினார்.

மதிநுதல் மங்கை யோடு மணவறை தன்னில் புக்கான். (788)

பரஞ்சோதியாரின் திருவிளையாடற்புராணத்தில் மதுரைக் காண்டத்தில் உக்கிரகுமாரருக்கும் காந்திமதிக்கும் நடைபெற்ற திருமண நிகழ்ச்சியும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இப்பகுதியில் தாரை வார்த்தாலும்; மணமகனுக்குக் கொடுக்கப்பட்ட சீதனங்களும் மிக விரிவாகவும் தெளிவாகவும் கூறப்பட்டுள்ளன. அவற்றை ஈண்டு காண்போம்.

தாரை வார்த்தல்

திருமண மண்டபத்தில், தடாதகைப்பிராட்டியாரின் மகனாக அவதரித்த உக்கிரகுமாரர் வந்து அமர்ந்தார். அப்பொழுது மணப்

பெண்ணாகிய காந்திமதியினை நறுமணம் கமழும் நீரினால் ஆட்டிப் பொன்னாடை தரித்து, அரிய ஆபரணங்களைப் பூட்டி. நம்பியின் வலது புறத்தில் அழகு பெற அமரச்செய்தனர். மண மகளின் தந்தை சோமசேகரன் தன் மனைவியுடன் எழுந்து வந்து நறுநீராலே உக்கிரகுமாரரின் திருவடிகளை விளக்கி, மணங்கமழும் மலர்களைச் சூட்டிப் பாலும் பழமும் ஊட்டிக் காந்திமதியின் கையினைப் பிடித்து உக்கிரகுமாரர் கையில் வைத்துத் தேவர்கள் அறிய வேத மந்திரங்களைக் கூறி, "சூரிய குலத்தைச் சேர்ந்த சோமசேகரனாகிய நான், திங்கள் குலத்தை விளக்கும்படி வந்தருளிய சுந்தரபாண்டியரின் திருப்புதல்வரும் உலகாளுபவருமாகிய உக்கிரகுமார பாண்டியருக்கு என்னுடைய புதல்வியாகிய காந்திமதியை இப்பொழுது மனமுவந்து கொடுத்தேன்" என்று தாரை வார்த்துக் கொடுத்தான்.

"இரவிதன் மருமான் சோம சேகரன் என்பேர் திங்கள்
மரபினை விளக்க வந்த சுந்தர மாறன் மைந்தன்
உரவுநீர் ஞாலந் தாங்கும் உக்கிர வருமற் கின்றென்
குரவலர்க் கோதை மாதைக் கொடுத்தனன் எனநீர்
வார்த்தான்" (1014)

இப்பாடலில் பரஞ்சோதியார் மணமக்கள் குலம், பெற்றவர் பெயர், மணமகன் பெயர் ஆகியவற்றைத் தெளிவாகக் கூறி, இன்று நல்ல வேளையில் என் மகளைக் கொடுத்தேன் என்று கூறி நீர் வார்த்துக் கன்னிகா தானம் செய்வதாகக் கூறியுள்ளார்.

**சீதனம்**

மன்னன் சோமசேகரன் தன் மகளை உக்கிர குமாரற்குக் கொடுத்ததோடு தன்பெண்ணுக்கு வரிசையாகபல அரிய பொருட்களை உடன் வழங்குகின்றான். அவையாவன;—முத்துவடம் கட்டிய வயிரத்தால் செய்யப்பட்ட ஊஞ்சல் ஐந்தும்: அன்னத் தூவி பெய்த மெல்லிய ஆடையால் செய்த அணை பத்தும்; பாவை விளக்கு எட்டும், உணவு சமைக்கும் பொற்கலங்கள் நூறும் மணிகள் பதித்த களாஞ்சிகள் ஏழும், பொற்காம்புகளையுடைய சாமரைகள் எட்டும் : பசும்பொற் கிண்ணங்கள் சூழ்ந்து விளங்க நடுவே பொற்காலுடன் கூடிய மாணிக்கப் பாத்திரங்கள் நூறும் முத்தாபரணங்கள் வைக்கும் பேழைகள் முந்நூறும், ஆயிரம் பொன் விலையுடைய மெல்லிய வெண்மையான துகில் அரிய பட்டாடை ஆகிய இவற்றை வைக்க தனித்தனி பேழைகள்

முந்நூறும், சித்திரப் பாவையை ஒத்தவர்களாகிய ஏவல் செய்யும் சேடியர் எழுநூற்றைவரும், விளைநிலங்கள் நிறைந்த பெரிய ஊர்கள் மூன்றும், செம்பொன் இரண்டு கோடியும், பிற பொருள் கள் எண்ணிலாத அளவுமாக சோமசேகரன்

''அரும் பெறன் மகட்குச் செல்வ
வளமுற வரிசை யாக வழங்கினான்''

என்று அருமை தோன்றப் பாடியுள்ளார் பரஞ்சோதியார்.

## அரிச்சந்திர புராணம்

அரிச்சந்திர புராணம் நெல்லூர் வீரனென்னும் ஆசுகவிராசர் அவர்களால் பாடப்பெற்றது. இந்நூல் 16-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது இதில் கோசல நாடனாகிய அரிச்சந்திரன் என்ற மன்ன னுக்கும், கன்னோசி நாட்டு மன்னன் சந்திரதயன் என்பானின் மகள் சந்திரமதி என்பாளுக்கும் நடைபெற்ற திருமண நிகழ்ச்சி யை விவரிப்பது விவாக காண்டம் என்னும் பகுதி. இதில் இடம் பெறும் திருமணம் சுயவரத் திருமணமாகும்.

சந்திரதயன் தன்னுடைய மகள் தலைவனைத் தேர்ந்தெடுத் துக்கொள்ளும் விழா இன்ன கிழமையில் நிகழப் போகிறதென்று எல்லா நாட்டு மன்னர்களுக்கும் செய்தி அனுப்பினான். செய்தி அறிந்த மன்னர்கள் பொங்கி எழுந்த கடல் சூழ்ந்ததைப் போலக் கன்னோசி நாட்டிலே வந்து திரண்டனர்.

சந்திரதயன், அரிச்சந்திரனையும், மற்றைய அரசர்களையும் பார்த்து, அரசர்களே! நீங்கள் அனைவரும் என்னைமதித்து, என் னுடை மகளின் திருமணத்தின் பொருட்டு இங்கு வந்தது பற்றி மகிழ்ச்சியடைகிறேன். ஆயினும் என்னுடைய மகளை என்னு டைய விருப்பம் போல் உங்களில் ஒருவருக்குத் திருமணஞ் செய்து கொடுக்க முடியாது. சிவபெருமான் கட்டளைப்படி என் மகளி டத்துள்ள ஒரு மறைபொருளை கண்ணாற் கண்டு பிடித்து வெளிப்படுத்துவோர்க்கே நான் அவளைத் திருமணஞ் செய்து கொடுத்தல் இயலும் என்றான்.

### அனைவரும் திருமணப்பந்தலுக்கு வருதல்

சந்திரதயன் தன் மகள் சுயம்வரம் நடைபெறுவதற்கென்று குறிப்பிட்ட நன்னாள் வந்து கூடியது அனைவரும் பந்தலுக்குள்ளே

வந்து கூடினார்கள். பெடையன்னம் போலும் நடையை உடையவளாய், திருமகளைப் போன்ற அழகுடையவளுமாகிய சந்திரமதி திருமணப் பந்தலுக்கு வந்ததைக் கண்டு தூதர்கள் அச்செய்தியைத் திருமணத்திற்கு வந்திருந்த அரசர்களிடம் சென்று கூறினார்கள். செய்தியைக் கேட்ட அரசர்கள் கடல் பொங்கி எழுந்தாற்போல் திருமணப்பந்தலுக்கு வருவதற்காகப் புறப்பட்டார்கள். அப்பொழுது வீரமுரசங்களும், எக்காளங் களும், பேரிகைகளும் சங்குகளும் மற்றுமுள்ள ஒலிக்கருவிகளும் முழங்கின. சந்திரமதி சூட்டப் போகிற மணமாலையானது எனக்குண்டு எனக்குண்டு என்று நினைத்து வருகிற அரசர்களுக் கெல்லாம் பின்னே அரிசந்திர மகாராசன் வந்தான்.

அறிமுகம்:

அந்தச் சமயத்தில் அழகிய கைகளை நீட்டிக் கரும்பின் சாற்றைப் போலும் இனிய மொழியினையுடைய சந்திரமதியின் தோழிமார்களும் வந்திருக்கின்ற அரசர்கள் பெயரும் நாடுகளும் குல முறைகளும் இன்ன இன்னபடி எடுத்துக் கூறலாயினர்.

சூளாமணியில், நளவெண்பாவில் கூறப்பட்ட சுயம்வரத் திருமணங்களில் எவ்வாறு ஒவ்வொரு மன்னனுடைய சிறப்பியல்பு கள் எடுத்துச் சொல்லப்பட்டு அறிமுகம் செய்து வைக்கப் பட்டனரோ அதைப்போலவே அரிச்சந்திர புராணத்திலும் ஒவ்வொரு மன்னனும் அறிமுகம் செய்து வைக்கப்படுகின்றான். அவ்வாறு பல அரசர்களையுந் தெரிவித்து இறுதியில் அரிச்சந்திர மன்னனை அறிமுகம் செய்து வைத்த அளவில் சந்திரமதி தலை நிமிர்ந்து அரிச்சந்திரனைப் பார்த்தாள். அப்பெழுது அரிச சந்திரனும் சந்திரமதியின் முகத்தை விருப்பத்தோடு பார்த்தான். அவ்வாறு பார்க்கவே சிவந்த கயல் போலுங் கண்களையுடைய அவளுடைய கழுத்தில் திருமங்கலியம் மிகுந்த ஒளியுடன் அவனுக்குத் தோன்றியது.[1] திருமங்கலியத்தைக் கண்டவுடன் அவனுக்கு மிகுந்த வியப்பு உண்டாயிற்று, இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது. இவள் தந்தை இவளுக்கு இரண்டாவது திருமணத் திற்கு ஏற்பாடு செய்துள்ளான். இது இழிசெயல் என்று நினைத் தான்.

---

1. செங்கயற் கண்ணினாள் திருக்கழுத்தினில்
மங்கல நாணுறீஇ வயங்கக் கண்டனன்: 2:236

உடனே அரிச்சந்திரன் சந்திரதய மன்னனைப் பார்த்து கன்னோசி காவலனே! நீர் என்ன காரியம் செய்தீர். இப் பெண்ணினுடைய கழத்திலே திருமாங்கலியம் உள்ளது. முன் னொருவனுக்குத் திருமணமான பெண்ணை மற்றொருவன் திருமணஞ்செய்து கொள்ளும் வழக்கம் சில கீழ்க்குலத்தார் களிடத்தே உண்டு; அவ்வழக்கத்தை மிக உயர்ந்த சத்திரியர் குலத்தில் தோன்றிய நீர் பின்பற்றலாமா? நீர் எவ்வகையான எண்ணத்துடன் இத்திருமணத்திற்கு ஏற்பாடு செய்து எம்போன்ற மன்னர்களை வரவழைத்தீர்கள்? உம்முடைய செயல் எனக்கு விளங்கவில்லை என்று கூறினான்.

**சந்திரதயன் பதில்:**

சந்திரதயன் தான் விரும்பியபடியே அரிச்சந்திரன் திருமாங் கலியத்தைக் கண்டு சொன்னதைப் பற்றியும் அவன் தனக்கு மருமகனாக அமைந்ததைப் பற்றியும் உள்ளத்துக்குள் அடங்கா மகிழ்ச்சி கொண்டான். ஆனால் அதை வெளிக்காட்டாமல் மற்ற அரசர்களைப் பார்த்து, ''அரசர்களே! இந்த அரிச்சந்திர மன்னன் என்னுடைய மகள் கழுத்திலே திருமாங்கலியம் இருப்ப தாகக் கூறுவது நகைப்புக்கு இடமளிக்கிறது. இவர் சொல்வது போல் என்மகள் கழுத்தில் திருமாங்கலியம் இருக்குமானால் அது உங்கட்கும் புலப்படுமன்றோ ஆதலால் நீவிரும் பார்த்து உண்மையைக் கூறுங்கள் எனக்கேட்டான். ஆனால் அவர்கள் கண்களுக்குத் திருமாங்கலியம் இருப்பது தெரியவில்லை. அதனால் அவர்கள் நகைத்து அரிச்சந்திர மன்னனுக்கு ஏதோ மதிமயக்கம் இல்லாவிடில் இவ்வாறு கூறமாட்டான் என்று சொன்னார்கள். ஆனால் சிவபெருமான் திருவருளின் படியே முன்னினும் மிகுந்த விளக்கத்தோடு திருமாங்கலியம் அரிச்சந்திரன் கண்களுக்குப் புலப்பட்டது.

**சந்திரதயன் உற்றது உரைத்தல்:**

சந்திரதயன் எல்லா அரசர்களையும் பார்த்து, 'ஆண்மை மிக்க மன்னர்களே! இந்நிலவுலகத்தை ஆளுகின்ற அரிச்சந்திர மன்னன் என் பெண்ணின் கழுத்திலே தாலியைக் கண்டதற்கும் நீங்கள் காணாததற்கும் ஒரு தேவரகசியம் இருக்கிறது. சிவபெரு மான் எனக்கு வரங்கொடுத்த காலத்திலே எனக்கு மகளாக இச் சந்திரமதியைத் திருமாங்கலியத்துடன் அருள் செய்து, இந்தச் சந்திரமதியுடனே பிறந்த திருமாங்கலியத்தைக் கண்டவனே

இவளுக்குக் கணவனாவான் என்று கூறிய உறுதி மொழி ஒன்று இருக்கின்றது.[1] இறைவன் கொடுத்தசிறப்பினாலே இவள் பிறந்த நாள் முதல் கண்ணாடி நிழலிலே இவளுடைய திருமாங்கலியத்தைக் கண்டிருக்கிறோமேயல்லாமல், மையிட்ட கண்களையுடைய அந்தச் சந்திரமதிக்கும், அவளுடைய கைகளுக்குந் தொட அகப்படமாட்டாது.' என்று கூறினான்,

**சந்திரமதி மாலையிடுதல் :**

சந்திரமதியானவள் தான் முன்னே எண்ணிய அரிச்சந்திரனுடைய பெயரொன்றை அல்லது வேறொன்றையும் தன்னுடைய மனத்திலே எண்ணாதவளாய், இந்த மாலைபோய் அரிச்சந்திரராசனுடைய கழுத்திலே விழக்கடவது என்று எண்ணி மணம் விரிகின்ற மலர்மாலையை விண்ணிலே எறிந்தாள். அவள் எறிந்த மாலையும் அவள் மனமும் அந்த அவையிலே இருக்கின்ற அரசர்கள் பலபேருடைய கண்களும் மாலை பொருந்திய வேலைக் கொண்ட அரிச்சந்திர மன்னனுடைய மார்பிலே கூடி விளங்கலாயின.

'என்றலும் வல்லிமுன் எண்ணிய நாமம்
ஒன்றல துள்ளுற உன்னலள் ஆகிச்
சென்றவன் மார்பிது சேர்கென உன்னா
மன்றலர் மாலையை வானில் எறிந்தாள்
வார்பயில் பூண்முலை மாலையும் நெஞ்சும்
பார்பயில் மன்னவர் பற்பலர் கண்ணும்
தார்பயில் வேலரிச் சந்திரன் என்பான்
மார்பில் அணைந்து மலர்ந்தன மன்னோ.'

**திருமணம் :**

அப்போது அங்குக் குழுமியிருந்த எல்லோரும் மகிழ்ச்சியால் ஆரவாரித்தனர். அதன் பிறகு இசைக் கருவிகள் முழங்க எல்லா வகையான சிறப்புக்களோடும் நல்ல நேரத்திலே அரிச்சந்திரனுக்கும் சந்திரமதிக்கும் மறை முறைப்படி திருமணச்சடங்கு இனிது நிறைவேறியது. திருமணம் நிறைவேறிய பின் ஆடல் பாடல்

---

1. வண்டணி குழலியோ டுதித்த மங்கலங்
கண்டவர் பதிவைத்த என்ற கட்டுரை உண்டு. அரிச். பு. 2 : 242.

விருந்து முதலிய எல்லாச் சிறப்புகளும் நன்கு நடைபெற்றன. இரவிலே மணமக்கள் ஊர்வலம் வந்தனர். பிறகு இருவரும் இன்ப வாழ்க்கையிலே ஈடுபட்டார்கள்.

**சீறாப்புராணம் :**

முகம்மது நபிகள் வரலாறு கூறுவது சீறாப்புராணம். அவர் தம் வரலாற்றைச் செந்தமிழ்ப் பாக்களால் யாத்தவர் முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் தென்பாண்டி நாட்டில் வாழ்ந்த உமறுப் புலவர் என்ற பெருந்தமிழறிஞர். இந்நூலில் நபிகள் நாயகம் அவர்கட்கும் கதீஜாப் பிராட்டியாருக்கும் நடந்த திருமணம் பற்றி விவரிக்கப்பட்டுள்ளது. மணவினைச் சிறப்புகளில் முத்தமிழ் நாட்டின் பண்பாடு முழு இடம் பெறுகின்றது.

முதல் நிகழ்ச்சியாக மணமகள் முகம்மது நபியின் பொருட்டு மகட்பேச மணமகள் தந்தை குவைலிதிடம், இளவல் ஹம்சா செல்கிறார். மாப்பிள்ளையின் சிறப்புகளை எல்லாம் விரித்துரைக்கின்றார். மணமகளின் தந்தை தன் மகள் கதீஜாவை மணம் முடித்துத்தர இசைகின்றார். யானை எருத்தத்து முரசேற்றி பறைசாற்றி, திருமணச் செய்தியைக் கூறுவது தமிழகத்தில்—தமிழ்க்காப்பியங்களில் நிகழ்வது. அரபு நாட்டில் யானைகளில்லை. ஒட்டகம் முரசு சுமந்து வீதி வலம் வருகின்றது. அண்ணலாரின் திருமணம் அறிவிக்கப்படுகின்றது. மேலும் தமிழ் நாட்டில் நடைபெறும் நிச்சயதார்த்தத்தின நிகழ்ச்சியை மக்கமா நகரின் கண் வைத்துக் காட்டுகிறார் உமறுப்புலவர்.

“வெள்ளிலைபாக்கு ஏலம் இலவங்கமுடன்
 தக்கோலம் விரை கற்பூரம்
அள்ளிய சந்தனச் சேறும் பொற்கலத்தில்
 குவைலித் எடுத்தருள வாங்கி
வள்ளியோர்க்கு இனிது ஈந்து மறையோர்க்கும்
 எடுத்தருளி வலக்கை சேர்த்தித்
தெள்ளிய நன்முகூர்த்தம் முதற்றிங்களென
 வகுத்துரைத்தார் செவ்வியோரே.

தமிழ்க் காப்பியங்களில் சிறப்புராணத்தில் உள்ளது போன்று ‘மணம் பொருத்து’படலம் விரிவாக இல்லை. அடுத்த படலம் மணம்புரி படலம் செல்வச் செழிப்புடைய குடும்பத் திருமணம். ஊரை அடைத்துப் பந்தல் போடப்பட்டதெனப் பாடுகிறார்.

உமறுப்புலவர். ''இடன்அறத் திருக்காவணம் நிரைநிரைத்திடு வார்'' என்கிறார். மேலும் பல்லியங்கள் ஆர்த்தும், பன்மணி சூடியதும், பட்டாடை புனைந்ததும், பலவித மணப் பொருள்கள் நறுமணம் பரப்பியதும் நவிலப்படுகின்றன.

மணமகன் நபிகள் நாயகம் மணக்கோலம் பூண்டு, புரவி மீது அமர்ந்து நகர்வலம் புறப்படுங்கால்; ஏழை மக்கட்கு உடையும் பொருளும் கொடுத்துப் புறப்பட்ட விதம் இயம்பப்படுகின்றது.

மணமகன் ஊர்வலம், குவைலித் என்பவர் வீட்டின் முன் அலங்கரித்திருந்த பந்தலைச் சென்றடைகிறது. மணக்கோலம் பூண்ட கதீஜாவை பாங்கியர் அழைத்துச் சென்று மணமகன் அருகில் ஆசனத்தில் அமர்த்தினார்கள். பெண்வீட்டார், மாப் பிள்ளை வீட்டார் ஆகிய இருகிளையினரும் மனம் ஒத்து" ஐந்நூறு வெள்ளி மஹர் என்று சொல்லி ஏற்றுக்கொண்டார்கள். இருவருக்கும் 'நிகாஹ்' என்னும் திருமணத்தை நடத்தி வைத் திடுங்கள் என்று ஹாஷிம் பெருங்குடி மக்கள் கூறவும் அவர் களின் நெறிப்படி சடங்குகளை முடித்தார்கள். உடனே குவைலித் என்பவர் தன் மகளின் அழகிய கரத்தை பெருமானார் நபிகள் அவர்களின் அழகிய கரத்தோடு பொருத்தி 'சூரிய சந்திரன் உள்ள நாள் வரை நீங்கள் வாழ்வீர்களாக!'' என்று கூறி வாழ்த்தினார்.

''முதியவர் உவந்து நீதிமுன் மார்க்க
முறைப்படி சடங்குகள் முடிப்ப
மதிவலன் குவைலிது அகம்மகிழ்ந் தெழுந்து
முகம்மதின் செழுமணிக் கரத்தில்
புதுமதி வதனச் செழுங்கொடிக் கதீஜா
பொன்மலர்க் கரத்தினைச் சேர்த்திக்
கதிர்மதியுளநாள் வாழ்கவென் றிசைத்துக்
கண்களித் தினிதுவாழ்த் தினரே.''

சீறாப்புராணத்தில் வருகின்ற கதிஜாப் பிராட்டியார் திரு மணக்காட்சியைக் கருத்தூன்றி நோக்குவார், இத்திருமணத்தை தமிழ்க் காப்பியத் திருமணமாக மட்டுமன்றி, தமிழ் நிலத் திரு மணத்தை ஒத்திருப்பதாகவும் காணுவர்,

### பேரூர்ப்புராணம் :

பேரூர்ப்புராண நூலாசிரியராகிய கச்சியப்ப முனிவர் சுமார் இருநூற்று முப்பந்தைந்து ஆண்டுகளுக்கு முன் தொண்டை

மண்டலத்தில் தணிகைத் திருப்பதியில் வாழ்ந்தவர். இவர் பாடியருளிய பேரூர்ப் புராணத்தில் 'கௌரி திருமணப் படலம், தெய்வயானை திருமணப் படலம் என்ற இரண்டு படலங்கள் திருமண நிகழ்ச்சிகளை விளக்குவனவாக அமைந்துள்ளன அவற்றில் ஒன்றைச் சான்றாகக் காணலாம். கி.பி. 18ஆம் நூற்றாண்டில் வழக்கிலிருந்த திருமணவினை முறைகளை அறிய இது துணைசெய்யும்.

**தெய்வயானை திருமணம் :**

நீங்காத அருளுடைய சிவபெருமான் மணிமுடி அணிந்த இந்திரனை அழைத்து

'தெரியிழை சுமக்குங் கோலத் தெய்வயானைக்கு மங்கை
உரிமைசெய் வேலினாற்கும் உறுமுறை மன்றல் ஈங்குப்
புரிவதற்கு இயைவ வெல்லாம் புரிகென வருளிச் செய்
தான்''. (17)

உடனே இந்திரன் இன்பத்தைத் தரும் திருமண வோலையை எத்திசைகளுக்கும் அனுப்பினான். தூதுவர்களில் சிறந்தோரை அழைத்து வியக்கத்தக்க திருமணச் செய்தியை மக்கள் யாவரும் அறிந்து மிகவும் வந்துகூடும் நகரத்தை அலங்காரம் செய்யும்படி முரசறையும்படி கட்டளை இட்டான்.

**திருமண மண்டபம்:**

இந்திரன் கட்டளைப்படி தெய்வத்தச்சன் திருமண மண்டபம் அமைத்தான். அடித்தலத்திலே செம்பொன்னை உருக்கி வார்த்து, ஒளிபொருந்திய வைரக் கற்களைப் பதித்து, மேலே ஒளியுடைய மாணிக்கக் கற்களைப் பதித்தான். ஒளிக்கு மேலே காற்று என்று சொல்லும்படி பொருந்திய குறட்டிலே நீல ஒளியை வீசும் இந்திர நீலக்கற்களால் தூண்களை நிறுத்தி, காற்றிற்கு மேல் ஆகாயம் என்னும்படி மேலே பளிங்குக் கற்களால் போதிகைகளைச் செய்து வைத்தான். பவள உத்திரங்களைப் பரப்பி, நிறைந்த குளிர்ச்சியுள்ள முத்துக்களைப் பதித்துள்ள பலகைகளை வைத்தான். சுற்றிலும் மாணிக்கம், பவளம் செம்பொன் இவைகளாற் செய்த மாலைகளைத் துவளும்படியாகக் கட்டினான். நிலப்பரப்பு முழுவதும் இரத்தினக்கம்பலங்களை விரித்தான். மேலே மணிகளால் வேயப்பட்ட மேற்கட்டிகளையும் கட்டினான். பரவியுள்ள எழினிகளையெல்லாம்

பக்கங்களில் பொருந்தப் பண்ணினான். வேள்விக் குண்டங்களோடு, வேதிகை முதலியவற்றைக் குறைவின்றி அமைத்தும் ஆசனங்கள் திருமணங்காண வருவார்க்கு ஆங்காங்கே அமைத்தும் சிவபெருமான் முதலியோருக்கு நிறைந்த சிங்காதனங்களையும் இடந்தோறும் அமைத்து வைத்தான். கமுகு, வாழை, கரும்பு முதலியனவும், பல தோரணங்களும் இடங்கள் தோறும் கட்டினான். பேரழகைத் தரும் பெரிய மண்டபத்தில் புகுவதற்குப் படிக்கட்டுகளை வயிடூரிய மணிகளால் அமைத்தும், விளங்கி ஒளி வீசும் வைரக்கற்களால் நல்லயாளிகளைச் செய்தும் அதன் பக்கத்தில் சிறந்த அழகைச் செய்யும்படி முகப்பிலே பொருந்த வைத்தான்.

### முருகனின் திருமணக் கோலம்

மங்கல முரசு முழங்க ஆகாயகங்கை நீரை முருகனின் திருமேனியில அபிஷேகம் செய்யக் கொணர்ந்தனர். திருமால் முருகனை வணங்கி அருக்கியம், பாத்தியம், ஆசமனம் முதலியவற்றை அமைத்து மணம் பொருந்திய நெய்யைத் தலைமயிரிலே நிறைய வைத்து வேதமந்திரங்களைக் கூறி அபிஷேகம் செய்தற்குரிய திரவியங்களையெல்லாம் மனவொருமையுடன் முறையே அபிஷேகம் பண்ணினான். பின்னர் அழகுக்கு இருப்பிடமான முருகனுக்குத் திருமுடி முதல் திருவடி வரை பல்வேறு விதமான அணிகலன்களால் அழகுபடுத்தினான். சிவந்த துகிலாகிய பட்டின் மேலே செழுமையான பொன்னாடையை ஒளி நிறைந்த அரை ஞாணால் நன்றாக யாத்தான்.

திருமகள் மணமகள் தெயவயானையைத் தனியே அந்தப்புரத்துக்கு அழைத்துச் சென்று முறைப்படி அலங்கரித்தாள்.

> "ஐவளர் மணிப்பொற் பீடத் தணங்கினை இருத்தி வாச
> நெய்வளர் ஒதி வாங்கிச் சீப்பினா னீவி விட்டாள்" (88)

இலக்குமி இவ்வாறெல்லாம் தெய்வயானையம்மையை நெருங்கிச் சிறந்த அலங்காரஞ் செய்து முடித்தாள்.

### திருமணவினை

இந்திரனுடைய குறிப்பை மேற்கொண்டு இந்திராணி தூய தெய்வயானை அம்மையை மணம் நிறைந்த மண்டபத்திற்கு அழைத்துவர நினைந்த அளவிலே அதனையறிந்து அன்புசெழுமிய

பரிசனங்கள் எழுந்தனர். அவர்கள் சென்று கடகம், குழை, தோடு இரத்தினாபரணம் வடகம், துகில், ஏனைய அணிகலன்கள், மலர்மாலை, அமுதம், தேவருலகக் கனிவகைகள் முதலியனவும் வேறு வேறாகப் பூந்தட்டுக்களில் அமைத்து மூடிப் பலப்பல ஆயிரவர் கையிலே கொண்டார்கள். மங்கல வாழ்த்துக்களைப் பாடுகின்றவர்களும், இசைப் பாடலைப் பாடுகின்றவர்களும், எதிராக நின்று ஆடுகின்றவர்களும், மலர்களையும் நீரையும் வாரி வாரி இறைக்கின்றவர்களும் சூழ்ந்துவர அழகிய சிவிகையிலேறிச் சென்று திருமண மண்டபத்தை அடைந்து மணமகள் தெய்வயானை தன் தந்தையாகிய இந்திரன் பக்கத்தில் சென்று நின்றாள்.

**பாதபூசை**

அரிய தவத்தின் பயனைப் பெற்ற தேவேந்திரனின் மனைவியாகிய சசி என்பவள் அன்பினோடு இனிய பாலை வணங்கி வார்க்க, அங்கே வீற்றிருந்த குமரக் கடவுளின் திருவடியை அழகு பொருந்த அபிஷேகம் செய்து அந்த நீரை அமுதம் போல உட்கொண்டு தலையின் மீதும் தெளித்துக் கொண்டான்.

**தாரை வார்த்தல்**

முரன்றன சங்கம் பேரி முழங்கின முரசம் ஆர்த்த
நரன்றன வங்கி யங்க ணரம்பொடு மகிழ்ச்சி வெள்ளம்
வரன்றின திரண்டோர் உள்ளம் அடுத்தொரு மகளைநீரோடு
அரன்தனிக் குமரற் கீந்தான் அருமறை முறைகள் கூறி. (121)

**தீ வலம் வருதல்**

இந்திரனால் வளர்க்கப்பட்ட தெய்வயானையை ஏற்றுப் பின்னர் முருகக் கடவுள், கன்றோடு காமதேனு ஒருசேரச் செல்வதைக் கண்ணுற்று, தெய்வயானையின் வலக்கரத்தைப் பிடித்துக்கொண்டு பொருந்த ஏழடியிட்டுச் சென்று விளங்கும் அழகிய அம்மியை நெருங்கி அதன் மேல் மிக அறுகும் அரிசியும் இட்டனர். பின்பு

மகளிரிடத்து வணக்கத்தைச் செலுத்தி ஆடவர்கள் இன்பத்தை நுகரும் தன்மையும் ஊட்டற்காலத்திலே பொருந்துதலை, அக்கினி சாட்சியாக உலகமுழுவதும் அறிவிக்கும் நீதியை ஒப்புக்கொண்டு தெய்வயானையம்மையின் பாதத்தைச் சிரித்தபடி முருகவேள் பற்றி அம்மியின் மேல் வைத்தருளினர்.

**மங்கலநாண் பூட்டல்**

தந்தையின் வடிவமாகிய அக்கினியை வலமாக வந்து நின்று தெய்வயானை கொடுக்கச் சிறந்த பொரியை வாங்கிச் சொரிந்து. அழகிய பீடத்திலே எழுந்தருளி சுடர்வீசும் திருமங்கிலிய நாணைக் கழுத்திலே அழகு பொருந்தக் கட்டினார். உலக முழுவதும் மகிழ்ந்தன.

''சுந்தர அணையின்' வைகிச் சுடர்ந்தமங் கிலிய நன்னாண்
கந்தரங் கவின யாத்தான். களித்தன உலக மெல்லாம்'' 127

இந்நூலில் பாடப்பட்டுள்ள திருமண முறையும் கந்த புராணத்தில் பாடப்பட்டுள்ள திருமணமுறையும் ஒரேமாதிரியாக இருந்தாலும் இந்த இரண்டு நூல்களுக்கும் ஒரு வேறுபாடு உள்ளது. கந்தபுராணத்தில் தாரை வார்த்துக் கொடுத்தவுடன் தெய்வயானையை ஏற்று மாங்கலியம் அணிவித்த பின்னரே எரிவலம் வருதல் முதலிய சடங்குகள் நடைபெறுகின்றன. ஆனால் திருப்பேரூர்ப் புராணத்தில் இடம்பெறும் கௌரி திரு மணப்படலம், தெய்வயானையம்மை திருமணப்படலம் என்ற இரண்டிலும் திருமாங்கலியம் அணிவித்தலே இறுதிச் சடங்காகக் கூறப்படுகின்றது. இம்மாற்றம் பிற்காலத்தில் தாலி அணி வித்தலுக்குக் கொடுக்கப்படுகின்ற முக்கியத்துவத்தினை உணர்த்து வதாகவும் இருக்கலாம்.

**பாரதிதாசன் கவிதைகள் :**

கவிஞர் பாரதிதாசன் வாழ்ந்த காலம் இது. இவரது கவிதை களினின்றும் ஓர் ஆணும் ஓர் பெண்ணும் இணைந்து இல்லறம் மேற்கொள்ள நடைபெறும் திருமணவினை குறித்து வரும் எண்ணங்களைக் காண்போம். இவற்றில் எத்தகைய திருமண முறை அமைய வேண்டும் என்ற ஆசிரியரின் எண்ணமும் புலப் படுகின்றது.

சங்க காலத் தமிழரிடையே நாம் கண்ட களவு ஒழுக்கம் முன்னும் பின்னர் கற்புநெறி நின்ற இல்லற வாழ்வும் இங்கு பாரதிதாசனாரின் தீந்தமிழக் கவிதைகளின் வாயிலாகக் காண போம்.

'உள்ளத்தில் உள்ளம் கலந்தபின் அங்கே
உடம்புதான் என்செய்யும் வாராமல் இங்கே?

தெள்ளு தமிழன்தோள் நான் பெற்ற பங்கே
திருமணம் எனக்கென்றே ஊதாயோ சங்கே!

பக்தி இலக்கியங்களான திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்களில் மங்கையர் இறைவனை நோக்கி யாம் நின் அன்பர் தோளே சேரவேண்டும் என்று வேண்டுவர். ஆனால் பாரதிதாசன் காட்டும் மங்கையோ தொழிலாளியின் தோளைச் சேர வேண்டுமெனத் துடிக்கின்றாள்.

''தொழிலாளியின் தோளைத்தான் அணைப்பேன் அவன்
தொடத் தொடத்தான் இன்பம் திளைப்பேன்''

பாரதிதாசனார் தற்காலத்தில் நடைபெறும் திருமண வைதிகச் சடங்குகள் எதற்கு? அன்பால் ஒன்றுபட்ட இரு உள்ளங்கள் ஒப்புவதுதான் மணம் ஆகும். இதனை மக்கள் உணர்ந்திலரே என்கிறார்.

உள்ளம் ஒப்புவது மணமாம் - இந்த
உண்மை தன்னையந்த மனிதர்
எள்ளத் தனையும் உணர்ந்திலரே.

தற்காலத்து இளந்தலைமுறையினரில் ஓர் ஆணும் பெண்ணும் எதிர்ப்படுகின்றனர். இருவரும் அன்பு கொள்கின்றனர். திருமணம் செய்ய முடிவு செய்கின்றனர். ஆனால் அவர்கள் சாதி குறிக்கிடுகின்றது பெற்றோர் சம்மதம் தரவில்லை. ஆனால் இருவரும் தொடர்ந்து வாழ முடிவெடுத்து அங்கிருந்து வேற்றூர்க்குச் சென்று விடுகின்றனர். மணம்புரிந்து இன்புற்று வாழ்ந்தார்கள் என்ற கருத்தமைந்த பாடலை அறிவு மணம் என்ற தலைப்பில் ஆசிரியர் பாடியிருப்பது அருமை.

அந்தப் பாடல் பின்வருமாறு:

புதுநிலவு போல்முகத்தாள் நின்றாள் வெளியில்;
மிதிவண்டி மேல்விரைந்து சென்றான் - மதிவாணன்
பார்த்தான், அவள்பார்த்தாள்; பாய்காதல் மின்தாக்க
வேர்த்தாள், அவன் வேர்த்தான் நெஞ்சு!

மறுநாளின் மாலை மதிவாணன் வந்தான்
பிறைநுதலாளும்காணப் பெற்றாள்; - சிறுக

விரித்தான்? விரித்தாள் இதழ்க்கூட்டு; மின்னச்
சிரித்தாள்; சிரித்தான் அச்சேய்!

மூன்றாம் நாள் முத்துநகை நின்றிருந்தாள் முன்போலே
தோன்றாத் துணையானான் தோன்றினான்-ஈன்றாரை
மீறென்றான்' மீறினாள்! மின்னே, மிதிவண்டி
ஏறென்றான் ஏறினாள் பெண்

பெற்றோர் இதுகேட்டார் சற்றும் பிடிக்கவில்லை
அற்றெனவே சாதிமதம் ஆ! என்றோ—சுற்றமுடன்
கட்டைவண்டி ஏறிக்கதறி மிதிவண்டி
தொட்டவழிச் சென்றார் தொடர்ந்து!

சாதிமதக் கட்டை வண்டி தன்னிலே செல்லுகையில்
கோதையும் சேயும் குளத்தூர்ப் போய்—ஓதியே
அன்புற்றார் வாழ்ந்த அறிவுமண முடித்தே
இன்புற்றிருந்தார்கள் நன்கு!

இதே நிலையிலுள்ள மற்றொரு காதல் ஜோடிக்கும் பெற்றோரிடமிருந்து எதிர்ப்பு கிளம்புகிறது. இங்கு தலைவி நயம்பட இனிய சொற்களால் தன் தந்தையிடம் துணிவுடன் பேசுகின்றார், சாதி வேறுபாடு நம்மிடையே கிடையாது. நாம் எல்லோரும் மனிதச் சாதி. நான் தமிழனின் மகள். சாதி சற்றும் என் நினைவில் இல்லை என்கிறாள். தந்தையும் மகளின் கூற்றிலுள்ள உண்மையை உணர்ந்து விட்டுக்கொடுத்து அவர்கள் கலப்புமணத்திற்குச் சம்மதித்து வாழ்த்தும் கூறுகின்றான்.

**கலப்பு மணம் வாழ்க**

எனக்கும் பகைமேல் உனக்குக் காதலா?
என்று மன்றுளாடியார் இயம்பவே,
புதுப்பூ முத்துநகை புகலுகின்றாள்
... ... ... ... ...

மாது நான் அவர்மேல் வைத்த காதலை
எதிர்க்க வேண்டாம்! ஏனெனில் அப்பா
எட்டிய தென்மனம் அந்த இளைஞரை
ஒட்டியது மீட்க ஒண்ணுமோ சொல்லுக
என்று சாற்றினாள்! தந்தை இயம்புவான்
... ... ... ... ... ...

நமது சாதி வேறு; நல்லோய்
அவனது சாதி வேறென் றறிகிலாய
என்று சினத்தைச் சொல்லில் ஏற்றினான்
மங்கை இனிய வகையில் சொல்லுவாள்

அப்பா உண்மையில் அவரும் என்போல்
மனிதச் சாதி, மந்தி அல்லர்
காக்கை அல்லர்; கரும்பாம் பல்லர்
என்று கூறத் தந்தை இயம்புவான்

மனிதரில் சாதி இல்லையா மகளே?
என்று கேட்க - மங்கை இயம்புவாள்

சாதி சற்றும் என் நினைவில் இல்லை
மாது நான் தமிழனின் மகளாத லாலே
என்றாள் செந்தமிழ் இலக்கியப் பைங்கிளி

தந்தை,

மக்கள் நிகர் எனும் தனது
சொந்த நிலையில் தோய்ந்தே
அந்த வண்ணமே வாழ்கஎன் றானே"

எனப் பாடியுள்ளார்.

மற்றொரு பாடலில் காதலன் காதலியிடம்,
கொடியசாதி நாய்குலைக்கு முன்னே
நடந்துவா அன்னமே, விரைந்துவா மானே"

என்று அழைக்கின்றான். ஆனால்,

அழகனும் அன்றிலும் வியக்கும் வண்ணம்
இருவரின் தந்தைமார் எதிரில் வந்தனர்.
இருவரும் திருமண மக்கள் என்றனர்
சாதி புதைந்த மேட்டில்
மாது புதைத்தாள் அழகன் மார்பிலே!

எனப் பாடியுள்ளார்.

சாதி வேற்றுமை பாராது கலப்பு மணத்தை வரவேற்கும் பாரதிதாசனார் 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற கொள்கையை

வற்புறுத்துகிறார். மனைவியிருக்க வேறொருத்தியை மணப்பதைக் கவிஞர் கண்டிக்கிறார். பலதார மணத்தடைச் சட்டத்தைக் கொண்டு வந்த அரசைப் பாராட்டுகின்றார்.

அறுபதி னாயிரம் பெண்டாட்டி—மாரை
அடைந்தானாம் முன்னொரு காமாட்டி—பெண்கள்
குறைபா டெல்லாம் இன்றுதீரச் சட்டந் தீட்டிக்
கொடுத்த அரசுதன்னைக் கும்பிட்டேன் பாராட்டி

என்பது அரசுக்குக் கவிஞர் தரும் பாராட்டு.

**பழமொழியில் திருமணம்**

பழமொழியின் தோற்றமும் வளர்ச்சியும் என்று ஆராயத் தொடங்கினால் அதற்கு விடைகாண்பதரிது என்று எண்ணுகின்றேன். பழமொழி என்பது மொழி, இனம், நாடு போன்ற ஏதாவது ஒன்றன் அடிப்படையில் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் தோன்றியது அன்று. எனவே தமிழ்மக்களிடம், தமிழகத்தின் சில பகுதிகளில் நிலவிவரும் பழமொழிகளில், திருமணம் தொடர்பான பழமொழிகளினின்று அறியப்படும் திருமணச்செய்திகளை இங்குக் காண்போம். பழமொழிகளின் ஆசிரியர், பழமொழிகள் தோன்றிய காலம் ஆகியன குறித்து அறிய இயலாததால் இக் கட்டுரையில் இடம் பெறும் பழமொழிகள் தமிழகத்தில் அன்று தொட்டு இன்றுவரை காலத்திற்கேற்ப எழுந்தவை என்று கொள்வதே பொருத்தமுடையதாகும். மேலும் திருமணத் தொடர்புள்ள பழமொழிகளைப் படிக்கையில் ஆணுக்கும் பெண்ணுக்கும் திருமணம் தேவை என்னும் கருத்து மக்களிடையே நிலவி வந்துள்ளமையை அறியலாம். பழமொழிகளின் மூலம் திருமணத்தின் வகைகள், சம்பிரதாயங்கள் ஆகியவற்றைக் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் நம்மால் அறிய முடிகிறது. திருமணச் சடங்குகள் பற்றிய கருத்துக்கள் இடம் பெறவில்லை எனினும் தமிழர்கள் நடத்திய திருமணங்களுக்கான சில அடிப்படைக் கருத்துக்களைப் பழமொழிகளின் வாயிலாக அறிய முடிகின்றது.

**பெண்ணின் பெருமை**

பெண்களைப் பொறுத்த வரையில் திருமணமில்லாமல் அவர்களுக்கு வாழ்வே இல்லை என்பதுதான் தமிழ்ச் சமுதாயத்தில் நிலவி வந்துள்ள கருத்து. இதனை 'அமைச்சன் இல்லாத அரசும் ஆமுடையான் இல்லாத ஆரிழையும்' என்ற பழமொழியும், ஆடு மிதியாக் கொல்லையும் ஆளன் இல்லாப்

பெண்ணும் வீண் என்ற பழமொழியும் வலியுறுத்தும். மேலும் ஆளன் இல்லா மங்கைக்கு அழகு பாழ். ஆளன் 'இல்லாத பெண்ணுக்கு வாழ்வில்லை' என்ற பழமொழிகள் ஒரு பெண்ணின் அழகும் நலனும் ஒருவனுக்கு உரியதாகும் பொழுதுதான் பெருமையடைகின்றன என்னும் கருத்தைக் கூறுவன.

**மணமகள் தேர்வு :**

ஒரு தாயின் ஒழுக்கம், நேர்மை, பண்பு, தொழில், பழக்க வழக்கம் ஆகியவை அவள் மகளின் திருமணத்திற்கு உதவியாக இருந்தன என்ற எண்ணம் பழமொழிகளைப் படிக்கும் பொழுது நமக்கு ஏற்படும். உதாரணமாக, 'தாயைப் பார்த்துப் பெண்ணை கொள்;' 'தாயைப் போலப் பிள்ளை; நூலைப் போலச் சேலை;' தாயைத் தண்ணீர்க்கரையில் பார்த்தால் மகளை வீட்டில் பார்க்க வேண்டியதில்லை; 'வேரோடி விளாத்திமுளைத்தாலும் தாய்வழி தப்பாது' இவையொத்த பழமொழிகள் பெண்ணின் குணநலனை, உழைப்பை அறிய உதவுகின்றன.

**கோத்திரம் அறிதல் :**

கோத்திரம் பார்த்துப் பெண்ணைக் கொள்; கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடு; கோத்திரத்திலே குரங்கானாலுங் கொள்;' என்பன போன்ற பழமொழிகள் மூலம் தமிழரிடையே குலங்கோத்திரம் அறிந்து திருமணம் நடத்தும் முறை வழக்கில் வந்து விட்டதை உணர்த்துவன 'துழாவிக் காய்ச்சாதது கஞ்சியு மல்ல-வினாவிக் கட்டாதது கலியாணமும் அல்ல என்பது கோத்திரம் முதலிய கேட்டறிந்து திருமணம் செய்ய வேண்டும் என்ற கருத்தைச் சொல்வது.

**மணப்பெண் விரும்பும் மணமகன் :**

சங்க காலத் தமிழரிடையே களவுமணம் சிறப்பாகப் போற்றப்பட்டதை அறிந்தோம். தொடர்ந்து களவு மணம் வழக்கில் இருந்து வந்தமையையும் இலக்கியங்களின் துணைகொண்டு கண்டோம். ஆனால் பழமொழியில் களவுமணம் பற்றிய குறிப்பு எதுவும் காணவில்லை. எனினும் பெண்கள் எத்தகைய கணவரை அடைய விரும்பினர் என்பதைக் குறிக்கும் வகையில் பல பழமொழிகள் காணப்படுகின்றன. சான்றாக, ''கைநிறைந்த பொன்னைப் பார்க்கிலும் கண் நிறைந்த கணவன் மேல்;' 'கிழவனுக்கு வாழ்க்கைப் படுவதிலும் கிணற்றில் விழலாம்.''

'அசத்துக்கு வாழ்க்கைப் பட்டு ஆயிரம் வருடம் வாழ்வதைவிட
சத்துக்கு வாழ்க்கைப்பட்டுச் சட்டென்று தாலியறுப்பதே மேல்

போன்ற பழமொழிகளிலிருந்து பெண்கள் தகுதியும் திறமையும் உள்ளவனையே கண்நிறைந்த கணவனாக மதித்திருப்பார்கள் என்று நினைக்கத்தோன்றுகிறது.

பெண் என்பவள் திருமணம் செய்யாமலே வாழமுடியாது என்னும் கருத்து நிலவுகிற சமுதாயத்தில் திருமணம் ஆகாத பெண்ணுக்கு எந்த மதிப்பும் இருக்க முடியாது. எனவே பெண்கள் தங்கள் எண்ணம் போல் கணவன் கிடைக்காவிட்டாலும், கிடைக்கின்ற ஒருவனை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலையிலும் இருந்தனர் என்பதை, 'கலப்பணத்தைப் பார்க்கிலும் ஒரு கிழப் பிணம் நல்லது; கிழமானாலும் கெட்டானாலும் கட்டிக் கொண்டவள் பிழைப்பாள்' என்ற பழமொழிகள் உணர்த்து கின்றன.

தமிழர் தங்கள் வீட்டில் திருமண வயதுடைய பெண் இருந்தால் அவளுடைய திருமணத்தையே முதலில் முடிப்பர். இதையே 'கன்னி இருக்கக் காளை மணம் ஏறலாமா?' என்பர். பெண்களுக்குத் திருமணம் செய்து வைப்பதில் உள்ள இடர்ப்பாடுகளை உணர்த்தும் வகையில், 'ஒரு வீட்டுச் சம்பந்தம் பொருந்த ஏழு சோடிச் செருப்புத் தேய வேண்டும்,' 'பிள்ளை வீட்டுக்காரர் சம்மதித்தால் பாதி விவாகம் முடிந்தது.' ஆயிரம் பொய் சொல்லி ஒரு கலியாணம் செய்துவை' கடன் வாங்கியாயினும் கல்யாணம் செய்' போன்ற பழமொழிகள் உணர்த்தும்.

**சடங்குகள்**

ஒருவாறு திருமணம் நிச்சயம் செய்து விட்டாலும் அவரவரது மதம், சாதி, சூழல் போன்றவற்றின் அடிப்படையில் திருமணத்தை நடத்த வேண்டியுள்ளது. 'எளியவன் பிள்ளையானாலும் செய்ய வேண்டிய சடங்கு செய்ய வேண்டும். செய்ய வேண்டிய சடங்குகளை அவரவர் வசதிக்கு ஏற்ற வகையிலாவது செய்ய வேண்டும். முத்தைத் தெளித்தாலும் கலியாணந்தான். மோரைத் தெளித்தாலும் கலியாணந்தான்' என்னும் பழமொழி இந்நிலையைக் குறிப்பாக உணர்த்தும். 'அரைத் துட்டிலே

கலியாணம் அதிலே கொஞ்சம் வாணவேடிக்கை; 'ஊரிலே கலியாணம் மாரிலே சந்தனம்;பருப்பில்லாத கலியாணமா? போன்ற பழமொழிகள் மேலும் சில கருத்துக்களைத் தருகின்றன. எனினும் பழமொழிகளில் திருமணச் சடங்குகள் எவ்வாறு செய்யப்பட்டன என்பதற்கான குறிப்புகள் காணப்படவில்லை.

**தாலி கட்டல் :**

பின்வரும் பழமொழிகள் மூலம் 'தாலி கட்டுதல்' திருமணத்தில் ஒரு நிகழ்ச்சி என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

'இரவல் துணியாம் இரவல் துட்டாம்
இழுத்துக் கொட்டு மேளத்தை-இறுகக்
கட்டு தாலியை'
'மூன்று முடிச்சு கழுத்தில் விழட்டும்
முப்பது இலை குப்பையில் விழட்டும்.'
'கலியாணச் சந்தடியிலே தாலி காட்ட மறந்தகதை'
'சங்கு ஊதாமல் தாலி கட்டுவது உண்டா?'

**பரிசம், சீதனம் :**

பண்டைத் தமிழரிடையே மணமகன் பரிசம் கொடுத்துப் பெண் கொள்ளும் முறை இருந்தமையைச் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறிந்தோம். நாளடைவில் இம்முறை மாறி வரதட்சணை பெற்றுக்கொண்டு பெண்ணை மணந்து கொள்ளும் முறை பரவியது. இதைச் சீதனம் கொடுத்தல் என்கிறோம். பரிசம் கொடுப்பது; சீதனம் கொடுப்பது என்னும் இரண்டு பழக்கங்களைப் பற்றியும் பழமொழி கூறுகிறது. அத்தை மகளானாலும் சும்மா வருமா? தூத்துக்குடிச் சந்தையிலே துட்டுக்கு ஒரு பெண்டாட்டி; குங்குமக் கோதைக்கும் அஞ்சு பணம், குருட்டுக் கண்ணிக்கும் அஞ்சு பணமா? போன்ற பழமொழிகள் மூலம் பெண்ணின் தகுதிக்கு ஏற்பப்பரிசம் கொடுக்கப்பட்டது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். 'சீதனமும் வேண்டாம் பாதனமும் வேண்டாம் சிங்கார நாச்சியார் வந்தாலே போதும்; வரிசை கண்ட மாப்பிள்ளை வந்து வந்து நிற்பானாம்'' போன்ற பழமொழிகள் சீதனம் வழங்கப்பட்டதை உணர்த்துகின்றன.

திருமணம் என்பது பொதுவாக ஆடம்பரமாகச் செய்யப் பட்டது என்பதை, அப்படி நடத்துவதே சிறப்பு என்று மக்கள் கருதினர் என்பதைக் 'கலியாணம் எங்கே? காசுப் பையிலே: 'கலியாணத்திலும் பஞ்சமில்லை; களத்திலும் பஞ்சமில்லை; கலியாணம் கழித்தால் கைச்சிமிழ் கிட்டாது: கலியாணம் பண்ணிப்பார். வீட்டைக் கட்டிப்பார்; 'கலியாணம் பண்ணின வீட்டிலே ஆறுமாதம் கருப்பு' கலியாணஞ் செய்த பிறகு தான் கஷ்டம் தெரியும்' என்னும் பழமொழிகள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

**பலதாரமணம் :**

'ஏதும் அற்றவனுக்கு இரண்டு பெண்டாட்டி ஏன்!'
'இரண்டு பெண் கொண்டவன் கெட்டான்'
'இரண்டு பெண்டாட்டிக்காரன் பாடு திண்டாட்டாம்'
'இரண்டு பெண்டாட்டிக்காரன் வீட்டில் நெருப்பு ஏன்?
'அறுப்புக் காலத்தில் எலிக்கு ஐந்து பெண்சாதி''

என்ற பழமொழிகள் தமிழ்ச் சமுதாயத்தில் பலதாரமணம் இருந்தமையை வலியுறுத்துகின்றன. வசதி உள்ளவன் பலபெண் களை மணந்து கொள்வதைத் தடை செய்யவில்லை என்பதும் புலப்படும்.

**குழந்தை மணம்**

'பத்து வயதிலே பாலனைப் பெறு'; பத்துக்கு மேலே ஒரு பறையனுக்காவது தள்ள வேண்டும்; என்ற பழமொழிகள் மூலம் குழந்தை மணம் நடைமுறையில் இருந்திருக்கிறது மேலும் உயர்ந்த சாதியாரிடையே இம்முறை இருந்திருக்கலாம் என்று கருத இடம் உள்ளது.

பாரம்பரியம் என்று சொல்லும் பொழுது நம்முடைய தமிழ் நாட்டில் தொன்று தொட்டு வழங்கி வருகின்ற ஒரு பழமொழி உண்டு அது மணமக்களைப் 'பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க' என்று வாழ்த்துவது. இதைச் சிலர் 16 குழந்தைகள்|என்று தவறாக எண்ணுகிறார்கள். ஆனால் இது பதினாறு பேறுகளைக் குறிக்கும். அவை புகழ், கல்வி, ஆற்றல், வெற்றி, நன்மக்கள், பொன், நெல், அழகு, பெருமை, ஆயுள், நல்லூழ், இளமை, அறிவு, துணிவு, நோயின்மை, நுகர்ச்சி, என்பன.

பொதுவாக அவரவர் அதிர்ஷ்டத்திற்குத் தகுந்தாற்போல் தான் திருமணம் நடைபெறும் என்பது 'புடைவை அமைவதும் புருஷன் அமைவதும் அவரவர் செய்த புண்ணியத்திற்குத் தகுந் தாற் போல்'; மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம்' போன்ற பழமொழிகள் மூலம் அறியலாம்.

மேலும் சில கல்யாணப் பழமொழிகள் வருமாறு:

'சாயந்தரத்தில் கல்யாணம் பிடி தாம்பூலம்'
'சாத்திரம் பார்த்துப் பெண்ணைக்கொள், கோத்திரம் பார்த்துப் பெண்ணைக்கொடு
'கல்யாணப் பந்தலிலே கட்டின ஆடுபோல';
'கலியாணஞ் செய்கிறதும் கதவைச் சாத்துகிறதும்';
'கலியாணஞ் செய்தும் சந்நியாசியா';

தமிழர் மேற்கொண்ட திருமணமுறைகுறித்து எவ்விதமான சான்றும் இடம்பெறவில்லை என்றாலும் தமிழர்கள் நடத்திய திருமணங்களுக்கான சில அடிப்படைக் கருத்துக்களை பழமொழி களின் வாயிலாக உணரமுடிகிறது. தமிழர் தங்கள் வசதி எப்படி யிருப்பினும் தங்கள் வீட்டுத் திருமணத்தை ஆடம்பரமாகவே நடத்தினர். அதற்காகக் கடன்படவும் தயங்கவில்லை. பெண் விலையாகிய பரிசமும், மணமகன் விலையாகிய சீதனமும் வழக்கிலிருந்தன. குழந்தைமணம், பலதாரமணம் கண்டிக்கப்பட் டாலும் அவை சமுதாயத்தில் ஆங்காங்கே நடைமுறையில் இருந் திருப்பதை அறியமுடிகிறது.

'குலமகட்கு அழகுதன் கொழுநனைப் பேணுதல்'–வெற்றி வேற்கை

# சீர்திருத்தத் திருமணங்கள்

''பண்டைத் தமிழர்களின் மணவினைச் சடங்குகளில், புரோகிதர்கள் தட்சிணை பெற்று மணம் நடத்தி வைத்தல், எரியோம்பல், வலம் வருதல் போன்ற ஆரியச் சடங்குகள் எதுவுமே இல்லை என்பது கூர்ந்து அறியத்தக்கது ஆகும்''.[1] இந்தக் கருத்தை அகநானூற்றுப் பாடல்கள் தெளிவாக விளக்கி உள்ளதை முன்னர் கண்டோம். இடைக்காலத்தில் தமிழ் மரபிற்கு ஒவ்வாத பல ஆரிய முறைகளும் சடங்குகளும் தமிழ் மணங்களில் கலந்து விட்டதனால் அவற்றை நீக்கித் தமிழ் மணத்தைத் தமிழரின் பண்புமணம் கமழும் திருமணமாகவே நடைபெறச் செய்ய பல சீர்திருத்தத் தலைவர்கள் தோன்றினர். அவர்களுள் தலைமையானவர்கள் நால்வர்.

1. சித்தூர் மார்க்கசகாய ஆச்சாரியார் என்பார் ஒருவராவர் இவர்சென்ற நூற்றாண்டில்(19ஆம் நூற்றாண்டு) சித்தூர் மாவட்டத்தில் பிறந்தவர். பிராமணீயத்தை நீக்கியவர்.

2. தனித்தமிழ்த் தந்தை மறைமலை அடிகளார் : இவர் தனித்தமிழ் இயக்கத் தலைவராதலால் ஆரிய மொழியை அடியோடு நீக்கி திருமணக் கரணமொழி முழுவதையும் தூய தமிழில் அமைத்துக் கொண்டனர். வேள்வி வளர்த்தலும், தீவலம் வருதலும், மணவறையில் மங்கலப் பொருட்கள் வைத்தலும் இவரால் விலக்கப்படவில்லை.

3. மூன்றாம் சீர்திருத்தத் தலைவராகக் குறிப்பிடத்தக்கவர் திரு.வி. கலியாணசுந்தரனார். இவரும் மறைமலை அடிகளாரின் கருத்தை அடியொட்டி அதை நிலைநாட்ட முயன்றவராவர்.

4 திராவிடத் தந்தை ஈ.வே. இராமசாமிப் பெரியார் : இவர் ஆரிய மணச்சடங்குகளையும், மணவறை அமைப்பையும்,

---

1. பக் : 80. பி.டி. சீனிவாச ஐயங்கார், பண்டைத் தமிழர் வரலாறு.

கடவுள் வழிபாட்டையும், பிறமணச் சடங்குகளையும் அடியோடு விலக்கித் தமிழில் தமிழ் மக்கள் வாழ்க்கை ஒப்பந்தத்லை வகுத்துத் தந்தவராவர்.

இருகாறும் வழக்கிலிருந்த வைதிகத்திற்கு வந்த விபத்திற்கு முதல் பெருங்காரணம் இந்திய தேசிய விடுதலை இயக்கமே என்பர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள். இதன் பயனாக நாட்டில் சீர்திருத்தத் திருமணங்கள் தோன்றின. இஃற்றிலொரு வகை தமிழ்த் திருமணம். மற்றொன்று சுயமரியாதை அல்லது பகுத்தறிவுத் திருமணம் என்பதாகும்.

## தமிழ்த் திருமணம்

ì

இல்வாழ்க்கைத் துணை நலத்தினை அளிக்கும் சிறப்புடையதாக இருப்பது திருமணம் என்னும் மங்கலமாகும். ஆதலின் திருமணத்தினைத் தமிழ் மணங்கமழ நடத்துதலே சிறப்புடையதாம். அம்முறையே தமிழ்மொழியும். தமிழ் மக்களும் முன்னேற்றம் அடைந்து சிறந்து திகழ ஆக்கம் தருவதாகும். இனி மறைத்திரு மறைமலை அடிகளார் தலைமையில் நடைபெற்ற திருமண மாநாட்டின் தீர்மானங்களை மேற்கொண்ட தமிழ்த் திருமண முறையைப் பின்வருமாறு காண்போம். அம்முறையில் தமிழ் மரபிற்குப் பொருந்தாத சடங்குகள் நீக்கப்பட்டுள்ளன. செந்தமிழ் மாமறை மந்திரப் பாடல்கள் கொண்டு இறைவழிபாடு செய்து திருமணம் செய்தல் ஒருவகை தமிழ்த் திருமண முறையாகும்.

### * தமிழ்த் திருமணம் நிகழ்த்தும் முறை

திருமணம் நிகழுமிடம் அலங்கரிக்கப் பெற்று, மணமுரசு முழங்கிக் கொண்டிருக்க, விளக்குகள் ஏற்றி வைக்கப்பட்டு, திருமண ஓரைக்குமுன் மணமக்கள் நீராடி மணக்கோலம் பூணல் வேண்டும். திருமணம் செய்து வைப்பவர் அல்லது திருமண ஆசிரியர் மணப்பந்தலில் அவருககென இடப்பட்ட மணையில் வடக்கு நோக்கி அமர்தல் வேண்டும். மணச்செயலுக்கு வேண்டிய மலர், மஞ்சள், குங்குமம், அரிசி, தேங்காய், பழம், வெற்றிலைப்

---

* பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியாரின் 'தமிழ்த் திருமணம்' என்ற நூலிருந்து திரட்டப்பெற்ற கருத்துக்கள்.

பாக்கு முதலியை பொருள்களை எல்லாம் தமது வலப்பக்கத்தில் ஒரு தட்டில் அல்லது ஓர் இலையில் வைத்துக் கொள்ள வேண்டும்.

பின்னர் மணமக்களுக்குக் காப்புநாண் கட்டுவதற்காக முப்புரி நூலில் ஒவ்வோரடி அளவில் இரண்டு துண்டுகள் செய்து, மஞ்சள் பூசி அவற்றின் நடுவில் ஒவ்வொரு மஞ்சள் துண்டினை முடிந்து ஒரு தேங்காயின் மீது சுற்றி ஒரு தட்டில் அரிசி போட்டு அதனிடையே இத்தேங்காயை வைத்து மலரிட்டு வைத்தல் வேண்டும். இதைப் போலவே மங்கல நாணுக்கென (தாலி) உள்ள நூலில் மஞ்சள் பூசி அதில் தாலியைக் கோர்த்து அக்கயிற்றின் நடுவில் அதனை இருக்கும்படி அமைத்து, அதன் இருபக்கங்களிலும் முடிபோட்டு, முன்போல் மஞ்சள் பூசி, குங்குமம் இட்ட ஒரு தேங்காயின் மீது சுற்றி ஒரு தட்டில் அரிசி போட்டு அதனிடையே வைத்தல் வேண்டும். மணமக்களுக்குக் கொடுக்க வேண்டிய புத்தாடைகளைத் தனித்தனியாக ஒவ்வோர் தட்டில் வைக்க வேண்டும்.

### புத்தாடை வாழ்த்திக் கொடுத்தல் :

மணமகன் மணப்பந்தலை வலமாக வந்து மணமக்களுக்கென தனியாக இடப்பட்டுள்ள மணையில் கிழக்கு நோக்கி அமர, ஆசிரியர் ஓர் இலையின்மேல் மஞ்சளில் சிறிய பிள்ளையார் உருவம் செய்து வைத்து, குங்குமம் இட்டு "ஈண்டு எழுந்தருளுக எந்தாய் போற்றி", என்றும்; "இவ்வடிவமர்க ஈச போற்றி" என்றும்; "அருளது புரிக அண்ணால் போற்றி" என்றும் போற்றுதல் புரிந்து, அருச்சனை செய்து, தூப தீபங்காட்டி இறை வழிபாடு புரிந்து, புத்தாடையை வாழ்த்திக் கொடுக்க, மணமகன் அதனை வணங்கி வாங்கிக் கொண்டு போதல் வேண்டும். அடுத்து மணமகளுக்கும் இதைப் போலவே செய்தல் வேண்டும். பின்னர் இருவரும் புத்தாடை அணிந்து, மாலை சூடி, மணப்பந்தலுக்கு வலமாக வந்து மணமேடையில் வலப்பக்கம் பெண்ணும், இடப்பக்கம் பிள்ளையுமாகக் கிழக்கு நோக்கி அமரும்படிச் செய்ய வேண்டும்.

### காப்புக் கட்டல் :

காப்பு நாண்கள் சுற்றிய தேங்காயுடன் வைத்துள்ள அரிசித் தட்டினை மணமகனுக்கு முன் ஒரு முக்காலியின் மேல் வைத்து, தேங்காயை அரிசியுடன் மணமகனை இரண்டு கைகளாலும் அள்ளி எடுக்கச் செய்து, அத்தேங்காயில் சுற்றி இருக்கும் இரண்டு

காப்பு நாண்களில் ஒன்றை எடுத்து மேளம் ஒலிக்க மணமகன் வலக்கையில் ஆசிரியர் கட்டுவார். பின்னர் மணமகளின் இரு கைகளையும் ஒன்றாக சேர்த்து ஏந்தும்படிச் செய்து, மணமகன் கையிலுள்ள தேங்காயை மணமகள் கைகளில் வைக்கச் செய்து, மற்றொரு காப்பு நாணை எடுத்து, மணமகன் கையிற் கொடுத்து அதனை மணமகள் இடக்கையில் கட்டச் செய்தல் வேண்டும். இச்சடங்கு கடவுளை வேண்டி எடுத்துக் கொண்ட செயல் இனிதுற நிறைவேறக்கொள்ளும் முன் அடையாளமாகும்.

பாதபூசை

திருமண ஆசிரியர் ஒரு பெரிய தட்டினை மணமகன் எதிரில் வைத்து மணமகனின் பெற்றோரை (அல்லது மணமகனுக்குப் பெற்றோர் முறையில் இருந்து திருமணம் நடத்துபவரை) அத் தட்டில் பிள்ளையைப் பார்த்த வண்ணம் நிற்கச் சொல்லி பிள்ளையின் கைகளால் அவர்கள் பாதங்களை நீராட்டி, மஞ்சள் பூசி, குங்குமம் இட்டு, மலரிட்டு, கர்ப்பூரங் காட்டி, மணமகனை வணங்கச் சொல்லி, பெற்றோரைப் பிள்ளையின் மேல் மலர் அரிசி தூவி வாழ்த்தச் சொல்ல வேண்டும். இதைப் போலவே மணமகளும் தன் பெற்றோர்க்குப் பாதபூசை செய்து ஆசிபெறல் வேண்டும்.

தாலிகட்டல்:

மணப்பந்தலில் மண ஆசிரியர் ஓரடி அகல நீளத்தில் மணலைப் பரப்பி, சதுரம் அமைத்து அதில்* கிழக்கு முகமாக ஓம் என எழுதி அதன் மீது தருப்பையைப் பரப்பி, அதன் மீது சமிதைகளை (சுள்ளிகளை) இட்டுச் சிறிது நெய் வார்த்துக் கர்ப்பூரத்தைக் கொளுத்தி.

"இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
இயமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிப்

---

* ஒரு சிலர் தென் முகமாக 'ஓம்' என எழுத வேண்டும் என்பர். அதனுள் முக்கோணம் வரைந்து, அம்முக்கோணத்துள் வட்டம் வரைக. அவ்வட்டத்தின் கீழ் பிறை வரைக. இவையே அறம் பொருள் இன்ப வளர்ச்சியாம் முத்தீயின் அடையாளமாகும்.

பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையாய் இன்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே''

என்ற பாடலைச் சொல்லிச் சுள்ளிகளில் அக்கர்ப்பூரத்தைப் போட்டு, மணமகனை நெய்யைச் சிறிது சிறிதாக விடச்செய்து அழல் ஓம்பச் செய்து, கற்றவர்கள் உண்ணும் கனியே போற்றி' எனத் தொடங்கும் தேவாரப் பதிகம் முழுதும் சொல்லவேண்டும் இதற்குள் தாலியைச் சுற்றிய தேங்காய்த் தட்டினை, அங்கு வந்திருக்கும் பெரியவர்கள் வாழ்த்துப் பெற்று வருமாறு ஒரு வரிடம் கொடுத்தனுப்ப வேண்டும். வந்திருப்போர் எல்லோரும் வாழ்த்துமாறு அவர்களிடம் மஞ்சள் கலந்த அரிசியும் மலரும் (அட்சதை) கொடுக்க வேண்டும். மணமகனின் உடன்பிறந்த சகோதரியை விளக்கேற்றிக் கொண்டு வந்து மணமகளின் பின் பக்கத்தில் நிற்கச் செய்து, ஆசிரியர் தாலியை எடுத்து மணமகன் கையில் கொடுத்து, மணமகள் கழுத்தில் கட்டச் செய்து மூன்று முடிகள் போடச் செய்து பின் அம்முடிகள் மீது மஞ்சள் குங்குமம் இடச் செய்வர்.

பிறகு மணமகன் மணமகள் இருவரும் மும்முறை மாலை மாற்றிக் கொள்ளும்படிச் செய்யவேண்டும். இது முடிந்ததும் பிள்ளைக்கு மெட்டிடுதல், பெண்ணிற்குச் சுற்றிடுதல், இருவர்க்கும் பட்டங் கட்டுதல் ஆகிய எல்லாம் செய்து முடித்து, பின் மணமக்கள் இருவரும் எழுந்து, மணமகன் மணமகள் கையைப் பிடித்த நிலையில் மணப்பந்தலை மும்முறை வலம் வரச்செய்தல் வேண்டும்.

**பொரியிடுவித்தல் :**

மணமக்கள் வலம் வரும் போது பிள்ளையின் மைத்துனனை மணம் பந்தலுக்கு வரச்சொல்லி, ஒரு முறை வலம் வந்ததும் மணமக்களை மணப் பந்தலுக்குள் வரச்செய்து, மைத்துனன் கைகளில் பொரியை இட்டு, அதைப் பிள்ளையின் கைகளில் விடச் செய்து, பிள்ளையின் கைகளிலிருந்து பெண்ணின் கைகளில் விடச்செய்து, பெண்ணின் கைகளிலிருந்து ஓமத்தீயில் விடும்படி செய்தல் வேண்டும். இதைப்போல் மும்முறை வலம் வரும் போதும் செய்யச் செய்து மூன்று முறை முடிந்ததும் மணமகன் மைத்துனன் விரலில் மோதிரம் அணிவித்து, மாலைசூட்டி

தாம்பூலம் கொடுத்து, சந்தனம் பூசி பன்னீர் தெளிக்க வேண்டும். பின்னர் மணமகனை வலப்பக்கத்தும் மணமகளை இடப்பக்கத்தும் உட்காரும் படி செய்தல் வேண்டும்.

**சேடையிட்டு வாழ்த்தல்**

மணமக்கள் மாறி அமர்ந்ததும் மண ஆசிரியர் எழுந்து நின்று மலரும் மஞ்சள் கலந்த அரிசியும் தூவி வாழ்த்துவார். அதன் பின் முதியோராக உள்ள சிலர் இவ்வாறு சேடையிட்டு வாழ்த்துவர். இதற்குப் பின் மணமக்களுக்கு அறிவுரை வழங்கும் முறையில் சுருக்கமாக யாரையாவது சொற்பொழிவாற்றச் செய்யலாம். பரிசுகள் வழங்க விரும்புவோர் பரிசு வழங்கலாம்.

**காப்புக் களைதல் :**

மணமக்கள் இருவரையும் மணப்பந்தலை வலமாக வந்து அமரச்செய்து ஆசிரியர் மணமகன் கையிலுள்ள காப்பு நாணை மேளம் முழங்க களைந்து, தேங்காய் மீது வைத்தல் வேண்டும். பெண்ணின் கையிலுள்ள காப்பு நாணைப் பிள்ளையைக் களையச் சொல்லி அதனையும் அத்தேங்காய் மீது வைக்க செய்து அத் தேங்காய் வைத்த அரிசியைத் தேங்காயுடன் மேளக்காரனுக்குக் கொடுத்து விட வேண்டும்.

பின் ஆலத்தி சுற்றச்செய்து, மணமக்களை எழுப்பி, ஓர் இளம்பெண் விளக்குத் தட்டேந்தி முன்செல்ல முளைப்பாலிகை ஏந்திய சிறு பெண்கள் உடன்செல்ல பின்னே மணமக்கள் இருவரும் கைபிடித்த வண்ணம் மணப்பந்தலை வலமாக மும்முறை வந்து கூடத்தில் அமரும்படிச் செய்து பால்பழம் தருவர். பின் திருமண ஆசிரியருக்கு மணமக்கள் வீட்டார் நிறைய சன்மானங் கொடுத்து மரியாதை செய்வர், மணங்காண வந்த அனைவர்க்கும் விருந்துணவும் தாம்பூலமும் கொடுத்து உபசரிப்பார்கள்.

## தமிழ்த் திருமணம்

2

### திருமணத் தமிழ்க் கரணம் மன்றல் அழைப்பு மடல்

அன்பர்காள்,

நிகழும் வள்ளுவராண்டு 1987 நேர்வான் (சித்திரை) மாதம் 20ஆம் நாள் (2-5-56) அறிவன் மாதம் (புதன்) கிழமை காலை 8 மணிக்கு,

| | |
|---|---|
| திருமயிலை மிதிவண்டிச் செப்பனீட்டாளர் திருவாளர் மதியழகனுக்கும் | வேலூர் ஆசிரியை திருவாட்டி மலர்விழிக்கும் |

வேலூர் மணமண்டபத்தில் 'கீழை உயிரீட்டு வைப்புறுதி' (Oriental Life Insurance) முகவர் (Agent) திருவாளர் சண்முகம் நடத்தி வைக்கும் தமிழ்த் திருமணத்திற்கு தாங்கள் தவறாது குடும்பத்துடன் வந்திருந்து, மணமக்களை வாழ்த்தியருளப் பெரி தும் வேண்டுகின்றேன்.

வேலூர்
20-4-56

தமித்தொண்டன்
தமிழன்பன்

திருமண நிகழ்ச்சி நிரல் :

1. கடவுள் வணக்கம்
2. கரணம்
3. சொற்பொழிவு
4. வாழ்த்திதழ் படித்தல்
5. பாகடைப் பகிர்வு
6. பரிசளிப்பு
7. நன்றி கூறல்

திருமண தமிழ்க் கரணம்

தமிழ்ப் புலவர், ஆசிரியர், குலத்தலைவர், அறிஞர், ஆகியோருள் ஒருவரான கரண ஆசிரியர் அல்லது திருமண

ஆசிரியர் திருமணப் பந்தலில் உள்ள மணமேடையில் இடப்பட்ட இணையிருக்கையில் மணமக்களை அமரச்செய்து, திருமண அவையோரை நோக்கி நின்று,

பெரியோரே! தாய்மாரே! என அழைத்து,

இன்று செல்வன் மதியழகன் என்னும் மணமகனுக்கும், செல்வி மலர்விழி என்னும் மணமகளுக்கும் இறைவன் திருமுன்பும் இங்குள்ள பெரியோர் முன்னிலையிலும் திருமணக் கரணம் நிகழவிருக்கின்றது. அனைவரும் அமைதியாக இருக்கக் கேட்டுக் கொள்கிறேன்; என்று அவையமர்த்தி,

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

எனும் முதற் குறளையேனும்; பெரியபுராணம் அல்லது கம்பராமாயணக்கடவுள் வணக்கச் செய்யுளையேனும் அல்லது

"துங்க இல்லறத் துணைமையை நாடியே
இங்க மர்ந்துள இம்மண மக்களை
மங்க லம்மிகு மணவினைப் படுத்தவே
எங்குந் தங்கியே இறையடி பணிவோம்"

என்னும் திருமண இறைவணக்கச் செய்யுளையேனும் ஓதி, பின் வருமாறு கரணம் நடத்தி வைத்தல் வேண்டும். (கடவுள் நம்பிக்கை இல்லாதவிடத்தில் கடவுள் வணக்கத்தை விட்டு விடலாம்.)

கரண ஆசிரியர் :

மணமகனிடம், நீர் செல்வி. மலர்விழி என்னும் இவளை உம் வாழ்க்கைத் துணைவியாகக் கொள்ள இசைகின்றீரா?

மணகன் : இசைகின்றேன்

க.ஆ : மணமகளை மேற்கூறியவாறு கேட்க, மணமகள் சம்மதித்தல்.

க.ஆ : மணமகன் பெற்றோரிடம், 'உங்கள் மகன் மதியழகன் என்பவர் மலர்விழி என்னும் இந்நங்கையை வாழ்க்கைத் துணையாகக் கொள்வது, உங்கட்கு இசைவுதானா?

மணமகன் பெற்றோர் :- இசைவுதான்.

க. ஆ : மணமகள் பெற்றோரை நோக்கி மேற்கூறியவாறு கேட்க அதற்கு அவர்கள் இசைதல்.

க. ஆ : மணமகன் தன் வலக்கையால் மணமகள் வலக்கையைப் பிடிக்கச் செய்து, பின்வரும் உறுதிமொழியைத் தாம் தொடர்தொடராகச் சொல்லி, மணமகனைச் சொல்வித்து அது முடிந்தபின் மணமகளையும் அவ்வாறே சொல்வித்தல் வேண்டும்.

மணமகன் :- மதியழகன் ஆகிய நான் மலர்விழி ஆகிய உன்னை, இன்று என் வாழ்க்கைத் துணையாக ஏற்றுக்கொண்டு, என் உயிர், உடல், பொருள் மூன்றையும் உனக்கே ஒப்புவித்து, என் வாழ்நாள் முழுவதும் உன் காதற் கணவனாயிருப்பேன் என்று இறைவன் திருமுன்பும், இங்குள்ள பெரியோர் முன்னிலையிலும் உறுதி கூறுகின்றேன்,

மணமகள் :மேற்கூறியபடி உறுதிகூறல்.

க.ஆ : உறுதி கூறல் முடிந்தவுடன் மணமகன் மணமகள் கழுத்தில் மங்கல நாணைக் கட்டச் செய்து அல்லது மணமகள் மோதிர விரலில் மோதிரத்தை அணிவிக்கச் செய்து, இருவரையும் மாலை மாற்றுவிக்க வேண்டும். அதன்பின் மணமக்களைப் பின்வருமாறு வாழ்த்த வேண்டும்.

க.ஆ : "மணமக்களாகிய நீங்கள் ஓருயிரும், ஈருடலுமாக வாழ்த்து ஒன்றி, பகுத்தறிவு பாங்கிருக்க, தன்மானந் தழைத்தோங்க, குன்றாச் செல்வமும், குறையா நலமுங் கொண்டு, உற்றோர் மகிழவும், மற்றோர் புகழவும் (எல்லாம் வல்ல இறைவன் அருளால்) நிலவுலகில் நீடூழி வாழ்ந்திருக்க."

## சுயமரியாதைத் திருமணம்

சுயமரியாதைத் திருமணம் அல்லது சீர்திருத்தத் திருமணம் என்று அழைக்கப் பெறும் திருமணத்தின் விளக்கம் 'பெரியார். ஈ.வே.ரா சிந்தனைகள்' என்ற நூலிலிருந்து தொகுத்துத் தரப் படுகிறது.

இம்மணமுறையில் மணமக்கள் ஒருவரை ஒருவர் அறிந்து, தங்களுக்குள்ளாகவே ஒருவரை ஒருவர் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும் என்பதும் அர்த்தமும் பொருத்தமும் அவசியமும் இல்லாமல் வெறும் சடங்கு, பழக்க வழக்கம் என்பதற்காக மாத்திரம் ஒன்றையும் செய்யக் கூடாது என்ற சிறந்த கொள்கைகள் கடைபிடிக்கப்பட்டன. திருமண சம்பந்தமாக வெறும் ஆடம்பரத்துக்காக வீண் செலவு செய்யக் கூடாது என்பதுதான் சுயமரியாதைக் கலியாணத்தின் முக்கிய அம்சமாகும். திருமணம் என்பது பெண்ணும் ஆணும் சேர்ந்து வாழ்க்கை நடத்த ஏற்படுத்திக் கொள்ளும் ஒப்பந்தம் என்றும், அந்த ஒப்பத்த விஷயம் பெண்ணையும் ஆணையும் மாத்திரமே பொறுத்ததே ஒழிய எவ்விதக் கட்டுப்பாட்டிற்கும் உட்பட்டதில்லைஎன்பதும் ஆகும். மேலும் சுயமரியாதைக் கல்யாணத்தில் சொத்திலும், வாழ்க்கை ஆதிக்கத்திலும் பெண்ணுக்கு ஆணைப் போலவே சரிபங்கு உரிமை இருக்கிறது என்பதுடன் இவைகளே கலியாண ஒப்பந்தத்தின் சரத்துக்களாகும். இந்தக் கலியாண முறையில் பழைய பழக்கவழக்கங்கள், சாஸ்திரங்கள் சம்பிரதாயங்கள் ஒன்றும் கவனிக்கப்படுவதில்லை. இச்சுயமரியாதைக் கலியாணம் என்பதன் முக்கிய தத்துவம்—கூட்டு வாழ்க்கையில் ஆணுக்கும், பெண்ணுக்கும் எவ்வித வித்தியாசமோ, உயர்வு தாழ்வோ இல்லை என்பதும் சகல துறைகளிலும் சம சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும் என்பதுமேயாகும். இத்திருமணத்தில் வைதிகநெறித் திருமணங்கள் போலன்றி சாதி, வகுப்பு, குலம், கோத்திரம் என்பவைகள் கவனிக்கப்படாமல் மணமக்களுடைய யோக்கியதாம்சங்களையே கவனித்துப் பார்க்கப்படுகின்றது. தக்க சரிசமமான வயதுப் பொருத்தம் பார்த்தே இத்திருமணம் செய்யப்படும். சுயமரியாதைத் திருமணம் எல்லோருக்கும் வசதியாக இருக்கக்கூடிய நேரத்தில் நடத்தப்படும்.

**சுயமரியாதை திருமணம்** அல்லது **சீர்திருத்தத் திருமணம்** பற்றிய **சட்ட நூல்குறிப்பு;:** 'தமிழ் நாட்டில் சுயமரியாதை இயக்கத்தினர் ஒரு புதுவகைத் திருமணத்தை அறிமுகப்படுத்தினர், நண்பர்கள், உறவினர்கள் குழுமியிருக்க நடக்கும் அத்திருமணத்தில் புரோகிதர் இருக்கமாட்டார், சப்தபதி என்னும் சடங்கு நடைபெறாது. இத்தகைய திருமணங்கள் நாட்டில் பல்கிப் பெருகவே சட்டம்

அவற்றை அங்கீகரிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இந்துத் திருமணச்சட்டம் 1955க்கு ஒரு திருத்தம் கொண்டு வரப்பட்டது. இதற்கு இந்துத் திருமணங்கள் (சென்னைத் திருத்தம்) சட்டம் 1967 (The Hindu Marriages (Madras Amendment) Act, 1967) என்பது பெயர்.

இந்துத் திருமணச் சட்டம் (1955) 7 ஆவது பிரிவிற்கும் பின்னர் 7-ஏ என்ற புதிய பிரிவை இந்தத் திருத்தச் சட்டம் கொண்டுவருகிறது. இது தமிழ் நாட்டிற்கு மட்டுமே உரியது. சுயமரியாதை அல்லது சீர்திருத்தத் திருமணத்தில் புரோகிதர் மந்திரம் ஓதுதல், மணமக்கள் ஹோமத்தை ஏழு அடி எடுத்து வைத்து வலம் வருதல் ஆகியவை நடைபெற வேண்டிய அவசியமில்லை. உறவினர்கள், நண்பர்கள், மற்றவர்கள் முன்னிலையில் இத்திருமணம் நடைபெறும். மணமக்கள் ஒருவரை ஒருவர் பார்த்து, மற்றவர்க்கும் புரியும் மொழியில் கணவனாக அல்லது மனைவியாக மற்றவரை ஏற்றுக் கொள்வதாகச் சொல்ல வேண்டும். அல்லது மணமக்கள் மாலை அல்லது மோதிரம் மாற்றிக்கொள்ள வேண்டும், அல்லது தாலி கட்ட வேண்டும்.

இச்சட்டத்தில் ஒரு முக்கிய அம்சம், இச்சட்டம் அமலாவதற்கு முன்னால் செய்யப் பட்ட சுயமரியாதைத் திருமணங்களையும் இது அங்கீரிக்கிறது."[1]

### பதிவுத் திருமணம்

வாழ்க்கையில் ஓர் இனிய கட்டம் திருமணம். இதையும் ஒரு சட்டத்திற்குள் அடக்கு வேண்டுமானால் அதற்கான சில அடிப்படைத் தகுதிகள் மேற்கொள்ளப்பட வேண்டும். இந்த நாட்டில் திருமணச் சட்டங்கள் மதத்தின் அடிப்படையில் தோன்றியவையே ஆகும். கி.பி 1955-ம் ஆண்டிற்கு முன்னர் சட்டம் எப்படி இருந்த போதிலும், 1955-ம் ஆண்டிற்குப் பின்னர் இந்திய பாராளு மன்றத்தாரால் இந்துத் திருமணச் சட்டம் அமுலுக்கு வந்தது. காலத்திற்கும் மனித முன்னேற்றத்திற்கும் ஏற்பப் புதிய மாறுதல்கள் புதுச்சட்டத்தில் பதிந்தன.

எந்தவித மதச்சடங்குகளும் இல்லாமல், எந்த ஜாதியையும் எந்த மதத்தையும் சேர்ந்த இருவர், திருமணப் பதிவாளர்

1 பக். 57. ச. செந்தில்நாதன். இந்துச் சட்டம்.

முன்னிலையில் மணந்து கொள்ளச் சட்டம் வகை செய்கிறது. பதிவுத் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறவர்கள் மாவட்டத் திருமணப் பதிவாளருக்கு அறிவிப்புக் கொடுக்க வேண்டும், இருவரில் ஒருவர். எந்த மாவட்டத்தில் அறிவிப்பு கொடுப்பதற்கு முன்னால் குறைந்தது ஒரு மாத காலத்திற்கு மேலாகத் தங்கி இருக்கிறாரோ அந்த மாவட்டத் திருமணப் பதிவாளருக்கு அறிக்கை கொடுக்க வேண்டும். திருமணப் பதிவாளர் அந்த அறிக்கையைப் பொதுமக்கள் பார்வைக்காக அலுவலகத்தில் ஒரு கண்ணாடிப் பெட்டியில் ஒட்டி வைப்பார். அந்தத் திருமணத்திற்கு எதிர்ப்புத் தெரிவிப்பவர்கள் அறிக்கை ஒட்டப்பட்ட 30 நாட்களுக்குள் தெரிவிக்க வேண்டும். திருமணத்திற்கு எதிர்ப்பு இருந்தால் திருமண அதிகாரி விசாரணை நடத்துவார். திருமணத்திற்கு எதிர்ப்பு இல்லையென்றால், அறிக்கை கொடுத்த மூன்று மாதத்திற்குள் திருமணம் செய்து கொள்ள வேண்டும்.

இம்முறை திருமணத்திற்குக் குறிப்பிட்ட சடங்குகள் என்று எதுவும் கிடையாது. திருமண அதிகாரியின் முன்னிலையில் மணமக்களும் மூன்று சாட்சிகளும் தங்கள் நோக்கத்தையும், விருப்பத்தையும் தெரிவித்து, அதற்காக உள்ள மனுவைப் பூர்த்தி செய்து தரவேண்டும். பிறகு மணமக்கள் திருமண அதிகாரி, மூன்று சாட்சிகள் முன்னிலையில் தாம் கணவன் மனைவியாக இருக்க விரும்புவதைக் கூற வேண்டும். பின்னர் திருமண அதிகாரி திருமணம் நடந்ததற்கு ஆதாரமாகச் சான்றிதழ் தருவார்.

பதிவுத் திருமணச் சட்டத்திலும் தாம்பத்திய உறவு முறைக்கும், நீதிமுறைப் பிரிவுக்கு வகை செய்யப்பட்டுள்ளது.

## கவிஞர் பாரதி தாசனின் புரட்சித் திருமணத்திட்டம் நடத்தும் முறை

(திராவிடர் புரட்சித் திருமணம் இந்நாளில், முன்னாளிற் போலின்றிப் பெருமக்களால் மிகுதியும் மேற்கொள்ளப் பட்டு வருகிறது.)

1. அழைப்பிதழால் அல்லது வேண்டுகோளால் மணவீட்டில் குழுமியோர் அவையத்தார் ஆவார்.

2. இசை; திராவிட நாட்டுப் பண்

3. மணமக்கள் அவைக்கு வருதல்

4. முன்மொழிவோர் அவையில் எழுந்து, அவைத்தலைமை தாங்கி இத்திருமணத்தை முடித்துத் தரும்படி இன்னாரை வேண்டிக் கொள்கிறேன்'' என்று முன்மொழிதல்

5. அவையத்தாரின் சார்பில் ஒருவர் ,'அதை நாங்கள் ஆதரிக்கிறோம்'' என்று வழிமொழிதல்

6. முன் மொழிந்தார், வழி மொழிந்தார் அவைத் தலைவரை அழைத்து வந்து, சிறப்புறுத்தி இருக்கை காட்டுதல்

7. அவைத் தலைவர் முன்னுரை

8. திருமணம் நடத்துதல், மணப்பெண் ''இன்னாரை நான் என் வாழ்க்கைத் துணைவராகக் கொண்டு வாழ்க்கை நடத்த ஒப்புகிறேன்' என்று சொலலவ், மணமகனும் அவ்வாறு சொல்லல், அதன்மேல் இருவரும் மாலை மாற்றுதல், கணையாழி மாற்றுதல், ''வாழ்க'' என முழங்குதல்

9. தலைவர் மற்றும் அறிஞர் மணமக்களை வாழ்த்துதல்

10. வரிசை; அவையத்தார்க்கு வெற்றிலை, பாக்கு முதலியவை வழங்குதல்

இந்த நடைமுறைக்கு முதல் நாளே நீதிமன்றத்தில் மணமகன் மணமகள் மணப்பதிவு செய்து கொள்வதுண்டு. பிறகும் பதிவு அறிவிப்புச் செய்து சொள்ளலாம்.

இக்கருத்தை வைத்தே சுருக்கமாகக் கவிதை நடையில் ஈண்டு எழுதியுள்ளேன். இங்குக் காட்டிய திட்டம் பெரும்பாலும் நடைபெறுகின்றது என்பது தவிர இப்படித்தான் நடத்தப்பட வேண்டும் என்று கட்டுப்படுத்தியதாகாது. இதனினும் சுருக்கமான முறையில் நடத்திக் கொள்ளலாம். ஆதலினால் தானே இது புரட்சித் திருமணம்;

பாரதிதாசன்

1

## அவையத்தார்

வருக வருகென மலர்க்கை கூப்பித்
திருமண மக்கட்கு உரியோர் எதிர்கொளத்

திரவிட நாட்டுப் பெருங்குடி மக்கள்
அரிவைய ரோடுவந் தமர்ந்தனர் நிறையவே!

குழலும் முழவும் பொழிந்த இன்னிசை
மழையை, நிறுத்தி ஓர் மறவன் எழுந்துதேன்
மழைபொழி வான்போல் மாத்தமிழ் சிறக்கத்
திராவிட நாட்டுப்பணி பாடினான்
ஒருபெரு மகிழ்ச்சி நிலவிற்று அவையந்தே.

### மணமக்கள் வருகை

மணமகள் தோழிமார் சூழவும், மணமகன்
தோழர் சூழவும் தோன்றி, அவைதொழுது
''இருக்க'' என்று தோழர் இயம்ப
இருக்கையில் இருவர் அமர்ந்திருந்தனர்.

## 2

### முன்மொழிதல்

மன்னுசீர் மணப்பெண், மணமகன் சார்பில்
முன்மொழிந் தார்ஓர் முத்தமிழ் அறிஞர்;
திராவிட நாட்டுப் பெருங்குடி மக்களே,
அருமைத் தோழியீர் தோழரே அறிஞரே
என்றன் வணக்கம் ஏற்றருள் வீர்கள்
இன்று நடைபெற விருக்கும்இத் திராவிடர்
புரட்சி திருமணப் பெருங்கூட் டத்திற்குத்
தலைமை தாங்கவும், நிலைமை உயர
மணமகள் மணமகன் வாழ்க்கை ஒப்பந்தம்
நிறைவேற் றவும்பெரி யாரை
முறையில் வேண்டினேன் முன்னுற வணங்கியே.

### வழிமொழிதல்

அவையத் தாரின் சார்பிலோர் அறிஞர்
''முன்மொழிந் தாரின் பொன்மொழி
நன்றொப்பு கின்றோம்'' என்றார் இனிதே.

### வேண்டுகோள்

முன்மொழிந் தாரும் வழிமொழிந் தாரும்;
பின்னர்அப் பெரியார் இருப்பிடம் நாடி,
எழுந்தருள் கென்றே இருகை கூப்பி
மொழிந்து சீர்செய்து முன்னுற அமைந்த
இருக்கை காட்டத் தமிழ்ச்சொற்
பெருக்கைப் பெரியார் தொடங்கினர் நன்றே:

## 3

### அவைத்தலைவர்

சேர சோழ பாண்டியக வழிவரு
திராவிட நாட்டுப் பெருங்குடி மக்களே
... ... ... ... ...
ஈங்குச் சிலசொல் இயம்பு கின்றேன்;
... ... ... ... ...
... ... ... ... ...
தாய் தந்தையர் தவஞ்செய்து பெற்றனர்
தூய்பெருங் கிளைஞர் சூழ்ந்திருக் கின்றனர்
ஒருமனப் பட்ட திருமண மக்களைப்
பெரிதின்பம் பெறுக பெறுக என்று
வாய்க்கு மகிழ்வாய் வாழ்த்த ...
... ... ... ... ...
வைதிக மணத்தை மெய்என ஒப்பிடில்
தமிழர் பண்பு தலைசா யாதோ?
தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை எனப் பேசும்
திருவள் ளுவனார் திருநெறி மாய்ப்பதோ?
திராவிடர் புரட்சித் திருமணம்
புரிந்தின் புறுக திருமண மக்களே.

### வாழ்க்கை ஒப்பந்தம்

திராவிட நாட்டுப் பெருங்குடி மக்கள்
இருவர்தம் வாழ்க்கைஒப் பந்தம் இனிதாக—

நீவிர் சான்றாக — நிகழ்ந்துவிக் கின்றேன் நான்
"பாவையீரே! உங்கள் பாங்கில் அமர்ந்துள்ள
ஆடவர் தம்மை அறிவீரோ? அன்னாரைக்
கூடிஉம் வாழ்க்கைத் துணையாகக் கொள்ள
உறுதி உரைப்பீரோ?'' என்று வினவ,
உறுதிஅவ் வாறே உரைத்தார் மகளாரும்.
"தோழரே! பாங்கிலுள்ள தோழியரைத் தேர்ந்தீரோ?
வாழுநாள் வாழ்க்கைத் துணையாகக் கொண்டீரோ?
ஆயின் உறுதி அறிவிக்க;'' என்னவே
தூயர்அவ் வாறே உறுதியும் சொல்லிட,
'வாழிய நீவிர்' எனப் பெரியார் வாழ்த்தினார்!
வாழிய என்றவையுள் மக்களெலாம் வாழ்த்தினார்!
தாரொன்றைத் தாங்கித் தம்கொழுநர்க் கேசூட்ட
நேரிழை யார்க்கும் நெடுந்தார வர்சூட்டக்
கையிற் கணையாழி கட்டழகி யார்கழற்றி
தூய்யமண வாளரைத் தொட்டணிய, அன்னவரும்
தம்ஆழி மங்கையர்க்குத் தந்துமகிழ்ந் தமர்ந்தார்!
செம்மைப் பெரியார் அறமொழிகள் செப்புகின்றார்-

### அறமொழிகள்

"அன்பும் அறனும்
உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும்
அது'' என்றார் வள்ளுவனார்.
... ... ...
... ... ...
தன்னையும் தக்கபடி
காத்துக் கொளல் வேண்டும்
தன்கொழுநன் தன்னையும்
காத்திடல் வேண்டும்
சீர்சால் திராவிடர்
பண்பு சிதையாமல்
நிற்பவளே பெண்ணாவாள்.

... ... ... ...

"வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பின் தலைப்பிரிதல் இல்" மற வாதீர்.
"இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழு தேத்தும் உலகு" தெளிக
மணமகளாரே, மணமகனாரே
இணைந்தின் புற்றுநன் மக்களை ஈன்று
பெரும்புகழ் பெற்றுநீ டூழி
இருநிலத்து வாழ்க இனிது.!

நன்றி கூறல்

மணமக்கட் குரியர் ஆங்கு
வாழ்த்தொலிக் கிடை எழுந்தே
"மணவிழாச் சிறக்க ஈண்டு
வந்தார்க்கு நன்றி இந்த
மணஅவைத் தலைமை தாங்கி
மணமுடித் தருள்பு ரிந்த
உணர்வுடைப் பெரியார்க் கெங்கள்
உளமார்ந்த நன்றி" என்றே
கைக்கூப்பி, அங்கெவர்க்கும்
அடைகாயும் கடிது நல்கி
வைகலின் இனிது உண்ண
வருகென அழைப்பா ரானார்!
பெய்கெனப் பெய்த இன்பப்
பெருமழை இசையே யாக
உய்கவே மணமக்கள் தாம்
எனஎழும் உள்ளார் வாழ்த்தே.[1]

---

1. பாரதிதாசன் கவிதைகள். மூன்றாந்தொகுதி.

**கோயில் திருமணம் :**

தமிழர் திருமண முறைகளுள் ஒன்று கோயில் திருமணங்கள். நாட்டுப்புற மக்களும் ஏழைகளும் இன்றும் தாம் வழிபடும் கோயிலில் எளிய முறையில் திருமணம் செய்து கொள்கின்றனர். செல்வந்தர் வீடுகளிலும் ஏதாவது வேண்டுதல் காரணமாகக் குறிப்பிட்ட கோயிலில் திருமணம் செய்வதுண்டு. சில கோயில்களில் இறைவன் திருமண உற்வசம் நடைபெறும் பொழுது பலஜோடி மணமக்களின் திருமணங்கள் (mass marriages) நடைபெறுவதுண்டு.

**நவீன சுயம்வரத் திருமணம் :**

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் சூளாமணி என்னும் இலக்கியத்தில் சுயம்வரம நடைபெறும் முறை விரிவாகச் சொல்லப்பட்டுள்ளதைக் கண்டோம். இதே போல நள வெண்பா, அரிச்சந்திர வெண்பா, அரிச்சந்திர புராணம் ஆகிய நூல்களின் வாயிலாகவும் சுயம்வரத் திருமணமுறை குறித்து அறிய முடிகிறது. இந்நூல்களில் அரச குடும்பத்தைச் சார்ந்தவர்களுக்குத் திருமண-சுயம்வரம் நடைபெற்றதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றவர்கட்கு இம்மணமுறை இருந்ததற்கான குறிப்பேதும் கிடையாது. ஆனால் இச்சுயமவரமுறை இந்நூற்றாண்டில் வாழும் (20-ஆம் நூ-டு) மக்களினத்துக்கு ஒரு முன்னோடியாய்த் திகழ்கிறது. வைதிகநெறித் திருமணங்கள் வழக்கில் வந்தவுடனே மக்கள் சமுதாயத்தில் சாதி, மதம், குலம், கோத்திரம் ஆகியவை பார்த்து திருமணம் செய்து வைக்கும் பழக்கம் ஏற்பட்டது. அந்நிலையில் மணமாகக் காத்திருக்கும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் இச்சுயம்வரத் திருமண முறை பெரிதும் பயன்படுகிறது. பெரும்பாலும் சாதி அடிப்படையில் இச்சுயம்வரத் திருமணம இந்நாளில் நடைபெறுகிறது. சான்றாக வன்னியர் குலம் அல்லது பிராமணர் அல்லது வேளாளர் என்று ஏதாவது ஒரு பிரிவு அந்தந்தப் பிரிவினர்க்கு ஒரு சங்கம் உண்டு. அந்தந்த சங்கத்தார் ஆண்டுக்கு ஒருமுறை அல்லது அவரவர் வசதியைப் பொறுத்து தங்கள் பிரிவைச் சார்ந்த மணமாகா ஆண்களுக்கும் பெண்களுக்கும் சுயம்வர முறையில் நடைபெறும் திருமண ஏற்பாடு செய்வர். இம்முறையில் திருமணம் செய்ய விழையும் ஆண்களும் பெண்களும் ஒரு குறிப்பிடப்பெற்ற உறுப்பினர் தொகையைச் செலுத்தி உறுப்பினராகச் சேர்தல் வேண்டும். பிறகு ஒரு நாள் குறிப்பிடுவர். அந்நாளில் மணஞ்செய்து கொள்ள விரும்பி உறுப்பினரான ஆண்களும் பெண்களும்

நிகழ்ச்சி நடக்கும் இடத்திற்கு வருவார்கள். அங்குக் குழுமியுள்ள ஆண்களும் பெண்களும் ஒவ்வொருவராக அறிமுகம் செய்யப்படுவார்கள். பிறகு அவரவர் தங்கள் மனதிற்கிசைந்த வரனைத் தேர்ந்தெடுப்பார்கள். சுயம்வரம்—தானே வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுத்தல் என்பதாகும்.

**இலவசத் திருமணம் :**

மக்கள் தொகை பெருகிவரும் இந்நாளில் பலருக்கு மணஞ் செய்யும் பருவம் வந்தும் ஏழைமை காரணமாக மலர்ந்தும் மணம் பெறமாலே இருக்க நேரிடுகிறது. அந்நிலையில் உள்ளவர்களுக்கு உதவி, அவர்களுக்குத் திருமணம் செய்துவைப்பதைத் தருமமாகக் கருதும் செல்வந்தர்களும் இல்லாமலில்லை. அப்பெருந்தனக் காரர்கள் தங்கள் வசதிக்கு ஏற்ற வகையில் எத்தனை மணமக்களுக்கு முடியுமோ அத்தனை மணமக்களுக்கும் தங்கள் பொருட்செலவில் ஏதாவது திருமண மண்டபத்திலோ அல்லது பெரிய கோயில்களிலோ திருமணத்தை நடத்தி வைக்கின்றனர். சில கோயில் தேவஸ்தானங்களும் இலவசத் திருமணங்களை நடத்தி வைக்கின்றன.

இவ்வாறு இந்நாளில் ஏழைகளுக்கு இலவசத் திருமணம் செய்துகொள்ள வாய்ப்பிருக்கிறது என்பதை நடைமுறையில் அறியலாம். சான்றாகச் சமீபத்தில் செப்டம்பர் ஆறாம் தேதி 1984-ம் ஆண்டில் காஞ்சிபுரத்தில் ஒரே பந்தலில் 101 ஜோடிகளுக்கு இலவசத் திருமணம் நடந்தது. காஞ்சி சங்கராச்சாரியார் இந்த் திருமணங்களை நடத்தி வைத்தார். காஞ்சி ஏகாம்பரநாதர் கோயிலில் இந்தத் (தொகை) திருமணத்துக்காக பெருமன்வில் பந்தல் போடப்பட்டு மாவிலை தோரணங்களாலும் மின்சார விளக்குகளாலும் அலங்காரஞ் செய்யப்பட்டது.

அன்று காலை 7-35 மணி முதல் 8-35 மணிவரை இந்த திருமணங்கள் நடைபெற்றன. இந்த 101 மணமக்களுக்கும் திருமண ஆடைகள் மலர்மாலைகள், தாலி ஆகியவை இலவசமாகத் தரப்பட்டன. திருமணப் பந்தலில் அவரவர்களுக்கு ஒதுக்கப்பட்ட இடத்தில் மணமக்கள் இருக்க வேண்டும். அங்கு வைதிக முறைப்படி தீயோம்பி, சடங்குகள் நடைபெற்றன. பிறகு கெட்டி மேளம் கொட்ட மணமக்கள் மாலை மாற்றிக்கொண்டனர்.

பிறகு மணமகள் கழுத்தில் மணமகன் தாலி கட்டுதல் நடைபெற்றது. திருமண விழாவையொட்டி மணமக்கள் ஊர்வலம் வருதலும் உண்டு. இவ்வாறு ஆங்காங்கு பலஜோடிகளுக்கு ஒரே பந்தலில் இலவசத்திருமணம் நடைபெற, பெரிய செல்வந்தர்கள் முன்வருகின்றனர். பலஜோடிகள் இணைந்து இல்லறம் மேற்கொள்ள உதவும் அவர்களது தொண்டு போற்றுதற்குரியது.

---

'காதல் செய்யும் மனைவியே சக்தி கண்டீர்
கடவுள்நிலை அவளாலே எய்த வேண்டும்.' பாரதியார்

# திருமணச் சடங்குகள்

தமிழ் நாட்டில் பிறந்து, தமிழ்மொழியைத் தாய்மொழியாகக் கொண்டு பேசி, நாடும், ஊரும், வீடும், கோயிலும் எடுப்பித்து, தங்கள் நாட்டுஉணவு உடை, அணிகலன்களைக்கொண்டு வாழ்ந்த பண்டைத் தமிழர் களவொழுக்கம் பூண்டு வழுவாது மணஞ் செய்து கொண்டனர். பண்டைத்தமிழர் திருமணம் கலப்பற்ற தூய தமிழ்த் திருமணமாகும். பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில்

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"[1]

எனவரும் நூற்பா பழந்தமிழ் மக்களது திருமணச் சடங்குகுறித்து எழுந்ததாகும். திருமணம் என்னும் கட்டுப்பாடு வாழ்க்கையின் இன்றியமையாத ஒன்று. "'மணச்சடங்குகள் (கரணம்) தேயந் தோறும் இனந்தோறும் வேறுபடுவன. காலந்தோறும் கூடுவன; குறைவன; மயங்குவன'. (The History of Marriage in Psycholoy of sex Vol II P. 507, - Havelock Ellis). ஆதலின் வாழ்வியல் அறிஞர் தொல்காப்பியர் கற்பென்னும் தலையாய அறத்தை வலியுறுத்திக் கரணமொடு புணர என்று சடங்கினைப் பொதுப் படக் கூறினார். தன் காலத்துத் தமிழ்ச் சமுதாயம் தழுவிய சடங்குகளை-கரணங்களை வெளிப்படையாகச் சொல்லவில்லை. குறிப்பிட்ட ஒரு காலச் சடங்குக்கு வழிவழித் தமிழரை அடிமைப் படுத்த விரும்பவில்லை. 'கரணமொடு புணர' என்ற பொது நடையால், காலத்திற்கேற்ற நடைமுறைகளை அறிவோடு தழுவிக்கொள்ள தொல்காப்பியம் வழிவகுத்தல் காண்க. இவ்வாறு இன்ன கரணம் வேண்டும் என்று விதிந்து உரையாவிட்டாலும், அரசுக்கு ஒரு கொடி போல வரைவுக்கு ஏதாவது ஒரு கரணம் - பலர் அறிய வெளிப்படையான சடங்கு - வேண்டும்

---

1. தொல், கற். சூத். 1

என்பதுவே ஆசிரியர் துணிபு''.[2] பண்டைத் தமிழரின் திருமண முறை குறித்து அறிய உதவுபவை அகநானூறு எனும் தொகை நூலில் இடம்பெறும் இரண்டு (86, 136) பாடல்களே ஆகும். அப்பாடல்களில் திங்கள் உரோகிணியைச் சேர்ந்து உச்சநிலை அடையும் நாளை மணத்திற்கு ஏற்ற நன்னாளாகக் கொள்ளுதல், மணப்பந்தலிட்ட அதன்கண் புதுமணல் பரப்பி வைத்தல், பந்தலை மலர் மாலைகளால் அலங்கரித்தல், விளக்கேற்றி வைத்து இறைவழிபாடு செய்தல், இருள்பிரியும் இளங்காலையில் முதிய மங்கலப் பெண்டிர் தங்கள் உச்சியில் நீர்க்குடங்களில் நீர் கொண்டு வந்து முறையாக அளித்தல்; மக்கட்பேறுடைய பெண்டிர் நால்வர் அவற்றை வாங்கி நெல்லும் மலரும் அவற்றிலிட்டு மணமகளை நோக்கி, 'நீ கற்பின் வழுவாது நல்ல அறங்கள் பல வற்றைச் செய்து, கொழுநன் விரும்பும் மனைக்கிழத்தியாக வாழ்க' என வாழ்த்தி நீராட்டுவித்தல், மணமக்கள் புத்தாடை அணிந்து மகட்கொடைக்குரியோரும் தமர் பலரும் ஒருங்குகூடி அம்மணமகளைப் 'பெருமனைக்கிழத்தியாக பெருவாழ்வு வாழ்வாயாக' என வாழ்த்தி மணமகனுக்கு அளித்தல், உழுந்து கலந்த கொழுமைமிக்க நல்லுணவினை எல்லோர்க்கும் விருந்தாக அளித்தல், அன்றிரவே மணமக்களைக் கூட்டுவித்தல் ஆகிய இவையே திருமண நிகழ்ச்சிகளாகக் கூறப்பட்டுள்ளன. பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் தமிழர் திருமணத்தை ஊராரறிய வெகு விமரிசையாகச் செய்திருத்தல் வேண்டும். பலர் முன்னிலையில் ஏற்படும் இவ்வுறவு ஏற்றுக் கொள்ளப்பட்டது.

மக்கள் வாழ்ந்த காலம், சூழல், நிலம், பண்பாடு, செல்வ நிலை, மனநிலைக்கேற்ப இல்லற அமைப்பும் திருமணமுறைகளும் ஏற்படலாயின. கி.பி இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய சிலப்பதிகார காலத்திலிருந்து தமிழ்த் திருமண முறையில் பெருமாற்றம் தலைகாட்டத் தொடங்கியது. இக் காப்பியத்துள் பெற்றோர் பார்த்து முடிவுசெய்யும் திருமணம், சாதி வழித் திருமணம் கூறப்படுகின்றது. மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத் தீ வலம் வரும் மணச்சடங்கு இடம் பெற்றுள்ளது. சிலப்பதிகாரத்திற்குப் பின் தோன்றிய இடைக் காலக் காப்பியங்களுள் பல்வேறு திருமணச் சடங்குகள் கூறப் பட்டுள்ளதைக் காணலாம். சமய நூல்களிலும் வேதநெறிப் பட்ட திருமணங்களே கூறப்பட்டுள்ளன. பெரியபுராணத்தில் தமிழக மக்களிடையே நிலவிய திருமண வழக்கங்களை விரிவாக

---

2, பக். 89. டாக்டர் . வ. சுப. மாணிக்கம். தமிழ்க்காதல்.

ஆசிரியர் கூறியுள்ளார். கம்பராமயணத்தில் இராமன், சீதை திருமணம் களவு வழிப்பட்டாதக் காட்டப்பட்டு பின்னர் வசிட்டர் வேள்விச் சடங்கை நடத்த மந்திர விதிப்படி ஆகுதியாவையும் நேர்ந்தே தையலின் கரம் பற்றியதாகக் கூறப்படுகிறது. திருவிளையாடற்புராணத்தில் வரும் தெய்வத் திருமணங்களும் வைதிக நெறிச் சடங்குகளுடன் கூடியதாகவே காட்டப்பட்டுள்ளன.

வேற்று நாகரிகத்தைப் புலப்படுத்தும் சுயம்வரத்திருமண முறை பற்றி நளவெண்பா, சூளாமணி, அரிச்சந்திர புராணம் குறிப்பிடுகின்ற தமிழ் நாட்டு நிச்சயதார்த்த நிகழ்ச்சியை இஸ்லாமிய இலக்கியமாகிய சீறாப்புராணம் கூறுகிறது அண்மைக் காலத்தை நோக்கின் பொருட்செலவுகுறைந்த திருமணம் நடத்த வழிகாட்டியுள்ளார் பாரதிதாசனர். சான்றோர் தலைமையில் பலர் வாழ்த்த மோதிரம் அணிவித்துமாலை மாற்றிக்கொள்ள திருமணம் முடிந்துவிடுகிறது. இடைக்கால மறைநெறிக்கு மாறுபட்டது இத்தகைய திருமணம். இவ்வாறு சீர்திருத்தத் திருமணங்கள் எளிய முறையில் அமைத்துக் கொடுக்கப்பட்டாலும் வைதிக நெறிப்பட்ட, நெறிப்படாத இருவகைகளிலும் திருமணம் நடைபெறுவதைத் தற்காலத்தில் காண்கிறோம்.

வைதிக நெறிப்படித் திருமணம் செய்யும் பொழுது ஒவ்வொரு சமூகமும் சில சம்பிரதாயங்களைக் கடைப்பிடித்து வந்தன. ஒவ்வொரு இனப்பிரிவினருக்கும் திருமணச் சடங்குகளில் வேறுபாடுகள் இருக்கக்கூடும். எனினும் திருமணச் சடங்குகள் ஒவ்வொன்றும் ஒப்புயர்வற்ற பொருள் பொதிந்ததாகவே காணப்படுகிறது. இச்சடங்குகள் நாளடைவில் சமயக் கோட்பாடுகளுடன் ஒன்றி ஒருவித தெய்விகத் தன்மை பெற்றன. சிலசமயம் இச்சடங்குகளுக்கும் சமயக் கோட்பாடுகளுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லாதிருக்கலாம். எனினும் சமயக் கோட்பாடுகளுடன் செய்யும் பொழுது 'திருமணம்' என்ற இந்த மணவினை புனிதத் தன்மை பெறுகிறது, மேலும் திருமணம் என்பது ஒரு புதிய சந்ததி தோன்றுவதற்குரிய வாழ்க்கையின் நுழைவாசல். அத்தகைய இல்லறம் நல்லறமாய் அமைய ஆண்டவனை வேண்டி எந்தச் செயலையும் செய்கிறோம். எனவே நாளடைவில் திருமணச் சடங்குகள் அவரவரது சமயக் கோட்பாடுகளுடன் ஒன்றிவிட்டன எனலாம். சிலப்பதிகாரக் காலத்தில் தோன்றி கி.பி.எட்டாம் நூற்றாண்டு தொட்டுத் தொடங்கி விரிவாகி விட்ட வைதிகத் திருமணச் சடங்குகள் எவை? அவற்றின்

பொருண்மை, அவை இலக்கியங்களில் பெறுமிடம் ஆகியன குறித்து அறிவோம்.

## உறுதி கூறல்

திருமணம் சுவர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகிறது என்று ஒரு பழமொழி உண்டு. இன்னார்க்கு இன்னார்தான் கணவன் மனைவி என்பது பிறப்பிற்கு முன்பே நிச்சயிக்கப்பட்டு விடுகிறது. என்பர். பழந்தமிழர் வாழ்க்கையில் தலைவனும் தலைவியும் பெற்றோர் தலையீடு இல்லாமல் காதல் புரிந்து இல்லறவாழ்க்கை நடத்தினர், தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் பிரியேன் என்று உறுதிமொழி கூறி உடன்பட்டனர். இவ்வுறுதி மொழிக்கு அவ்விருவர் மனச்சான்று தவிர வேறு சாட்சி கிடையாது. இவ்வாறு பிறர் சாட்சி இன்றி ஒன்றுபடும் உள்ளங்களிலும் நாளடைவில் களங்கம் ஏற்படத் தொடங்கியது, இதன் விளைவாகப் பலர் அறிய, களவு மணம் செய்து கொண்ட தலைவன் தலைவிக்கும் பெண்ணிலத்தில் மீண்டும் திருமணம் செய்தனர். காதலில் பொய்யும் வழுவும் தோன்றின. இதனையே தொல்காப்பியர்

> பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
> ஐயர் யாத்தனர் கரணம் என்ப''

என்று குறிப்பிடுகின்றார். இதன் மூலம் யாரும் அறியாமல் தொடங்கப்பெற்ற இல்வாழ்க்கை பலர் முன்னிலையில் மணமக்கள் பெற்றோராலும் உற்றாராலும் ஒன்றாக இணைந்து வாழத்தொடங்கும் ஒரு விழாவாக நடத்தப்பெற்றது. இம்மாற்றம் தமிழர் வாழ்க்கையில் ஒரு பயனுள்ள திருப்பு மையமாய் அமைந்தது. இன்றைய நாளில் சீர்திருத்தத் திருமணங்களில் பெற்றார் உற்றார் முன்னிலையில் மணமக்கள் ஒருவருக்கொருவர் உறுதிமொழி கூறி மணப்பதே முக்கிய நிகழ்ச்சியாக அமைந்துள்ளது.

தொல்காப்பியர் கூறும் 'கரணம்' என்ற சொல் திருமணச் சடங்கைக் குறிப்பதாகும். கரணத்தின் நோக்கத்தையும், கரணத்தின் போது மேற்கொள்ளப்படுகின்ற உறுதிமொழியையும் மணமக்கள் தம் வாழ்நாள் முழுவதும் போற்றிக் காத்தல் வேண்டும். தொல்காப்பிய ஆராய்ச்சி உரையில் பேராசிரியர் இலக்குவனார் 'கரணம்' என்ற சொல்லுக்குத் தரும் விளக்கம் இந்தவிடத்தில் பொருத்தமாக அமைகிறது. அவர் கூறும் விளக்கமாவது:

'கரணம் என்ற சொல்லுக்கு இன்னொரு பொருளும் கொள்ள லாம். இக்காலத்தும் கரணம் என்று சொல்லப்படுபவர்கள் ஊர்க் கணக்கு எழுதும் கணக்கப் பிள்ளைகள் ஆவார். கரணம் கணக்கு எழுதுவோரைக் குறிப்பதால் எழுதுதலையும் குறிப்பதாகும். ஆதலின் இன்ன ஆடவனுக்கு இன்ன பெண் மனைவி என்று எழுதிக்கொள்ளும் பழக்கமும் இருந்திருக்கலாமன்றோ? அவ்வாறு எழுதுதலையே ஆசிரியர் தொல்காப்பியர் கரணம் என்று குறித்தி ருக்கலாமன்றோ? இன்றும்பழங்கால முறைப்படி திருமணம்கொள் வோர், திருமணத்துக்கு முன்னால் மணமகள் வீட்டாரும், மண மகன் வீட்டாரும் மணமகள் வீட்டில்கூடி இவ்வாறு எழுதி உறுதிப் படுத்துவதைக் காணலாம். இந்நிகழ்ச்சியை மணவோலை எழுது தல் என்றும் நிச்சயதார்த்தம் என்றும், வெற்றிலை பாக்கு மாற்றல் என்றும் அழைப்பர். தொல்காப்பியர்காலத்து வழக்கமே இன்றும் தொடர்ந்து வந்துள்ளது என்று கொண்டால் குற்றம என்னை? இப்பழக்கமே பதிவு முறையாக வளர்ச்சி பெற்றுள்ளது.'[1]

உறுதி கூறல் அல்லது இந்நாளில் நிச்சயதார்த்தம் என்று சொல்லப்படும் நிகழ்ச்சி குறித்து இலக்கியச் சான்றுள் என்று பார்க்கும பொழுது, மகட்கேட்டு மணமகன் வீட்டார் பெண் வீட்டிற்குச் சென்று பேசல், கன்னிகாதானம் செய்யும் பொழுது குலம் கோத்திரங் கூறி என் மகளை உனக்குத் தருகிறேன் என்று தாரை வார்த்துக் கொடுத்தல் போன்றவை காணப்படுகின்றன.

தமிழ் நாட்டில் நடைபெறும் நிச்சயதார்த்த நிகழ்ச்சியைச் சீறாப்புராணம் என்னும் இஸ்லாமிய இலக்கியம் கூறுகிறது. இது தமிழ்ப் பண்பாட்டையொட்டி எழுதப்பட்ட இஸ்லாமிய இலக் கியத் திருமணம் ஆகும். இந்நூலை எழுதியவர் உமறுப்புலவர். 17-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர். சீறாப்புராணத்தில் 'மணம் பொருத்து படலம்' என்ற பகுதியில் தமிழ் நாட்டுத் திருமண நிச்சயதார்த்த நிகழ்ச்சி பற்றி சான்று கிடைக்கிறது. நபிகள் நாய கம் மணமகன் கதீஜா நயாகி மணமகள். முதலில் மண மகன் வீட்டார் மகள் கேட்டு கதீஜாநாயகியின் தந்தை குவைலித் என்பவரிடம் வருகின்றனர். முழுமனதுடன் தன்னிசைவைக் கூறுகிறார் குவைலித் இருபக்கத்தாரும் சம்மதித்தால் போதுமா? நடக்க வேண்டிய சடங்குகள் நடக்க வேண்டுமே. சடங்குக்கு

1. பக். 179. டாக்டர். சி. இலக்குவனார் —தொல்காப்பிய ஆராய்ச்சி.

பொருட்களை பெருமக்கள் கேட்டு வாங்கிச் சொல்கின்றன. சீர்வரிசைகள் பேசி முடிக்கப்படுகின்றன. மணநாள் நிச்சயிக்கப் படுகிறது.

"இருவருஞ் சம்மதித்துரைத்தார் எனக்குறைஷி
குலத்தரசர் இதயங் கூர்ந்து
மருமரு பூங்குழலாட்கு முஹம்மதுக்கு
மணநாளை வகுத்துக் கூறித்
தெரிதரு சீதனப் பொருளும் இன்னதென
வகைவகையாய்த் தெளியச் சாற்றிப்
பொருவரிய பொற்பிளவும் வெள்ளிலையுந்
தருகவெனப் புகழ்ந்திட் டாரால்"

குவைலித் அவர்கள் தன் சம்பந்தியாகிய ஹஸரத் அபீத்தாலிபு அவர்கள் கரத்தில் வெற்றிலை பாக்கு ஏலம், இலவங்கம், தக்கோலம், கற்பூரம், சந்தனம் ஆகியவற்றைக் கொடுக்க அவர் அவற்றை வாங்கி, உறவோர்க்கும் வேதியர்களுக்கும் வழங்கித் தன் வலக்கரத்தை குவைலித் அவர்களின் கரத்தோடு சேர்த்து "வருகின்ற திங்கட்கிழமை' முகூர்த்தம் என்று சொன்னார்கள்' என்று தமிழ்நாட்டில் நடைபெறும் நிச்சயதார்த்த தின நிகழ்ச்சியை மக்கா நகரின்கண் வைத்துக் காட்டுகிறார் தமிழ்மகனாகிய உமறுப்புலவர்.

"வெள்ளிலை பாக்கு ஏலம் இலவங்கமுடன்
தக்கோலம் விரை கற்பூரம்
அள்ளிய சந்தனச் சேறும் பொற்கலத்தில்
குவைலித் எடுத்தருள வாங்கி
வள்ளியோர்க்கு இனிது ஈந்து மறையோர்க்கும்
எடுத்தருளி வலக்கை சேர்த்தித்
தெள்ளிய நன்முகூர்த்தம் முதற்றிங்களென
வகுத்துரைத்தார் செவ்வியோரே."

## சுமங்கலி பிரார்த்தனை

கோயில்களில் நடைபெறும் திருவிழாக்களுக்குக் கொடி ஏற்றம் எப்படி முக்கியமோ அதுபோல திருமணத்திற்குச் சுமங்

கலி பிரார்த்தனை முதன்மையான செயலாகும். இதை ஒவ்வொரு வகுப்பினரும் ஒவ்வொரு விதமாகக் கொண்டாடினாலும் இதன் இலட்சியமும் கருத்தும் ஒன்றே ஆகும். இதில் நமது கடமையின் உச்சத்தைக் காணும் பண்பாடு அமைந்துள்ளது எனலாம். இது உயிருடன் இருப்பவர்களை மட்டும் மதித்து வணங்கி மரியாதை செய்வதோடல்லாமல் சுமங்கலிகளாய் வாழ்ந்து மறைந்த பெண்டிரையும் வணங்கி வழிபட்டு திருமணம் நடைபெறப் போகும் மணப்பெண்ணுக்குத் தீர்க்க சுமங்கலியாய் வாழும் சிறப்பினைக் கொடுக்கும்படி தனிப்பட்ட முறையில் வேண்டிச் செய்யப்படும் ஒரு சிறந்த சடங்காகும். இதைச் சில வகுப்பினர் **'பூவாடைக்காரி கும்பிடுதல்'** என்பர். புதிய புடைவைகள் வாங்கி வீட்டில் விருந்துச் சாப்பாடு செய்து சுமங்கலிப் பெண்களைச் சுமங்கலித் தெய்வங்களாக எண்ணி வழிபட்டு, வாங்கியுள்ள புதுப்புடைவைகளைக் கொடுப்பார்கள்.

''ஒரு சிலர் செட்டி நாட்டுப் பிரதேசத்தைச் சேர்ந்த பிராமண சுமங்கலிப் பெண்டுகள் செய்யும் முறை சிறிது மாறுபட்டு இருக்கிறது. வாழையடி வாழையாக வரக்கூடிய ஒரு பழைய மண்பானையில் மங்கலிப் பெண்டுகள் பாட்டி இருப்பது ஐதிகமாம். அந்தப் பானையில் ஒரு பழைய புடைவை, பாட்டியின் மாங்கல்யம் இரண்டையும் வைத்து பத்திரமாக வைத்திருப்பார்களாம். திருமணம் செய்வதற்கு முன்னர் சுமங்கலி பிரார்த்தனை செய்யும் தினத்தன்று மெழுகிக் கோலமிட்டுச் சுத்தமாகச் சகல காரியங்களையும் செய்து,

> ''சுமங்கலிப் பெண்டுகளே! வருக இங்கே
> சுபங்களை நடத்திடுவீர் தாயே!
> அமரத்துவம் அடைந்திட்ட தெய்வீக அன்னைகளே!''

என்று பாடி, பானைக்குள்ளிருக்கும் பழம் புடைவையை எடுத்து விடுவார்கள். புதிய புடைவையை முறுக்கி கோலமிட்ட மணையில் பாட்டியைப் போல உட்கார வைத்து பழைய மாங்கலியம், புதிய மாங்கலியம்[5] வேறு சில அணிகளையும் பாட்டிக்கு போடுவார்கள். தூர இருந்து பார்க்கும் பொழுது ஒரு பெரிய பாட்டி உட்கார்ந்திருப்பது போலவே தோன்றி உணர்ச்சியையும் பூரிப்பையும் உண்டாக்கும். மணப்பெண்ணின் தாய், மணப்பெண், மற்ற சுமங்கலிப் பெண்கள் பாட்டியை வழிப்பட்ட பிறகு விருந்

---

பக். 5. தென்னாட்டுக் கல்யாண முறைகள்

துண்பர். சிலர் சுமங்கலிப் பிரார்த்தனை செய்வது வழக்கமில்லை என்று சொன்னாலும் திருமணத்தன்று காலையில் புடைவை, இரவிக்கையைத் தாம்பூலத்துடன் வீட்டுப் பெண்களுக்கோ, ஏழை சுமங்கலிக்கோ கொடுத்து விடுவர். யார் எப்படிச் செய்தாலும் தங்கள் குலதெய்வங்களாகிய சுமங்கலிகளை வேண்டிக் கொண்டு அந்தப் பிரார்த்தனையைச் செய்த பிறகுதான் மற்ற காரியங்களைச்செய்வது பழக்கமாகி விட்டது. இப்பிரார்த்தனையைப் பெண் வீட்டிலும், பிள்ளை வீட்டிலும் சமமாகச் செய்வார்கள். திருமண நாளுக்கு முன் வரும் ஒரு வெள்ளிக் கிழமையில் இதைச் செய்வர்.

### பந்தல் கால் நடுதல்

திருமணப் பந்தலின் அலங்காரமும் அதில் கட்டப்பட்ட வாழை, கமுகு போன்ற மங்கலப் பொருட்களின் காட்சிகளும் பார்ப்பதற்கு அழகாகத் தோன்றினாலும் அவை ஒவ்வொன்றிலும் ஆழ்ந்த கருத்தும் அடிப்படைத் தத்துவமும் நிறைந்திருக்கிறது. திருமணத்தின் மங்கள நிகழ்ச்சிகளுக்கு முதன்முதல் பந்தல்தான் எடுத்துக்காட்டாகவும், வசதிக்கு ஏற்றவாறு அழகாகவும் அமைகிறது. ஒரு புதிய மணமக்களின் வாழ்க்கைத் தீபத்தை ஏற்றி வைக்கும் சடங்கு பந்தலின் கீழ்தான் நடப்பதால் பந்தலுக்கு எத்தகைய குற்றமும் நேராமல் நல்ல முறையில் நடப்பதற்குதான் முதலில் நடும் பந்தல் காலுக்கு மஞ்சள் குங்குமம் இட்டு மாவிலை மலர் தோரணம் கட்டி, தேங்காய் உடைத்து கற்பூர ஆரத்தி செய்து மேளதாளங்கள் முழங்க மங்கலப் பெண்டிர் தொட்டு பந்தல் காலை நாட்டுவார்கள். வாழையடி வாழையாக குல விருத்திக்காக வளம்பல பெற்று சிறப்புற வாழ வேண்டும் என்பதற்காக வாழை, கமுகு முதலிய குலைகளைக் கட்டி அவற்றின் மூலம் மணமக்களை ஆசிர்வதிப்பர். குறித்த முகூர்த்த நாளுக்கிணங்க ஒரு நல்ல நாளில் உறவினர்களுடன் பெண் வீட்டிலும் பிள்ளை வீட்டிலும் பந்தல்கால் நாட்டுவர்.

### கல்யாணப்படி

திருமணப் பந்தல் எவ்வளவு முக்கியமோ அத்தனைக்கு மேம்பட்ட முக்கியத்துவம் கல்யாணப்படி அமைப்பதில் உள்ளது. இதனைத் 'திட்டாணி மேடை' என்றும் சொல்வர். சூடிக் கொடுத்த சுடர்க்கொடியான ஆண்டாள் பாடியபடி, 'முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற்கீழ்' அழகான படி அமைப்பதுதான் முக்கியத்துவம் வாய்ந்தது. கண்கவர் பந்தலைக் காட்டிலும்

அந்தச் சிறிய படிக்குந்தான் பெருமை அதிகம். அக்கினி சாட்சியாக மணம் செய்துகொள்ளும் விதிகள் அந்தப்படியின் மீதமர்ந்துதான் நடத்தப்படுகின்றன.

நல்ல வேளையில் இரண்டு சுமங்கலிகள் மண்ணைக் குழைந்து மூன்று அங்குல உயரத்திற்குச் சதுரமாகப் படி போடுவார்கள். அம்மேடையின் புறத்தில் செங்காவிக் கோலந்தீட்டி உட்புறத்தில் ஒன்பது வீடாக மாக்கோலங்காட்டி நடுவில் ஓமாக்கினிக்கு இடம் வைத்து அதன் மேற்புறத்தில் மணப்பீடம் அமைத்து அதன் மேல் இரத்தினக் கம்பளம் விரிக்க வேண்டும்.

கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என நான்கு மூலையிலும் நாட்டிய பந்தல்கால்களுக்கு நடுவில் இம்மணமேடை அமைக்கப்படுகிறது. பிறகு கீழ்த்திசையில் தேவேந்திரனையும், தென் கிழக்கில் அக்கினிக் கடவுளையும், தெற்கில் இயமனையும், தென் மேற்கில் நிருதியையும், மேற்கில் வருணதேவனையும், வடமேற்கில் ஈசான மூர்த்தியையும் ஆக எட்டுத்திக்குப் பாலகர்களையும் வேதமந்திரங்களால் ஆவாகனம் செய்து பொருத்த வேண்டும். சான்றாகக் கிழக்குத் திசையில் இந்திரனை வேதமந்திரங்களால் ஆவாகனம் செய்து, ஆயிரங்கண்ணுடையானுக்கு உகந்ததாக அனேக முகமுள்ள கிளைவிளக்கு ஏற்றி வைத்து பூசிப்பர். தென் கீழ்த்திசையில் தீக்கடவுளை முறைப்படி ஆவாகனம் செய்து குடவிளக்கேற்றி வைப்பர். வடகிழக்கு மூலையில் ஈசான மூர்த்தியை ஆவாகனஞ்செய்து, அந்த ஈசானனுக்குப் பிரீதி யார்த்தமாகவும், அதிதேவதா சொரூபமாகவும் அம்மியையும், குழவியையும் அபிடேகஞ் செய்து பூமாலை சூட்டி வைப்பர். அம்மிக்குத் தென் புறத்தில் பச்சையரிசி பரப்பி, சூரிய கிரகம் முதல் கேதுக்கிரகம் வரையிலும் ஒன்பது வீடாகத் தருப்பையினால் பிரித்து, முளை கட்டிய நவதானியங்களை அந்தந்தக் கிரகங்களுக்கு உவப்பாக மண்மடக்கிலிட்டு வைக்கவேண்டும். பிறகு மண்பானை ஏழு கொண்டுவந்து நூல் சுற்றி மாவிலை தருப்பை, தேங்காய் வைத்து சப்த ரிஷிகளை வேதமந்திரங்களால் ஆவாகனஞ்செய்து ஸ்தாபித்துநவக்கிரக முளைப்பாலிகை வைத்த இடத்திற்கும் அக்கினி கடவுளை அமைத்த தென்கீழ்த்திசைக்கும் நடுவில் வைக்கவேண்டும். பிறகு கிழக்கில்இந்திரனாகவமைத்தகிளைவிளக்குக்கு எதிரில் மணலைப்பரப்பி அதன் மேல் விபூதி, மஞ்சள், குங்குமம் இடப் பெற்று மாலை அணிவிக்கப்பட்ட ஒரு பெரிய பானையை (சால்) வந்து அதில் சப்த தீர்த்தங்களை நிரைத்து ஒரு மண் தட்டிற்கு

(கரகம்) விபூதி அல்லது திருமண் காப்புகுழைத்திட்டு அந்த கரகத்தைச் சப்த தீர்த்தங்கள் அடங்கிய பானையின் மேல் மூடியாக வைத்து வணங்க வேண்டும். இதனையே சாலுங்கரகமும் அமைத்தல் என்பர்.

### அரசாணிக்கால் :

இந்திரனுக்கு ஏற்றதாக வைக்கப்பட்ட கிளைவிளக்கிற்கும், சப்ததீர்த்தங்கள் விடப்பட்ட சாலிற்கும் நடுவில் பன்னிரண்டங்குலம் பள்ளந்தோண்டி அக்குழியில் நீர், பால், தேன் விட்டு, நவதானியங்கள் போட்டு, மூன்று மங்கலப் பெண்டிரை முறையே சரஸ்வதி, இலக்குமி, பார்வதி என்ற தெய்வங்களாகப் பாவனை செய்து அந்த மூவராலும் அரசாணிக்காலைப் பன்னிரண்டங்குலப்பள்ளத்தில் வைத்து அந்தக்குழியை நெல்லினால் மூடி, நீர், பால், தேன் தெளித்துப் பணிந்து வணங்குவர்.

அரசாணிக்கால் என்னும் அரசின் செடி, ஆலின்கிளை, கண்ணாலமுருக்கின் கொம்பு இம்மூன்றையும் பால், தயிர், தேன், சந்தனம் ஆகியவற்றால் அபிடேகஞ் செய்து தருப்பைப் புல்லால் கட்டுவர். இதில் அரசு பிரம்மாவையும்; ஆல்-திருமாலையும், முருக்கு-சிவனையும் குறிக்கும் என்பர். மும்மூர்த்திகளாகக் கருதப்படும் அரசாணிக்கால் நாட்ட வேண்டுமென்ற விதியை திருமணச் சடங்கில் அமைக்கக் காரணம் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் தொழிலையுடைய முத்தேவரும் சாட்சியாயிருந்து அருள்பாலிக்க வேண்டும் என்று கருதுவதேயாகும். மும்மூர்த்திகளாக அமைக்கப்பட்ட அரசாணிக்காலை மூன்று சக்திகளின் பாவனையாகக் கொண்டு ஊன்றிய அந்த மூன்று மங்கல மாதர்களுக்கு மரியாதை செய்வர்.

### திருமண எழுச்சி

திருமண நாளுக்கு முன்னாள் மணமகன், பெற்றோர், உற்றார் யாவரும் தன்னைச் சூழ்ந்து வர, மங்கல இயங்கள் ஒலிக்க மணப்பெண்ணின் ஊரைச் சென்றடைவான். இதை நாம் தற்காலத்தில் மாப்பிள்ளை ஊர்வலம், ஜானவாசம் என்றெல்லாம் கூறுகிறோம். இந்நிகழ்ச்சி பெரியபுராணத்தில் ஊர்வலம் என்ற சொல்லால் குறிக்கப்படாமல் திருமண எழுச்சி என்று குறிக்கப் பெற்றுள்ளது. இவ்வாறு நகர்வலம் வரும் மணமகனையும். மற்றவரையும் மணமகள்வீட்டார் பெருஞ்சிறப்புடன் இன்னியம் ஒலிக்க

மகிழ்வோடு எதிர்கொள்வர். இக்காட்சி திருஞான சம்பந்தர் புராணத்தில் மிகவிரிவாக ஆசிரியர் சேக்கிழாரால்காட்டப்பட்டுள்ளது. இதைப் போலவே இராமனின் தந்தை அயோத்தி அரசன் தசரத சக்கரவர்த்தி மகிழ்ச்சியுடன் தன் பரிவாரங்கள் சூழ மிதிலைக்குப் புறப்பட்டான். இந்தப் பயண ஊர்வலம் பல பாடல்களில் மிக அழகாகக் கம்பரால் வருணிக்கப்பட்டுள்ளது.

கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவளான ஆண்டாள் அருளிய நாச்சியார் திருமொழியின் வாரணமாயிரம் என்று தொடங்கும் பாடற்பகுதி வைதிக முறைத் திருமணச் சடங்குகள் எவை எவை என்பதைக் கூறுகின்றன. அவற்றுள் முதற் பாசுரமே மணமகன் நாராயணன் மணமகள் இல்லம் நோக்கி ஊர்வலம் வருகின்ற அருங்காட்சியே அழகாகப் பாடப்பட்டுள்ளது. மணமகன் ஊர்வலம் வருகிறது. அந்த நாராயணன் ஆயிரம் யானைகள் சூழ வருகின்றான். அவனை வரவேற்கும் முகமாக நகர முழுமையும் அலங்காரத் தோரணங்கள் கட்டப்பட்டுள்ளன. பொற்குடங்களில் பூரணகும்பம் வைத்து அவனை எதிர்கொள்கின்றனர்.

வாரண மாயிரம் சூழவ லஞ்செய்து
நாரண நம்பி நடக்கின்றா னென்றெதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தி. பி: 556

கி.பி. 12, ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இயற்றப்பட்ட பெரிய புராணத்தில் திருஞான சம்பந்தரின் வாழ்க்கை வரலாறு மிகச்சிறந்த முறையில் விரிவாக ஒவ்வொரு சிறு நிகழ்ச்சிகளும் விளக்கப்பட்டுள்ளன. மணப்பருவம் அடைந்த சம்பந்தருக்கு அவர் பிறந்த குல ஆசார நெறிமுறைப்படி திருமணம் நடைபெறுகிறது. அப்பொழுது நடைபெறும் மணமகனின் ஊர்வலம் விளக்கமாகச் சேக்கிழாரால் பாடப்பெற்றுள்ளது.

"நங்கள் வாழ்வென வருந்திரு ஞானசம் பந்தர்
(பெ.பு.28:1193
மங்க லத்திரு மணவெழுச் சியின்முழக்குப்"

போன்று கடல்கள் எழுந்தன என்கிறார்.

"சங்கொடு தாரை சின்னந் தனிப்பெருங் காளந் தாளம்
வங்கிய மேனை மற்று மலர்துளைக் கருவி யெல்லாம்

பொங்கிய ஒலியின் ஓங்கிப் பூசுரர் வேத கீதம்
எங்கணும் எழுந்து மல்கத் திருமணம் எழுந்த தன்றே''
(பெ. 4. 28:1199)

இவ்வாறு மங்கல இயங்கள் எழுந்தார்ப்ப, அடியவர்கள் தொடர மணமகன் திருஞானசம்பந்தர் சிவிகையில் அமர்ந்தனர். திருமணம் எழுந்தது. மணமகளின் ஊரான திருநல்லூர்த் திருப்பெருமணத்தை ஊர்வலம் சென்றடைந்தது எனப் பாடியுள்ளார்.

இதையே தற்காலத்தில் நாம் மாப்பிள்ளை அழைப்பு, ஜானவாசம் என்று சொல்லுகிறோம். அதாவது மணமகனை வரவேற்றல். சிலர் மணமகளை ஊர்வலமாக அழைத்துச் செல்லுதலும் உண்டு. திருமணத்திற்கு முதல்நாள் இரவு மணமகனை மணமகள் வீட்டிற்கு அல்லது திருமண மண்டபத்திற்கு அருகிலுள்ள கோயிலிலிருந்து மேளதாளத்துடன் அழைத்து வருவது. சேக்கிழார் காட்டும் மணமகன் ஞானசம்பந்தர் முத்துச் சிவிகையில் ஊர்வலம் போனார். நாகரிக வளர்ச்சி பெற்ற தமிழர் வாழ்வில் இந்நாளில் அலங்கரிக்கப்பட்ட வண்டியில் (car) இளஞ் சிறுவர் சிறுமியர் தன்னைச் சூழ்ந்தமர மணமகன் ஊர்வலம் நடைபெறுகிறது. திருமணம் செய்விப்பவரின் வசதிக்கேற்ப வாணவேடிக்கை, யானை முன்னே செல்லுதல், பாண்டு (band) வாத்தியக் குழுவினர் செல்லுதல் போன்றவை உடனிருக்கும். மணமகன் செல்லும் வண்டியின் பின்னால் நன்றாக அலங்காரம் செய்துகொண்டு மகளிர் மகிழ்வோடு சீர்வரிசை நிறைந்த தட்டுக்களை ஏந்திச் செல்வர்.

இந்தி மொழியில் இந்த மாப்பிள்ளை அழைப்பை ''பராத்'' என்றும் மணமகன் சுற்றத்தார் தங்குமிடத்தை ''ஜான்வாஸா'' என்றும் சொல்வர். மணமகனை அழைத்து பின்னர் ஜான்வாஸாவில் கொண்டு போய் விடுவது ஜானவாசமாகிவிட்டது.

### காப்பு கட்டுதல்

ஒரு தட்டில் பச்சரிசி, வெற்றிலை, பாக்கு, தேங்காய் வைத்து அத்தேங்காயின் மேல் மஞ்சள் தோய்த்த நூலிற் கோத்த மஞ்சள் ஒன்றினை வைக்கவேண்டும். மந்திரங் கூறி ஆசான் அல்லது புரோகிதர் மணமகன் வலது கை மணிக்கட்டில் அணிவிப்பார். இது கடவுளை வேண்டி எடுத்துக்கொண்ட செய்கை இனிது நிறைவேற வேண்டும் என வேண்டிக் கொள்ளும் முன்

அடையாளமாகும். இதே போல வேறொரு மஞ்சள் நாணினை வைத்து மணமகளின் இடதுகை மணிக்கட்டில் அணிவித்தல் வேண்டும். இது திருமண நாளுக்கு முன்தினம் நடைபெறும்

**காசி யாத்திரை**

இதைக் குறித்த ஒரு செய்தி பொதுவாக எல்லோராலும் சொல்லப்படும். அதாவது முன்னாளில் கல்வி பெற விரும்பும் மாணவர்கள் நல்ல குருவிடம் குருகுலவாசம் செய்து வித்தைகளை முழுமையாகக் கற்ற பின்பு அவருடைய ஆசியைப் பெற்று வீடு திரும்புவர். அப்பொழுது குருவானவர் சீடனை நோக்கி, மாணவனே என்னுடைய மனம் மகிழ நீ வித்தைகளை நன்கு கற்றாய். இனி உன் பெற்றோரிடம் சென்று, இல்லற வாழ்வை மேற்கொண்டு உன் கடமைகளைச் செய்வாயாக. அவ்வாறு உன் பெற்றோரிடம் போய்ச் சேருமுன் புண்ணிய தீர்த்த யாத்திரைகள் செய்து காசிக்குச் சென்று புதிய கங்கை நீராடிச் செல்வாயாக என்றுகூறி அனுப்புவார். அந்த மாணவன் அப்படியே செல்ல வழியிலே சிலர் அவனைக் கண்டு காசிக்குப் போகவேண்டாம் என்றும் என் கன்னிகையைக் கொடுத்துக் கல்யாணம் செய்து வைப்பதாக அவருள் ஒருவர் கூறியதாகவும் பழைய காலத்திய பழக்கவழக்கங்கள் சொல்லுகின்றன. இதைத்தான் மாப்பிள்ளை திருமணவினை தொடங்குவதற்கு முன் காசியாத்திரைக்குப் புறப்படுவதாக ஒரு சம்பிரதாயத்தை வழக்கில் கொண்டு வந்தனர். இதன் பொருள் பிரும்மசரிய ஆசிரமத்தில் மணமகன்கடைபிடித்த கட்டுத்திட்டங்களிலிருந்து விடுபடும் நேரந்தான் காசியாத்திரை. அப்போதுதான் காலுக்குச் செருப்பு, குடை, மைபிட்டுக் கொள்ளுதல் கண்ணாடியில் முகம் பார்த்தல் முதலியவற்றைச் செய்ய அவனுக்கு அனுமதி தரப்படுகிறது.

காசியாத்திரைக்குக் கிளம்பும் மணமகனிடம் பெண்ணின் தகப்பனார் (ஒரு சாராரில் பெண்ணின் சகோதரன்) "அப்பா இப்போது காசிக்குப் போக வேண்டாம். என் பெண்ணை மணந்து கொண்டு, இனிது இல்லறம் நடத்து. பல ஆண்டுகள் இல்லறம் நடந்திய பிறகு, பிதுர்காரியங்களைச் செய்ய மனைவியுடன் பின்னர் போகலாம் என்பார். மணமகனும் சம்மதப்பட்டுத் திரும்பி வருவான். பிறகு மணப்பலகையில் அமரச் செய்து மருமகன் காலைப் பிடித்து பெரிய தட்டில் வைத்து மஞ்சள் நீராட்டி வெள்ளியாலான மெட்டியைக் கால் விரலில்

அணிவிப்பார். பிறகு புதிய குடையை விரித்துப் பிடித்து மண மகனைப் பந்தலுக்கு அழைத்துச் செல்வார்.

**மணப்பெண்ணை ஆறாட்டுவது**

மணமகன் காசியாத்திரை போய்விட்டுத் திரும்பி வருவதற்குள் மணப்பெண்ணை ஆறாட்டுவது என்னும் சடங்கு குறிப்பிட்ட சிலரால் நடத்தப்படுகிறது. மணப்பெண்ணுக்கு மாமியாராகப் போகும் பெண்மணி புதிய புடைவையை அணிவித்து, கழுத்தில் மெல்லிய தங்கத்தாலான கம்பியை அணிவிப்பார்கள். அதன் பிறகு அவள் காலில் மெட்டி அணிவிப்பார்கள். மணப் பெண்ணின் இரு கைகளிலும் வெற்றிலை, பாக்கு, பழம், தேங்காய் கொடுத்து அருகில் நிற்கும் அவளுடைய தாயாரின் புடவைத் தலைப்பில் வைக்கச் சொல்வார்கள். இதேபோல் மூன்று முறை செய்வார்கள். அடுத்து ஒரு வெண்கலப்படியில் அரிசியை நிறைத்து, அதன்மேல் சிறிய வெண்கல கைவிளக்கை ஏற்றி வைத்து மணப்பெண்ணின் பாதத்திலிருந்து தலைவரை அந்தப் படியால் ஏற்றி இறக்குவார்கள்.

இதற்குப் பிறகு மாமியாராகப்பட்டவர் மணமகளை வாசல் வரை அழைத்துச் சென்று, அவள் கால்களை நீரால் அலம்பி, அவள் இடுப்பைச் சுற்றி பட்டுத்துணி ஒன்றைக் கட்டி, கையைப் பிடித்து அணைத்தவாறு உள்ளே அழைத்து வருவார். இப்படிச் செய்வது தன் மகன் அவளுக்குத் தாலி கட்டும் முன்பே, தான் அவளை அன்புடன் ஏற்றுக்கொண்டுவிட்டதாக ஐதீகம்.*

**நுகத்தடி வைத்தல்**

இதைக் குறித்து ஒரு முக்கிய இதிகாசக் கதையும் உண்டு. இந்திரனுக்கு சோமரசம் கொடுத்து மகிழ்விப்பது என்பது ஒரு சாஸ்திரம். அப்படி ஒவ்வொரு பெண்ணும் செய்துதான் நல்ல வரனை அடைவார்களாம். அபலா என்கிற ஒரு பெண் அழகில்லாததால் அவளை மணந்து கொள்ள யாரும் முன்வரவில்லை. தான் எப்படி இந்திரனுக்கு சோமபானம் கொடுத்து மகிழ்வித்து நல்ல கணவனை அடைவது என்று வருந்தினாள். ஒரு நாள் நீராடும்போது சோமலதை என்ற ஒருவகைக் கொடி ஆற்

---

* இக்குறிப்பு 'மங்கை' மாதயிதழிலிருந்து எடுக்கப்பட்டது.

றில் மிதந்து இவளிடம் வந்தது. உடனே அபலா அக்கொடியை எடுத்துக் கசக்கி அதன் சாற்றை இந்திரனுக்கு அர்ப்பணம் செய்தாளாம். இதை உணர்ந்த இந்திரன் மனமிரங்கி அவளுக்குச் சூரியன் மூலம் அழகை உண்டாக்கும் பொருட்டு நுகத்தடியைத் தலைமீது வைத்து அதிலுள்ள துவாரங்கள் வழியே திருமாங்கல்யத்தை வைத்து நீரை வார்த்து சூரியன் மூலம் அழகை உண்டாக்கிப் பின் திருமணம் செய்து வைத்ததாக சாஸ்திர சப்பிரதாயமான சரித்திரம் கூறுகிறது.

மணப்பெண்ணைத் தகப்பனார் மடியில் உட்கார வைத்துக் கொள்வார். மணமகள் தலையில் தருப்பையால் செய்த வளையத்தை வைத்து, அதன் மீது ஒரு நுகத்தடியை வைப்பார்கள். நுகத்தடியின் துவாரம் தலை மீது இருக்க வேண்டும். பிறகு நுகத்தடியின் துவாரத்தில் மந்திரம் கூறி பொன் காசை வைக்க வேண்டும். இக்காலத்தில் பொன் காசுக்குப் பதிலாகத் திருமாங்கலியத்தையே வைக்கிறார்கள். அதன்மேல் படும்படியாகத் தண்ணீர் விடுவது எவ்வித நோயும் அணுகாது இருப்பதற்காகவே ஆகும். மேலும் எல்லாப் பெண்களுக்கும் அழகும் நல்ல வரனாகவும் அமைவதற்காக இந்த முறையை முக்கியச் சடங்காகச் செய்கிறார்கள். எனினும் பொதுவாகச் சொல்லப்படும் கருத்து என்னவெனில் தலை இரட்டை மாட்டுவண்டியின் நுகத்தடியைப் பெண்ணின் மீது வைத்து மாங்கல்ய சூத்திரங்களை மாங்கலியத்தோடு நுகத்தடியின் மீது வைத்து மந்திரப் பிரமாணம் செய்வது சம்சாரமாகிய வண்டியை இருவரும் இரட்டைக் காளைகள் போல் ஒரு மனப்பட்டு இன்பமாக நடத்திச் செல்லவேண்டும் என்கிற தத்துவத்தை எடுத்துரைப்பதாகும்.

## கூறை அணிதல்

திருமண வினைகளுள் நுகத்தடி வைக்கும் சடங்கு நடந்ததும் மணமக்களுக்குத் திருமண ஆடை வழங்கப்பெறும். மாப்பிள்ளையும், பெண்ணும் மணப்பந்தலை வலம் வந்து மணப்பலகையில் அமர, ஒரு பெரிய தட்டில் வேஷ்டி, கூறைப்புடவையையும் மணமாலைகளையும் பாக்கு வெற்றிலையுடன் வைத்து பூசை செய்து திருமணங் காண வந்த பெரியோர்கள் வாழ்த்திக் கொடுக்க, மலர் அட்சதையுடன் மணமக்கள் கையில் கொடுத்து அந்தக் கூறைப்புடவையையும் வேஷ்டியையும் பெண்ணையும் பிள்ளையையும் அணிந்துவருமாறு செய்வர்.

மாப்பிள்ளைக்குத் திருமண வேட்டி அணிவித்து மணமாலை சூட்டி, மாப்பிள்ளைத் தோழன் மணமகனை அழைத்து வந்து மணப்பந்தலை வலமாக வந்து மணமேடையில் அமரச் செய்வான். அதே போல மணப்பெண்ணையும் கூறைப்புடைவை அணிவித்து தோழிப்பெண் அவளை அழைத்து வந்து மணமகனுக்கு வலப் பக்கத்தில் அமரச் செய்வாள்.

மணப்பெண்ணுக்கு புத்தாடையை அணிவிப்பது மண மகனின் சகோதரியின் பொறுப்பாகும். இப்பழக்கம் எப்போது முதல் வழக்கில் இருந்து வருகிறது என்பது தெரியவில்லை. எனினும் ஆண்டாளின் திருமொழியில் அவளுக்கும் நாரணனுக் கும் நடைபெற்ற திருமணத்தில் அவளது நாத்தி ஆடை அணி வித்ததாகக் காணப்படுகிறது. மணமகனின் சகோதரி (உமை மணமகளுக்கு மணக்கோலம் செய்விக்கின்றாள். புத்தாடை அணிவித்து, மணமகளின் கழுத்தில் மணமாலை சூட்டுகின்றாள்.

''மந்திரக் கோடியுடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக்கனாக்கண்டேன்'' (தி.பி.558)

என்பது ஆண்டாளின அருள்வாக்கு.

''கொச்சி மஞ்சளும் கொற நாட்டுப் புடைவையும்'' பெண்களுக்கு மிக விருப்பமான பொருள்கள். கொறநாடு என்பது கூறைநாடு என்பதன் சிதைவு. மாயூரத்தின் ஒருபகுதியாக இன்று கூறைநாடு விளங்குகிறது. அங்கே சிறந்த பட்டு சாலியர்கள் மிகுதி. கூறை என்பது புடைவைக்குப் பெயர்.

திருமணத்தில் தாலி கட்டும்போது மணமகள் அணிந்து கொள்ளும் புடைவையைக் கூறைப்புடைவை என்று தற்காலத் தில் கூறுகிறார்கள். 'தாலியும் கூறையும்' என்று சேர்த்துச் சொல்வது வழக்கம்.

விவாக தோஷமுள்ளது கூறைப்புடைவை (க்ருரம்-தோஷம்) திருமணத்தின்போது அணியும் புடைவையை ஆச்சாரியனுக்கு தானம் செயவது என்ற வழக்கம் உண்டு. திருமண காலத்தில் நீங்கும் தோஷங்கள் அதில் சம்பந்தப்படுவதால் அதைத் தான மாகக் கொடுத்து விடுவதே நலம் எனப்படுகிறது. க்ருர புடை வையே கூறைப்புடைவையாகி விட்டது.''[1] இத்திருமணப்

---

1. பக். 36, 37. நஜன், கல்யாணமே வைபோகமே'

புடைவையை தானம் செய்வதும் செய்யாததும் அவரவரது விருப்பம். ஒருசிலர் தமது இறுதிகாலம்வரை திருமண ஞாபகார்த்தமாக இப்புடைவையைப் பாதுகாத்து வைப்பர்.

ஒரு சிலர் மணமகளுக்கு திருமணத்தன்று 18 முழப்புடைவையை அணிவிப்பர். அதை அணிவிக்கும் முறை அர்த்த நாரீஸ்வர மூர்த்தியைப் போல இணைபிரியாமல் இருக்க வேண்டும் என்பதை விளக்கிக் காட்டும் முறையில் அமைகிறது

அர்த்த நாரீஸ்வரரின் வலப்பக்கம் இறைவனுடையது. இடப் பக்கம் அம்பிகையினுடையது. திருமண காலத்தில் மணமகளின் சேலை மூலம் இது காண்பிக்கப்படுகிறது. இடக்காலின் பக்கம் புடைவையைக் கொசுவம் (மடிப்பு) வைத்துக் கட்டுகிறார்கள். வலது பக்கம் சோமன் என்று விளக்குவதற்காக புடைவையைக் கொண்டே கச்சம் கட்டுகிறார்கள். புடைவையை மேலே சுற்றி அம்பிகையின் பக்கம் தலைப்பு வருகிறது. பிறகு வாமபாகமாகிய அம்பிகையின் தோள் பாகம் அலங்கார அணிகளுடன் காட்டப் படுகிறது. ஆக இடப்பாகத்தில் தொடங்கிய புடைவையை சக்தியாய் விளங்கித் தலைப்பு வந்து முடியும் பாகம் ஈசனிடம் முடிவடைகிறது.

## பாத பூஜை

காப்புநாண் அணிவித்த பின்னர் ஆசிரியர் அல்லது மணம் செய்விப்பவர் ஒரு பெரிய தட்டினை மணமகன் எதிரில் வைத்துப் பிள்ளையின் பெற்றோர்களை அத்தட்டில் பிள்ளையைப் பார்த்த வண்ணம் நிற்கச் சொல்லி, பிள்ளையின் கைகளால் அவர்கள் பாதங்களை நீரால் தூய்மை செய்து மஞ்சள் பூசி, குங்குமம் இட்டு மலர் தூவி தீபங்காட்டி மணமகனை வணங்கச் சொல்லி அவர்தம் பாதங்களிலுள்ள மலர் அரிசி ஆகியவற்றை எடுத்துப் பிள்ளையின் மேலிட்டு வாழ்த்தச் செய்வதாகும். அதைப் போலவே மணமகளையும் அவளது பெற்றோர்களுக்குச் செய்யச் சொலலுதல் வேண்டும்.

இலக்கியச் சான்றுகள் என்று பார்க்கையில் கந்தபுராணம், பெரியபுராணம், திருவிளையாடற் புராணம் போன்ற இலக்கியங்களில் மணமகனுக்கு மணமகளின் பெற்றோர் பாதபூசை செய்ததற்கான குறிப்புகள் காணப்படுகின்றன. மணமகனை இறைவனாக எண்ணி இவ்வாறு செய்திருக்கலாம்.

எ.டு ''வந்துமுன் னெய்தித் தாமுன் செய்தமா தவத்தின் நன்மை
நந்துநம் பாண்டார் நம்பி ஞானபோ னகர்பொற் பாதங்
சந்தவார் குழலி னாற்பொற் கரசநீ ரெடுத்து வார்ப்பப்
புந்தியா னினைதி யானம் புரிசடை யானென் றுன்னி

விருப்பினால் விளக்கி மிக்க புனிதநீர் தலைமேற் கொண்டு
பொறுப்புறு மாடத் துள்ளும் புறத்துளுந் தெளித்த பின்னே
ருருப்பொலி யுதரத் துள்ளும் பூரித்தார் உவகை பொங்கி
யருப்புறு கிளைஞர் மேலுந் தெளித்தன ரார்வத் தோடும்'' பெ.பு. திருஞா 4: 1233, 34

ஆயபோது ஆழிஅம்கை அண்ணல், பொன் கரக நீரால்
சேயவான் சோதிஆடல் சேவடி விளக்கி, சாந்தம்
தூயபோது அவிழச் சாத்தி, தூபமும் சுடருங் காட்டி,
நேயமோடு அருச்சித்து ஐயன் இறைஅருள் பெற்று நின்றான் திருவிளை: பு : ம.கா: 775

## முளைப்பாலிகை

திருமணம் நன்கு நடைபெற திருமண நாளுக்கு முன்னாள் நவதானியங்களை முளைகட்டி நவக்கிரகங்களுக்கு உரிய தானியங்களை அந்தந்தக் கிரகங்களுக்கு உவப்பாக முறைப்படி மண்மடக்கில் வைத்து, மணவறையில் அம்மிக்கல்லிற்குத் தென் பக்கத்தில் பச்சையரிசி பரப்பி ஒன்பது வீடாகக் கீறி நவக்கிரகம் அமைத்து தருப்பையினாலாவது, முப்புரிநூலினாலாவது பட்டுத் துணியினாலாவது பந்தித்து தூபதீப நைவேத்தியம் வைத்து வணங்குவர். பிறகு திருமணம் முடிந்த ஒற்றைப்படை நாளில் பாலிகைகளில் விளைந்துள்ளதை நதியிலோ குளத்திலோ விட வேண்டும்.

திருமண விழாக்களில் முளைப்பாலிகை இடம்பெறுவதை சிலப்பதிகார காப்பியத்தில் காணலாம் கோவலன்–கண்ணகி திருமண விழாவில் மணப்பொருட்கள் முதலியவற்றை மங்கல மாக வேந்தி மகளிர் வருதலைக் கூறுமிடத்தில்,

"விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர்" சிலப்: 1:1.58 59.

எனக் கூறப்பட்டுள்ளது.

சேக்கிழாரின் பெரியபுராணத்தில் திருஞான சம்பந்தரின் திருமண நிகழ்ச்சிகளைக் கூறுமிடத்து,

திவிமணஞ்செய் கலியாணத் திருநாளுந் திகழ்சிறப்பின்
மருவியவோ ரையுங்கணித மங்கலநூ லவர்வகுப்பப்
பெருகுமண நாளோலை பெருஞ்சிறப்பி னுடன்போக்கி
அருள்புரிந்த நன்னாளில் அணிமுளைப்பா லிகைவிதைத்
தார். பெரிய: திருஞா: பு: 1169

எனக் கூறப்பட்டுள்ளது.

### மாங்கல்யதாரணம்

மணமக்கள் புத்தாடை அணிந்து மணவறைக்கு வந்து அமர்ந்தவுடன் தாலி அணிவிக்கும் சடங்கு நடைபெறும். திருமணத்திற்குக் குறிப்பிட்ட நல்ல நேரத்தில்-முகூர்த்த வேளையில் திருமண ஆசான் பெரிய தட்டில் மஞ்சள், பாக்கு, வெற்றிலை குங்குமம் அட்சதை வைத்து. திருமாங்கலியத்தை மஞ்சள் குங்குமம் அட்சதை இடப்பெற்ற ஒரு முழுத்தேங்காய் மேல் வைத்துப் பூசித்து உறவினர், பெரியோர் தம்மிருகரங்களால் தொட்டு இறைவனைப் பிரார்தித்து வாழ்த்தி அருளுமாறு செய்வார். பிறகு அத்தட்டை மணமக்களுக்கு எதிரிலுள்ள முக்காலியின் மேல் வைத்து மந்திரஞ் சொல்லி அர்ச்சிப்பார்.

### நீர்வார்த்தல்

மணப்பந்தலில் உள்ளவர்களுக்கு மணமக்களை அறிமுகப்படுத்துவது போல் மணமகன், மணமகள் இருவரது மூன்று தலைமுறைப் பெயர்கள் கோத்திரங்கள் முதலியவற்றைக் கூறி பிறகு கன்னிகையைத் தாரை வார்த்தல் என்ற சடங்கு நடைபெறும். அப்பொழுது சொல்லப்படும் மந்திரத்தின் பொருள் "நானும் என்னுடைய பித்ருக்களும் குலமும் நலமுறுதற்பொருட்டு சர்வாபரண பூஷிதையான என் மகளை நாராயண ரூபமாகவுள்ள

---

நவதானியம் — கோதுமை, நெல், துவரை, பயறு, கடலை, அவரை, எள், உழுந்து, கொள்.

உமக்குக் கொடுக்கிறேன். நீரும் எல்லாச் செயல்களிலும் குண்வதியான அவளைக் கைவிடாமல் வைத்துக் கொண்டே செய்து பேறு பெறுவீராக'' என்பதாகும். அதாவது மணமகனின் வலக் கையை மணமகளின் வலக்கைமேல் வைத்து, மணமகளின் கையில் வெற்றிலை பாக்கு வைத்து, மணமகனின் தாயைக் கொண்டு பூவும் நீரும் மணமகனின் தந்தை கைவழி வார்க்கச் செய்வதாகும். இவ்வாறு பெண்ணைத் தாரை வார்த்துக் கொடுக்கும் நிகழ்ச்சி பல இலக்கியங்களில் கூறப்பெற்றுள்ளன. எல்லா தேவதைகளும், எல்லா சாதியினரும், உறவினரும், நட்பினரும் சபையாருஞ் சேர்ந்திருக்கின்ற தருணத்தில் பெண்ணின் பெற்றோர் நீர் வார்த்துக் கன்னிகா தானம் செய்யவும், அந்தத் தாரையை நான் ஏற்றுக் கொண்டேன் என்று மாப்பிள்ளை சொல்லவும் அதைப் பலரறிய உறுதிப்படுத்தவே இச்சடங்கு நடைபெறுவதாகும்.

### தாலி அணிவித்தல் :

கன்னிகாதானம் நடைபெற்ற பிறகு மணமகன் எழுந்து மணப்பெண்ணுக்கு நேரில் முக்காலியின் மேல் வைக்கப்பட்ட தாலியை ஆசான் எடுத்துக் கொடுக்க வாங்கிக் கொண்டு, கிழக்கு நோக்கி அமர்ந்திருக்கும் மணப்பெண்ணிற்கு மேற்கு முகமாக நின்றுகொண்டு தாலிகட்டல் வேண்டும். அப்பொழுது மாப்பிள்ளையின் தமக்கை அல்லது தங்கை யாராவது ஒருவர் காமாட்சி விளக்கேற்றி வைத்துக் கொண்டு மணப்பெண்ணிற்குப் பின்புறத்தில் நிற்க, பெற்றோர் மனங்குளிர, ஆனந்தக் கண்ணீர் பொழிய, உறவினர் மனம் மகிழ, மற்றவர் களிக்க, கெட்டி மேளம் முழங்க, மங்கலப் பாடல் இசைக்க மாப்பிள்ளை கரத்தில் தாங்கிய மாங்கலியச் சரடை மணப்பெண்ணின் கழுத்தில் அணிவித்து ஒருமுடி போட்டதும் மணமகன் சகோதரி மற்றும் இரண்டு முடி போடவேண்டும். அந்த சகோதரிக்குச் சந்தன தாம்பூலம் கொடுத்து மரியாதை செய்வர். இவ்வாறு தாலிகட்டும் பொழுது நல்லன அல்லாதவை காதில் விழாவண்ணம் கெட்டி மேளம் முழங்கும். ஒரு சில குலத்தார் சங்குகளை 'ஓம்' என்ற பிரணவ நாதம் ஒலிக்கும்படியாக முழங்குவர். சுமங்கலிப் பெண்கள் கௌரி கல்யாணம் பாடுவர். மணமகன் தாலியின் முடியை இடதுகரத்தில் பிடித்துக் கொண்டு இறைவனைத் துதித்து வலக் கரத்தால் மஞ்சள் குங்குமத்தை அம்முடியின்மேல் அணிவிக்க

வேண்டும். மாப்பிள்ளை நன் நெற்றியில் விபூதி அல்லது திரு மண் காப்பணிந்து கொண்டு பெண்ணின் நெற்றிலும் குங்குமம் இட வேண்டும்.

மாங்கல்ய தாரணத்திற்கு என வேதமந்திரம் இல்லை. வைதிக நெறித் திருமணங்களில் தாலி அணிவிக்கும் பொழுது ஒரே விதமான சுலோகமே சொல்லப்படுகிறது.

''மாங்கல்யம் தந்துநா அநேன மமஜீவன ஹேதுநா!
கண்டே பத்நாமி சுபகேத்வம் ஜீவசரதச்சதம்''

என்று புரோகிதர் சொல்வார். இதன் கருத்தாவது,

மணமகன், 'இது மங்கல சூத்திரம். நான் என்னுடைய இன்ப வாழ்க்கைக்கு ஆதாரமும் காரணமுமாய் இருக்கும் பொருட்டு உன் கழுத்தில் மங்கல நாணை அணிவிக்கிறேன். சுபமுடைய வளே நீ நூறாண்டு வாழ்வாயாக! என்கிறான். அப்பொழுது அங்குக் கூடியுள்ள பெரியவர்கள் மலரையும் அட்சதையும் மண மக்கள் மேல் போட்டு ஆசீர்வதிப்பர். பிறகு மணங்காண வந்த அனைவர்க்கும் இனிப்பு, பானகம் போன்றவை அளிக்கப்படும். அந்த ஒரு கட்டத்தில் ஏற்படும் தெய்வத்தன்மையின் வசீகரத் தையும் ஆனந்த உணர்ச்சியையும் யாராலும் மறுக்க முடியாது.

இனி மேற்கூறிய சடங்குகளுக்கான ஆதாரங்களை இலக் கியங்களின் வழி நின்று காண்போம்.

சிறு காப்பியங்களுள் ஒன்றான சூளாமணி கி.பி, 9, ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றியது என்பர், அந்நூலில் திவிட்டன் என்ற அரசனுக்கும் சுயம்பிரபை என்ற அரச மகளுக்கும் நடந்த திருமணம் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இந் நூலில் கூறப்படும் திருமண முறைகளுள் தான் முதன்முதலில் தாரை வார்த்துக் கொடுத்தல் கூறப்படுகிறது; சுயம்பிரபையின் தந்தை சடியரசன் திருமணமண்டபத்தில் வளர்க்கப்பட்ட தீயே கடவுளாக, திருமணங் காணவந்தவர்கள் முன்னிலையில், மணங் கமழும் மாலை அணிந்த திவிட்ட நம்பிக்குத் தன் மகளை நீர் வார்த்துக் கொடுத்தான் என்ற குறிப்பு காணப்படுகிறது.

''அங்குமுன் வளர்த்த அழ லேகடவு ளாக
மங்கையைம ணக்குழுவின் முன்னைவரை வேந்தன்
கொங்குவிரி தாரவற்கு நீரொடுகொ டுத்தான்''

(சூளா: 1099)

இதை அடுத்து சிந்தாமணி எனும் பெருங்காப்பியத்துள் பெண்ணின் தந்தை தாரை வார்க்கும் நிகழ்ச்சி கோவிந்தையார், காந்தருவதத்தையார். இலக்கணையார் திருமணங்களில் கூறப் பட்டுள்ளது. கந்தபுராணத்தில் உமாதேவியார் திருமணத்திலும். தெய்வயானை அம்மை திருமணத்திலும் வள்ளியம்மை திரு மணத்திலும் கூறப்பட்டுள்ளது.

"அந்தநல் வேலை தன்னிலன் புடைக்குறவர் கோமான்
கந்தவேள் பாணி தன்னிற் கன்னிகை கரத்தை நல்கி
நந்தவ மாகிவந்த நங்கையை நயப்பாலின்று
தந்தனன் கொள்க வென்று தண்புனல் தாரை உய்த்தான்.
(வள்ளி. தி. படலம். 199)

கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பெரியபுராணத்துள் திருஞானசம்பந்தரின் வைதிக நெறி முறைப்படி நடந்த திருமண வினைகள் யாவும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் மணமகளின் தந்தை தன் குலம், கோத்திரம் ஆகியவற்றைக் கூறிக் கன்னிகாதானம் செய்யப்பட்டதாகக் கூறுகிறார்.

"பெருகொளி ஞானம் உண்ட பிள்ளையார் மலர்க்கை
தன்னில்
மருவுமங் கலநீர் வாசக் கரகமுன் னேந்தி வார்ப்பார்
தருமுறைக் கோத்தி ரத்தின் தங்குலஞ் செப்பி என்றான்
அருந்திப் பாவை யாரைப் பிள்ளையார்க் களித்தேன்
என்றார்" (பெ.5. 3138)

எல்லா தானங்களுள்ளும் சிறந்த கொடுத்தற்கரிய தானம் கன்னி காதானம். மாணிக்கவாசகர் இதனையே 'உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்' என்றார். திருமண நிகழ்ச்சிகளை விரி வாகப் பாடப்பட்டுள்ள இலக்கியங்களில் தாரை வார்க்கும் நிகழ்ச்சி மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் சங்க இலக்கியம் முதற்கொண்டு இடைக்கால, பிற்கால இலக்கியங் களுள் எவ்வளவுதான் விரிவாக அழகாக ஒவ்வொரு திருமண நிகழ்ச்சியும் விளக்கப்பட்டிருந்தாலும் தாலி அணிவிக்கும் முக்கிய சடங்கு பற்றிய குறிப்பு கிடைப்பது அரிதாகவுள்ளது. தாலி அணிவிக்கும் காட்சியை அப்படியே கூறுவதாக நமக்குக் கிடைக் கும் முதல் ஆதாரம் கந்தபுராணம் என்ற நூலேயாகும். முருகக் கடவுள் பகைவரை அழித்து அவனுடைய அரசுரிமைச் செல் வத்தை அருளிய நன்றியை நினைந்தான் இந்திரன். தன் மகள்

தெய்வயானையம்மையாரை முருகனுக்குத் திருமணம் முடிக்கக் கருதினான். இதன் பயனாக நடைபெற்ற திருமணத்தில் பிரமதேவர் மங்கல நாணை எடுத்துக் கொடுக்க அதனை வாங்கித் தெய்வயானையம்மையார் கழுத்திலே முருகவேள் ஆர்த்தார். கூந்தலில் மலர்மாலை சூட்டினார்.

''அண்டர் போற்ற அயன் அங்கு விதித்த
வாசின் மங்கல நாணினை அன்னாள்
கண்ட மீது தரித்துஅள கத்தோர்
கந்த நீடு கவின்றொடை சூடா

என்று முதல் இலக்கியச் சான்றாக மங்கலநாணினை மணமகள் கழுத்தில் மணமகன் அணிவித்தமை காணப்படுகிறது.

இதைப் போலவே திருவிளையாடற் புராணத்துள் பரஞ்சோதி முனிவர் திருமணத்தில் திருநாண் பூட்டும் மரபை மதுரைக் காண்டத்தில் இரண்டு இடத்தில் சிறப்பாகக் கூறுகின்றார், மீனாட்சியம்மையை சுந்தரேசர் மணந்தபோது

''சுற்றும்நான் மறைகள் ஆர்ப்ப,
தூரியம் சங்கம் ஏங்க,
கற்றநான் முகத்தோன் வேள்விச்
சடங்குநூல் கரைந்த ஆற்றால்
முற்ற, மங் கலநாண் சாத்தி
முழுதுலகு ஈன்றாள் செங்கை
பற்றினான்'' என்றும் (பாடல்.784)

உக்கிர பாண்டியன் திருமணத்தில் ''காந்திமதியை மங்கல நாண் பூட்டி வரிவளைச் செங்கை பற்றி, விதிவழி ஏனைமன்றல் வினையெலாம் நிரம்பச் செய்தான்'' (பாடல் 1020) என்றும் பாடியுள்ளார்.

பிற்கால இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள திருமணங்களிலெல்லாம் 'தாலி அணிதல்' என்பதற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது, 17,18. ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய புராணங்களில் இடம்பெறும் திருமண நிகழ்ச்சிகளில் தாலி அணிவித்தல் ஒரு முக்கிய சடங்காகவும், அப்பொழுது வாழ்த்தொலியும், இசையொலியும் முழங்குவதாகவும் வருணிக்கப்பட்டுள்ளன.

கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் எழுந்த திருப்பேரூர்ப் புராணத்தில், சிவன் கௌரியை மணம் முடித்த வரலாற்றினைக் கூறும் கச்சியப்ப முனிவர் அத்திருமண வினையிலே முக்கியமாக தாலி அணிதல் நிகழ்ச்சியைக்கூறுகிறார்.

விண்ணவர் மலர்கள் சிந்த விடையவன் அங்கை யேற்றுத்
தண்ணிய மலர்மே லண்ண றழன்முறை வளர்ப்பத் தாலி
புண்ணிய மலர்ந்தாலன்ன பூங்கொடி மிடற்றிற் சேர்த்து
மண்ணவ ருய்யச் செய்யு மரபெலா மியற்றி னானே.
(பா :110)

இது போலவே பிற்கால நூலாகிய திரிகோணாசலபுராணம் திருமணப் படலம் மங்கலநாண் பூட்டல், மாலை அணிதல், இசைக் கருவிகள் ஒலித்தல் ஆகிய நிகழ்ச்சிகளைக் கூறுகின்றது.

அங்கெரி கரிய தாயா வியன்னபொற்
றுங்கமாங் கோசிக மீந்து தூமணி
மங்கல நாண்களத் தார்த்து மங்கைதன்
கொங்குலாங் குழற்கொரு கோதை சூடினான். பா. 118

பிற்காலத்தில் மணவினையில் தாலி அணிவித்தலுக்குப் பரந்த அளவில் முக்கியத்துவம் ஏற்படலாயிற்று. இன்றைய திருமணங்களில் தாலி கட்டும் நிகழ்ச்சியே திருமணத்தின் முக்கிய நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது.

**தாலிக்குப் பொன்னுருக்குதல் :**

திருமண நிகழ்ச்சிகளில் ஒன்றாகத் திருமண நாள் குறிக்கப்பட்டவுடன் மணமகளுக்குப் புதிய அணிகலன்கள் செய்ய முகூர்த்தம் பார்த்துப் பொன்னுருக்கும் வழக்கம் உண்டு. காட்டாக, "கண்ணகி வழக்குரை (14 அல்லது 15-ஆம் நூற்றாண்டில் சகவீரன் என்பவரால் பாடப்பட்டது எனக் கொள்ளப்படுகின்றது.) இவ்வழக்கம் பற்றிக் கூறுகின்றது (மீகாமன் கதை செ 18, 19). கண்ணகியின் தந்தை ஆபரணஞ் செய்வதற்குப் பொற்கொல்லரை அழைத்த சந்தர்ப்பத்திலே,

'தரவுருக்கப் பொன்னிடவே தக்ககணி தரையழைத்து
வரைவிலிப்போ முகூர்த்தமிட மிக்கபசும் பொன்வாங்கிக்

கரமதனாற் றான்நிறுத்துக் கடுகவவர் கைக்கொடுத்தார்
கொடுத்த பசும்பொன் வாங்கிக் குடைபிடித்தே தானுருக்கி
எடுத்தங்கே பாளமாக இயல்பாகவே நீட்டி
அடுத்தங்கே தகடுகொட்டி ஆவதான பணிகள் செய்து'

என்று கூறப்படுகின்றது''.* தாலிக்குப் பொன்னுருக்குதல் இந் நாளில் பெரும்பாலான திருமணங்களில் ஒரு முக்கிய நிகழ்ச்சியாக நடைபெறுகின்றது.

**பட்டங் கட்டுதல்**

திருமாங்கலியம் அணிவித்த பிறகு மணமகன் மணமேடையில் அமர்வான். பின்பு மணப்பெண்ணை மணமகனுக்கு இடப் புறமாக அமரச் செய்வர். மணமக்களுக்குரிய அம்மான்மார்கள் பொன் அல்லது வெள்ளியாலாகியப் பட்டங்களை நூலிஃ கோர்த்து நெற்றியில் அணிவிப்பர்.

**கைத்தலம் பற்றல் (பாணிக்கிரகணம்)**

திருமணத்தின் முக்கியச் சடங்குகளில் ஒன்று மணமகன் மணப்பெண்ணின் கரம் பற்றுதல். அதைப் பாணிக்கிரகணம் என்பர். இல்லற வாழ்வில் ஒற்றுமையோடு கைகோத்து ஒன்றாகச் செயல்பட உறுதி எடுத்துக் கொள்ளும் மனமொத்த தம்பதிகள் அவர்கள். இருவர் உள்ளங்களும் இரண்டறக் கலந்ததைக் கரம் பிடித்துக் காட்டுகின்றனர். இதன் முக்கியத்துவத்தை அறிந்த இலக்கிய ஆசிரியர்களும் தவறாமல் தமது படைப்பிலக்கியத்தில் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

சங்க இலக்கியத்தின் வாயிலாகப் பண்டைத் தமிழரின் தூய திருமண முறைகள் எவை என்பதை அறிந்தோம். அந்நாளில் களவு மணம் போற்றப்பட்டாலும் மணமகளின் பெற்றோர் மணமகளின் கரத்தை எடுத்து மணமகன் கைகளில் வைத்து வாழ்த்திக் கொடுத்தலையே பெரிதும் போற்றினர் என்பதை உணரலாம். எனவே சங்ககாலம் முதற்கொண்டே கைத்தலம் பற்றும் சடங்கு முக்கிய இடம் பெறுகிறது எனலாம்.

---

* பக். 131 தமிழர் திருமண நடைமுறைகள்

"நேர்இறை முன்கை பற்றி, நுமர்தர
நாடறி நன்மணம் அயர்கம்" (231-32)

என்று தலைவன் தலைவிக்கு உறுதி கூறினான் என்று கபிலரின் குறிஞ்சிப் பாட்டில் வருவதால், பெண்ணின் பெற்றோர் அவள் முன் கையை எடுத்து மணமகனிடம் தர அவன் அதனைப் பற்றி மணவினை நிகழ்த்துவான் என்று உணரலாம்.

சங்க இலக்கியங்களை அடுத்துத் தோன்றிய சிலப்பதிகார காலத்தில் திருமண முறையில் ஆரியக் கலப்பு ஏற்பட்டது. இக் காவியத்தில் சிறப்பாகக் குறிக்கத்தக்கது, கோவலன் கண்ணகி யின் கரம்பற்றி தீவலம் வருதலாகும். இவ்வாறு கோவலன் கண்ணகியின் கையைப் பற்றி இருந்தமையே சிறப்புடையது என்பது "கலவுக்கை ஞெகிழாமல்" என்னும் மங்கல மகளிர் வாழ்த்தால் வலியுறும். இத்திருமணத்தில் கோவலன் கண்ணகி யின் கரம்பற்றிய வண்ணம் தீவலம் செய்ததைக் கண்டவர் நோன்பு செய்தாராயினர் என்று இளங்கோவடிகள் கூறுதலால், பாணிக்கிரகணமே கண்ணகி கோவலன் திருமணத்தில் சிறப் புடைய சடங்காக இருந்தமை புலப்படும். இதை அடுத்து எழுந்த பெருங்கதையில் உதயணன் வாசவதத்தையின் மலர்க் கரத்தைப் பற்றியதை ஆசிரியர்

... ... ... மடத்தகை மாதரை
வளைபொலி முன்கை வருந்தப் பற்றித்
தளையவிழ் தாரோன் வலமுறை வந்து எனப் பாடுகிறார்.

கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாம் ஆண்டாளோ கண்ணன் தனனை மணம் புரிவதாகக் கனாக் கண்டு பாடிய பாசுரங்களில் கண்ணன் தன் கரம் பற்றிய நிகழ்ச்சியை மறவாமல் கூறுகிறாள்.

"முத்துடைத் தாமநி ரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பிமது சூதன் வந்து என்னைக்
கைத்தலம் பற்றக்க னாக்கண்டேன் (தி.பி. 561)

கச்சியப்ப சிவாசாரியார் அருளிய கந்தபுராணத்தில் [வள்ளி யம்மை திருமணப் படலத்தில்,

"அந்தநல்வேலை தன்னிலன் புடைக்குறவர் கோமான்
கந்தவேள் பாணிதன்னிற் கன்னிகை கரத்தை நல்கி...

எனப்பாடியுள்ளார். இவற்றை அடுத்துத் தோன்றிய பேரிலக்கியங்களாகிய பெரியபுராணம்,[1] கம்பராமாயணம் போன்ற நூல்களிலும் கரம்பற்றும் சடங்கு கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு தூய தமிழ்த்திருமணம், வைதிக நெறியுடன் கூடிய திருமணம் ஆகியவற்றுள் திருமணவினைகளுள் மறவாமல் குறிக்கப்படும் இந்தக் கைத்தலம் பற்றும் வினை முக்கிய சடங்காகும்; வைதிக நெறிமுறைப்படி நடைபெறும் திருமணங்களில் இப்படிக் கைத்தலம் பற்றும் போது சில மந்திரங்கள் சொல்லப் படுகின்றன. அதாவது ஆதிகால விவாஹ கர்த்தாக்களாக விளங்கியவர்கள் பகன், அர்யமா, ஸவிதா, சூரியன் ஆகிய நால்வராகும். இந்த நால்வரும் மந்திர ரூபமாக உன்னை எனக்கு அளித்தார்கள். நான் உன்னை அவர்கள் முன்பாகக் கைப்பிடித்துக் காக்கின்றேன். நல்ல மக்களைப் பெற்றுக் குலம் விளங்குவதற்காகவும் உன்னை நான் கைப்பிடிக்கிறேன் என்கிறான் மணமகன் மணமகளின் கையைப் பிடித்தபடி.

இச்சடங்கின் போது பலர் முன்னிலையில் அக்கினி சாட்சியாக மந்திரங்கூறி கரம்பற்ற வேண்டும். அப்பொழுது மணப்பெண்ணின் வலக்கரம் தாமரை மொட்டுப் போல ஐந்து விரல்களும் குவிந்த வண்ணம் மேல் நோக்கி இருக்க வேண்டும். மணமகன் தனது வலக்கரத்தால் அணைத்தவாறு அவள் கரம் பற்ற வேண்டும். இது சாஸ்திரம் கூறும் முறை. இதயத்தைத் தாமரைப் பூவிற்கு ஒப்பிடுவோம். தனது இதயத்தை முழுமையாகக் கணவனுக்கு அளிக்கும் கருத்துடன் தாமரை மலர் போல் குவிந்த கரம் நீட்டுகிறாள். கணவனும் முழுமையாக அவள் எண்ணத்தை ஏற்றுக் கொள்ளும் வகையில் முழுமையாக அவள் மணிக்கட்டிலிருந்து பிடித்துக் கொண்டு அந்நியோந்நியமாக இருக்க வேண்டும். இவ்வாறு மணமகன் மணமகளின் கரம் பற்று கையில் கட்டை விரலைத் தவிர்த்து மற்ற நான்கு விரல்களைப் பிடித்தால் பெண் குழந்தைகளே பிறக்கும் என்பர். ஆண் குழந்தை மட்டும் வேண்டும் என்றால் பெண்ணின் கட்டை விரலை மட்டும் பிடிக்கவேண்டும் என்பர்.

மனைவி மனைக்கு விளக்காவாள். பெண்ணிடமிருந்து பண்பு வளருகிறது. இச்சடங்கின் போது மணமகன், நல்ல குணவதியாக விளங்க வேண்டும் நல்ல மக்களைப் பெற வேண்டும்

1 தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான் கம். பால: 21:90

என்ற மந்திரங்களைக் கூறவேண்டும். இவ்வாறு மணமகளின் கரம்பற்றி இருவரும் அக்கினியை வலம் வருதல் வேண்டும். திருமணத்தின் தாத்பர்யம் முழுமையும் இந்நிகழ்ச்சியில் அடங்கி விடுகிறது.

தற்காலத்தில் நாம் திருமணம், கல்யாணம், விவாஹம் என்றெல்லாம் எழுதுகிறோம் சொல்கிறோம். எனினும் வைதிக நெறி திருமணப் பத்திரிகையில் 'பாணிக்கிரகணம்' என்றே குறிப்பிடுகின்றோம். இவற்றை எல்லாம் வைத்து ஆராயுமிடத்து பண்டைத் தமிழர் திருமணவினை முதற்கொண்டு இந்நாளளவும் போற்றப்படும் திருமணத்தின் முக்கியத்துவம் நிறைந்த, பொருள் பொதிந்த சடங்காக கைத்தலம் பற்றும் வினை நடைமுறையில் இருந்து வருகிறது என்று ஐயமறக் கூறலாம்.

## சப்தபதி

திருமணவினை நிகழும்பொழுது தீவலம் வருகையில் மணமகன் மணமகளை ஏழடி எடுத்து வைக்கச் செய்யும் சடங்காகும். பாணிக்கிரகணம் செய்தபின் தம்பதிகள் சப்தபதியைச் செய்வர். அக்கினிக்கு வலது புறமாக பெண்ணின் வலது காலை மணமகன் ஒவ்வொரு அடியாக எடுத்து வைக்க வேண்டும். இவ்வாறு மணமகள் ஏழு அடிகள் (சப்த+பதி) வைக்க வேண்டும். ஒவ்வொரு அடியை மணமகள் எடுத்து வைக்கும் பொழுதும் அதற்குரிய மந்திரத்தை மணமகன் சொல்ல வேண்டும். அதன் பொருள் என்னவென்று பார்ப்போம்.

''நீ முதலாவது அடியை எடுத்து வைத்தாய். உனக்கு வாழ்க்கையில் கடவுள் தான்ய லட்சுமியை (அன்னம் குறைவில்லாமல்) அளிக்கட்டும் என்றும்; இரண்டாவது அடியில் உடல் வலிமையைக் கொடுக்கட்டும் என்றும்; மூன்றாம் அடியில் விரதங்களை மேற்கொள்ள சக்தியையும் பக்தியையும் கொடுக்கட்டும் என்றும், நான்காம் அடியில் நல்ல சுகங்களைக் கொடுக்கட்டும் என்றும்; ஐந்தாம் அடியில் பசுக்களைக் கொடுக்கட்டும் என்றும்; ஆறாம் அடியில் எல்லாவிதமான பருவங்களும் உனக்கு அனுகூலமாகச் செய்யட்டும் என்றும், ஏழாம் அடியில் நீ வாழ்க்கையில் பங்கு கொள்ள வேண்டிய ஹோமங்கள் குறைவின்றி நிறைவேற இறைவன் அருள் செய்வாராக என்றும் வேண்டுவதாகும்.

முன்காலத்தில் நட்பு ஏற்படுத்திக் கொள்ள அக்கினி வளர்த்து அதன் சாட்சியாக அதன் மீது இருவரும் கைகுலுக்கும் முறை ஒன்றுண்டு ஏழு அடிகள் எடுத்து வைத்து உடன் செல்வதும் நட்பு கொள்வதைக் குறிக்கும். மணமக்கள் வாழ்நாள் முழுமையும் இணைபிரியா நட்பினராய் இருத்தல் வேண்டும். அந்த நட்புக்குத் தடையேதும் வருதல் கூடாது. அதற்கு ஏற்ற மனப்பான்மையும் இன்ப துன்பங்களைச் சமமாக இருவரும் பாவிப்பதுமாக அந்த நட்பு உறுதிபெற வேண்டும். இதுவே சப்தபதி சடங்கின் முக்கிய நோக்கமாகும்.

மணப்பெண் ஏழு அடிகள் எடுத்து வைத்த பிறகு வரன் பெண்ணைப் பார்த்துச் சொல்லும் மந்திரம் ஒன்றுண்டு. அதன் பொருளாவது பின்வருமாறு. ''ஏழு அடிகளைத் தாண்டின நீ எனக்குத் தோழியாக வேண்டும். ஏழு அடிகளைக் கடந்த நாம் நண்பர்களாகி விட்டோம். உன்னுடன் நட்பு கொள்கிறேன். அந்த நட்பிலிருந்து விலகமாட்டேன். நீயும் விலகாதே. இருவரும் செய்ய வேண்டியவைகளை ஒரே விதமாகச் செய்வோம். நல்ல அன்புள்ளவர்களாகவும், நல்ல மனமுள்ளவர்களாகவும். உணவையும், பலத்தையும் சேர்ந்தே அனுபவிப்பவர்களாகவும் வாழ்வோம், விரதங்களைச் சேர்ந்து மேற்கொள்வோம். நம் விருப்பங்கள் ஒரே மாதிரியாக இருக்கட்டும். நான் சாம வேதமாய் இருக்கிறேன். நீ இருக்குவேதமாய் இருக்கிறாய், நான் வானமாய் இருக்கிறேன். நீ பூமியாய் இருக்கிறாய். நான் மனமாக இருக்கிறேன். நீ வாக்காக இருக்கிறாய். இத்தகைய அன்புடைய நீ எனக்கு நிழல் போல் இருப்பாயாக என்ற பொருளில் அமைந்துள்ளது.

மணமகன் மணமகள் கரம்பற்றித் தீவலம் வருதல் குறித்து பெரும்பாலான இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளது. ஆரியக் கலப்பு ஏற்ற முதல் திருமணமாக நாம் இலக்கியத்தின் வாயிலாகக் காண்பது கோவலன் கண்ணகியின் திருமணமே ஆகும்.

'சாலி யொருமீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலம் செய்வது காண்பார்கண் நோன்பென்னை'
(சிலப் :1:1;51-53)

என்று சிலப்பதிகாரத்துள் இளங்கோவடிகளாலும்;

"பொங்கழல்செய் வேள்விமுறை போற்றலும் எழுந்தான்
நங்கையின ணங்கினணி மெல்விரல் பிடித்து
மங்கையொடு காளைவல னாகவரு கின்றான்"
(சூளா; 1102)

என்று சூளாமணியில் தோலாமொழித்தேவரும்,

"இடம்படு தோளவ னோடியை வேள்வி
தொடங்கிய வெங்கனல் சூழ்வரு போதின்
மடம்படு சிந்தையள் மாறு பிறப்பின்
உடம்புயி ரைத்தொடர் கின்றதை யொத்தாள்"
(கம். பால. 21:91)

எனக் கம்பராமாயணத்துள் கம்பரும்; இவற்றிற்கெல்லாம் சிகரமாக ஆண்டாளின் அக்கினி வலம் வரும் பாசுரம் சப்தபதி என்னும் சடங்குதான் திருமணவினைகளுள் அதிமுக்கியமானது என்பதைக் கூறுவதாயும் அமைந்துள்ளதைக் காணலாம்.

வாய்நல்லார் நல்ல மறையோதி மந்திரத்தால்
பாய்ச்சிலை நாணல் படுத்து பருதி வைத்து
காய்ச்சின மாகளிர் அன்னா னென் கைப்பற்றி
தீவலம் செய்யக் கனாக் கண்டேன் தோழிநான்[1]

இவ்வாறு ஆரிய அல்லது வைதிக நெறிப்படி நடைபெற்றதாகக் கூறப்பெறும் திருமணங்களில் கைத்தலம் பற்றித் தீவலம் வரும் சடங்கு சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது.

நாம் வாழும் இந்நூற்றாண்டில் திருமணத்திற்கு இந்த 'சப்தபதி' சடங்குதான் முக்கியமானது என்று இந்துச் சட்டத்திலும் நீதிமன்றத் தீர்ப்புகளிலும் கூறப்பட்டிருக்கின்றன. இந்துத் திருமணச் சட்டம், 1955 இல் அமுலுக்கு வந்தது. இதில் 7 ஆவது பிரிவு திருமணச் சடங்குகள் பற்றியது. "சடங்குகள் இல்லாத திருமணத்தை இச்சட்டமும் அங்கீகரிக்கவில்லை. திருமணச் சடங்கிலும், வழக்கத்திலும் மணமக்கள் ஹோமத்தை ஏழு அடி எடுத்து வைத்து வலம்வரும் இச்சடங்கு அடங்கும் என்றால், அப்படி மணமக்கள் தீயை வலம் வந்ததும்-சப்தபதி என்று அழைக்கப்

1. நாச்சியார் திருமொழி

அந்நிகழ்ச்சி முடிந்ததும் திருமணம் நிறைவு பெற்றுவிட்டதாகக் கொள்ளப்படும். ஹோமத்தை மணமக்கள் ஏழடி எடுத்து வைத்து வலம் வரும் இச்சடங்குதான் திருமணத்தில் முக்கிய மான சடங்கு. இது முடிந்தால்தான் திருமணம் முடிந்ததாகச் சட்டம் கருதும் இவ்வழக்கம் இல்லாதவர்கள் தங்கள் வகுப்புக் குரிய வழக்கப்படி மணம் முடித்துக் கொள்ளலாம்.''[2]

## அம்மி மிதித்தல்

சப்தபதி வலம் வரும்போது, அக்கினிக்கு வடபுறத்தில் வைக்கப்பட்டிருக்கும் அம்மி மீது மணமகளின் வலக்கால் கட்டை விரலைப் பிடித்து மணமகன் வைக்க வேண்டும். அப்பொழுது மெட்டி-காலாழி-பீலி முதலியவைகளைப் போடுவதும் முக்கிய மாகும், அம்மிமிதித்தல், அருந்ததி பார்த்தல் என்கிற இரண்டும் மணப்பெண்ணின் வாழ்க்கைக்கு தீபஸ்தம்பம் போன்றும், வழி காட்டி போன்றதுமாகும். அம்மி மிதித்தலுக்குச் சொல்லப்படும் மந்திரத்தின் பொருள்: இந்தக் கல்லைப் போன்று நீயும் நிலை யாக இருக்கக் கடவாய். உன் மனமும் உறுதியாக இருக்க வேண்டும். உனக்குத் தீங்குகள் நேராமல் ஒழியட்டும் என்பதே ஆகும். கற்பு வரம் வாங்குவதே இச்சடங்கின் கருத்தாகு மென்பர்.

ஆசிரியர் கொங்குவேளிர், பெருங்கதையில் உதயணன் வாசவதத்தைக்கு நடந்த திருமணவிளைகளை அழகு தோன்ற வருணித்துள்ளார். அப்பொழுது உதயணன் வாசவதத்தையின் தளிரடியைப் பற்றி அம்மி மேல் வைத்ததை,

''செந்தளிர்ச் சீறடி செவ்வனம் பற்றிப்
போகமும் கற்பும் புணர்ந்துடன் நிற்கென
ஆகுபொருள் கூறி அம்மிமுதல் உறீஇ.. (பெருங்2:3:86-88)

எனக் கூறியுள்ளார்.

தனது தெய்விகத் திருமணத்தைக் கனவில் கண்டதாகப் பாடும் ஆண்டாளோ,

2. பக். 88, ச. செந்தில்நாதன், இந்துச் சட்டம் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் எண்-539

"இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றவன்
நம்மை யுடையவன நாராயண நம்பி
செம்மை யுடைய திருக்கையால் தாள்பற்றி
அம்மி மிதிக்க கனாக் கண்டேன் தோழி நான்"

எனப்பாடியுள்ளான்.

திருவிளையாடற் புராணத்தில் திருமணப் படலத்தில் மீனாட்சியம்மை சுந்தரேசுவரர் திருமணத்தைக் கூறிவருகையில் அம்மி மிதிக்கும் சடங்கினை ஆசிரியர்.

"எரிவலம் முறையால் வந்து,
மங்கலம் புனைந்த செம்பொன் அம்மிமேல், மணாட்டி யாத
பங்கய மலரைக் கையால் பரிபுரம் சிலம்பப் பற்றி
புங்கவன் மனுவால் ஏற்றி... (திருவிளை: ம., கா: 787)

எனக் கூறியுள்ளார்.

18ஆம் நூற்றாண்டு இலக்கியமான பேரூர்ப்புராணத்தில் 'அம்மி மிதித்தல்' என்னும் சடங்கிற்குச் சொல்லப்படும் கருத்துக் குறிப்பிடத்தக்கது. மணமக்களிடையே ஊடற்காலத்தில் மனைவியின் காலையும் பிடிக்க வேண்டி ஏற்பட்டால், அவ்வாறே மனைவியினுடைய காலைப் பிடிப்பதை அக்கினி முன்னாலே திருமணவினை நடைபெறும் பொழுதே பிடித்துக் காட்டுவதை அம்மிமிதித்தல் உணர்த்துவதாகத் திருப்பேரூர்ப் புராணம் கூறுகின்றது. இந்நூலில் தெய்வயானை திருமணப் படலத்தில் முருகப் பெருமான் தெய்வயானையின் பாதத்தைப் பற்றி அம்மியிலிட்டதை.

"மகளிர்பால் வணக்க மோம்பி மைந்தர்கள் இன்பந்துய்க்குந்
தகுதியும் ஊடன் மாட்டுச் சாருதற் கங்கி சான்றா
அகலமுந் தெரிக்கு நீதி யாதரித் தணங்கு பாத
நகுமுகத் திளையோன் பற்றி நகைமணி யம்மி யிட்டான்"

என்று கச்சியப்ப முனிவர் மகளிரிடத்து வணக்கம் ஓம்புதலையே அம்மிமிதித்தலின் முதலாவது பொருளாகக் கூறியுள்ளது உணரத்தக்கது.

## அருந்ததி காட்டல்

மணவினையில் மணமக்கள் தீவலம் வந்து அம்மி மிதித்து அருந்ததி காட்டும் வினை நடைபெறும். மணமகன் தன் மனைவிக்குத் துருவ நட்சத்திரத்தையும் அருந்ததி நட்சத்திரத்யுங் காட்டி வணங்க வேண்டும். சப்தரிஷிகளின் பத்தினிகளில் வசிட்டரின் பத்தினி அருந்ததியே மிக பதிவிரதையாகவும் சலனம் அற்றவளாகவும் இருப்பவள். அதேபோல் நீயும் இருப்பதோடு ஏழு பேருடன் எட்டாவதாக விளங்கி கற்பினாலும் பாக்கியத்தினாலும் விருத்தி அடையட்டும் எனக் கருதியே அருந்ததி நட்சத்திரத்தை மணமகன் மணமகளுக்குக் காட்டுவதன் பொருளாகும். அருந்ததி என்பதற்கு கணவன் மனதை அனுசரிப்பவள் எனப் பொருளாகும்.

''இலங்கொளி அம்மி மிதித்து எதிர்கின்ற
கலங்கலில் கற்பின் அருந்ததி கண்டார்

என்கிறார் கம்பர்.

வானின் சப்தரிஷி மண்டலத்திற்குக் கீழ்ப்புறம் ஒளியுடன் பிரகாசிப்பது துருவ நட்சத்திரம். ஆங்கிலத்தில் இதனை pole star என்பர். இது என்றைக்கும் நிலைத்து இடம் மாறாமல் இருப்பதாகும், வாழ்க்கையில் எவ்விதத் துன்பமும் இல்லாமல் சுகமாக நிலைத்திருக்க இந்த நட்சத்திர தரிசனம் உதவும்.

இந்த அருந்ததியைக் காட்டுவது பற்றி வில்லி பாரதத்தில்

''விண்ணில் அங்கு அருகில்
தோன்றும் தேருவட மீன்அன்றி
மண்ணில் அங்கு உவமைசொல்ல
மடந்தையர் யாருமில்லாப்
பண்நலம் கடந்த மென்சொல் பாவை''

என்று திரௌபதி குறிப்பிடப்படுகிறாள்.

பெருங்கதையில் மணமகள்வாசவதத்தைக்கு அருந்ததி நட்சத்திரத்தைக் காட்டுவதாகக் கூறப்பட்டுள்ளது.

''விடுசுடர் மதியமொடு வெண்மீன் இவர்ந்த
வடபால் மருங்கில் சுடர்மீக் கூரிய
கற்புடை விழுமீன் காணக் காட்டிப்

பொற்றொடி நுதன்மிசைப் புனைவிரல் கூப்பி
மன்னிய உலகினுள் நின்னியல் பாக
என்வயின் அருளென மும்முறை இறைஞ்சுவித்து;'
(பெருங்:2;3:124-29)

இவ்வாறு திருமண நிகழ்ச்சி இடம்பெறும் இலக்கியங்களில் அம்மி மிதித்து அருந்ததி காட்டும் சடங்கு தவறாமல் கூறப்பெற்றுள்ளது. இளற்றின் முக்கியப் பொருள் சீரிய கற்புடைய அருந்ததியைப் போல் வாழ்வேன். ஒருசிறிய தவறு நேர்ந்ததால் அகலிகை கல்லாகச் சபிக்கப்பட்டாள். அந்த நிலையை நான் கனவிலும் அடையமாட்டேன். கல்லை மிதித்துச் சத்தியம் செய்கிறேன் என்று மணப்பெண் தன் கணவனுக்கு வாக்குக் கொடுப்பது போன்ற தத்துவம் இதிலடங்கியுள்ளது என்பர். திருமணம் ஆன பெண் என்ற மங்கலமான அடையாளத்தைப் பலரும் அறிய அக்கினி சாட்சியாக நிரூபித்துக் காட்டி, அதற்கு அறிகுறியான அணிகலனே மெட்டி என்கிற ஆபரணம். காலில் மெட்டி இல்லாமல் வாசற்படி தாண்டக்கூடாது என்பது சாத்திரம். தாலியும் மெட்டியும் ஒரே பந்தலில் ஒரே வேளையில் அணிவிக்கப்படும் நகைகளானதால் மாங்கல்யத்துக்கு உள்ள ஏற்றம் மெட்டிக்கும் உண்டு.

வைதிக மரபில் மணவினை நிறைவுற்றவுடன், அம்மி மிதித்தல் அருந்ததி காணுதல் முதலிய சடங்குகள் நிகழும். அவற்றைப் பற்றிப் பழைய தமிழ் நூல்களில் செய்தி இல்லை. அருந்ததியைக் கற்புக்கு முன்மாதிரியாகச் சங்கச் சான்றோரும் போற்றினர் என்பதற்கான குறிப்புகளே காணப்படுகின்றன.

''வடமீன் புரையும் கற்பின் அரிவை'' (புறம். 122)
''அருந்ததி அனைய கற்பின்'' (ஐங்: 442)

### பொரியிடுதல்

திருமணத்தில் மற்றொரு முக்கியமான சடங்கு பொரியிடுதல். மணமகள் தன் கணவன் தீர்க்காயுளுடன் இருக்க வேண்டும் என்று அக்கினியில் பொரியினால் ஹோமம் செய்ய வேண்டும்.. மணமகள் இரண்டு கைகளையும் ஒன்றாக சேர்த்து வைத்துக்கொள்வாள். அந்தக் கைகள் நிறைய அவளுடைய சகோதரன் நெல் பொரியைக் கொடுப்பான். பிறகு அந்தப் பொரிமீது சிறிது நெய் சேர்த்து மணமகன் அவளுக்குப் பதிலாக மந்திரம் உறி அவள் கைகளைப் பிடித்து பொரியை அக்கினியில்

ஹோமம் செய்வான். அப்பொழுது சொல்லப்படும் மந்திரத்தின் பொருள் 'என்னுடைய கணவன் நீண்ட ஆயுள் உள்ளவனாக இருக்கட்டும்., நூறு ஆண்டுகள் வாழட்டும்' என்பதாகும்,

பிறகு மணமக்கள் அக்கினியை வலமாக வந்து முன்போல் மணமகளின் வலது கால் கட்டை விரலைப் பிடித்து அம்மி மீது வைப்பான்: இவ்வாறு மூன்று முறை மணமக்கள் அக்கினியை வலம் வந்து பொரியிடல் வேண்டும், பொரி உதவிய சகோதரனுக்கு அவரவர் வசதிக்கு ஏற்ப மரியாதை செய்தல் வேண்டும். மணமகன் மைத்துனன் கைக்குப் பொன் மோதிரம் அணிவித்து மாலை சூட்டி, அல்லது பட்டு உத்தரீயமோ வாங்கிக் கொடுத்தல் வேண்டும்.

பொரி என்பது ஒரு மங்களகரமான பொருள். அதனால் தான் பெரிய அரசர்கள் வீதியில் உலா வரும் பொழுது மங்கலமான பொரியை வாரி இறைப்பார்கள். இலக்கியச் சான்றுகள் என்று பார்க்கும் பொழுது முதலில் கொங்குவேளிரின் பெருங்கதையில் இதைக் குறித்துக் கூறப்பட்டுள்ளது.

''நன்னெய் தீட்டிய செம்மலர் அங்கைப்
பொம்மல் வெண்பொரி பொலியப் பெய்தபின்''
(பெருங் : 2:3:89-90)

இதையடுத்து தெளிவாக சூடிக்கொடுத்த நாச்சியாரின் பாசுரத்தில் இச்சடங்கு இடம்பெற்றுள்ளது. மணவறையில் மைத்துனன் அமர்ந்து,

''வரிசிலை வாண்முகத்து என்னை மார் தாம்வந்திட்டு,
எரிமுகம் பாரித்து என்னைமுன்னே நிறுத்தி
அரிமுகன் அச்சுதன் கைம்மேலென் கைவைத்து
பொரிமுகந் தட்டக்க னாக்கண்டேன் தோழிநான்.''

என்ற ஆண்டாளின் பாசுரப்படி பொரியிடுவார்கள். இதற்குப் பின்னெழுந்த இலக்கியங்களுள்ளும் பொரியிடும் சடங்கு கூறப் பட்டுள்ளது.

### மாலை மாற்றல்

பொதுவாக ஒருவர் சூடிய மாலையை மற்றொருவர் அணிய லாகாது என்று கூறுவோம். ஆனால் மணவினையின் பிணைப்

பால் ஈருடல் ஒருயிராகப் போகும் மண்மக்கள் மாலை மாற்றிக் கொள்வதன் மூலம் உள்ளத்தால் ஒன்றுபடுவர். எதனையும் மும் முறை கூறினாலும், செய்தாலும் அது உறுதியாகிவிடும் என்கிறோம். இருவரும் ஒன்றாகி மனந்தளவில் கூட வேறுபாடு இன்றி வாழ வேண்டும் என்பதையே மும்முறை மாலைமாற்றல் உணர்த்துகிறது. சைவ வைணவர்களிடையே ஒரேவிதமான நோக்கத்துடனே இச்சடங்கு நடைபெறுகிறது. ஒருசாரார் ஊஞ்சலில் நின்று மாலைமாற்றுவர், மணமக்கள் சிறுவயதுடைய வர்களாய் இருந்தால் மணமகனையும் மணமகளையும் அவர் களுடைய அம்மான்மார்கள் தோளில் தூக்கிக்கொள்வது வழக்கம். அவர்களுக்குப் பதிலாக வேறு சிலர் அவர்களைத் தூக்கிக் கொண்டு இடதுசாரி வலதுசாரியாக ஆடுவது ஸ்ரீவைஷ்ணவ குடும்பங்களில் நடைபெற்று வருகின்றது. இவ் வாறு தோளெடுப்பதற்காகவே காஞ்சிபுரத்தில் தேகவன்மை உடைய ஒரு கூட்டத்தினர் உண்டு. (உ,வே,சா.நினைவு மஞ்சரி) இக்காலத்தில் இப்பழக்கம் அடியோடு இல்லை என்று கூட கூறலாம்.

## ஊஞ்சல் ஆடல்

திருமண வினைகளுள் மணமக்கள் ஊஞ்சல் ஆடுதல் ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். நமது வாழ்க்கைத் தத்துவத்தை உணர்த்துவது மேலே விட்டத்திலிருந்து தொங்கும் சங்கிலிகள் நமது வினைப்பயனால் இறைவனிடமிருந்து இம்மானிடப் பிறவி யைப் பெற்றிருக்கிறோம் என்பதைக் காட்டுகிறது, ஊஞ்சல் முன்னும் பின்னும் செல்வது நமது வாழ்க்கை அலைபோல் சலன முள்ளது. மனம் ஊஞ்சல் அசைவதைப் போல சஞ்சலம் அடை யாமல் ஊஞ்சலின் அசைவற்ற நிலைபோல் இருக்க வேண்டும் என்பதை உணர்த்துகிறது.

## ஆசிகூறுதல் (வாழ்த்துதல்)

திருமணத்தில் மணமகன் மணமகளின் கழுத்தில் தாலி அணிவித்த பிறகு பெரியோர்களின் வாழ்த்துக்களைப் பெறுவதற்கு வேண்டி இருவருமாகக் கீழே விழுந்து வணங்குவர். திருமண விழா காண வந்த பெரியோர்களும் தங்கள் உளமார வாழ்த்துகின்றனர். மணமக்களின் மீது அட்சதை தெளித்து ஆசீர்வாதம் செய்வது எனபது நம்முடைய நாட்டு மரபு. இது பொதுவாக இரண்டு தடவை நடைபெறுகிறது. முதலாவதாக மணமகளின் கழுத்தில் மங்கலநாண் அணிவிக்கும் போதும் அடுத்து இருவரும் சேர்ந்து

பெரியவர்களின் ஆசியைப் பெறுகின்ற பொழுதும் நடைபெறுகிறது. நமது நாட்டில் எப்படி அட்சதை இடுகிறார்களென்றால் சிறந்த தானியமாகிய அரிசியையும், மலர்களையும் ஒன்றாகச் சேர்த்து மலர்மாரி பொழிவது போல் வலக்கரத்தால் மணமக்கள் மேலிட்டு ஆசி வழங்குகின்றனர். இந்தச் சிறு நிகழ்ச்சிக்கும் ஒரு பொருள் கூறுவர். கன்னி மண்ணில் தானியம் விழுந்து முளைத்துச் செழுமை தருவது போல மணமக்களின் வாழ்க்கையிலும் சந்ததி பெருக வேண்டும் என்பது தான் அதன் விளக்கம். பிறகு மலர்களை அரிசியோடு சேர்க்கக் காரணம் அரும்பானது எவ்வாறு செடியில் அரும்பி மலர்ந்து மணம் வீசுகிறதோ அது போல இந்த மணமக்களும் மண்ணில் வாழ்வாங்கு வாழ்ந்து மணம் வீச வேண்டும் என்ற கருத்தைக் கூறுவர்.

இவ்வாறு திருமணம் நிகழ்கையில் வாழ்த்தும் பண்பு பண்டைத் தமிழரிடையேயும் காணப்படுகிறது. சில சமயம் வாழ்த்தும் வகை சிறிது வேறுபடுகிறது, சங்க இலக்கியங்களுள் அகநானூற்றுப் பாடல்கள் இரண்டின் மூலம் முற்காலத் தமிழரின் தூய தமிழ்த் திருமணமுறை எது என்பதை அறிந்தோம். ஒரு பாடலில், நல்ல நேரத்தில் பிள்ளைபெற்ற வாழ்வரசியர் நால்வர் கூடி தூய நீர்க் குடங்களில் நெல்லும் மலரும் தூவி, 'கற்பு நெறியினின்றும் வழுவாமல் பல நலங்களைச் செய்து கணவன் விரும்பத்தக்க மனைவி ஆகுக' என்று வாழ்த்துகின்றனர்.

பண்டைத் தமிழர் பழக்கத்தையொட்டியே இந்நாளில் அரிசியும் மலரும் கலந்த அட்சதை இட்டு மணமக்களை வாழ்த்துகின்றனர் போலும்.

''வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோர் பெட்கும் பிணையை ஆகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றை''

(அகம்:86:12-17)

பெருங்கதையில் ஆசிரியர் கொங்கு வேளிர்,

''நன்னிலை உலகினுள் நாவல் போலவும்
பொன்னணி நெடுமலை போலவும் பொழில்வயின்
மன்னுக இவரென'' என்றும் (பெருங்:2:3:91-93)
''அந்த ணாளர் ஆசிடை கூற'' என்றும் ( ,, 2:3:119)

வாழ்த்துக் கூறியுள்ளார்.

கந்தபுராணத்தில் வள்ளியம்மை திருமணப் படலத்தில் கச்சியப்பர் மணமக்களை மலரும் அறுகும் தூவி வாழ்த்தியதாகப் பாடியுள்ளார்.

''புல்லிய குறவர்மாதர் பொருவில்சீர் மருகன்றானும்
வல்லியு மின்னே போலவைகலும் வாழ்கவென்று
சொல்லிய லாகிகூறித் தூமலரறுகு தூர்த்தார்.'' (207)

சனகர் சீதாபிராட்டியை இராமனுக்குக் கன்னிகாதானஞ் செய்த பொழுது,

அந்தணர் ஆசியருங்கல மன்னரர்
தந்தபல் லாண்டிசை தார்முடி மன்னர்
வந்தனை நாவலர் வாழ்த்தொலி போல
முந்திய சங்க முழங்கின மாதோ.'' கம் : பால : 21 : 88

### நாலாம் நீர்ச் சடங்கு

திருமணம் நன்றாக நடைபெற வேண்டி கையில் கட்டப்பட்ட காப்புநாணை மணமகனும் மணமகளும் அவிழ்த்தலாகும். இந்த நிகழ்ச்சியைச் சிலர் நாகவல்லி முகூர்த்தம் என்பர். ஒரு சிலர் பச்சை பூசும் கல்யாணம் என்பார்கள். நாகவல்லீ என்பதற்கு வெற்றிலை என்று ஒரு பொருள் உண்டு. மங்களகரமான வெற்றியைக் கொடுக்கக் கூடிய மகத்தான மாண்பு அமைந்த வெற்றி இலையின் முக்கியத்துவத்தையே நான்காம் நாள் சிலர் கொண்டாடுவார்கள், எல்லோருக்கும் தாம்பூலம் கொடுப்பதும் மரியாதை செய்வதும் வழக்கம். வைணவர்களில் வைதிகச் செயலாகவே மாமனார் கையினால் குங்குமப் பூவை இழைத்து மருமகப்பிள்ளைக்குப் பச்சை பூசுவார். அந்த வைபவத்தை விவரித்து,

குங்கும மப்பிக்கு ளிர்சாந்தம் மட்டித்து,
மங்கல வீதிவ லம்செய்து மணநீர்

அங்கவ னோடு முடன்சென் றங் கானைமேல்,
மஞ்சன மாட்டக்க னாக்கண்டேன் தோழி நான்"

என்று ஆண்டாள் பாடியுள்ளாள்.

**தேங்காய் உருட்டல்**

அப்பொழுது மணமக்கள் எதிர் எதிராக உட்கார்ந்து மஞ்சள் தடவிய தேங்காயை உருட்டி விளையாடுவார்கள், இருவரும் அதை மிகவும் திறமையாக உருட்டி வேகமாக விடுவர். பெண்ணின் நாணத்தைப் போக்கி மணமகனோடு பழக வாய்ப் பளிக்க வேண்டும், தேங்காயை உருட்டும் பொழுது கொஞ்சம் சாமர்த்தியமாக உருட்ட வேண்டும். அதுபோலவே வாழ்க் கையில் நாம் கையாளுகின்றவற்றை மிகவும் கவனமாகவும் திறமையாகவும் முடிக்க வேண்டும் என்ற தத்துவத்தையே இந் நிகழ்ச்சி குறிக்கும். இந்த விளையாட்டைப் போலவே பூப்பந்து எறிந்து விளையாடுவர். வெற்றிலை பாக்கு மடித்துக் கொடுத்து விளையாடுவர். ஒரு சிலர் பல்லாங்குழி ஆட்டம் ஆடுவர். இந்த ஆட்டத்தின் உட்பொருள் கணவனும் மனைவியும் வாழ்க்கைக்கு தேவையான பொருட்களை ஒருவரை ஒருவர் போட்டி போட்டுக் கொண்டு தேட வேண்டும் என்பதைக் குறிக்கும்.

திருமணத்தில் இதைப் போன்ற சில சடங்குகள் வைக்கக் காரணம் திறமையில் ஒருவரை ஒருவர் விஞ்சியே இருக்க வேண் டும் என்பதைக் காட்டுவதற்காகும். நாகவல்லி முகூர்த்தம் போன்ற சடங்குகளின் போது மணமக்கள் பலருமறிய பழக வாய்ப்பு ஏற்படுகிறது.

**மணச்சடங்குகள் : (Marriage-rites)**

"மணச்சடங்குகளில் தம்பதிகளுக்கு உண்டாகும் புதிய நிலையையும், மாறுதல்களையும், பந்தல் அமைத்தல், ஊர்வலம் வருதல், மத்தளம் கொட்டல், சங்கம் ஊதல் போன்றவைகள் விளம்பரப்படுத்துகின்றன. பரிசமிடுதல், நிச்சயம் செய்தல், கோத்திரம் கூறல் போன்ற சடங்குகள் மண ஒப்பந்தத்தையும், அதற்கு வேண்டிய சான்றுகளையும் அளிக்கும். தீபம் ஏந்தல் ஆரத்தி, நலங்கு முதலிய சடங்குகள் கண்ணேறுபடாமல் காப்ப தற்காகச் செய்யப்படுபவை. விரதம், உபநயனம், காப்பு போன்ற சடங்குகள் தம்பதிகள் இதுவரையிலிருந்த நிலையிலிருந்து விலகி இருத்தலைக் குறிக்கும். புத்தாடை அணிதல், தாலி, மெட்டுப்

போன்ற நகைகளை அணிதல், மாலை, மோதிரம் மாற்றல் தம்பதிகள் புதிய நிலைக்கு மாறுதலை அறிவிக்கும். தீவலம் செய்தல் அம்மி மிதித்தல், அருந்ததி காட்டல், குங்குமம் அப்பல், பட்டம் கட்டுதல், மஞ்சனமாடல், தாரை வார்த்துத் தருதல், கைத்தலம் பற்றல், போன்ற சடங்குகள் தம்பதிகளுடைய புதிய கடமைகள், உரிமைகள், நடவடிக்கைகளை அறிமுகப்படுத்தும். ஆசிர்வாதம் விருந்தளித்தல் போன்ற சடங்குகள் தம்பதிகளுடைய புதிய வாழ்க்கைக்கு வேண்டிய ஆதரவளிப்பனவாகும்.''[1]

> உற்றபெரும் சுற்றம் உறநன் மனைவியுடன்
> பற்றிமிக வாழ்க. —நீதிவெண்பா.

1. பக். 66. கலைக்களஞ்சியம். தொகுதி எட்டு. தமிழ் வளர்ச்சிக் கழகம். சென்னை. 1961.

# திருமணச் சின்னம்

மக்கள் சமுதாயத்தில் திருமணம் ஒருமுக்கிய நிகழ்ச்சியாகும். அது மக்களின் வாழ்க்கையை நெறிப்படுத்தி ஒழுக்கத்திற்கு வரம்பு கோலுகிறது, நாகரிகம் வளர வளர அவ்வாழ்வில் ஒழுங்கும் கட்டுப்பாடும் படிப்படியாகத் தோன்றின. அதன் விளைவாகத் திருமணமும் அதற்குரிய சடங்குகளும் தோன்றலாயின. அதன் பின் திருமணம் வகுத்த வரையறைக்கு உட்பட்டு மக்கள் இல்லறம் பேணினர். ஒருவனுக்கு ஒருத்தி என்ற உயர்ந்த நிலை உருவாயிற்று. ஆடவர்கள் சிலர் இவ்வொழுக்க வரம்பை மீறினாலும் கற்புடைய பெண்கள் அதனைப் பேணிக்காத்தனர். ஒருவனுக்கு ஒருத்தி உரியவள் என்பதைக் காட்டும் அடையாளமாகப் பெண்ணின் கழுத்தில் தாலி அணிவிக்கப்படுகிறது. நாகரிக வளர்ச்சியின் காரணமாகத் தற்காலத்தில் நடைபெறும் சீர்திருத்தத் திருமணங்களில்கூட திருமணம் ஆனதன் அடையாளமாகப் பெண்ணின் கழுத்தில் மணமகனால் தாலி அணிவிக்கப்படுகிறது. அல்லது திருமண மோதிரமாவது மாற்றிக் கொள்வர். இன்றைய நாளில் திருமணவினையில் முக்கியச் சடங்காக நாம் கருதுவது, கூறுவது எல்லாம் தாலி அணிவிக்கும் சடங்கே ஆகும். எடுத்த செயல் இனிதே நிறைவேறக் கையில் கட்டும் நூலே காப்பு நூலாகும். கையிற் காப்புக்கட்டியது போலவே காலிலும் தடை கட்டினார்கள், அத்தடைதான் தண்டை என்று பெயர் பெற்றது. நாகரிக வளர்ச்சியுற்ற இக்காலத்திலும் தாய்மார் தம் குழந்தைகட்கு எந்தவிதமான ஆபத்தும் வராமலிருக்க ஐம்பொன்னால் தண்டை செய்து காலில் அணிவிப்பர். இதைப் போல இல்லற வாழ்வை இனிதே நடத்த, அதற்குக் காப்பாகப் பெண்ணின் கழுத்தில் அணிவிக்கப்படும் நூலே தாலி எனப்படுகிறது. இக்காலத்தில் பொற்றாலி அணியப் பெற்றாலும் மங்கல நாணாகிய நூலை அணிவிக்கும் வழக்கம் இன்றும் வழக்கிலுள்ளது. நூலின் பெயராகிய 'இழை' என்ற சொல் மங்கல நாணின் பெயராயிற்று.

இந்நாளில் பெண்கள் தாலியைத் திருமணம் நடந்ததன் அடையாளமாக அணிவதுபோலவே நமது பண்டைத் தமிழ்ப் பெண்டிர் தமது மங்கல நிலையைக் குறிப்பதற்குத் தாலி அணிந் தார்களா? அணிந்தார்களாயின் அதனை எந்த நிகழ்ச்சியின் போது அணிந்தார்கள்? அந்நாளில் தாலிக்கு வழங்கப்பட்ட பெயர் என்ன? யார் இதனை அணிவித்தார்கள்? சங்க காலத்தில் இடைக்காலத்தில், அதற்குப் பிற்பட்ட காலத்தில் தாலி அணிவிக் கும் சடங்கு இருந்ததா? தாலி பெறுமிடம் ஆகியன குறித்து அறிஞர்களிடையே சில கருத்து வேற்றுமைகள் நிலவுகின்றன. தற்காலத்தில் திருமணச் சின்னமாக நாம் கருதும், வழங்கும் தாலி குறித்து ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். தாலி என்று மங்கல நாணைக் குறிக்கும் சொல் பதினோராம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கியங்களில்தான் முதன் முத லாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. 'தாலி' என்ற சொல் திருமணச் சின்னத்தைக் குறிக்கும் பொருளில் 10ஆம் நூற்றாண்டுக்கு முன்பு வழக்கிலில்லை எனபதனால் சங்க காலத்தும் அதன் பின்னரும் வாழ்ந்த தமிழ்ப் பெண்டிர் திருமணச் சின்னம் எதுவுமே அணிய வில்லை என்று முடிவு செய்தலும் முறையாகாது. எனவே இந் நாளைப் போல தாலி அணிவிக்கும் சடங்கு பெரிதும் போற்றப் படவில்லை என்றாலும் அவர்கள் மங்கலவணி அணிந்து வாழ்ந் தனர் என்பதில் ஐயமில்லை. இனி, தமிழ் இலக்கியங்களின் துணைகொண்டு தமிழர் வாழ்வில் திருமணச் சின்னம் குறித்து ஆய்வோம்.

**தாலி - சொல்லும் பொருளும் :**

தாலி என்ற சொல் சங்க இலக்கியங்களில் பலவிடங்களில் பயின்றுள்ளது. தொங்குன்ற ஒரு அணியைக் குறிக்கும் பொருளில் அது பயிலப்பட்டுள்ளது, நாலுதல் என்றால் தொங்குதல் என்பது பொருள். அதிலுள்ள நகரம் தகரமாக மாறி தாலி என்ற சொல் தோன்றியிருத்தல் வேண்டும். தொங்குகிற அணிக்குத் தாலி என்பது காரணப்பெயராய் அமைந்தது. அல்லது தால், தாலம் என்பன பனைமரத்தின் பெயர்கள். முன்னாளில் பனையோலைக் குருத்தால் நகைகள் செய்து சிறுவர் சிறுமியர்களும், பெண்களும் அணிந்து கொள்வது வழக்கம் அவ்வணிகள் பனையின் பெய ராகிய தாலம் என்பதிலிருந்து பிறந்த தாலி என்ற பெயரால் வழங்கப்பெற்றன. பெரியாழ்வார் கண்ணனை, "தாலிக் கொழுந் தைத் தடங்கழுத்திற் பூண்டு' செல்வதாகப் பாடுகிறார். இங்கே தாலிக் கொழுந்து என்பது பனையோலைக் குருத்திற் செய்து,

சிறுவர்கள் அணியும் கழுத்தணியைக் குறிப்பதாகக் கருதலாம். எனினும் தாலி என்ற பெயரால் சங்க இலக்கியங்களிலும் பிற இலக்கியங்களிலும் வழங்கும் அணிகள் எவை என்பதைக் காண் போம்.

ஐம்படைத்தாலி

தாலி என்று முடியும் பெயருடைய அணிகள் அந்நாளில் பல இருந்தனவாகத் தெரிகிறது, அவற்றுள் ஒன்று ஐம்படைத்தாலி. அவ்வணி நோய்நொடி வராமல் குழந்தைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் என்று மக்கள் நம்பினர். அவ்வணியை ஐந்தாவது மாதத்தில் ஆண் குழந்தைகளுக்கு அணிவிப்பர். அது காக்கும் கடவுளாகிய திருமாலின் ஐந்து ஆயுதங்களையும் (சங்கு, சக்கரம், வில், வாள். கதை) சிறிய வடிவினதாகப் பொன் முதலிய உலோ கங்களில் செய்து குழந்தைகளின் கழுத்தில் அணிவிப்பர். இதற்கான சான்றுகளைச் சங்க காலம் தொடங்கி பிற்கால இலக்கியங்களிலும் கூறப்படுவதைக் காணலாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ் செழியன் தன் இளம்பருவத்தில் பகைவர் எழுவரை வென்று வெற்றிபெற்ற செய்தியை இடைக்குன்றூர் கிழார், புறநானூற்று பாடல் ஒன்றில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

"... ... ... தார்பூண்டு
தாலி களைந்தன்று மிலனே பால் விட்டு
அயினியும் இன்று அயின்றனனே," (புறம். 77-6-8)

சேக்கிழார் "ஐம்படைச் சதங்கை சாத்தி" எனத் தடுத்தாட் கொண்ட புராணத்திலும், கம்பர், "தாலி ஐம்படைத் தழுவு மார்பிடை" என நாட்டுப் படலத்திலும், "ஐம்படை மார்பிற் காணேன்" எனப் பரஞ்சோதியாரின் திருவிளையாடற் புராணத் திலும் இவ்வணி பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இவற்றை அடுத்துத் தோன்றிய இலக்கியங்களிலும் ஐம்படைத் தாலியைப் பற்றிய செய்தி காணப்படுகிறது

புலிப்பற்றாலி :

பழங்காலத்தில் வீரத்தைப் புலப்படுத்தும் ஓரணியாக அணியப்பட்டது புலிப்பல் தாலியாகும். குறிஞ்சி நிலத்தலைவன் அஞ்சாது புலியைத் தாக்கிக் கொன்று அதன் பற்களை எடுத்து

அவற்றைத் தொங்கும் அணியாகச் செய்து தன் புதல்வர் புதல்வியர்க்கு அணிவிப்பது வழக்கம் இவ்வணியே புலிப்பல் தாலி எனப்பட்டது.

இவ்வணியைச் சிறுவர்கள் அணியும் செய்தியைப் 'புலிப்பல் தாலிப் புலம்பு மணிச்சிறார்' (374:9) என்னும் புறநானூற்று அடியாலும்; சிறுமியர் அணியும் செய்தியை

''புலிப்பல் கோத்த புலம்பு மணித்தாலி
ஒலிக்குழைச் செயலை உடைமாண் அல்குல்'' (7:18)

என்னும் அகநானூற்று அடிகளாலும்; இப்புலிப்பல் தாலியைக் கொற்றவை வழிபாடு செய்யும் எயினர்கள் தாம் கொற்றவை யாகப் பாவிக்கும் மறக்குலக் குமரிக்கு அணிந்ததாகச் சிலப்பதி கார வேட்டுவவரி கூறுகிறது.

''மறங்கொள் வயப்புலி வாய்பிளந்து பெற்ற
மாலை வெண் பற்றாலி'' (சிலப்: வேட்டுவ ; 27-8)

இந்நாளிலும் சிலர் புலிப்பல் கோத்த மாலை அணிவதைக் காண லாம்.

**பின்தாலி :**

சிலப்பதிகாரத்தில் மாதவி கோவலனுடன் கடலாடச் செல்லு முன் மிகப்பல அணிகளை அணிந்து கொள்கிறாள். அவ்வணிகள் குறித்து இளங்கோவடிகள் விரிவாகப் பாடியுள்ளார். இவற்றை விளக்கும் அரும்பத உரையாசிரியர் ஓரிடத்தில் ''கழுத்தாபரணங் களில் கொக்கிவாய் முத்தாரமாகச் செய்து அதிலே நவரத்தினங் களைக் கோர்த்து முதுகு மறைய விடும் பின்தாலி'' என்றும் உரை எழுதுகிறார். இதிலிருந்து பின்தாலி என்பது ஓர் அணியின் பெயர் என்றும் அது நவரத்தினங்களைக் கோர்த்து முதுகு மறைய அணிவதென்றும் அறியலாம்.

**சின்மணித் தாலி :**

பெருங்கதையுள் வாசவத்தையின் அணிகளை விரிவாக்க் கூறு மிடத்தில் கொங்குவேளிர் சின்மணித் தாலி என்ற ஓர் அணியைக்

குறிப்பிடுகின்றார். இவ்வணி சில மணிகளைக் கோர்த்துத் தொங்கும் வடிவில் செய்த ஓர் அணியாதல் வேண்டும்.

**ஆமைத்தாலி :**

எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரியாழ்வார்,
''அக்கு வடமுடுத்து ஆமைத்தாலி பூண்ட அனந்தசயனன்
தளர் நடை நடவானோ?'' (1:7:2)

என்று பாடுமிடத்தில் ஆமைத்தாலி ஒன்றைக் குறிப்பிட்டுள்ளார். அது ஆமையின் வடிவில் செய்து சிறுவர்கள் கழுத்திலணியும் ஓர் அணியாதல் வேண்டும். இதைப் போலவே அச்சுத்தாலி என்ற ஓரணியின் பெயரும் திவ்யப் பிரபந்தத்தில் இடம்பெறுகிறது. இவற்றால் தாலி என்னுஞ் சொல் சங்ககாலத்தும் அதையடுத்தும் வழக்கிலிருந்ததே அன்றி அச்சொல் அக்காலத் தமிழர் சமூகத்தில் மணமகன் ஒருவன் தான் மனைவியாக ஏற்கும் ஒருத்திக்குக் கழுத்தில் அணிவிக்கும் தாலியைக் குறியாதது சிந்தனைக்கு உரியது.

**தாலி**

திருமணமானவள் என்பதைப் பிறர் அறிய உதவும் அடையாளமாக திருமண நாளன்று மணமகள் கழுத்தில் மணமகனால் தாலி அணிவிக்கப்படுகின்றது. தமிழ் அறிஞர்கள் 'தாலி கட்டுதல் தமிழ் நாட்டு முறை. ஆரியர் முறை அன்று. வடநாட்டில் ஆரியர்கள் இன்றும் தாலிகட்டாமையே இதற்குச் சான்று'' என்றனர். அப்படியென்றால் தாலிகட்டும் சடங்குத் தமிழரிடையே எக்காலத்தில் வழக்கில் வந்திருத்தல் கூடும்? இந்நாளில் நாம் தாலி என்ற சொல்லைத் திருமணத்தாலியைக் குறிக்கவே சொல்கிறோம். நீளமாகத் தொங்கும் பிற அணிகளைத் தற்காலத்தில் நாம் தாழ்வடம், வடம், சரம், மாலை, சங்கிலி, போன்ற வேறு பெயர்களால் குறிப்பிடுகின்றோம். ஏறத்தாழ 10ஆம் நூற்றாண்டுக்கு முன்பு வரை தாலி என்னும் சொல் தொங்கும் அணிகளைக் குறிக்கவே பயன்பட்டது. அதனால் பத்தாம் நூற்றாண்டுக்கு முன்புவரை வாழ்ந்த தமிழ்ப் பெண்டிர் திருமணச் சின்னமாக எதையுமே அணியவில்லையா என்ற ஐயம் எழலாம். நமக்குக் கிடைக்கும் ஒரு சில இலக்கியச் சான்றுகளிலிருந்து பண்டைத் தமிழ் மகளிரும் திருமணச் சின்னம் அணிந்தனர். ஆனால் அச்சின்னம் இந்நாளில் நாம் கூறும் தாலி என்ற பெயரால் குறிப்பிடப் பெறவில்லை என்று கொள்வதே பொருத்தமுடையதாகும்.

சங்க காலத்தும், அதனை அடுத்தும் நடத்த திருமணங் களைப் பற்றிய செய்திகள் நமக்கு அதிகம் கிடைக்கவில்லை. சங்க இலக்கியமாகிய அகநானூற்றில் வரும் 86, 136 என்னும் இரு பாடல்களினின்றும் தமிழர் திருமண முறை குறித்துச் சில செய்திகள் கிடைக்கின்றன. அவையாவன திருமண விருந்து; நன்னாளில் திருமணம் நடைபெறுதல்; மணமனை அலங்காரம்; தலைவியை மங்கல நீராட்டுதல், மணமகளுக்குக் காப்புக் கட்டுதல்; வாழ்த்துதல், ஓரில்லிற் கூட்டுதல் போன்றவையாம். இந்த இரண்டு பாடல்களுள்ளும் 86வது பாடலில் மணமகட்கு மகளிர் மங்கல நீராட்டும் வழக்கத்தைக் கூறுகையில்

''வாலிழை மகளிர் நால்வர் கூடி''

நீராட்டினர் எனப்பாடப்பட்டுள்ளது. இவ்வடியில் வரும் 'இழை' என்ற சொல் மங்கல அணியைக் குறித்தது எனக் கொள்ளலாம். மணமகளை மங்கல மகளிர் நீராட்டுதலே மரபாகும். எனவே மேற்குறித்த அடியில் வரும் இழை என்ற சொல் திருமணச் சின்னமான தாலியைக் குறித்த சொல்லே எனல் பொருந்தும். இதைப் போலவே தமிழர் மணமுறைக்கு ஆதாரமாய்த் திகழும் மற்றொரு அகநானூற்றுப் பாடலில் (136) 'இழை' என்ற சொல் இடம்பெற்றுள்ளது.

''மழைபட் டன்ன மணன்மலி பந்தர்
இழையணி சிறப்பின் பெயர்வியர்ப் பாற்றி''

(அகம்; 136:16-17)

இவ்விரு அடிகட்கு உரையாசிரியர்கள் 'மழை பெய்தாற் போன்ற புதுமணல் மிக்க மணப்பந்தரிலே-இழை அணி சிறப்பின்—அணிகலன்களை அணிந்தமையால் உண்டான சிறப்பழகினோடு — இவள் இயங்குதலால் உண்டான வியர்வையும் சிவிறியாலாற்றி'' எனப் பொருள் கூறியுள்ளனர். இங்கு இந்நாளில் திருமணச் சின்னமாக நாம் வழங்கும் தாலி என்ற சொல்லுக்கு ஈடாக இழை என்ற சொல் வழங்கப்பட்டது என்று கொண்டு, 'சிறப்பு' என்ற சொல்லுக்கு விழா என்று பொருள் கொள்வோமேயானால் ''இழையணி சிறப்பு' என்ற தொடர் 'தாலி அணிவிக்கும் திருமண விழா' எனப் பொருள் பெறும் என்பது என் கருத்து. 'இழை' என்ற சொல் பண்டைத் தமிழரின் திருமணச் சின்னத்தையே குறித்தது என்பதற்கான சான்றுகள் சிலவற்றைப் புறப் பாடல்களில் காணலாம்.

சங்க இலக்கியமான புறநானூற்றுப் பாடலில் (127) உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்ற புலவர் கடையெழு வள்ளல் களில் ஒருவனான ஆய் என்பவனின் கொடைச் சிறப்பைப் புகழ்ந்து பாடியுள்ளார். ஆய்வள்ளலின் மகளிர் தமது கண வனின் விருப்பப்படி தாம் அணிந்துள்ள அணிகளுள் பிறர்க்குக் கொடுக்க முடியாத ஓர் இழையை மட்டும் அணிந்து கொண்டு பிற நகைகளைக் கழற்றிப் பாணர் இரவலர்க்குப் பரிசாக அளித்து விட்டனர். அணிகளைக் கழற்றிய நிலையில் அப்பெண்கள் முன்னைய ஒளி குன்றிக் காணப்பட்டனர். அதனால் அவர்கள் தங்கும் மாளிகையும் ஒளி குன்றியது என்ற கருத்தமைய

ஈகை யரிய இழை யணி மகளிரொடு
சாயின்றென்ப ஆய்கோயில்''

எனப் பாடியுள்ளார். திருமணமான ஒரு பெண் எந்நிலையிலும் கழற்றுதல் கூடாத முதன்மை வாய்ந்த அணி அவர்களது மங்கல மான வாழ்வரசி நிலையைக் குறிக்கும்மங்கலவணியே என்போம். எனவே முடமோசியார் கூறும் ஈகை அரிய இழையணி மகளிர் தம்கணவர் வாழ்வுள்ள மட்டும் போற்றி அணிந்திருக்கும் திரு மணச்சின்னமே என்பதில் ஐயமில்லை. புறநானூற்று உரை யாசிரியர் கருத்தும் இதனை வலியுறுத்துகின்றது அவரது உரைப் பகுதி ''பிறிதோர் அணிகலமுமின்றிக் கொடுத்தற்கரிய மாங்கல்ய சூத்திரத்தை அணிந்த மகளிருடனே பொலிவிழந்து சாய்ந்ததென்று சொல்லும் ஆயுடைய கோயில்'' என எழுதப் பட்டுள்ளது. ''கொடுத்தற்கரிய மாங்கல்ய சூத்திரம்'' என அவர் கூறும் உரை 'இழை' என்ற சொல்லின் பொருளைத் தெளிவுபடுத்துகிறது. இதனின்றும் இழை என்பது மங்கல வணியைக் குறித்தது என்றும் அதைத் தம்கணவர் வாழ்நாள் மட்டும் போற்றி அணிந்தனர் என்றும் அறிந்தோம். இதை மேலும் வலியுறுத்தும் வகையில் புறநானூற்றின் மற்றொரு பாடல் அமைகிறது. அதில் கரிகாற் பெருவளத்தான் இறந்த போது அவனது உரிமை மகளிர் தமது அணிகளைக் களைந்தனர் என்ற பொருளில்

''அறிவுடை யாளன் இறந்தோன்
... ... ...
மெல்லியன் மகளிரும் இழைகளைந் தனரே''

(புறம் 224: 17)

என கருங்குழலாதனார் என்ற புலவர் பாடியுள்ளார். இதில் 'இழைகளைந்தனர்' என்ற தொடர் மன்னன் கரிகாலன் இறந்தவுடன் அவனது உரிமை மகளிர் தமது திருமணச்சின்னமாய் வாழ்வரசி நிலையைக் குறித்துத் திகழ்ந்த இழையைக் (தாலியைக்) களைந்தனர் என்ற பொருள் தருவதைக் காணலாம். இவ்வாறாக மேற்கூறிய அகநானூற்றுப்பாடல்கள், புறப்பாடல்கள் ஆகியவற்றில் இடம் பெறும் இழை என்ற அணி மாங்கல்ய சூத்திரமே என ஐயமறக் கூறலாம்.

சங்க இலக்கியங்களுள் ஒன்றான நெடு நல்வாடையில் மங்கல அணியைப் பற்றிய குறிப்பு ஒன்று காணப்படுகிறது. பாண்டியன் நெடுஞ்செழியன் போருக்குச் சென்றிருந்த போது அவனது பெருந்தேவி அடைந்த பிரிவுத் துயரை ஆசிரியர் நக்கீரர் சொல்லோவியமாகத் தீட்டியுள்ளார். மன்னன் உடனிருந்தபொழுது முத்துமாலை அணியப்பெற்ற அவளது மார்பில் இப்பொழுது நெடிய தாலி நாண் ஒன்று மட்டும் தாழ்ந்து தொங்குகிறது என்று பொருளமைய,

> ஆரந் தாங்கிய அலர்முலை யாகத்துப்
> பின்னமை நெடு வீழ் தாழத் துணை துறந்து (136-7)

எனப் பாடியுள்ளார். ''பின்னமை நெடுவீழ்'' என்ற தொடருக்கு ''குத்துதலமைந்த நெடிய தாலி நாண்'' என்ற நச்சினார்க்கினியர் உரை கூறுகின்றார். 'வீழ்' என்பது தொங்குகிற பொருளைக் குறிக்கும். இங்கு அரசியின் கழுத்திலிருந்து தொங்கும் மங்கலவணியை நக்கீரர் ''வீழ்'' என்று குறிப்பிடுகிறார்.

**சிலம்பில் திருமணச் சின்னம்:**

சிலப்பதிகாரத்தில் அதன் முதற்காதையான மங்கல வாழ்த்துப் பாடலிலேயே கோவலன்-கண்ணகி திருமண நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளன. பழைய தமிழ் மணமுறையோடு ஆரிய முறையும் கலந்து காணப்படுகிறது. இக்காப்பியத்திலும் நாம் இந்நாளில் முதன்மையாகக் கருதும் மணமகளுக்கு மணமகன் திருமணச் சின்னம் அணிவிக்கும் நிகழ்ச்சி கூறப்படவில்லை. எனினும் இளங்கோவடிகள் பலவிடங்களில் திருமணச் சின்னத்தைக் குறித்து 'மங்கல அணி' என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளார். முதற்கண் திருமண நாளன்று மணமுரசு, மத்தளம் முழங்க மங்கல அணியானது ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகிறது.

இச்செய்தியை இளங்கோ "அகலுள் மங்கலவணி எழுந்தது" என்று குறிப்பிட்டுள்ளார். அதற்கு அரும்பத உரையாசிரியர் "ஊரிலே மாங்கலிய சூத்திரம் வலம் செய்தது" என்றும், அடியார்க்கு நல்லார் "மங்கலவணி ஊரெங்கும் எழுந்ததென்க" என்றும் உரை கூறியுள்ளனர். புறநானூற்று உரையாசிரியர் மாங்கல்ய சூத்திரம் என்று உரை எழுதிய ஈகைபரிய இழை யணியும் சிலப்பதிகாரத்தில் வலம் மங்கலவணியும் ஒன்றேயாதல் வேண்டும் என்பதில் ஐயமில்லை. சிலப்பதிகார காலத்தில் மங்கல அணியை ஊர்வலமாக எடுத்துச் செல்லும் வழக்கம் செல்வக்குடியில் பிறந்தாரிடம் இருந்திருக்கலாம். பெரியபுராணத் தில்ஆசிரியர்ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்ததிருஞான சம்பந்தரின் திருமண நிகழ்ச்சியை விளக்கும் பொழுது அவருக்கு அணிவிக்க வேண்டிய காப்பு நாண் அடியவர்களும், மறையவர்களும், மாதர் களும், மைந்தர்களும் சூழ்ந்துவர ஊர்வலமாக எடுத்துச் செல்லப் பட்டது எனக் கூறுகிறார். இதைப் போலவே கோவலன் இருப் பிடத்திலிருந்து கண்ணகிக்கு அணிவிக்க வேண்டிய மங்கலவணி வெகு ஆடம்பரமாக இன்னியம் முழங்க ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டிருக்கலாம். இப்பழக்கம் இக்காலத்தும் சில இனத்த வரிடையே காணப்படுகிறது.

சிலப்பதிகாரத்தில் இரண்டாவது காதையான மனையறம் படுத்த காதையில், கோவலன் கண்ணகியின் அழகைப் பாராட்டு கின்றான். அப்பகுதியில் இளங்கோவடிகள்

> நின் நலம் பாராட்டுநர்
> மறுவில் மங்கல அணியே யன்றியும்
> பிறிதணி அணியப் பெற்றதை எவன்கொல்?

எனப் பாடியுள்ளார். ஒப்பனை செய்வோர் பல அணிகளை அணிவிப்பதற்கு முன்பே கண்ணகி மங்கல அணியை அணிந்திருந் தாள் என்பது இவ்வடிகளால் விளங்கும். இவ்வணி ஒப்பனை செய்வோரால் வேண்டும்பொழுது அணிவிக்கவும், பின்னர் கழற்றவும் படுகிற பிற அணிகளைப் போலன்றி எப்பொழுதும் அணியப்படும் சிறப்பு வாய்ந்த அணி என்பதும் பெறப்படும். கோவலன் கண்ணகி திருமணத்திற்கு முன்பு ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்ட மங்கலவணியை மனையறம் படுத்த காதையில் கண்ணகி அணிந்திருந்ததாகக் கொள்ளலாம். சிலப்பதிகாரத்தின் நாலாவது காதையான அந்திமாலை சிறப்புச் செய் காதையில் கோவலனைப் பிரிந்து தனித்து வருந்தும் கண்ணகியின் துன்ப

நிலையை இளங்கோவடிகள் வருணிக்கின்றார். அந்த நிலையில் கண்ணகிக்குத் தன்னை ஒப்பனை செய்து கொள்வதில் ஆர்வமில்லை. வாட்டமுற்று ஒளியிழந்திருக்கிறாள். இங்கு "மங்கல வணியிற் பிறிதணி மகிழாள்"—(50) என்று கண்ணகி பிற அணிகலன்களை அணிந்து ஒப்பனை செய்து கொள்ளாது வருந்தி இருக்கும் நிலையைக் கூறுகையில் ஆசிரியர் முதலிரண்டு காதைகளில் கூறிய மங்கல வணியை மீண்டும் குறிப்பிடுவதைக் காணலாம். கணவனைப் பிரிந்திருக்கும் நிலையில் கண்ணகி மங்கல வணியின் பிறிதணி மகிழாள் என்பதால் அந்நிலையிலும் அணிய வேண்டிய ஓர் இன்றியமையாத அணியே அம்மங்கலவணி என்பது புலனாகும்.

மங்கலவணி என்ற சொல் வந்துள்ள இடங்களை நோக்கினால், அதற்குத் திருமணச் சின்னம் என்று அணியும் திருமண வணி என்ற பொருளே பொருந்துவதைக் கவனிக்கலாம். கோவலன் கண்ணகியின் கழுத்தில் மங்கலவணியை அணிவித்தான் என்று வெளிப்படையாகக் கூறப்படவில்லை என்றாலும் மேற்கூறிய கருத்துக்களைக் கொண்டு நோக்கும்பொழுது மங்கல வணி என்பது பெண்கள் திருமணமானவர்கள் என்பதைக் காட்ட அணியும் திருமணச் சின்னமே என்ற உண்மை விளங்கும்.

திருமணத்தின் சின்னமாகப் போற்றப்படும், மாங்கலியம் என இந்நாளில் நாம் கூறும் மங்கலவணி சங்க இலக்கியங்களாகிய புறநானூறு அகநானூற்றில் 'இழை' என்றும்; நெடு நல் வாடையில் 'நெடுவீழ்' என்றும், சிலப்பதிகார காப்பியத்தில் 'மங்கலவணி' என்றும் குறிக்கப்பட்டிருப்பதைக் கண்டோம். அந்த மங்கலவணியே-பதினெண்கீழ்க் கணக்கைச் சார்ந்ததும், கி. பி. 7 ஆம் நூற்றாண்டிற்கு உரியதுமான பழமொழியில் 'பொன்' என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. 'ஈகையரிய இழை' என்ற தொடரில் வரும் இழை என்பதற்கு நூல் என்பது பொருள். எனவே அம்மங்கல இழை பொன்னால் செய்த உருக்கள் நூலில் கோக்கப்பட்டு அமைந்த ஓர் அணியாதல் வேண்டும். பின்னர் இழையால் செய்யப்பட்ட அவ்வணியை பொன்னால் செய்து அணிந்து கொண்டமையால் அதற்குப் 'பொன்' என்பதே பெயராகவும் அமைந்தது.

கொடை வள்ளல் பாரி மகளின் விருந்தோம்பும் பண்பைச் சிறப்பித்துச் சொல்ல விழையுமிடத்தில் ஆசிரியர் அவள் அதன்

பொருட்டுத் தன் திருமண வணியையும் கழற்றி விற்று பாண் மகற்கு உணவளித்தாள் என்று கூறுகிறார்.

''மாரி யொன்றின்றி வறந்திருந்த காலத்தும்
பாரி மடமகள் பாண்மகற்கு—நீருலையுள்
பொன் தந்து கொண்டு புகாவாக நல்கினாள்
ஒன்றுறா முன்றிலோ இல்''. (பழமொழி 381)

இப்பாடலில் 'பொன்' என்ற சொல் திருமண வணியைக் குறித்தது, இதே பொருளில் பொன் என்ற சொல் 8-ஆம் நூற்றாண்டில் தோன்றிய இறையனார் அகப்பொருள் உரையிலும் எடுத்தாளப்படுகிறது. அந்நூலின் 23-ஆம் நூற்பா உரையில், 'பொன் அணிவான் நின்றாரும் உளர்' என்னும் சொற்றொடர் வருகிறது. பொன் அணிவான் என்பதற்குப் பொன்னாலான திருமண அணியை அணிவித்து மணமுடிப்பவன் என்பது பொருள். இவ்வாறு திருமணச் சின்னத்தைக் குறிக்கும் பொன் என்னுஞ் சொல் முதன் முதலில் பழமொழியில் பயிலப்பட்டு, பின்னர் இறையனார் அகப்பொருளுரையிலும், அவ்வுரையின் மேற்கோளாக எடுத்தாளப்படுகிற பாண்டிக் கோவையிலும், 12-ஆம் நூற்றாண்டில் தோன்றிய தஞ்சை வாணன் கோவையிலும் இடம்பெறுவதைக் காணலாம். அதே சமயம் மங்கலச் சின்னத்தை 'இழை' என்று சொல்லும் வழக்கமும் தொடர்ந்து வழக்கில் இருந்ததை எட்டாம் நூற்றாண்டினரான திருமங்கை ஆழ்வார் பாடல் மூலம் அறிந்து கொள்ளலாம்,

சந்தமல் குழலாள் அலக்கண் நூற் றுவர்தம்
பெண்டிரு மெய்தி நூ லிழப்ப
இந்திரன் சிறுவன் தேர்முன்நின் றானைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே.
(பெரியதிருமொழி. 2-3-6)

இப்பாடல் மூலம் திருமங்கை ஆழ்வார் காலத்தில் மணமானமைக்கு அறிகுறியாக கழுத்தில் நூல் (இழை) அணியும் வழக்கம் இருந்திருப்பதை உணரலாம். இக்காலத்தும் திருமணச்சின்னத்தை மஞ்சள் 'நூல்' என்றும் 'கயிறு' என்றும்கூறும் பழக்கமிருக்கிறது.

சிலப்பதிகாரத்திற்குப் பின் தோன்றிய பெருங்கதை, சூளாமணி, சீவக சிந்தாமணி முதலிய காவியங்களில் திருமண நிகழ்ச்சிகள் மிகவிரிவாகப் பாடப்பட்டிருந்தாலும் மணமகளுக்கு

மங்கலவணி அணிவித்த செய்தி வெளிப்படையாகக் கூறப்படவில்லை. எனினும் 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சீவக சிந்தாமணியில் முத்தியிலம்பகத்தில் சீவகனுடைய மனைவியார் தம்மை ஒப்பனை செய்து கொள்வதைத் திருத்தக்க தேவர் வருணிக்கும் இடத்தில்,

> நாணுள் ளிட்டுச் சுடர்வீசு
> நன் மாணிக்க நகுதாலி
> பேணி நல்லார் கழுத்தணிந்து''

எனப் பாடியுள்ளார்; இக்காப்பியத்திற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் இம்மாணிக்கத் தாலியை மங்கலவணியாகவே கொண்டு உரை எழுதியுள்ளார். எனவே தேவர் கூறும் மாணிக்கத் தாலி திருமணமான பெண்கள் கழற்றாது அணியும் மங்கலச் சின்னமே என நச்சினார்க்கினியரின் உரை நம்மைக் கருதத் தூண்டுகிறது. சங்க காலம் முதற்கொண்டு சிந்தாமணியின் காலம் வரையிலும் சிறுவர், சிறுமியர், பெண்கள் அணிந்த தொங்கும் அமைப்புடைய அணிகளைப் பொதுவாகக் குறித்து வந்த 'தாலி' என்ற சொல்லானது அதன் பின்னர் அவ்வமைப்புடைய திருமணச் சின்னமான மங்லகவணியைக் குறிப்பதற்கு வழங்கப்பட்டது என்றுணரலாம்.

**தாலி - திருமணச்சின்னம்**

முதன் முதலில் திருமணச் சின்னத்தைக் குறிக்கும் சொல்லாக, 'தாலி' என்ற சொல் பயன்படுத்தப்பட்ட காலம் 11-ஆம் நூற்றாண்டாகும். பெரிய புராணத்தின் முதல் நூலாகிய திருத்தொண்டர் திருவந்தாதியைப் பாடியவர் 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதில் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பி என்பவராவர். இவர் தமது திருத்தொண்டர் திருவந்தாதியில் குங்கிலியக் கலய நாயனாரின் திருத்தொண்டை பின்வருமாறு போற்றிப் பாடியுள்ளார்.

> ஏய்ந்த கயிறுதன் கண்டத்திற் பூட்டி எழிற் பனந்தாட்
> சாய்ந்த சிவன் நிலைத்தான் என்பர் காதலி தாலி கொடுத்
> தாய்ந்தநற் குங்கிலியம் கொண்டனற் புகை காலனை முன்
> காய்ந்த அரற்கிட்ட தென் கடவூரிற் கலயனையே

இந்த நாயனார் தம்குழந்தைகள் உணவின்றி வருந்திய போதும், தம்மனைவியார் குழந்தைகளின் பசி நீக்க நெல் வாங்கும் பொருட்டுக் கழற்றித் தந்த தாலியை விற்று, குங்கிலியம் வாங்கி மீண்டும் தொடர்ந்து இறைபணி செய்தவர். திருமண இழையைத் 'தாலி' என்று குறிக்கும் இலக்கியச் சான்றாக நம்பியாண்டார் நம்பியின் மேற்குறிப்பிட்ட பாடலே முதலிடம் பெறுகின்றது. 10. ஆம் நூற்றாண்டு வரை இழை, பொன், மங்கலவணி போன்ற சொற்களால் குறிக்கப்பட்டு வந்த திருமண வணியானது 11-ஆம் நூற்றாண்டில் 'தாலி' என்ற சொல்லால் வழங்கப்பெற்று இலக்கியத்திலும் இடம்பெற்றது.

## தாலி அணிவித்தல்

இந்நாளில் நடைபெறும் திருமணங்களில் நாம் மிக முக்கியமாகக் கருதுவது தாலி அணிவிக்கும் நிகழ்ச்சியே ஆகும். கி.பி. 10ஆம் நூற்றாண்டு வரை நமக்குக் கிடைக்கும் இலக்கியச் சான்றுகளில் திருமணச் சின்னத்தைக் குறிக்கும் வெவ்வேறு சொற்கள் கிடைக்கின்றனவே அன்றி மணமகன் மணமகள் கழுத்தில் திருமணச் சின்னத்தை அணிவித்ததற்கான சான்று எதுவும் கிடைக்கவில்லை. பதினொன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இயற்றப்பட்டதான கந்தபுராணத்தில் கச்சியப்ப சிவாசாரியார் இலக்கியச் சான்று என்ற முறையில் முதன் முதலாகத் தெய்வயானையம்மை திருமணத்தில் இந்திரன் முருகனுக்குப் பாதபூசை செய்தல், மணமகளைத் தாரை வார்த்தளித்தல் ஆகிய செய்திகளைக் கூறுவதுடன் மணமகன் முருகக் கடவுள் திருமணச் சின்னமாகிய மங்கல நாணை மணமகள் தெய்வயானையின் அழகிய கழுத்தில் அணிவித்தலாகிய முக்கிய நிகழ்ச்சியையும் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது. பிரமன் தன் கருத்தினால் இயற்றி அளித்தமங்கல நாணை (தாலியை) தெய்வயானையின் கழுத்தில் கட்டிப் பின்பு மற்றொரு மங்கலச் சின்னமான மலரினை அவள் கூந்தலில் முருகன் சூட்டினான் என்ற பொருள் தருவது அப்பாடல்.

''செங்கம லத்திறை சிந்தையின் ஆற்றி
அங்கையின் ஈந்திட ஆண்டகை கொண்ட
மங்கல நாணை மணிக்களம் ஆர்த்து
நங்கை முடிக்கோர் நறுந்தொடை சூழ்ந்தான்''

மண வாழ்வின் சின்னமான மங்கலவணி மணப்பெண்ணுக்கு மணமகனால் எப்பொழுது எவ்விடத்தில் அணிவிக்கப்படுகிறது

என்பனவற்றிற்கான செய்திகளைத் தரும் முதல் நூலாகக் கந்த புராணம் திகழ்கிறது. மேலும் திருமண நிகழ்ச்சிகளில் ஒன்றாக மணமகள் கூந்தலில் மணமகன் மாலை சூட்டுவதும் இந்நூலில் குறிக்கப்பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

இந்த நூலாசிரியரே பிறிதோரிடத்தில் மங்கலவணியைப் 'பொற்றாலி' என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளார். ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகளில் திருமணவணியைக் குறிக்க வந்துள்ள 'பொன்' என்ற சொல்லும், முதன் முதலில் நம்பியாண்டார் நம்பியால் பயன்படுத்தப்பட்ட 'தாலி' என்ற சொல்லும் ஒன்றாக இணைந்த சொல்லாக 'பொற்றாலி' என்பது அமைகிறது. அல்லது பொன்னாலாகிய தாலி என்றும் விரித்துப் பொருள் கொள்ளலாம். கந்தபுராணத்தில் பொற்றாலி என்ற சொல் இடம்பெறும் பாடல் வருமாறு:

''செற்றால முயிரனைத்தும் உண்டிடவே
நிமிர்ந்தெழலும் சிந்தை மேற்கொள்
பற்றாலங் கதுநுகர்ந்து நான்முகனே
முதலோர்தம் பாவை மார்கள்
பொற்றாலி தனையளித்தோன் புகழ்போற்றி
முகின்மேனிப் புத்தேள் வைகும்
குற்றால மாவதொரு வளநகரைக்
குறுமுனிவன் குறுகி னானால்''

திருப்பாற்கடலைக் கடைந்தபோது அதிலிருந்து கிளம்பிய ஆலகால விடமானது உயிரனைத்தையும் அழிக்க முற்பட்டவுடன், சிவபெருமான் அதனைத் தானுண்டு பிரமன் முதலாய தேவர்களின் மனைவிமார்களது பொற்றாலியை அதனை அம்மகளிர் இழக்காவண்ணம் காத்தளித்தான் என்பது இப்பாடலின் பொருளாகும்.

இவ்வாறு 11ஆம் நூற்றாண்டில் நம்பியாண்டார் நம்பியால் திருமணச் சின்னத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்ட 'தாலி' என்ற சொல் அதைத் தொடர்ந்து பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய சிறந்த பேரிலக்கியங்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம்.

கி.பி. 12 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இயற்றப் பெற்றது சைவத் திருமுறைகளில் ஒன்றான பெரியபுராணம்.

நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதியை விரித்துப் பாடிய பெரியபுராணத்தில் ஆசிரியர் சேக்கிழார் குங்கிலியக் கலய நாயனார் வரலாறு கூறுகையில் மங்கல நூல் தாலி'' என்று விளக்கமாகக் கூறியுள்ளார்.

''கோதில் மங்கல நூல் தாலி
கொடுத்து நெற்கொள்ளும் என்றார்''. 9

சேக்கிழார் பெருமானே திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில் நாயனாரின் தமக்கையாகிய திலகவதியாரின் நிச்சயிக்கப்பட்ட திருமணம் நடைபெறாது நின்றபோது திலகவதியின் நிலையை

:'அம்பொன்மணி நூால் தாங்காது
அனைத்துயிர்க்கும் அருள் தாங்கி'' (திருநா. புரா,34)

எனக்குறிப்பிடுகின்றார். இவ்வடியில் வரும் 'அம்பொன்மணி நூல்' என்ற தொடர் திருமணச் சின்னமான தாலியையே குறிப்பதாகும். சங்ககாலப் பெண்டிர் திருமண இழையை மணமானதற்கு அறிகுறியாக அணிந்தது போலவே ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திலகவதியாரும் குங்கிலியக் கலய நாயனார் மனைவியும் நூலால் (இழை) இயற்றப்பெற்ற மங்கலத் தாலியை அணிந்திருக்கலாம் என்பதை ஆராய்ந்து உணர்ந்தே சேக்கிழார் அங்ஙனம் பாடி இருக்கலாம்.

12 ம் நூற்றாண்டில் எழுந்த மற்றொரு அரியநூல் கம்பராமாயணமாகும். கம்பரும் தமது காவியத்தில் திருமணச் சின்னத்தைக் குறிப்பிட்டுப் பலபாடல்களில் பாடியுள்ளார். காவிய நாயகர்களாகிய இராமனுக்கும், சீதைக்கும் நடைபெறும் திருமணம் குறித்து மிகவிரிவாகப் பாடியுள்ளார். எனினும் மணமகளுக்கு மணமகனால் திருமணச் சின்னம் அணிவிக்கப்பட்டதற்கான குறிப்பு எதுவுமில்லை.

இனி கம்பர் தமது பெருநூலில் திருமண அணியை எவ்வெப் பெயர்களால் குறிப்பிட்டுள்ளார் என்பதைக் காண்போம். அயோத்தி நகரன் சிறப்பை விவரிக்கும் பொழுது. ''நிலமகள் முகமோ, திலகமோ, கண்ணோ நிறை நெடு மங்கல நாணோ'' என்று உயர்பொருள்கள் பலவற்றை உவமையாக்கிக் கூறுகிறார்.

இங்கு மங்கல நாண் மணமான பெண்டிரின் திருமணச் சின்னத்தைக் குறிக்கும்.

பிறிதோரிடத்தில் தன்மகன் பரதனுக்கு முடிசூட்ட வேண்டும் என்று தன் கொள்கையில் விடாப்பிடியாக இருக்கும் கைகேயியிடம் தசரதசக்கரவர்த்தி "நீ கழுத்தில் தரித்திருக்கும் மங்கல நாணே முடிசூட்டு விழாவில் உன் 'மகன் பரதனுக்குக் காப்பு நாணாக அமையப் போகிறது என்று மனம் வருந்திக் கூறுகிறார்.

நின் கழுத்தின் நாண் உன்மகற்கு
காப்பின் நாணாம் என்றான்."
(அயோத்தி நகர். நீ. ப: 49)

இவ்விடத்துத் திருமணச் சின்னம் கழுத்தின் நாண் என்ற தொடரால் குறிக்கப்பட்டுள்ளது.

சுந்தர காண்டத்தில் ஓரிடத்தில் கம்பர் தம் காலத்தில் வழக்கிலிருந்த திருமணவணியைக் குறிக்கும் 'திரு' என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

"இவன் சிரத்திருந்தலால் திரு வாங்கலாம்"
(சுந்தர பிணி. வீ.ப :5)

"'இச்சொல் இப்பொருளில் அந்நாளையச் சோழர் கல்வெட்டுகளிலும் பயின்று வந்துள்ளது (S.I.I. 2.157). பதினெட்டாம் நூற்றாண்டினரான சொக்கப்ப நாவலர் தஞ்சை வாணன் கோவையில் வரும் "பொன் புனைந்தது" (359) என்ற தொடருக்குத் திருப்பூட்டியது என்று உரை கூறியது காணலாம்' திருமணத்தில் மங்கலவணி அணிவதனைத் திருப்பூட்டுதல் என்று சொல்லும் வழக்கு தமிழ் நாட்டின் சில பகுதிகளில் இன்னும் உள்ளது".[1]

பதினோராம் நூற்றாண்டு முதல் இலக்கியத்தில் இடம் பெற்ற திருமணச் சின்னமான தாலி என்ற சொல்லும் கம்பராமாயணத்தில் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

---

1. பக். 44. ஆர். வீரபத்திரன் மங்கலவணி

சான்று: ''மங்கையர் மங்கலத் தாலி மற்றையோர்

அங்கையின் வாங்கினர் எவரு மின்றியே
கொங்கையின் வீழ்ந்தன'' (சுந்தர, காட்சி. 48)

12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மற்றொரு பெரும்புலவரான ஒட்டக்கூத்தர் தாம் பாடிய தக்கயாகப் பரணியில், தக்கனது புதல்வியர் அணிந்த தாலிகளைப் பூதங்கள் வாரிச் சென்றதாகக் கூறுகின்றார்.

''மையலான் மிகும் தக்கன் மக்களாம்
தையலா ரையும் தாலி வாரியே''. (தாழிசை. 503)

எனவரும் இடம் இதனைக் கூறுகின்றது.

கவிச்சக்கரவர்த்தி கம்பர் இறந்த பொழுது ஒட்டக்கூத்தர் வருந்திப் பாடியதாக உள்ள பாடல் ஒன்றுண்டு. அப்பாடலில் பூமடந்தையும், புவிமடந்தையும் எல்லாச் சிறப்பும் பெற்றிருக்க; கம்பர் என்னும் கவிச்சக்கரவர்த்தி இறந்து விட்டதால் மங்கலச் சின்னமாக இதுவரை அணிந்திருந்த மங்கல நாணை நாமடந்தை இழந்தாள் எனக் கூறியுள்ளார்.

''பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப
நாமடந்தை நூலிழந்த நாள்''.

இப்பாடலில் 'நூல்' என்ற சொல்லால் திருமணச் சின்னம் குறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் அகப்பொருட் சுவை நிரம்பப் பெற்ற தஞ்சை வாணன் கோவை என்ற நூல் பொய்யா மொழிப் புலவரால் இயற்றப்பட்டது. இந்நூலில் தன்மனை வரைதல் என்ற அகப்பொருள் துறைப்பகுதியில் தோழியானவள் தலைவனை நோக்கி, ஆண்டகையே! நீ எங்கள் பொன் போன்ற வளைக் கூடி நும் சுற்றத்தார் முன்னம் திருமணச்சின்னம் அணிவித்ததை யான் முன்பே அறிந்து அன்னைக்கு இயம்பினேன் என்று கூறுவதாக வருகிறது. இப்பாடல் மூலம் 12-ஆம் நூற்றாண்டில் மணவினையின் சின்னமாகத் தாலி அணிவிக்கும் பழக்கம் வழக்கில் இருந்துள்ளதை உணரலாம். ஆனால் இக் கருத்தமைந்த பாடலில் இடம்பெறும் திருமணச் சின்னம் 7-ஆம் நூற்றாண்டில் வழக்கிலிருந்த 'பொன்' என்ற சொல்லால்

குறிக்கப்பட்டுள்ளது. எனினும் திருமணச் சின்னம் அணிவித்தது என்ற கருத்தில் இப்பாடல் அடி அமைந்துள்ளது நோக்குதற் குரியது

''மன்னைப் புறங்கண்ட வாணன்தென் மாறை வரை
யிலெங்கள்
பொன்னைப் புணர்ந்துநுங் கேள்முன்னர் நீ பொன்
புனைந்ததுவே. (தஞ். கோவை. 358)

13ஆம் நூற்றாண்டில் தோன்றியதான 'அரிச்சந்திர வெண்பாவில் மன்னன் அரிச்சந்திரனுக்கும், சந்திரமதிக்கும் நடக்கும் திருமணத்தில் மறையோன் மணச் சடங்கு நடத்துதலும், அதில் நெய், பொரி, தருப்பை சமித்து இவை இடம்பெறுதலும், அருந்ததி காட்டல்; மக்கள் வாழ்த்துக் கூறுதலும் ஆகிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. என்றாலும் இந்நூலிலும் மணமகளுக்கு மணமகன் தாலி அணிவித்த செய்தி கூறப்படவில்லை. இதே நூற்றாண்டில் இயற்றப்பட்டதாகக் கூறப்படும் பெரும் பற்றப் புலியூர் நம்பியின் திருவிளையாடற் புராணத்திலும் மூன்று திருவிளையாடல்களில் திருமண நிகழ்ச்சிகள் குறித்துக் கூறப் பட்டிருந்தாலும் திருமணச் சின்னம் பூட்டிய நிகழ்ச்சி குறிக்கப் படவில்லை.

15ஆம் நூற்றாண்டு இலக்கியமாகிய அருணகிரிநாதரின் பாடலில் 'மாதரணி தாலி நூல்' என்றும்; 'சசிதேவி மாங்கல்யம் தந்து ரட்ச, என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. பதினாறாம் நூற்றாண்டில் பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தில் சிவபெருமானுக்கும் தடாதகைப் பிராட்டியாருக்கும் நடந்த திருமணம் பல பாடல்களில் முறைப்படி கூறப்பட்டுள்ளது. பிரமன் வேள்விச் சடங்கு நிகழ்த்த, மணக்கோலம் பூண்டு வந்த சிவபெருமானின் திருக்கரத்தில் பிராட்டியின் கையை வைத்து திருமால் கரகநீர் பெய்து தாரைவார்த்துக் கொடுக்கிறார். எல்லோரும் மங்கல வாழ்த்துப் பாடுகின்றனர். இவற்றிற்குப் பின் சிவபெருமான் தடாதகைப் பிராட்டியாருக்கு மங்கலநாண் அணிவிக்கும் நிகழ்ச்சி கூறப்பட்டுள்ளது. நான்கு புறத்திலும் நான்கு வேதங்கள் முழங்கின. சங்கங்கள் ஆர்த்தன, முரசங்கள் ஒலித்தன. சிவபெருமான் தடாதகைப் பிராட்டிக்குத் திருமங்கல நாணைப் பூட்டித் திருக்கரம் பற்றியருளுகின்றார்.

''சுற்றும் நான் மறைகள் ஆர்ப்பத் தூரியம் சங்கம் ஏங்கக்
கற்ற நான்முகத்தோன் வேள்விச் சடங்கு நூல் கரைந்து
வாற்றும்
முற்ற மங்கல நாண் சாத்தி முழுநல கின்றாள் செங்கை
பற்றினன் பற்றொர்க்கே விடருள் பரம யோகி.''

(பரஞ் திருமலை. திருமண.185)

இதைப் போலவே உக்கிரகுமார பாண்டியருக்கும் காந்திமதிக்கும் நடைபெறுவதாகக் கூறும் திருமண நிகழ்ச்சிகளுள்ளும் மணமகன் மணமகளுக்குத் தாலி அணிவிக்கும் செய்தியைக் குறிப்பிட்டுள்ளார். அந்தணர்கள் செந்தீ வளர்க்க, இன்னிசைக் கருவிகள் முழங்க, முருகக் கடவுளை யொத்த உக்கிரகுமாரர், காந்திமதிக்கு மங்கலநாண் பூட்டி வளையலணிந்த சிவந்த கையினைப்பற்றி மற்றைய மணவினைகள் அனைத்தும் வேத விதிப்படி சிறப்புறச் செய்து முடித்தனர் என்று கூறப்பட்டுள்ளது.

''பொதிஅவிழ் கடப்பம் தண்தார்ப்
புயத்து இளம் காளை அன்னான்,
முதியவர் செந்தீ ஓம்ப,
இன் இயம் முழங்க, காந்தி
மதியை, மங் கலநாண் பூட்டி
வரிவளைச் செங்கை பற்றி
விதிவழி ஏனை மன்றல்
வினைஎலாம் நிரம்பச் செய்தான்.

(பரஞ். திருவிலை வேல்வளை: 54)

திருமணச் சின்னம் கதையோடு பின்னிப்பிணைந்து முக்கியத்துவம் பெறும் வகையில் அமைந்தது அரிச்சந்திர புராணம். இந்நூல் 16ஆம் நூற்றாண்டில் ஆசுகவிராயரால் இயற்றப்பட்டது. இப்புராணத் தலைவி சந்திரமதி பிறக்கும் பொழுதே மங்கலவணியுடன் பிறக்கிறாள். சிவபெருமான் அளித்த வரத்தின்படி சுயம்வர வேளையில் அம்மங்கலவணி அரிச்சந்திரன் கண்ணுக்கு மட்டும் தெரிகிறது. சந்திரமதி அரிச்சந்திரன் மனைவியாகிறாள். இந்நூலில் ஒருபகுதியில் ''செம்பொன்'' மங்கலநாண் உன் கழுத்திலிருக்க ஏதும் இல்லையெனச் சொல்லுவது சற்றும் ஏலாது'' என்று அரிச்சந்திரன் கூறுவ

தாகவும், 'அரிச்சந்திரர்க்கல்லது யாவர்க்கும் தோன்றா மங்கலம் புலையன் காணவும் போதுவதோ'' எனச் சந்திரமதி வருந்திக் கூறுவதாகவும் வருகிறது. ஒரு பெண்ணின் கழுத்தில் காணப்படும் மங்கலத் தாலி அவள் மணமாகியுள்ளதைப் புலப்படுத்தும் அடையாளமாம் என்ற நோக்கில் இக்கதை அமைக்கப் பட்டுள்ளது. இந்நூலில் மங்கலநாண், மங்கலம், தாலி என்ற சொற்கள் திருமணச் சின்னத்தைக் குறிக்கும் வகையில் ஆளப் பட்டிருந்தாலும் அரிச்சந்திரனுக்கும் சந்திரமதிக்கும் நடந்த திருமணத்தில் மங்கலநாண் அணிவித்த செய்தி கூறப்படவில்லை.

கி.பி. 18ஆம் நூற்றாண்டில் தஞ்சை வாணன் கோவை என்ற நூலுக்கு உரை எழுதிய சொக்கப்ப நாவலர் 'தாலி கட்டும் மணம்' பற்றிய செய்தியை ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளார். உடன்போக்கில் தலைவனுடன் சென்ற தலைவிக்குத் தலைவன் தன் மனையில் வைத்து தாலி அணிவித்து மணம் செய்து கொள் கின்றான். இக்கோவை நூலில் 'வரைதல்' என்ற தலைப்பின் கீழ்வரும் பாடலுக்கு உரைவகுத்த சொக்கப்ப நாவலர் பின் வருமாறு விளக்கம் தருகிறார். ''இங்ஙனம் ஒரு தலைவனுக்கும் தலைவிக்கும் ஒருகால் மணமுடிப்பதன்றிப் பலகால் மணமுடிந்த தாகக் கூறுதல் உலகின்கண் வழங்குவதன்றே, இவ்வாறு கூறியது என்னையெனின், உடன்போய்த் தன் ஊரின் கண்ணே வரைதலும், அந்தணர் சான்றோரை முன்னிட்டுத் தாய் தமரறிய மணச்சடங்கின் முறையே முடியாமையான் அவையிரண்டும் மணமாகா; அஃதென்னையெனின், உலகியல்பின் கண் தாய்தமர் அறியாது, மணச்சடங்கும் இன்றி ஒருவன் உரிமை கருதித் தாலி கட்டு மணம் மணமென்று உலகின் உள்ளார் கைக்கொள்ளார்: அவர்க்கே மீண்டும் மணச்சடங்குடனே மணமுடிப்பர்; ஆதலால், அந்தணர் முதலாயினாரை முன்னிட்டு மணச்சடங்குடனே முடித்தலின் இதுவே மணமாயினவாறு உணர்க''. இதிலிருந்து 18-ஆம் நூற்றாண்டில் திருமணத்தில் தாலி கட்டும் வழக்கம் இருந்தது என்பதை உணரலாம்.

இந்நூற்றாண்டின் இறுதியில் கச்சியப்ப முனிவரால் பாடப் பெற்ற திருப்பேரூர்ப் புராணத்தில் கூறப்பட்டுள்ள திருமண முறையும் கந்தபுராணத்தில் கூறப்பட்டுள்ள முறைகளும் ஒரே மாதிரியாக உள்ளன. எனினும் இந்த இரண்டு நூல்களுள்ளும் ஒரு வேறுபாடு காணப்படுகிறது. கந்த புராணத்தில் தாரை வார்த்துக் கொடுத்தவுடன் தெய்வயானையை ஏற்று மாங்கல்யம் அணிவித்த பின்னரே எரிவலம் வருதல் முதலிய சடங்குகள்

நடைபெறுகின்றன. ஆனால் திருப்பேரூர்ப் புராணத்திலோ திருமாங்கலியம் தரித்தலே இறுதிச் சடங்காகக் கூறப்படுகின்றது. இம்மாற்றம் பிற்காலத்தில் தாலி அணிவித்தலுக்குக் கொடுக்கப் பட்ட முக்கியத்துவத்தினைச் சுட்டுவதாக அமைந்ததாகவும் இருக்கலாம்.

திருமணம் பற்றிய முன்னாளைய சடங்குகள் பலவும் இந் நாளில் நடைபெறும் திருமணங்களில் காணப்படுமாயினும், இந் நாளில் குறிக்கப்பட்ட, நல்ல நேரத்தில் மணமகன் மணமகள் கழுத்தில் தாலி அணிவிப்பதையே முக்கிய நிகழ்ச்சியாக மேற் கொள்கின்றோம். வைதிக நெறித் திருமணங்களே அன்றிச் சீர்திருத்தத் திருமணங்களிலும் தாலி கட்டுவது முக்கிய நிகழ்ச்சி யாக உள்ளதை அறிவோம். தமிழ்ப் பெண்டிர் பழங்கால முதற் கொண்டே மணமான தன் சின்னமாய் மங்கலவணியை அணிந்து வரும் செய்தி ஒவ்வொரு காலப் பகுதியிலும் தோன்றிய இலக் கியங்களிலிருந்து அறியப்படுவதாயினும் அப்பெண்டிர்க்குத் திருமணச் சின்னத்தை இந்நாளில் நடைபெறுவது போலத் தமது திருமணத்தின் போது தமது கணவர் அல்லது அவரது தமக்கை போன்ற உறவினரால் அணிவிக்கப்பட்ட செய்தியை அவ்விலக் கியங்களுள் கூறாமல் இருப்பது ஆராய்ச்சிக்குரிய செய்தியாகும். இதன் விளைவாக முற்காலத்தில் தமிழ் மக்களிடம் மணவணி அணியும் சடங்கு இருந்ததில்லை. என்று கூறுவாரும் உளர். அவ்வாறு மங்கலவணி திருமணக் காலத்தில் அணிவிக்கப்பட வில்லை என்றால் இழையணி மங்கலப் பெண்டிரின் கழுத்தில் இருப்பதற்கும், அதனை அவர்கள் நீக்காது போற்றி அணிந்தமை கும், இதைக் குறித்த செய்திகள் சங்க இலக்கியங்களிலே இடம் பெற்றுள்ளமைக்கும் காரணம் வேறு இல்லையன்றோ? அக நானூற்றுப் பாடலில் இடம் பெறும் 'இழையணி சிறப்பு' என்ற தொடருக்குத் திருமணத்தின் முக்கிய நிகழ்ச்சியாகிய 'தாலி அணிவிக்கும் விழா' எனப் பொருள் கொண்டு, 'வாலிழை மகளிர்; ஈகையரிய இழையணி; இழைகளைந்தனரே போன்ற தொடர் களில் வரும் 'இழை' என்ற சொல் திருமணச் சின்னமாகிய தாலி யைக் குறித்தது என்றும் பொருள் கொண்டால் சங்க காலத்து வாழ்ந்த தமிழ் மக்களிடையே தாலி அணிவிக்கும் வழக்கம் இருந் தது என்று கூறலாம்.

---

பக். 300 தஞ்சை வாணன் கோவை கழக வெளியீடு.

சங்க இலக்கிய காலத்தைத் தொடர்ந்து வருவது சிறந்த காவியமாகிய சிலப்பதிகார காலம். இக்காலத்து வாழ்ந்த தமிழ் மக்களிடையே ஆரியக் கலப்பு ஏற்பட்டது. இதன் விளைவாகத் தூய தமிழ்த் திருமண முறையில் பல புதிய சடங்குகள் புகுந்தன. ஒருகால் ஆரிய திருமணச் சடங்குகள் தூய தமிழ் முறையில் கலந்ததால் ஆரிய மணமுறைச் சடங்குகளில் முக்கிய நிகழ்ச்சிகளாகத் திகழும் பாணிக்கிரகணம், தீவலம்வருதல், சப்தபதி என்ற சடங்குகள் தமிழர் திருமணத்திலும் முக்கியத்துவம் பெற்றிருக்கலாம். எனவே திருமண நிகழ்ச்சி குறித்துக் கூறும் இலக்கியங்களும் கைத்தலம் பற்றல், சப்தபதி ஆகியவற்றைக் குறித்தே சிறப்பித்துப் பாடிருக்கலாம். இதற்குச் சான்றாகச் சிலப்பதிகாரம், பெருங்கதை ஆண்டாள் திருமொழி, சூளாமணி, சிந்தாமணி, பெரியபுராணம், கம்பராமாயணம் போன்ற தலைசிறந்த இலக்கியங்களில் இடம் பெறும் திருமண நிகழ்ச்சிகளில் மேற்கூறிய பாணிக்கிரகணமும், சப்தபதி சடங்குமே மறவாமல் குறிப்பிடப் பெற்றுள்ளன. இந்நாளில் திருமணச் சின்னத்தை அணிவிப்பதையே நாம் முக்கிய திருமண வினையாகக் கருதுகின்றோம். சிலப்பதிகாரந் தொடங்கி அதைத் தொடர்ந்து தோன்றிய இலக்கியங்களில் இந்த நிகழ்ச்சி இடம் பெறவில்லை என்றாலும் இவற்றில் திருமணச் சின்னத்தைக் குறிக்கும் மங்கலவணி, பொன், மங்கலநாண், தாலி, பொற்றாலி, மங்கலம். மாங்கல்யம் போன்ற சொற்கள் ஆளப்பட்டுள்ளமையால் தமிழ் மக்களிடையே தொடர்ந்து திருமணச் சின்னம் அணிந்து வரும் வழக்கம் இருந்தமையை உணரலாம். ஏறக்குறைய 10 ஆம் நூற்றாண்டிலிருந்து தொங்கும் அமைப்புடைய மங்கலச் சின்னத்தைக் குறிக்கத் 'தாலி' என்ற சொல் பெயராக அமைந்து நிலைத்து விட்டது எனலாம். தெய்வத் திருமணங்களை வருணிக்கும் 11 ஆம் நூற்றாண்டு இலக்கியமாகிய கந்தபுராணத்திலும், 16ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட திருவிளையாடற் புராணத்திலும், 18 ஆம் நூற்றாண்டிலெழுந்த பேரூர்ப் புராணத்திலும், மணமகன் மணமகள் கழுத்தில் மங்கல நாண் பூட்டிய செய்தி வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளதை முன்னர் கண்டோம்.

தமிழ்ப்பெண்டிர் பண்டைநாள் முதற்கொண்டே மங்கலச் சின்னமாய் திருமணவணியை அணிந்து வந்தாலும் இச்செய்தி தமிழ் இலக்கியங்களில் வெளிப்படையாக இடம் பெறாமைக்குக் காரணம் என்ன என்பதை ஆராய்தல் வேண்டும்.

மக்கள் சமுதாயத்தில் பெண்கள் அழகுக்கு அழகு செய்வது போல காது, கை, கால் என்று அந்தந்த அவயவங்களுக்கேற்ப

அணிகலன் அணிவர். இந்த ஆபரணங்கள் உச்சந்தலையிலிருந்து பாதம் வரை அணியக் கூடியனவாகப் பல்வேறு வகைப்படும். பெண்கள் அணியும் இந்தத் தலையணி, காதணி, கழுத்தணி, காலணி போன்றவை மற்றவர் காட்சிக்குப் புலப்படக்கூடியவை, திருமணச் சின்னமான தாலியின் உருக்கள் மஞ்சள் கயிற்றிலோ அல்லது பொற்சரட்டிலோ கோர்க்கப்பட்டு மற்றவர் கண்களுக்கு புலப்படாவண்ணம் அணியப்படுவதைக் காணலாம். இச்செய்கை கண்ணேறுபடும் என்ற காரணத்தால் இருக்கலாம். இச்செய்கை அவரவரது நம்பிக்கையின் அடிப்படையில் அமைவது. புனிதமான அணியாக இத்திருமணச் சின்னம் போற்றப்பட்டமையே இதற்குக் காரணமாகும். மேலும் இந்த மங்கலநாணை மணமகன் தன் மனைவியின் கழுத்தில் பூட்டினான் என்று வெளிப்படையாகக் கூறுவது பண்பாட்டு முறையன்று என்று கருதியும் இந்நிகழ்ச்சி இலக்கியங்களில் கூறப்படாமல் விடப்பட்டிருக்கலாம்.

திரு. ஆர். வீரபத்திரன் என்பார் தமது நூலில், ''மங்கல மாதர்கள் திருமண இழையை அணிந்துள்ளமையைக் கூறும் இலக்கியங்கள் அவ்விழை திருமண வேளையில் அவர்களுக்கு அணியப்பட்ட செய்தியைக் குறிப்பிடாமல் மௌனமாக இருந்து வருவதை எண்ணும்போது மங்கல இழை அணிதலை இலக்கியங்கள் வெளிப்படையாகப் பாடுதல் ஆகாது என்னும் இலக்கிய மரபு ஒன்று இருந்ததோ என்ற எண்ணம் உண்டாகிறது''[1] என்று கூறுகிறார். இலக்கிய மரபு என்று பார்க்கையில் திருமணச் சின்னத்தைப் பற்றி நெடுங்காலமாக வழங்கிவரும் ஒருசொல் வழக்கம் மேற்கூறிய மரபு பற்றிய கருத்தை வலியுறுத்துவதாக அமைகிறது. ஒரு மங்கல மாது தன் கணவனை இழக்க நேர்ந்தால் அதனைப் 'பெருகிற்று' என்ற சொல்லால் கூறுவதே மரபாக இருந்து வருகிறது, திருமணத்தில் மங்கலவணி அணிவிக்கும் செய்தி கூறும் மரபு இல்லாததைப் போலவே ஒரு பெண் கணவனை இழக்கும் போதும் மங்கலவணியைக் கழற்றிய செய்தியை வெளிப்படையாகக் கூறாமல் தவிர்த்திருப்பதைக் காணலாம். எனினும் கந்த புராணத்திலும், திருவிளையாடற் புராணத்திலும் பேரூர்ப்புராணத்திலும் வரும் தெய்வத் திருமணங்களில் மங்கல நாண் அணிவித்த நிகழ்ச்சி வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளது. அதனால் தெய்வங்களின் திருமண நிகழ்ச்சியை வருணிக்கும் போது மேற்கூறிய மரபு போற்றப்பட வேண்டிய கட்டாயம்

1. பக். 83 ஆர். வீரபத்திரன், மங்கலவணி

இல்லை என்பதை உணரலாம். மக்களின் கண்திருட்டி கடவுளரை ஒன்றும் செய்ய முடியாதல்லவா?

ஆரிய திருமணமுறை தமிழரிடையே புகுந்ததால் அங்கு போற்றப்பட்ட இரு சடங்குகளே தமிழ்த் திருமணவினையிலும் முக்கிய இடம் பெற்றுத் தமிழருக்கே உரிய மங்கலவணி அணிவிக்கும் செய்தி அதிக முக்கியத்துவம் பெறாமல் அதன் விளைவாக இலக்கியங்களிலும் இடம்பெறாமல் விடுபட்டிருக்கலாம்.

திருமண நிகழ்ச்சி இடம்பெறும் இலக்கியங்களில் மண நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் ஒன்றுபடுத்தி பொதுச்சொற்களால் குறித்துச் செல்வதையும் காணலாம்.

'வதுவைநன்மணம் கழிந்த பின்றை' (அகம். 86. 17)
மாநர்க்கு ஈந்தார் மணம் (சிலம்பு)
'இன்பம் இயற்றினார்' (சிந்தா.விமலை. 92)
'மணத்துறை கடன்களாற்றி' (பெரிய. தடுத்தாட். 13)

இதன் காரணமாகவும் திருமணச் சின்னம் அணிவிக்கும் நிகழ்ச்சி தனித்துச் சொல்லப்படாமல் விடுப்பட்டிருக்கலாம். மேற்கூறியவற்றை நோக்கும் பொழுது திருமணச் சின்னம் அணிவிக்கும் நிகழ்ச்சி வெளிப்படையாக இலக்கியங்களில் கூறப்படவில்லை என்றாலும் திருமணச் சின்னம் என்ற ஒன்று பழந்தமிழ்க் காலமுதற்கொண்டு வெவ்வேறு பெயர்களால் வழங்கப்பட்டு வழக்கில் இருந்துவருவது புலனாகும்.

**அபிதான சிந்தாமணியில் மங்கல சூத்ரம் பற்றிய குறிப்பு :**

'இது திருமணத்தில் கொண்டோன் தெய்வம் வாழ்த்தித் தன் தேகசம்ரக்ஷணார்த்தம் தன் சந்ததி விருத்தியின் பொருட்டுத் கொண்ட மனைவியின் கழுத்தில் தேவருஷிகள் புரோகிதர் முதலியோர் சாட்சியாகக் கட்டும் அடையாளமாம். இதற்குத் தாலி என்பது முற்கால தற்கால வழக்கம். இத்தாலியைச் செல்வமுள்ளோர் பொன் முதலியவற்றாலும், மற்றவற்றாலும், செய்து அணிவர். செல்வமில்லா ஏழைகள் மரத்தாலும், ஓலையாலும் செய்து அணிவர். இதனைத் தாலபத்திரம் என்னும் ஓலையால் பலர் அணிதல் பற்றியே இதற்குத் தாலி என்று காரணப் பெயர் உண்டாயிற்று. மரத்தாலியும் உண்டாயிற்று போலும் இது வட நாட்டில் தற்காலம் சில கீழ்ச்சாதியாரிடம் நடைபெறுகிறது.

இதன் உருதேசங்கள் தோறும், ஜாதிகள் தோறும் வேறுபடுகிறது. இத்தாலி பலவற்றால் செய்யப்படும் என்பதை "ஸ்வர்ணேன ரஜதேனை வாதாம்ரேணதா ருஜைரபி அதவாதால பத்ரேவா பௌஞ்ச சதுரஸ்ரகம்" எனும் ஸ்ரீ உத்தர காரண வாக்கியத்தால் அறிக, இதனைப் பதினாறிழைகள் கொண்ட சூத்திரத்தில் கோர்க்க வேண்டும் என்பது.'[1]

தாலி வகைகள் :

தாலி அணிவிக்கும் சடங்கு தென்னகத்தே மட்டும் மதிப்புப் பெற்று விளங்கியது இவ்வழக்குப் பொதுவாகப் பின்பற்றப்படினும், அதன் நடைமுறை மற்றும் அமைப்பில் சில வேறுபாடுகள் உள்ளன. இவ்வேறுபாடுகள் இனைக்குலங்களில் காணப்படும் வேறுபாடுகளுக்கு அடிப்படையாய் உள்ளன. எடுத்துக்காட்டாக மங்கல நாணுக்கு வழங்கப்பெறும் பெயர்களால் உணரலாம். உம் 1. பெருந்தாலி 2. சிறுதாலி 3. தொங்குத்தாலி 4. பொட்டுத் தாலி 5. சங்குத்தாலி 6. ரசத்தாலி 7. தொப்புத்தாலி 8. உருண்டைத்தாலி அல்லது உருண்டை மணித்தாலி 9. கருந்தாலி 10. ஜாகாத்தாலி 11. இருதாலி 12. தாலிகட்டி போன்றவை. மேற்கூறியவற்றுள் முதலிருதாலிகளும் முக்கியமானவைகளாம்.'[2]

"தமிழகத்தையே தாயகமாகக் கொண்டவர்களிடமும் தமிழகத்தில் வந்து குடியேறியவர்களிடமும் ஒவ்வொரு குலத்திற்கும், துணைக்குலத்திற்கும் ஏற்றவாறு மங்கலநாண் வேறுபடுவதைக் காணலாம். இவற்றிலும் தமிழகத்திற்கே உரிய தாலிகளை வகைப்படுத்திப் பகுத்தறிதல் நன்று. சாதாரணத் தாலியாவது கருந்தாலி, மஞ்சள் தாலி என இரு வகையாம். கருந்தாலி திராவிட நாட்டின் வடபகுதியிலும், மஞ்சள் தாலி அந்நாட்டின் தென் பகுதியிலும் வழக்கிலுள்ளன. கருந்தாலி வகையில் அடங்கும் தாலிகள் நிறத்தில் மட்டுமின்றி அளவிலும் ஒத்திருக்கின்றன அவை கழுத்தைச் சுற்றி நெருக்கமான முறையில் அணிவிக்கப்படும். ஆனால் மஞ்சள் தாலி நீண்டு கழுத்திலிருந்து தொங்கும் அளவு பெரிதாயிருக்கும். இவ்விரு தாலிகளும் வழங்கப்படும் பல்வேறு இடங்களும் அவைகளின் வகைகளும் கருந்தாலி மஞ்சள்

---

1. பக். 1234 அபிதான சிந்தாமணி
2. பக் 198 புலமை தொகுதி 5 மார்ச் 1979

தாலியும் மிகவும் தொன்று தொட்டே பகுத்தறியப்பட்டுள்ளது என்றும் உணர்த்தும்''.[1]

இவற்றுள் மஞ்சள்தாலி என்பது 16 அல்லது 108 என்று அவரவரது குலமரபுப்படி நூலிழைகளால் முறுக்கப்பட்டு மஞ்சள் பூசப்படும். இதன் தொங்கும் நீளத்திலும் வேறுபாடு இருத்தல் உண்டு. ஒரு சிலர் தாலிக் கயிறு 108 இழைகளால் முறுக்கப்படக் காரணம் மணமகன் நீண்ட ஆயுளைக் குறிக்கவே என்பர்.

**பிற மங்கலச் சின்னம் :**

ஒரு பெண் திருமணமானவள் என்று அறிவிப்பதற்குப் பல அடையாளங்கள் இருந்திருந்திருத்தல் வேண்டும். அவை இலக்கியத்திலும் முதல் இடம் பெற்றிருத்தல் கூடும். பண்டைத் தமிழரைக் குறித்து நாம் அறிய உதவும் இலக்கியங்கள் சங்க காலத்தவையே ஆகும். சங்கப் பாடல்களைப் படிக்கும் பொழுது மற்றோர் அடையாளமும் இருந்தமை நமக்குப் புலப்படும். அதுவே மலரணியும் மரபாகும். பண்டைத் தமிழ்க் கன்னி கூந்தலில் மலரணியாள். மலர்சூடின் ஒருவனை மணந்தாள் என்பது பண்டைத் தமிழ்ச் சமுதாய வழக்காகும். ஆனால் இப்பழக்கம் இந்நாளில் வழக்கில் இல்லை.

**மலரணியும் உரிமை**

தமிழ்ப் பெண்டிர் மலரணியும் உரிமையைத் திருமணநாள் தொடங்கிப் பெறுகின்றனர். திருமணம் ஆனதற்கு அடையாளமாக மலரணியும் செயலைச் சங்க இலக்கியப் பாடல்கள் பலவற்றில் காணலாம்.

''எரிமருள் வேங்கை இருந்த தோகை
இழையணி மடந்தையில் தோன்றும் நாட
இனிதுசெய் தனையால் நுந்தை வாழியர்
நன்மனை வதுவை அயிரயிவள்
பின்னிருங் கூந்தல் மலரணிந் தோயே'' (ஐங்; 294)

எனும் ஐங்குறுநூற்றுப் பாடல் ஒன்றில் 'செந்நிற வேங்கை மலர் மீது இருந்த மயில் நகையணிந்த மங்கை போலக் காட்சிதரும்

1. பக். 203. புலமை தொகுதி 5. மார்ச் 1979.

நாட்டவனே! நல்லது செய்தனை. நின் குடும்பம் வாழ்க. திருமணத்தைக் கொண்டாடும்படி இவள் கூந்தலில் மலர் சூட்டினாய்'' என்று தலைவன் தலைவியைத் திருமணம் புரிந்து கொண்டபொழுது மணச்சடங்கில் ஒன்றாகிய தலைவியின் கூந்தலிலே மலர் சூடுதலை நிகழ்த்தக் கண்ட தோழி எல்லையற்ற மகிழ்ச்சியுடையவளாய்த் தலைவனைப் பாராட்டி மனமார வாழ்த்துகின்றாள். மேலும்

''இவள் ஒலிமென் கூந்தல்
உரியவாம் நினக்கே''

என்பன போன்ற இலக்கிய வழக்குகளால் கூந்தலுக்கு உரியவன் அவள் கணவனே என்ற மணவழக்கு அறியப்படும். அக்கூந்தலில் மலர் சூட்டி மணஞ் செய்து கொள்வான் என்பது பெறப்படும். இக்கருத்தை அரண் செய்யும் வகையில் முல்லைக்கலி பாடல் ஒன்று அமைகிறது.

பெய்போ தறியாத்தன் கூழையுள் ஏதிலார்
கைபுனை கண்ணி முடித்தாளென்று யாய்கேட்பின்
செய்வதி லாகுமோ மற்று'' (கலி: 107)

என்ற பாடல் முல்லைத் தலைவி ஒருத்தியின் கவலையை உணர்த்துகின்றது. ஏறுதழுவல் விழா நிகழும்பொழுது ஒரு முல்லைப்பூ தனித்துப் பறந்து சென்று எங்கோ நின்றுகொண்டிருந்த ஓர் ஆய்மகள் கூந்தலில் விழுந்தது. தானாக வந்து கூந்தலில் விழுந்த மலரை அப்பெண் தன் கூந்தலில் முடித்துக் கொண்டனள். ஆனால் இச்செய்கை தன் தாயின் செவிக்கு எட்டியிருத்தல் கூடும் என அஞ்சுகின்றாள். அயலான் அணிந்த கண்ணிப் பூவை விரும்பி அணிந்து கொண்டமைக்குத் தாய் சினங்கொண்டால் என் செய்வது என வருந்துகின்றாள் இத்தலைவி, மலரணியும் வழக்கம் திருமணம் தொடங்கி மேற்கொள்ளப்படுவது, என்பதை இப்பாடற் கருத்தால் அறியலாம். எனினும் சங்க இலக்கியப் பாடல்கள் சில குமரிப்பருவத்தும் மலரணியும் வழக்கம் உண்டு போலும் எனக் கருதும் வகையில் அமைந்துள்ளன. ''இவ்வாறு வரும் பகுதிகள் மேற்காட்டிய முடிவுக்கு மாறான சான்றுகள் எனக் கருதிவிடல் வேண்டா. துறைகளோடு பொருந்தி நேர்பட ஆராயின், இயற்கைப் புணர்ச்சிலும், உடன்போக்கிலும்

இன்பக் களிப்பிலும் இன்ப எதிர்பார்ப்பிலும் நீர் விளையாட்டிலும் இவை குமரியர் பூவணிந்த குறிப்புகளாகவே இருக்கும்".[1]

வளையணிதல் :

திருமணமான பெண்கள் அணியும் மங்கலச் சின்னங்களுள் மங்கலவணிக்கு அடுத்தபடியாக், போற்றப்படுவன கைவளைகளாகும். அந்நாளில் சங்கினால் செய்யப்பட்ட வளைகளுடன் பொற்றொடிகளையும் மணமான செல்வப் பெண்டிர் அணிந்தனர். இப்பெண்கள் தம் கணவரை இழக்கும் பொழுது மங்கலிய நாணைக் கழற்றுகையில் கைகளில் அணிந்த சங்கவளைகளையும் உடைத்தெறிந்தனர். இதற்குச் சான்றாகப் பல பாடல்கள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. புலவர் பெருஞ்சித்திரனார் வெளிமான் என்னும் வள்ளல் இறந்தபொழுது வருந்திப் பாடிய பாடல்களில் இச்செய்தி கூறப்பட்டுள்ளது.

''தொடிகழி மகளிற் றொல்கவின்வாடி''[2]

... ... ... ...

''வாழைப் பூவின் வளைமுறி சிதற

... ... ... ...

வெள்வேல் விடலை சென்றுமாய்ந் தனனே'![3]

மேற்கண்ட பாடலடிகளினின்றும் அக்காலத்திலிருந்தே பெண்கள் மங்கல அடையாளமாக வளையல் அணிந்தமையும் கணவனை இழந்தபோது இவ்வளைகளை உடைத்தெறிவதும் வழக்கமாயிருந்தது என்பதை அறியலாம். இந்நாளிலும் பல வகுப்பினரிடையே இப்பழக்கம் இருப்பதைக் காணலாம்.

சிலப்பதிகார காப்பியத்திலும் கோவலன் கொலையுண்டபின் கண்ணகி தன் தொடிகளை உடைத்தெறிந்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. 'கணவனைக் கண்ட பின் அன்றி அமையேன்' என்று வஞ்சினம் கூறிச் செல்பவள் கொற்றவை கோயிலின் வாயிலில் தன் பொற்றொடியை உடைக்கிறாள்.

---

1. பக் : 227 டாக்டர், நா. சுப்பு ரெட்டியார் அகத்திணைக் கொள்கைகள்.
2. புறம் : 238
3. புறம் : 237

"கொற்றவை வாயிற் பொற்றொடி தகர்த்து" (சிலப்: 23:7)

இவ்வடியில் வரும் பொற்றொடி என்பதற்கு அரும்பத உரையாசிரியர் 'பொலிவினையுடைய சங்கவளை' என்று உரை கூறியுள்ளார்.

சிந்தாமணி ஆசிரியர் நாமகளிலம்பகத்தில், சச்சந்தன் கட்டியங்காரனுடன் போர் புரிந்து இறந்த பொழுது அவனைச் சார்ந்த மகளிர் தம் கைவளைகளை உடைத்தலையும், மார்பில் ஆரம் பறித்து அலறுதலையும் குறிப்பிடுகின்றார்.

**காதணி அணிதல் :**

பெண்கள் காதுகளில் அணியும் அணியும் மங்கலச் சின்னமாகப் போற்றப்பட்டதை அறியலாம். இக்கருத்து 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த குமரகுருபர அடிகள் தமது மதுரைக் கலம்பகத்தில்

நம்பா நினக்கு ஓவம் முறையோ எனக்கால
நஞ்சுண்டு பித்துண்டு நாம்தேவர் என்பார்
தம் பாவையர்க்கு அன்று காதோலை பாலித்த
தயவாளர் ... ... ... (29)

எனப்பாடியுள்ள பாடலால் அறியலாம்.

தமிழகப் பெண்டிர் தமது மங்கல நிலையை உணர்த்த குறிப்பிட்ட மங்கலச் சின்னங்களைப் பூண்டு திருமகள் போலத் துலங்கினர். அவர்கள் தமது வாழ்வரசி நிலையை இழக்கும்போது மங்கலச் சின்னங்களோடு எல்லா அணிகலன்களையும் துறந்தனர். தமது நாறிருங் கூந்தலை மழித்து கைம்மை நோன்பு மேற்கொண்டனர். இப்பெண்கள் கழிகலமகளிர் எனப்பட்டனர். அப்பெண்கள் அணிகலன்களைத் துறந்து இருந்த காட்சியை

"கொய்துகட் டழித்த வேங்கையின்
மெல்லியன் மகளிரும் இழைகளைந் தனரே"
(புறம் : 224:19-17)

என்ற அடிகளும்;

தலைமுடியைக் கொய்து மழித்தமையை

"கொய்ம் மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய
கழிகல மகடூஉப்போல" (புறம் 281 : 16-17)

என்ற அடிகளும் உணர்த்துகின்றன. இவ்வாறு தலைமுடி மழிக்கும் பழக்கம் தற்காலத்திலும் ஒரு சாராரிடம் இருப்பதை அறிவோம்.

தமிழகச் சமுதாயத்தில் மக்கள் வாழ்வை நெறிப்படுத்த திருமணம் ஒரு முக்கிய நிகழ்ச்சியாக அமைந்துள்ளது. அதற்கான சடங்குகள் ஏற்பட்டன. பின்னர் திருமணமானதன் அடையாளமாகப் பெண்கள் குறிப்பிட்ட சில மணச்சின்னங்களைப் போற்றி அணிந்தனர். இவற்றுள் முக்கியமாக மங்கலவணி எந்நிலையிலும், எப்பொழுதும் கணவன் வாழ்நாளளவும், இறைநிலையில் வைத்துப் போற்றி அணியப்பட்டு வருகிறது. இலக்கியச் சான்றுகளைக் கொண்டு மங்கல மங்கையர் தத்தம் கணவரை இழக்க நேரும் பொழுது மங்கலவணி, பிறவணிகள் அனைத்தையும் நீக்கியமையும், வளைகளை உடைத்தெறிந்தமையும், காதோலை கழற்றியமையும், தலைமுடி மழித்தமையும் செய்தனர் என்பதை அறியமுடிகிறது. இவற்றை ஆதாரமாக வைத்து நோக்கும் பொழுது ஒரு மணமான பெண், தன் கணவன் வாழ்நாளளவும் திருமண இழை அணிதலும், கைவளை, காதணி, காலாழி, மெட்டி போன்ற பிற அணிகளை அணிதலும், கூந்தல் ஒப்பனை செய்து மலரணிதலும் மங்கலச் சின்னங்களாகும் என்பது புலப்படும்.

# இலக்கியச் சான்றுகள்

## (திருமணம் குறித்து வருமிடங்கள்)

### தொல்காப்பியம்

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்
கன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்லியாழ்த் துணைமையோர் இயல்பே.
பொருள் : கள: 2

பொழுதும் ஆறும் காப்பும் என்று இவற்றின்
வழுவின் ஆகிய குற்றங் காட்டலும்,
தன்னை அழிதலும், அவண் ஊறு அஞ்சுதலும்,
இரவினும் பகலினும் நீவர என்றலும்,
கிழவோன் தன்னை வாரல் என்றலும்,
நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்,
புரைபட வந்த அன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள என்ப பொருள்: கள: 44

வெளிப்பட வரைதல் படாமை வரைதலென்று
ஆயிரண் டென்ப வரைத லாறே. பொருள் : கள: 50

வெளிப்படை தானே கற்பினொ டொப்பினும்
ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக
வரையாது பிரிதல் கிழவோற் கில்லை பொருள்: கள: 51

கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே
பொருள் : கற் : 1

கொடுப்போர் இன்றியுங் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான பொருள்: கற்: 2

மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க் காகிய காலமும் உண்டே பொருள்: கற்: 3

பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரண மென்ப. பொருள்:கற்:4.

கரணத்தின் அமைந்து முடிந்த காலை ,, :கற்:5.

பெறற்கரும் பெரும் பொருள் முடிந்தபின் வந்த
தெறற்கரு மரபிற் சிறப்பின் கண்ணும் ,, :கற்:7

(பெரும்பொருள்-மணவினையைக் குறித்தது)

### மணமக்கள் பொருத்தம்

பிறப்பே, குடிமை, ஆண்மை, ஆண்டொடு
உருவு, நிறுத்த காமவாயில்,
நிறையே, அருளே, உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே. ,, :மெய்ப்:25

### மணமக்கட்கு ஆகாத குணங்கள்

நிம்புரி, கொடுமை வியப்பொடு, புறமொழி,
வன்சொல், பொச்சாப்பு, மடிமையொடு, குடிமை,
இன்புறல், ஏழைமை, மறப்பொடு, ஒப்புமை,
என்று இவை இன்மை என்மனார் புலவர் ,, : ,, 26

### அகநானூறு

உழுந்துதலைப் பெய்த
வதுவை நன்மணம் கழிந்த பின்றை 86:1-31

மணமனை கமழுங் கானம் 107:21

தொன்றியல் மரபின் மன்றல் அயர 112:16

கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பருஉப்பணை யிமிழ
வதுவை மண்ணிய மகளிர் 136:6-8

---

எண்கள் முறையே செய்யுள் எண், அடிகளைக் குறிப்பன

(காப்புக் கட்டல்)

மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்புஅமல் அறுகை
மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவைத்
தண்ணறு முகையோடு வெண்ணூல் சூட்டி — 136 : 10-13

மழைபட் டன்ன மணன்மலி பந்தர்
இழையணி சிறப்பின் பெயர்வியர்ப் பாற்றித் — 136 : 16-17

புதுமண மகடூஉ வயின்றிய கடிநகர் — 141 : 12

தனைவிளை நறவின் தேறல் மாந்திப்
புனைவினை நல்லில் தருமணற் குவைஇப்
பொம்மல் ஓதி எம்மகள் மணனென
வதுவை அயர்ந்தனர் நமரே — 221 : 1-4

கடிமகள் கதுப்பின் — 244 : 5

நலஞ்சால் விழப்பொருள் கலநிறை கொடுப்பினும்
பெறலருங் குரைய ளாயின் — 280 : 5-6

புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினும் இனியனால் எமக்கே — 352 : 16-17

தமர்மணன் அயரவும் ஒல்லாள் — 369 : 16

... ... ... நெடுநகர்ப் புரையோர் அயர
நன்மாண் விழவில் ... ... ... ... — 385 : 5-6

(சிலம்புகழி நோன்பு)
சிறுவன் கண்ணி சிலம்பு கழீஇ
அறியாத் தேஎத்தள் ஆகுதல் கொடிதே — 385 : 17-18

... ... ... நங்கள வகலப்
பல்புரிந் தியறல் உற்ற நல்வினை — 400:3-4

புறநானூறு

சிறுநனி வரைந்தனை கொண்மோ — 180 : 1

நினக்குயான் கொடுப்பக் கொண்மதி — 200:15

இவரியார் என்குவை யாயின் இவரே
... ... ... ... ...
யான்தரல் இவரைக் கொண்மதி — 201:1-16

இருப்பனை யன்ன பெருங்கை யானை
கரந்தையஞ் செறுவிற் பெயர்க்கும்
பெருந்தகை மன்னர்க்கு வரைந்திருந் தனனே 340:7-10

சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு வைகல் ஆகுதல் 341·11:12

நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்
புரைய ரல்லோர் வரையலள் இவளென (343:11-12

வதுவை விழவிற் புதுவோர்க் கெல்லாம்
வெவ்வாய்ப் பெய்த புதுநீர் சால்கென 372:10-11

## குறுந்தொகை

குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே 25:5

நெய்பெய் தீயின் எதிர்கொண்டு
தான்மணந் தனையமென 106: 5-6

இஃதோ தோழிநங் காதலர் வரைவே 160 : 6

உருமிசை புணரி உடைதரும் துறைவர்க்கு
உரிமை செப்பினர் நமரே 351:4-5

மணங்கொளற் கிவரும் மள்ளர் போரே 364 : 8

## ஐங்குறுநூறு

தண்டுறை யூரன் வரைக
எந்தையும் கொடுக்க வெனவேட் டேமே 6:5-6

நல்லோர் நல்லோர் நாடி
வதுவை அயர விரும்புதி நீயே 61:4-5

நன்மனை யருங்கடி அயர
வெந்நலஞ் சிறப்பயா மினிப்பெற் றோளே 292:4-5

நன்மனை வதுவை யயரவிவள்
பின்னிருங் கூந்தன் மலரணிந் தோயே 294:4-5

நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்
எம்மனை வதுவை நன்மணங் கழிகென 399:1-2

## நற்றிணை

நயந்த காதலர் புணர்ந்தனள் ஆயினும் 66:9

தழையும் தாரும் தந்தனன் இவனென 80:5

சிலம்பு கழீஇய செல்வம்
பிறருழைக் கழிந்த என் ஆயிழை அடியே 279:10-11

. . . குன்றநாடன்
உடுக்கும் தழை தந்தனனே! யாம் அஃது
உடுப்பின் யாய் அஞ்சுதுமே, கொடுப்பின்
கேளுடைக் கேடு அஞ்சுதுமே. 359:3-5

வரைய வந்த வாய்மைக்கு ஏற்ப
நமர்கொடை நேர்ந்தனர் 393:9-10

. . . . நம்காதலர்
புதுவர் ஆகிய வரவும், நின்
வதுவை நாண் ஒடுக்கமுங் காணுங்காலே 393; 11-13

## கலித்தொகை

விண்டோய்கல் நாடனும் நீயும் வதுவையுட்
பண்டறியா தீர்போல் படர்கிற்பீர் மற்கொலோ
பண்டறிய தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ;
மைதவழ் வெற்பன் மணவணி காணாமல்
கையாற் புதைபெறூஉங் கண்களுங் கண்களோ 39: 37-42

மன்றல் வேங்கைக் கீழிருந்து
மணநயந் தனன் நம் மலைகிழ வோற்கே 41:42-44

வதுவை யயர்தல் வேண்டுவ லாங்குப்
புதுவை போலுநின் வரவுமிவள்
வதுவைநாண் ஒடுக்கமுங் காண்குவல் 52:23-25

காதல்கொள் வதுவைநாட் கலிங்கத்துள் ஒடுங்கிய
மாதர்கொள் மானோக்கின் மடந்தைதன் துணையாக
ஓதுடை அந்தணன் எரிவலஞ் செய்வான்போல் 69:3-5
மணமனைத் ததும்பநின் மணமுழவந் தொடுப்பமே 70:10

முத்தேர் முறுவலாய் நாமணம் புக்கக்கால்
இப்போழ்து போழ்தென் றதுவாய்ப்பக் கூறிய 93:11-12

... ... ... ... ... வருந்தாதி;
மண்ணிமா சற்றநின் கூழையுள் ஏறவன்
கண்ணிதந் திட்ட தெனக்கேட்டுத் திண்ணிதாத்
தெய்வமால் காட்டிற் றிவட்கென நின்னையப்
பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ
டையன்மா ரெல்லாம் ஒருங்கு 107:30-35

திருந்திழைக் கொத்த கிளவிகேட் டாங்கே
பொருந்தா தார் போர்வல் வழுதிக் கருந்திறை
போலக் கொடுத்தார் தமர் 141:23-25

### பரிபாடல்

சாறுகொள் துறக்கத் தவளொடு
மாறுகொள் வதுபோல மயிற்கொடி வதுவை 19:7

### பதிற்றுப்பத்து

வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து
வாழ்நாள் அறியும் வயங்குசுடர் நோக்கத்து
மீனொடு புரையும் கற்பின்
வாணுதல் அரிவை 89:17-20

### குறிஞ்சிப்பாட்டு

இருவேம் ஆய்ந்த மன்றல் இதுவென 21

கொடுப்பினன் குடைமையுங் குடிநிர லுடைமையும்
வண்ணமுந் துணையும் பொரீஇ யெண்ணா
தெமியேந் துணிந்த வேமஞ்சா லருவினை 30-32

நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மண மயர்கஞ் சின்னாள் 231-232

### நெடுநல்வாடை

வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து 142

### மலைபடுகடாம்

மணம்இல் கமழும் மாமலைச் சாரல் 151

### நாலடியார்

மன்றம் கறங்க மணப்பறை யாயின 23

... ... ... மணங்கொண் டீண்டு
உண்டுண்டுண் டென்னும் உணர்வினால் 25

பல்லார் அறியப் பறையறைந்து நாள்கேட்டுக்
கல்யாணஞ் செய்து கடிப்புக்க—மெல்லியற்
காதன் மனையாளும் இல்லாளா என்றொருவன்
ஏதின் மனையாளை நோக்கு 86

ஓலைக் கணக்கர் ஒலியடங்கு புன்செக்கர்
மாலைப் பொழுதில் மணந்தார் 397

## திணைமாலை நூற்றைம்பது

மன்று அறியக் கொள்ளீர், வரைந்து 37-4

ஆய்ந்து, வரைதல் அறம் 52-4

பவளக் கொழுந்தின்மேல் பெண் தாலி பாஅய்த்
திகழக் கான்றிட்டன 66-3

வருந்தே என்றாய், நீ வரைந்து 114-4

## ஆசாரக்கோவை

வரைந்து கொண்டு அல்லது பூசார் 35-3

கலியாணம், தேவர், பிதிர்விழா வேள்விஎன்று
ஐவகை நாளும், இகழாது, அறம் செய்க 48-1

அறத்தொடு, கல்யாணம், ஆள்வினை 85-1

## சிலப்பதிகாரம்

இருபெருங் குரவரும் ஒருபெரு நாளால்
மணவணி காண மகிழ்ந்தனர் மகிழ்ந்துழி
யானை எருத்தத் தணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் கீந்தார் மணம் 1:41-44

மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலம் செய்வது காண்பார்கண் நோன்பென்னை
விரையினர் மலரினர் விளங்கு மேனியர்
உரையினர் பாட்டினர் ஒசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு கோதையர்
... ... ... ... இடித்த சுண்ணத்தார்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்

... ... ... ... ...
காதலற் பிரியாமல் கவவுக்கை நெகிழாமல்
தீதறுக எனஏத்திச் சின்மலர் கொடுதூவி
அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை
மங்கல நல்லமளி ஏற்றினார் 1:52-64

மறுவின் மங்கல வணியே யன்றியும் 2:63

மங்கல வணியிற் பிறிதணி மகிழாள் 4:50

மறையின் மணந்தாரை வன்பரதர் பாக்கத்து மடவார் செங்கை
இறைவளைகள் தூற்றுவதை ஏழையம் எங்ஙனம் யாம் அறிகோமைய 7;29-30

... ... ... மணந்தார் அவராயினும் 7:52

ஆல்அமர் செல்வன் புதல்வன் வரும் வந்தால்
மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே 24:14

செயலைய மலர்புரை திருவடி தொழுதேம்
அயல்மணம் ஒழியருள் அவர்மணம் எனவே 24:15

நிலையுயர் கடவுள்நின் இணையடி தொழுதேம்
பலரறி மணமவர் படுகுவர் எனவே 24'16

பெறுகநன் மணம்விடு பிழைமணம் எனவே 24;17

மாமலை வெற்பன் மணவணி வேண்டுதுமே 24:21

பொற்றொடி மாதர் கணவன் மணங்காணப்
பெற்றி யுடைய திவ்வூர் 24:24

நீணில மன்னர் நெஞ்சுபுக லழித்து
வாளவர் மகளிரின் வதுவைசூட் டயர்ந்தோர் 27:26

வதுவை வேண்ம ள் மங்கல மடந்தை 28:51

மணிமேகலை

மைத்துனன் முறைமையால் யாழோர் மணவினைக்
கொத்தனர் என்றே 22;86-87

தொல்லோர் கூறிய மணம் ஈதாமென
வெல்லவிழ் தாரோன் இடுவான் வேண்டி
மாலை வாங்க 22:151-153

### திருமந்திரம்

வாசந்தி பேசி மணம் புணர்ந்து 150

### முத்தொள்ளாயிரம்

வதுவை பெறுகென்றா ளன்னை 97:2

### பெருங்கதை

வதுவைச் சூட்டணி வண்டுவாய் திறப்பவும் 1;33:75

இளமை வனப்பு மில்லொடு வரவும்
வளமைந் தறுகணும் வரம்பில் கல்வியும்
தேசத் தமைதியு மாசில் சூழ்ச்சியோடு
எண்வகை நிறைந்த நன்மகற் கல்லது

மகட்கொடை நேரார் மதியோர் ஆதலின் 1:36:89-93

தலைமைக் கொத்த வதுவை யெண்ணென 1;36:328

மணமகள் போல்வ 1:38:297

### (திருமணச் சடங்கு)

பொற்குடம் பொருந்திய பொழியமை மணித்தூண
நற்பெரும் பந்தருண் முத்துமணற் பரப்பி
நல்லோர் கூறிய நாளமை யமயத்துப்
பல்லோர் காணப் படுப்பிய வமைந்த
செந்தீ யந்தழல் அந்தணன் காட்டச்
சேதா நறுநெய் ஆசின்று குத்திச்
... ... ... ...
மென்விரல் மெலிவுகொண் டுள்ளகத் தொடுங்கப்
பிடித்துவலம் வந்து வடுத்நீர் நோன்பொடு
வழுவில் வாலொளி வடமீன் காட்டி
அருமறை யாளர்க் கருநிதி ஆர்த்திப்
பெருமறை விளங்கப் பெற்றனன் 1:48:86-100

வனப்புவிற் றிருந்த வாசவ தத்தை
வதுவைச் செல்வம் விதியிற் கூறுவென் 2:2:8-9

கடிநாள் என்றிப் பெருநாள் 2:2:32

வாசவ தத்தையொடு வதுவை கூடிக்
கோல நீண்மதிற் கொடிக்கோ சம்பி
மாலை மன்னவன் மணமக னாகும்
காலை யிதுவென 2:2:49-52

(நல்ல முகூர்த்தம் கூறல்)

கடிகமழ் செல்வங் கலந்த காலை
இடியுறழ் முரசி னேயர்பெரு மகற்கும்
பிடிமகிழ் யானைப் பிரச்சோ தனன்மகள்
வடிமலர்த் தடக்கை வாசவ தத்தைக்கும்
ஒருயிர்க் கிழமை ஓரை அளக்கும்
பேரிய லாளர் பிழைப்பிலர் நோக்கி
வழுவில் செந்தீப் பழுதில வேட்கும்
பொழுதுமற் றிதுவெனப் புரையோர்க் குரைப்ப (2:3:1-8)

(வேள்வித்தீ)

அறுதொழின் முத்தீ யருந்துறை போகிய
மறைநவி னாவின் மரபியல் அந்தணன்
பல்பூம் பந்தருட் செல்வஞ் சிறக்கும்
இருநிலத் திலக்கணம் இயற்பட நாடி
வெண்மண நிரப்பங் கொளீஇக் கண்ணுறப்
புண்ணியப் பலாசின் கண்ணிறை சமிதை
முக்குழி கூட்டத் துட்பட வோக்கி
ஆற்றாச் செந்தீ அமைத்தனன் 2:3:9-16

(நிறைகுடம் வைத்தல்)

ஐபொன் பதின்வகைத் தெய்வ நிலைஇய
கைபுனை வனப்பிற் கான்முத நோறும்
ஆரணங் காகிய அணிமுளை அகல்வாய்ப்
பூரண பொற்குடம் பொலிய விரீஇ 2:3:17-20

(அருந்ததிவாழ்த்து)

... விசை அம்மிக் குணதிசைக் கோணத்
திடமை பீடிகை பாடுபெற இருந்த
பொன்னயி ராணி முன்வயிற் பேணிப்
பன்னிய பனுவற் பார்ப்பன முதுமகன்
அந்தண் ஆவிரை அலரும் அறுகையும்
நந்தி வட்டமும் இடையிடை வலந்த
கோல மாலை நாற்றி வானத்
தருந்ததி அரிவையோ டாணிகற் பரவும் 2:3:27-34

(அருகமர்த்தல்)

வண்ணப் பூமுடி வாசவ தத்தையைச்
செண்ணக் காஞ்சனை செவ்விதிற் றழீஇ
... ... ... ...
நலத்தகை மன்னவ னட்பொடு புணர்த்த 2:3:74:77

(திருமணச் சடங்கு)

புண்ணியப் புறநனடப் பண்ணமை இருக்கையன்
உறுவரை உதயத் துச்சிமுக நோக்கி
... ... ... ...
சமிதைக் கிரிகை சால்புளி கழிப்பி
மந்திர விழுநெறித் தந்திரம் பிழையாது
துடுப்பிற் றோய்த்த சேதா நறுநெய்
அடுத்த செந்தீ அங்கழல் ஆர்த்திப்
... ... ... ...
செந்தளிர்ச் சீறடி செவ்வனம் பற்றிப்
போகமும் கற்பும் புணர்ந்துடன் நிற்கென
ஆகுபொருள் கூறி அம்மிமுதல் உறீஇ
நன்னெய் தீட்டிய செம்மலர் அங்கைப்
பொம்மல் வெண்பொரி பொலியப் பெய்தபின் 2:3:78:90

(தீவலம் வருதல்)

யாயும் எந்தையும் தீமுன் நின்று
வாயிற் கூடுதல் வராதிவண் வந்தென
வலிபுணர் வதுவைக்குச் சுளியுநள் போல
நடத்தல் தேற்றா மடத்தகை மாதரை
வளைபொலி முன்கை வருந்தப் பற்றித்
தளையவிழ் தாரோன் வலமுறை வந்து 2:3:104-109

வெஞ்சுடர் வீரன் நெஞ்சுமுதல் நீவித்
தென்மருங்கு மடுத்த தீர்த்தப் புன்மிசை
மென்மருங் கெழிலியை மெல்லென நடாஅய்
வதுவைத் தானம் பொதுவந் தொன்றி 2:3:115-118

(அருந்ததி காட்டல்)

வடபான் மருங்கில் சுடர்மீக் கூரிய
கற்புடை விழுமீன் காணக் காட்டிப்
பொற்றொடி நுதன்மிசைப் புனைவிரல் கூப்பி
மன்னிய உலகினுள் நின்னியல் பாக
என்வயின் அருளென மும்முறை இறைஞ்சுவித்து 2:3:125-129

(சதுர்த்தி நோன்பிருத்தல்)

எதிர்த்த விரதமொடு இயல்பிற் பிழையாது
சதுர்த்தி இருந்து கதிர்த்த காப்பொடு
மெய்ம்முதல் திரியாது வேண்டுங் கிரிகையிற்
கைமுதற் கேன்னம கழுமிக் கழிந்தபின் 2:3:130-133

வாசவ தத்தையொடு வத்தவர் இறைவனை
முட்டில் செல்வமொடு முறையிற் பிழையாது
கட்டில் ஏற்றினர். 2:3:165-167

கருதியது முடித்த கடிநாட் கோலமொடு 2:4:1

மணக்காற் பந்தருள் வடமென் மருங்குல் 2:4:43

(மணமகளை இடவயின் அமர்த்தல்)

மடவரன் மாதரை மணம்புரி காதலற்கு
இடவயின் இருத்தல் கடவ தாதலிற்
றங்கரச் செல்வந் தலைத்தலை தருஉம்
மங்கல மணமிசை வெண்டுகில் புதைஇ
இருக்கை திருத்திய பின்றை 2:5:75-79

அந்தணன் கன்னியை மந்திர விதியின்
அவன்பாற் படுத்த பின்னர் 3:22:24-25

வடுத்தீர் வதுவையின் 3:22:65

கொங்கலர் கோதையைக் கொடுக்குநா ளாதலின்
இலக்கணச் செந்தீத் தலைக்கையின் இரீஇ

இழுக்கா வியல்பின் இசைச்ச குமரன்
விழுப்பெரு விதியின் வேட்டவட் புணர்கென 3;22:73-76

இயைந்த வதுவை எழுநாள் நீங்கலும் 3:22:104

... ... ... மணநலக் கோலமொடு 3-22;116

மதுநா றைம்பாற் பதுமா பதியையும்
மரபிற் கொத்த மண்ணுவினை கழிப்பிய 3:22:196-197

வதுவைக் கேற்ற மங்கலப் பேரணி
அதிநா கரிகியை யணிந்தனர் அமைய 3:22:237-238

கடிநாட் கோலத்து காமன் இவனென 3:22-241

... ... ... ... பெருங்கணி
கூறிய முழுத்தங் குன்றுதல் இன்றி
... ... ... ... ...
தீவேள் சாலை திறத்துளி மூட்டிப்
புகுதுவ வத்தவன் என்றலில் 3:22:244-256

(பட்டங் கட்டுதல்)

நன்னுதல் மாதரை நாட்கடிச் செந்தீ
முன்முதல் இரிஇ முறைமையிற் றிரியா
விழுத்தகு வேள்வி யொழுக்கிய லோம்பிச்
செம்பொற் பட்டம் பைந்தொடிப் பாவை
மதிமுகஞ் சுடர மன்னவன் சூட்டி 3:22 272-276

கடிநாட் செல்வத்துக் காவிதி மாக்கள்
படியிற் றிரியாது படுத்தனர் வணங்கப்
பட்டச் சின்னுதற் பதுமா பதியொடு
கட்டிலே றினனாற் கருதியது முடித்து 3:22:282-285

அதுநிகழ் வேலையிற் புதுமண மாதரை
வதுவைக் கோலம் பதுமை புனைசென்று 4:14:170-171

நான்மறை யாளர் நன்மணங் காட்டத்
தீவலஞ் செய்து கூடிய பின்றை 4:14:180-181

தேவியர் மூவருந் தீமுன் நின்றவட்கு
உரிய வாற்றி மரபறிந் தோம்பி
அருவிலை நன்கல மமைவர வேற்றிக்
குரவர் போறக் கூட்டுபு கொடுப்பக்
கூட்டமை தீமுதற் குறையா நெறிமையின்
வேட்டவட் புணர்ந்து 4:17:109-114

பாசிழை நன்கலம் பரிய மாக 5:8:123

மறாஅ மாதர் வதுவை வலித்தபின்
மதிபுரை முகத்தியை மன்னவ னொருமகன்

வதுவைச் செல்வமோடு வான்றோய் வியனகர்
வீதியி னெய்தி விழவு முந்துறீஇப்
பதனறிந்து நுகரும் 5:8:154;158

### திருஞானசம்பந்தர் தேவாரம்

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடல ரேதொண்டர்
நல்லூர்ப் பெருமணம் மேயநம் பானே 5:1

தருமணல் ஓதஞ்சேர் தண்கடல் நித்திலம்
பருமண லாக்கொண்டு பாவைநல் லார்கள்
பருமணங் கூட்டி மணஞ்செயும் நல்லூர்ப்
பெருமணத்தான் பெண்ணோர் பாகங் கொண்டானே 5:2

கற்றர்கள் ஏத்தும் கபாலீச் சுரம் அமர்ந்தான்
பொற்றாப்பு காணாதே போதியோ பூம்பாவாய் 18:9

தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க் கந்திகழச்
சலசத்தீயுள்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட மணஞ்செய்யும்
மிழலையாமே 50:6

### திருநாவுக்கரசர் தேவாரம்

பெருந்திரு விமவான் பெற்ற பெண்கொடி பிரிந்த பின்னை
வருந்துவான் தவங்கள் செய்ய மாமணம் புணர்ந்துமன்னும்
43:1

### சுந்தரர் தேவாரம்

மணம்என மகிழ்வர் முன்னே மக்கள்தாய் தந்தை சுற்றம்
20:6

### இறையனார் அகப்பொருளுரை

களவு வெளிப்படா முன்னுற வரைதல்
களவு வெளிப்பட்ட பின்றை வரைதலென்று
ஆயிரண் டென்ப வரைதல் ஆறே 24

### திருவாசகம்

உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்று
அங்கப் பழஞ்சொற் புதுக்கும் 7:19

மலையரையன் பொற்பாவை வாணுதலாள் பெண்திருவை
உலகறியத் தீவேட்டான் என்னுமது காணேடீ.
உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்கள் எல்லாம் கலங்கிடுங்காண் 12:13

## திருக்கோவையார்

பூரண பொற்குடம் வைக்க மணிமுத்தம் பொன்பொதிந்த
தோரணம் நீடுக தூரியம் ஆர்க்கதொன் மாலயற்குங்
காரணன் ஏரணி கண்ணுத லோன்கடல் தில்லையன்ன
வாரண வும்முலை மன்றல்என் றேங்கும் மணமுரசே 296

## நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

கண்ணாலஞ் செய்யக் கறியும் கலத்த
தரிசியும் ஆக்கி வைத்தேன்,
கண்ணா! நீநாளைத் தொட்டுக் கன்றின்பின் போகேல்
கோலஞ் செய்திங் கேயிரு 252

கைத்தலத் துள்ள மாடழியக்
கண்ணா லங்கள் செய்து, இவளை
வைத்து வைத்துக் கொண்டென்ன
வாணிபம் நம்மை வடுப்படுத்தும் 294

பெருப்பெ ருத்தகண் ணாலங்கள்செய்து 295

குமரி மணஞ்செய்து கொண்டு
கோலஞ்செய் தில்லத் திருத்தி,
தமரும் பிறரும் அறியத்
தாமோத ரற்கென்று சாற்றி,
அமரர் பதியுடைத் தேவி
அரசாணி யைவழி பட்டு,
துமில மெழப்பறை கொட்டித்
தோரணம் நாட்டிடுங் கொல்லோ 299

திருமகள் போல வளர்த்தேன்
செங்கண்மால் தான்கொண்டு போனான்,
பெருமக ளாய்க்குடி வாழ்ந்து
பெரும்பிள்ளை பெற்ற அசோதை
மருமகளைக் கண்டு கந்து
மணாட்டுப்பு றம்செய்யுங் கொல்லோ 300

வேடர் மறக்குலம் போலே
    வேண்டிற்றுச் செயதென் மகளை,
கூடிய கூட்டமே யாகக்
    கொண்டு கூடிவாழுங் கொல்லோ,
நாடு நகரு மறிய
    நல்லதோர் கண்ணாலஞ் செய்து
சாடிறப் பாய்ந்த பெருமான்
தக்கவா கைபற்றுங் கொல்லோ 302

மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில் லேன்கண்டாய் மன்மதனே! 508

கருப்புவில் மலர்க்கணைக் காமவேளைக்
கழலிணை பணிந்தங்கோர் கரியலற,
மருப்பினை ஒசித்துப்புள் வாய்பிளந்த
மணிவண்ணற் கென்னை வகுத்திடென்று 513

(மாயவன் தன்னை மணஞ்செயக் கண்ட தூயநற்
கனவை ஆண்டாள் தோழிக் குரைத்தல்)

வாரணம் ஆயிரம் சூழவ லம்செய்து
நாரண நம்பி நடக்கின்றா னென்றெதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்,
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீநான் 556

நாளைவ துவைம ணமென்று நாளிட்டு
பாளைக முகுப ரிசுடைப் பந்தற்கீழ்,
கோளரி மாதவன் கோவிந்த னென்பான், ஓர்
காளைபு குதக்க னாக்கண்டேன் தோழீநான் 557

இந்திர னுள்ளிட்ட தேவர்கு ழாமெல்லாம்,
வந்திருந் தென்னைம கட்பேசி மந்திரித்து,
மந்திரக் கோடியு டுத்திம ணமாலை
அந்தரி சூட்டக்க னாக்கண்டேன் தோழீநான் 558

நாற்றிசைத் தீர்த்தங்கொ ணர்ந்துந னிநல்கி,
பார்ப்பனச் சிட்டர்கள் பல்லாரெ டுத்தேத்தி,
பூப்புனை கண்ணிப்பு னிதனோ டென்றன்னை,
காப்புநாண் கட்டக்க னாக்கண்டேன் தோழீநான் 559

கதிரொளி தீபம்க லசமு டனேந்தி,
சதிரிள மங்கையர் தாம்வந்தெ திர்கொள்ள
மதுரையார் மன்னன டிநிலை தொட்டு, எங்கும்
அதிரப்பு குதக்க னாக்கண்டேன் தோழீநான் 560

மத்தளம் கொட்டவ ரிசங்கம் நின்றூத,
முத்துடைத் தாம்நி ரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பிம துசூதன் வந்து, என்னைக்
கைத்தலம் பற்றக்க னாக்கண்டேன் தோழீநான் 561

வாய்நல்லார் நல்லம றையோதி மந்திரத்தால்.
பாசிலை நாணல்ப டுத்துப்ப ரிதிவைத்து,
காய்சின மாகளி றன்னானென் கைபற்றி,
தீவலம் செய்யக்க னாக்கண்டேன் தோழீநான் 562

இம்மைக்கும் ஏழேழ்பி றவிக்கும் பற்றாவான்,
நம்மையு டையவன் நாராய ணன்நம்பி,
செம்மையு டையதி ருக்கையால் தாள்பற்றி,
அம்மிமி திக்கக்க னாக்கண்டேன் தோழீநான் 563

வரிசிலை வாள்முகத் தென்னைமார் தாம்வந்திட்டு,
எரிமுகம் பாரித்தென் னைமுன்னே நிறுத்தி.
அரிமுக னச்சுதன் கைம்மேலென் கைவைத்து,
பொரிமுகந் தட்டக்க னாக்கண்டேன் தோழீநான் 564

குங்குமம் அப்பிக்கு ளிர்சாந்தம் மட்டித்து,
மங்கல வீதிவ லம்செய்து மணநீர்,
அங்கவ னோடுமு டன்சென்றங் கானைமேல்
மஞ்சன மாட்டக்க னாக்கண்டேன் தோழீநான் 565

கண்ணலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான் 615

மணந்ததாய் மலர்மகள்தோள் மாலே 2229

வதுவை வார்த்தையுள் 3217

### யசோதர காவியம்

வளங்கெழு குமரனும் வளர்ந்து மன்னனாய்
விளங்கிழை யமிழ்தமுன் மதியை வேள்வியான்
உளங்கொளப் புணர்ந்துட னுவகை எய்தினான் 77

## சூளாமணி

பொரியபோகின்ற போலும் பொங்கு அரித்தடங்கண்
பேதைக்கு
உரியமா லவற்குச் சென்று கொடுப்பல் என்று உலகம்
காக்கும்
பெரியவன் தமரொடு எண்ணிக் கடிவினை பெருக்க
லுற்றான் 8:3

தூண்டிய சுடர்விளக் கன்ன கன்னியோடு
ஆண்டலகை அழல்வலஞ் செய்யு மாரணி 8:242

திறைந்தார் கடிநல் வினைநீ தியினால்
அறைந்தாங்கு அதுசென் றது 8:244

சுழுவும் மணிபோல் பவடன் கடிநாள்
எழுவும் முரசெங் குமியம் பினவே 8:248

பொன்னணிபு னைந்துபுது வேள்விநகர் புக்கான் 8:263

நங்கைமண நீரணியை நாமொழிவ தென்னோ? 8:264

செங்கயல் நெடுங்கணவள் வேள்விநகர் சேர்ந் தாள் 8:267

நங்கைமண வேள்விநகர் எய்துவதன் முன்னைப்
பொங்குபுரி நூலனவர் தாமரைபு னைந்தார்
மங்கலவு ழைக்கலநி ரைத்த மண மாடம்
அங்கதுபு குந்தழல்வ ளர்க்கியவ மைந்தார் 8:268

அங்குமுன் வளர்த்தவழ லேகடவு ளாக
மங்கையைம ணக்குழுவின் முன்னைவரை வேந்தன்
கொங்குவிரி தாரவற்கு நீரொடுகொ டுத்தான்
நங்கையொடு நாண்மலரு ளாளையும டுத்தான் 8:273

மன்னியழல் வேள்வியி லவற்குவல மாகப்
பின்னிய தருப்பைகள் பிடித்தவை விடுத்தாங்
கன்னமனை யாளொடயில் வேலவனி ருந்தான்
கன்னியொடி யைந்தகதிர் மாமதிய மொத்தான் 8:274

பொங்கழல்செய் வேள்விமுறை போற்றலுமெ ழுந்தான்
நங்கையின ணங்கினணி மெல்விரல்பி டித்து
மங்கையொடு காளைவல னாகவரு கின்றான் 8:276

வானநெறி எங்கும்வளர் சோதிவட மீனைக்
கானமயி லன்னவடன் முன்னைநனி காட்ட 8;280

எனமண வினைகள் செல்ல இன்னணம் எய்துகென்று 8:281

கன்னிய காம வல்லிக் கடிவினை காண லுற்றான் 10:7

கடிகமழ் பாரி சாத மதனொடோர் காம வல்லிக்
கொடிமணம் புணர்க்க லுற்ற குறிப்பறி நீசென்று
என்றார் 10:10

மன்னிய பாரி சாத மணமக னாக நாட்டிக்
கன்னியங் காம வல்லி கடிவினை தொடங்க லுற்றார் 10:67

கன்னியங் காம வல்லிக் கனங்குழை மடந்தை தன்னை
மன்னவன் தேவி மார்கள் மணவினைக் கோலஞ்
செய்து 10:74

திருத்தகு சுயம்வர முரசந் திண்களிற்று
எருத்தின்மேல் அறைகென இறைவன் ஏயினான் 10:208

இன்றைநாள் உள்ளுறுத்து ஈர்ஐஞ் ஞாள்களும்
மன்றலஞ் சுயவரம் வரைந்த தாதலால்
ஒன்றிவா ழரசரோ டுலக மீண்டுக
வென்றுதா னிடிமுர சறைந்த தென்பவே 10,212

கடிபடு முரசுகண் ணதிர்ந்த காரென 10:213

சுயமர மாளிகை இயற்றி
... ... ...
வியமரத் தொழிலவர் வினைமு டிந்ததென்று
இயமரத் தொழுதிகள் எழுந்தி சைத்தவே 10:228

மங்கல நாழிகை வந்த மன்னர்கள்
இங்குவந் தேறுக வென்று சாற்றலும்
சங்கொலி பரந்தன தயங்கு மாமுரசு
அங்கொலித் தெழுந்தன அரசர் தோன்றினார் 10:229

வண்டிவர் மாலை நோக்கி
　　மாதராள் மறைத லோடும்
கொண்டதோர் குமரன் போல்வான்
　　குங்குமக் குவவுத் தோண்மேல்
ஒண்டொடி மாலை வீழ்த்தாள் 10:271

கைத்தலை வேலி னாற்குக் கடிவினை முடிவித் தானே 10:274

(மணநீராட்டல்)

மண்ணக வளாகத் துள்ள
　　மன்னரான் மண்ணு நீர்தந்
எண்ணகன் புகழி னாரை
　　எழிலொளி துளும்ப வாட்டிப்
புண்ணகங் கமழும் வேலான்
　　பொன்மழை பொழிவித் தானே 10:275

(தீவோம்பல்)

தருமணன் மணிமுத் தாகத்
　　தண்டுல மியற்றிக் கான்யா
றருமணற் றருப்பை சூழ்ந்தாங்
　　கதன்மிசை பரிதி பாய்த்திப்
பெருமண மன்னற் கேற்ற
　　சமிதையாற் பெருக்கப் பட்ட
திருமணி உருவச் செந்தீ
　　செல்வத்திற் சிறந்த தன்றே 10:276

(வலம் வருதல்)

தங்கழல் வேள்வி முற்றித்
　　தையலக் காளை யோடும்
பெங்கழல் வலஞ்செய் போழ்தில் 10 : 277

மாதராள் சுதாரை வாட்கண் மலரொடு மணிவண் டார்க்கும்
போதுலாம் பிணையல் வீரன் பொன்வரை யகலஞ் சூடி
ஏதிலா மன்னர் வாட இருபுடைக் கிளைஞ ரெல்லாம்
காதலாற் களித்துச் செல்வக் கடிவினை முடிவித் தாரே
10 : 281

### நரிவிருத்தம்

கடிமணக் கோல மாதர் 14

### சிந்தாமணி

மட்டுடை மணமகள் மலர்ந்த போதினால் 98

தன்னமர் காத லானுந் தையலு மணந்த போதில் 190

மழலையாழ் மருட்டுஞ் தீஞ்சொன்
மதலையை மயிலஞ் சாயற்
குழைமுக ஞான மென்னுங்
குமரியைப் புணர்க்க லுற்றார் 368

திருந்துபொற் கண்ணி யாற்குச்
செல்வியைச் சேர்த்தி னாரே 369

ஆடகச் செம்பொற் பாவை ஏழுடன் தருவல் ஐய
வாடலில் வதுவை கூடி மணமகனாக என்றான் 479

கடிவினை முடிக என்றான் 485

தாழிருங் குழலி னாளை
நெய்தலைப் பெய்து வாழ்த்தி
முழைநீர் சொரிந்து மொய்கொன்
ஆய்த்திய ராட்டி னாரே 487

மைவிரி குழலி னாளை
மங்கலக் கடிப்புச் சேர்த்திப்
பெய்தனர் பிணையன் மாலை
ஓரிலைச் சாந்து பூசிச்
செய்தனர் சிறுபுன் கோலம் 488

ஏறங்கோண் முழங்க வாயர்
எடுத்துக்கொண் டேகி மூதூர்
சாறெங்கும் அயரப் புக்கு
நந்தகோன் தன்கை ஏந்தி
வீறுயர் கலச நன்னீர்
சொரிந்தனர் வீர னேற்றான் 489

கண்டவர் மருள நாளைக்
கடிவினை முடித்து மென்றான் 587

மங்கல வணியினர்
கொங்கணி குழலவள் கோடணை அறைவாம் 603

பண்டியல் மணங்கள் எல்லாம்
பரிவறப் பணிந்து சொன்னான் 618

தங்கை கல்யாணம் நன்றே 784

அருமணி யலம்வரும் அம்பொற் கொம்பனாள்
பெருமணக் கிழமையாம் பேசு கின்றதே 822

ஊன் திகழ் வேலினான் வேள்வி 823

இன்னிய முழங்கி யார்ப்ப
வீண்டெரி திகழ வேதந்
துன்னினர் பலாசிற் செய்த
துடுப்பினெய் சொரிந்து வேட்ப
மின்னியல் கலச நன்னீர்
சொரிந்தனன் வீர னேற்றான் 834

நெட்டிருங் கூந்த லாட
னேர்வளை முன்கை பற்றிக்
கட்டழல் வலங்கொண் டாய்பொற்
கட்டிறா னேறி னானே 835

கந்துகன் சிறுவன் வேட்ட கடிவினை 836

அடிமனை பவளம் ஆக வரும்பொனால் அலகு சேர்த்தி
முடிமணி அழுத்திச் செய்த மூரிக்காழ் நெற்றி மூழ்கக்
கடிமலர் மாலைநாற்றிக் கம்பல விதானங் கோலி
யிடுபுகை மஞ்சில் சூழ மணவறை இயற்றினாரே 837

முரசங் கறங்க முழவிம்மவெண் சங்கம் ஆர்ப்பப்
பிரசங் கலங்கிற் றெனமாந்தர் பிணங்க வேட்டான் 1063

மடத்தகை யவளொடும் வதுவைநாட்டி நாம்
கொடுக்குவ மெனத்தெய்வ மகளிர் கூறினார் 1173

... ... ... ... ... காதலின்
இலங்கு பாவை இருமணம் சேர்த்துவார் 1319

கணிபுனைந் துரைத்த நாளால் கண்ணிய கோயில் தன்னுள்
மணிபுனை மகளிர் நல்லார் மங்கல மரபு கூறி
யணியுடைக் கமல மன்ன வங்கைசேர் முன்கை தன்மேல்
துணிவுடைக் காப்புக் கட்டி சுற்றுபு தொழுது காத்தார் 1344

மழகளிற்று எருத்தில் தந்த
மணிக்குட மண்ணு நீரால்
அழகனை மண்ணுப் பெய்தாங்கு
அருங்கடிக் கொத்த கோலந்
தொழுதகத் தோன்றச் செய்தார் 1345

கயற்க ணாளையுங் காமனன் னாளையும்
இயற்றி னார்மணம் ஏத்தருந் தன்மையார்
மயற்கை இல்லவர் மன்றலின் மன்னிய
இயற்கை அன்புடை யாரியைந் தார்களே 1346

இடியுமிழ் எறிதிரை முழக்கில் பல்லியங்
கொடியணி வியனகர்க் குழுமி யார்த்தெழக்
கடிமணம் இயற்றினார் கடவுள் நாளினால்
வடிமலர்க் கோதையை மைந்தற் கென்பவே 1490

புறநகர் மணமகன் ஒருவன் போதர்வான் 1618

மணமகள் கதுப்பென நாறும் 1621

... அவனையான் நிகளம் பெய்து
காவல்செய் திடுவல் ... ... ... 1683

பூவியல் கோயில் கொண்ட பொன்னனாள் அனைய நங்கை
காவியங் கண்ணி வந்து பிறத்தலுங் கணிகள் ஈண்டி
மூவிய றிரித லின்றிச் சாதக முறையில் செய்தார்
ஏவியல் சிலையி னாய்க்கே யுரியளென் று உரைப்ப
நேர்ந்தான் 1686

வாருலா முலையி னாட்கும் வரிசிலைத் தடக்கை யாற்கும்
சீருலாங் கோலஞ் செய்தார் செப்பினார் வதுவை நன்னாள்

பாரெலாம் அறிய நின்று படாமுர சார்ப்பத் திவேட்டு
ஏருலாங் கோதை யின்பத் திளநலம் பருகு கின்றான் 1687

மஞ்சுசூழ் விசும்பிடை மணந்துமின் மிளிர்வபோல் 1828

அம்பொற் கொம்பனை யாளையும் வார்கழல்
செம்பொற் குன்றனை யானையுஞ் சீர்பெறப்
பைம்பொ னீணகர்ப் பல்லிய மார்த்தெழ
இம்ப ரில்லதொ ரின்பம் இயற்றினார் 1980

கடியறை ... ... ... ... 2059

கேட்பது விரும்பி நாய்கன் கிளைக்கெலா முணர்த்தி
யார்க்கும்
வேட்பன வடிசி லாடை விழுங்கலன் மாலை சாந்தம்
கோட்குறை வின்றி யாக்கிக் குழுமியங் கறங்கி யார்ப்ப;
நாட்கடி மாலை யாற்கு நங்கையை நல்கி னானே 2078

பரியகஞ் சிலம்பு பைம்பொற் கிண்கிணி யார்ந்த பாதத்
தரிவைய ராடன் மிக்கா ரருமணி வீணை வல்லார்
உரியநூற் றெண்மர் செம்பொ னொன்றரைக் கோடி
மூன்றூர்
எரியழன் முன்னர் நேர்ந்தேன் என்மகட் கென்று சொன்
னான் 2079

... ... ... மணமகன் போல நின்றான் 2185

எரிபொன் மேகலை இலக்கணை கடிவினை நொடிவாம் 2385

ஊழின் அன்றியும் உறுவினை ஒரையின் முடிப்பான்
வேழ வேந்தற்கு விழுப்பெருங் கணிவிரித் துரைத்தான் 2386

வளங்கொள் மாலைகள் சூடிமுத் தணிந்துவண் முரசம்
களங்கொள் வேழத்தின் ஏற்றினர் கடிமுர சறைவான் 2388

மாலை வாண்முடி மன்னவன் மணவினை எழுநாள் 2392

மறுவின் மங்கலங் காட்டி னார்மணக்
குறைவில் கைவினைக் கோல மார்ந்ததே 2428

(மணச்சடங்குகள்)

தருமணல் தருப்மை யார்ந்த சமிதையிம் மூன்றினாலும்
விரிமலர் அணிந்த கோல வேதிகை யியற்றி யானெய்
ஒருமணி யகலுட் பெய்தார் பொன்னக லார்ந்த தூபம்
இருமணி யகலு ணீர்பெய் திடவயி னிரீஇயி னாரே 2463

நெய்பொரி நிறையப் பெய்து நிழலுமிழ் செம்பொன் மூழிக்
கற்புரி கடவு ளான்பா லவியொடுகலப்ப வைத்து
முற்பெரி யானை யாகத் தருப்பையான் முடிந்து மூன்று
பொற்புரி வரையும் பொய்தீர் சமிதைகள் இரண்டும் வைத்
தார் 2464

மந்திர விதியின் மாண்ட சிறுவிரல் தருப்பை சூழ்ந்து
முந்துநா மொழிந்த நெய்யை முனைமுதிர் தருப்பை
தன்னால்
மந்தரித் தமைய முக்கான் மண்ணிமற் றதனை நீக்கிச்
சிந்தித்து மறையிற் செந்தீத் தண்டிலத் தங்கண் வைத்
தார் 2465

கரையுடைத் துகிலிற் றோன்றும் காஞ்சன வட்டின் முந்நீர்த்
திரையிடை வியாழந் தோன்றத் திண்பிணி முழவுஞ் சங்கும்
முரசொடு முழங்கி யார்ப்ப கொள்வேன் மன்னரார்ப்ப
அரசரு ளரச னாய்பொற் கலசநீ ரங்கை ஏற்றான் 2467

குளிர்மதி கொண்ட நாகங் கோள்விடுக் கின்ற தேபோல்,
தளிர்புரை கோதை மாதர் தாமரை முகத்தைச் சேர்ந்த.
ஒளிர்வளைக் கையைச் செல்வன் விடுத்தவ ளிடக்கை பற்றி,
வளரெரி வலங்கொண் டாய்பொற் கட்டிறா னேறி
னானே 2468

விளங்கொளி விசும்பிற் பூத்த அருந்ததி காட்டி, 2469
கடிநன் மலர்ப்பள்ளி களிப்ப 2503

... ... ... மாணிக்க நகுதாலி
பேணிநல்வார் கழுத்தணிந்து 2697

கந்தபுராணம் :

(உற்பத்தி காண்டம் மணம்பேசு படலம்)
உமைதனை வதுவை நீரால் உதவுவான் 6

மங்கையை வதுவை செய்வான் 9

கன்னிகை உமையாள் தன்னைக் கடிமண முறையினல்கி 10

மலரயன் புதல்வன்றன்னோர் மடந்தையை மணத்தினல்க 11

மணமியலிறையோனை வரமொழிகுதி என்றான் 16

வரமிசை அரசாள்வோன் மணவினையிசை எல்லாம் 19

(உற்பத்தி காண்டம் : வரைமனை படலம்)

மண்ணவர் புகழ்வகை மணத்தும் என்றதும் 1

... ... ... ... கன்னியை
மணமுறை புரிதிற மதித்துத் தேவர்தம்
பணிபுரி தச்சனைப் பரிவொ டுன்னினான் 2

மங்கல மணஞ்செய வதுவைச் சாலையைச்
செங்கன கத்தினால் திகழச் செய்தனன் 13

அருங்கடி இருக்கையுள் அமர நல்கினான் 19

காதலி னுமை மணங்காண வந்திடத்
தூதரை எங்கணுந் தூண்டினானரோ 27

மங்கல வதுவையின் வனப்புச் செய்தனர் 31

ஆதியினுலகம் எல்லாம் அளித்திடும் அன்னைதன்னைக்
காதலின் வதுவை செய்யக் கருதினை கணிதநூலோர்
ஓது பங்குனியின் திங்கள் உத்தர மின்றே யாகும்
ஈதுநன் முகூர்த்தம் எந்தாய் இமயமேல் வருதியென்றான் 34

(உற்பத்தி காண்டம் : திருக்கல்யாண படலம்)

ஏற்றின் மேவினர் எம்மை மணந்திட
மாற்றிலாத மலைமகள் போலயாம்
நோற்றிலோம் எனநொந்து உயிர்ப்பார்சிலர் 26

தேவருய்யத் திருமணஞ் செய்திட 27

மங்கைபாலின் மணப்பொருட்டு ஏகினர் 29

ஆனகாலை அருமணச் சாலைமுன் 38

கோதின் மாமணக் கோயிலுள் எய்தினான் 40

கந்தமென் போதுவேய்ந்த கடிமணச்சாலை 44

... ... ... ... அண்ணல்
விமலத் திருமாமணங் காணுற 46

வந்துநம் வதுவைக்காட்சி வழங்குவது மகிழ்ந்து காண்டி 59

வந்திடு முலைகை ஈன்றாள் வதுவையஞ்சாலை நண்ணி 67

சங்கரனுலகம் எல்லாந் தந்திடுங் கன்னி தன்னை
மங்கல முறையாற் கொண்டான் மலைமகன் கொடுப்ப
வென்றால்
அங்கவன் அருள்நீர்மை யாரறிந்து உரைகற் பாலார் 71

படங்கிளர் சேடன் தாங்கும் பார்விசும் புறையு நீரார்
அடங்கலு மணஞ்செய் போதத் தவ்வவர்க் கடுத்த தாற்றி
நடந்திடும் ஒழுக்கம் எந்தை நடந்திடல் வேண்டு மன்றல்
சடங்கினி யுளது முற்றத் தண்ணளி புரிதி என்றான் 77

தன்னிக ரில்லா மன்றச் சடங்கெலா மியற்றல் செய்தான் 78

அந்தணர் ரணம் எல்லாம் மாற்றியே முடிந்த பின்னர் 79

(வள்ளியம்மை திருமணப்படலம்)

ஈங்கிவட் கொணர்ந்தாய் இன்னினிச் சீறூர்க்கேகித்
தீங்கனல் சான்றாவேட்டுச் செல்லுதி நின்னூர்க்
கென்றான் 192

மாதுலன் முதலோர் சொற்றமணமொழிக் கிசைவு
கொண்டு 193

வந்தனன் மணமுஞ் செய்ய மற்றிது நிகழ்ச்சி என்றார் 194

மங்கல வதுவை செய்ய வதனனிங்ஙனென்றும் 195

அந்த நல்வேலை தன்னிலன் புடைக்குறவர் கோமான்
கந்த வேள்பாணி தன்னிற் கன்னிகை கரத்தைநல்கி
நந்தவமாகி வந்த நங்கையை நயப்பாலின்று
தந்தனன் கொள்க வென்று தண்புனல் தாரை உய்த்தான்
199

மற்றுள கலனுந் தந்து வதுவையின் சடங்குநாடி
யற்றமதடையா வண்ணம் அருமறை விதியால் செய்
தான் 200

பாவையை வதுவை செய்யும் பரிசினை முழுதுங்கண்டான்

201

மற்றது காலை தன்னில் மாதுலன் வள்ளிதன்னைக்
கொற்ற வேலுடைய நம்பி வதுவைசெய் கோல நோக்கி 206

புல்லிய குறவர் மாதர் பொருவில் சீர்மருகன்றானும்
வல்லியு மின்னே போலவகையும் வாழ்கவென்று
சொல்லியலாகி கூறித் தூமலர் அறுகு தூர்த்தார் 207

(தெய்வயானையம்மை திருமணப்படலம்)

கயலுறழ் விழியுடைக் கடவுள் யானையை
வியல்வரை எறிந்திடு வேற்கை அண்ணலுக்கு
இயல்புளி வதுவையால் ஈதற் கிவ்விடை
முயலுதி கடிதென மொழிந்து வைகினார் 4

முந்தே தமியேன் பெறு மங்கையிம் மொய்வ ரைக்கண்
வந்தே அமர்வாள் அவள்தன்னை வதுவை செய்து
கந்தே புரைநின் பெருந்தோளிற் கலத்தி 18

முன்னும் படியே மணநாளை முடித்தும் என்னத் 19

தேவர்க்கும் ஏனைத் திசையோர்க்கும் முனிவ ராயோர்
ஏவர்க்கும் எந்தை மணநாளை எனச்சொல் வீரால் 22

கந்தக் கடவுள் மணத்தமை 23

கானமர் கடம்பனை காளைதன் மணத்துக்கு
ஆனசெயல் முற்றுற அமைத்தியிவண் என்றான் 24

மன்றல்பயில் கின்றவது வைக்களன் மருங்கில்
குன்றுபுரை பல்சிகர கோபுரம் வகுத்தான் 28

மாறிலாத அவ்வதுவை காண 53

சேயவன் மணஞ்செப்பி மாதிரம்
ஏயினோர்க்கும் இங்கிது விளங்கினார் 58

நாயகன் மணங்காணிய முன்னரே நடப்பான் 60

மணவினை தன்னை உன்னி மகிழ்ந்திடும் 83

.. ... வள்ளல் கடிமணந் தாமுங் காண்பான் 94

மாலை தாழ்முடி எம்பெரு முதல்வற்கு மணஞ்செய்
காலை நாடியே இஃதெனக் கழறுதி என்றான் 186

காந்தள் மெல்விரல் மடந்தைபாற் கடிமணம் புரிய
ஏந்தல் நீயவண் வந்திட வேண்டுமென் றிசைத்தார் 190

மன்னன் ஆற்றிய மணத்தின் சாலையின்
முன்னர் வந்தனன் முடிவில் முன்னையோன் 200

ஏய மஞ்ஞைநின் றிழிந்து வேள்விசெய்
கோயில் முன்கடைக் குமரன் சேர்தலும் 205

எதிர்பு குந்திடும் இந்தி ராணிதன்
புதிய தோர்பசுப் பொழிந்த தீயபால்
நிதியின் கொள்கலம் நிரப்பி வந்துவேள்
பதயு கங்களிற் பரிவொ டாட்டினாள் 206

ஆட்டித் தீம்பயன் அலருங் கண்ணியுஞ்
சூட்டி மெல்வடி தொழுது பல்சுடர்
கூட்டி வைத்ததோர் கொள்க லந்தனைக்
காட்டி மும்முறை கடவுட் சுற்றினாள் 207

பொன்னிற் புனையும் புதுமன் றல்மனை 221
கன்னி தன்னைக் கடிமணச் சாலையின்
முன்னர் உய்ப்ப 233

எல்லவ ரும்புகழ் இந்திரன் ஐயன்
மெல்லடி பற்றி விளக்கினன் அம்மா 242

அன்னுழி இந்திரன் ஆறுமு கேசன்
தன்னொரு கையிடை தந்தியை நல்கி
நின்னடி யேன்இவள் நேர்ந்தனன் என்னாக்
கண்ணல் உமிழ்ந்த கடிப்புனல் உய்த்தான் 245

செங்கம லத்திறை சிந்தையின் ஆற்றி
அங்கையின் ஈந்திட ஆண்டகை கொண்ட
மங்கல நாணை மணிக்களம் ஆர்த்து
நங்கை முடிக்கோர் நறுந்தொடை சூழ்ந்தான் 247

தூயம ணம்புரி தொன்முறை வேள்வி
நாயக னைக்கொடு நன்றுசெய் வித்தான் 251

(தக்க காண்டம் : திருமணப்படலம்)

தொல்லையில் வதுவையந் தொழில்ந டாத்திட 1
மன்னுறு கோயிலை வதுவைக் கேற்றிடப்
பொன்னகர் நாணுறப் புனைவித் தான் 3

கடிவினை புரிதர ... ... 4

மணநய வேட்கையால் மாது நோற்றனள் 5

மணவணி முற்றுறு மாறு போந்துதன்
கணவன் தொருபுடை கலந்த காலையில்
பணைமுத லாகிய பல்லி யங்களும்
இணையற இயம்பினர் யாரும் ஏத்தவே 12

எல்லைய தாகலும் இருந்து தக்கனாங்கு
ஒல்லையின் மறைமொழி உரைத்துத் தன்மனை
வல்லிபொற் சிரகநீர் மரபின் வாக்குற
மெல்லென அரனடி விளக்கி னான்அரோ 16

சிற்கன வடிவினன் செங்கை யுள்உமை
நாற்கரம் நல்குபு நன்று போற்றுதி
நிற்கிவள் தன்னையான் நேர்ந்த னன்எனாப்
பொற்கர கந்தரு புனலோடு ஈந்தனன் 18

மூர்த்தமங் கதனிடை முதல்வன் அம்பிகை
சீர்த்திடு மணவணி தெரிந்து கைதொழூஉ
... ... ... ... ... ...
ஆர்த்தனர் வழுத்தினர் அமரர் யாவரும் 19

மாடுறு திசைமுகன் மணஞ்செய் வேள்வியில்
கூடுறு கலப்பைகள் கொணர்ந்து நூன்முறை
நேடினன் சடங்கெலாம் நிரப்ப மால்முதல்
ஆடவர் இசைத்தனர் 20

பெரியபுராணம்

திருமலி சிறப்பின் ஓங்கிச் சீர்மணப் பருவஞ் சேர்ந்தார் 5:6

வந்ததொல் சிறப்பிற் புத்தூர்ச் சடங்கவி மறையோன்
தன்பால்
செந்திரு வனைய கன்னி மணத்திறஞ் செப்பி விட்டார் 5:7

குலமுத லறிவு மிக்க கோத்திர முறையுந் தேர்ந்தார்
நலமிகு முதியோர் சொல்லச் சடங்கவி நன்மை யேற்று
மலர்தரு முகத்த னாகி மணம்புரி செயலின் வாய்மை
பலவுடன் பேசி ஒத்த பண்பினால் அன்பு நேர்ந்தான் 5:8

உற்றதோர் மகிழ்ச்சி எய்தி மணவினை உவந்து சாற்றிக்
கொற்றவர் திருவுக் கேற்பக் குறித்துநாள் ஓலை விட்டார்
5:9

மங்கலம் பொலியச் செய்த மணவினை ஓலை ஏந்தி 5:10

மகிழ்ச்சியான் மணமீக் கூறி மங்கல வினைகள் எல்லாம்
நிகழ்ச்சியின் மைந்தர் ஈண்டி நீண்முளை சாத்தினார்கள்
5:11

மணவினைக் கமைந்த செய்கை மாதினைப் பயந்தார்
செய்ய
... ... — ... ...
பணைமுர சியம்ப வாழ்த்திப் பைம்பொனாண் காப்புச்
சேர்த்தார் 5:12

மாமறை விதில மாமன் மணத்துறைக் கடன்கள் ஆற்றித்
... ... ... ... ... ...
தேமரு தொடையன் மார்பன் திருமணக் கோலங் காண 5:13

வேலைவந் தணையு முன்னர் விதிமணக் கோலங் கொள்
வான் 5:14

நாமநீள் கலன்கள் சாத்தி நன்மணக் கோலங் கொண்டான்
5:18

அருங்கடி மணம்வந் தெய்த அன்றுதொட் டென்றும் அன்பில்
வருங்குல மறையோர் புத்தூர் மணம்வந்த புத்தூ ராமால்
5:23

நிறைகுட தூபதீப நெருங்குபா லிகைகள் ஏந்தி
நறைமலர் அறுகு சுண்ண நறும்பொரி பலவும் வீச

உறைமலி கலவைச் சாந்தின் உறுபுனல் தெளித்து வீதி
மறையவர் மடவார் வள்ளல் மணமெதிர் கொள்ள
வந்தார் 5:24

மண்களி கூர வந்த மணங்கண்டு வாழ்ந்தோம் என்பார் 5:25

வருமணக் கோலத் தெங்கள் வள்ளலார் தெள்ளும் வாசத்
திருமணப் பந்தர் முன்பு 5:27

வந்துதிரு மாமறை மணத்தொழில் தொடங்கும் 5:33

மன்றல்மனை மங்கல மடங்கலனை யானும்
.. ... ... வதுவை செய்யேன் 5:36

திருவா ரூர்வாழ் பெருமான் அடிகள்
அன்றங் கவர்மன் றலைநீர் செயுமென்
றடியா ரறியும் படியால் அருளி 5:178

அன்னந் நடையாள் பரவைக் கணிய
தாரூ ரன்பான் மணமென் றருள 5:179

தாமக் குழலாள் பரவை வதுவை
தகுநீர் மையினா னிகழச் செய்தார் 5:180

கோதின்மங் கலநூல் தாலி 11:9

தாலியைக் கலயர் ஈந்தார் 11:12

மறுவில் குலக் கொழுந்தினுக்கு மணப்பருவம்
வந்தனைய 12:15

பெருமகற்கு மணம்பேச வந்தணைந்தார் பெரு
முதியோர் 12:16

சிந்தைமகிழ் வுறவுரைத்து மணநேர்ந்து செலவிட்டார் 12:17

மன்றல்வினை மங்கலநாண் மதிநூல்வல் லவர்
வகுத்தார் 12:18

கொங்கலர்தண் பொழின்மூதூர் வதுவைமுகங்
கோடித்தார் 12:19

வள்ளலார் மணமல்லூர் மருங்கணையா முன் 12:26

பெற்றதொரு பெண்கொடிதன் வதுவையென 12:27

வண்டுவார் குழற்கொடியைக் கைப்பிடிக்க மணக்கோலங்
கண்டவர்கள் கண்களிப்ப 12:34

புனைந்தமலர்க் குழல்பெற்ற பூங்கொடியை மணம்புணர்ந்து
தனம்பொழிந்து பெருவதுவை உலகெலாந் தலை
சிறப்ப 12:36

ஒருமகள் கூந்தல் தன்னைவதுவைநாள் ஒருவர்க் கீந்த 12:37

அந்நாளில் திலகவதி யாருக்காண் டாறிரண்டின் 21:22

காண்தகைய பெருவனப்பில் கலிப்பகையார் எனும்பெயரார்
பூண்டகொடைப் புகழனார் பாற்பொருவின் மகட்கொள்ள
வேண்டியெழுங் காதலினான் மேலோரைச் செல
விட்டார் 21:23

அணங்கனைய திலகவதி யார்தம்மை யாங்கவர்க்கு
மணம்பேசி வந்தவரும் வந்தபடி அறிவிப்பக்
குணம்பேசிக் குலம்பேசிக் கோதில்சீர்ப் புகழனார்
பணங்கொளர வகலல்குற் பைந்தொடியை மணநேர்ந்
தார் 21:24

கன்னிதிருத் தாதையார் மணமிசைவு கலிப்பகையார்
முன்னணைந்தார் அறிவிப்ப வதுவைவினை முடிப்பதன்
முன் 21:25

அம்பொன் மணிநூல் தாங்காது
அனைத்துயிர்க்கும் அருள் தாங்கி 21:34

இல்லிகவாப் பருவத்தில் இவர்கள்மர பினுக்கேற்குந்
தொல்குலத்து வணிகர்மகட் பேசுதற்குத் தொடங்கு
வார் 24:6

தேடவருந் திருமரபில் சேயிழையை மகட்பேச
மாடமலி காரைக்கால் வளநகரில் வரவிட்டார் 24:7

வந்தமூ தறிவோர்கள் மணங்குறித்தம் மனைபுகுந்து
தந்தையாந் தனதத்தன் தனைநேர்ந்து நீபயந்த
பைந்தொடியை நிதிபதிமைந் தன்பரம தத்தனுக்கு
முந்தைமர பினுக்கேற்கு முறைமைமணம் புரிகென்றார் 24:8

சுற்றமுடன் களிகூர்ந்து வதுவைவினைத் தொழில்
பூண்டான் 24:9

மணமிசைந்த நாளோலை செலவிட்டு மங்கலநாள்
அணையவது வைத்தொழில்க ளானவெலா மமைவித்தே
இணர்அலங்கன் மைந்தனையு மணவணியின் எழில்விளக்கிப்
பணைமுரசம் எழுந்தார்ப்பக் காரைக்கால் பதிபுகுந்
தார் 24:10

அளிமிடைதார்த் தனதத்தன் அணிமாடத் துள்புகுந்து
தெளிதருநூல் விதிவழியே செயல்முறைமை செய்தமைத்துத்
தளிரடிமென் னகைமயிலைத் தாதவிழ்தார்க் காளைக்குக்
களிமகிழ்சுற் றம்போற்றக் கலியாணஞ் செய்தார்கள் 24:11

மங்கலமா மணவினைகள் முடித்து 24 : 12

செப்பருங் கன்னி தன்னைத் திருமலி வதுவை செய்தான்
24 : 35

பெறலருந் திருவினாளைப் பெருமணம் புணர்ந்து 24 : 36

சிந்தையில் அச்சம் எய்திச் செழுமணம் பின்பு செய்த 24:44

மணம்புணரும் பெருவாழ்வு வகுத்து விட்டார் 28:483

பாண்டிமா தேவியார் தமது பொற்பில்
பயிலுநெடு மங்கலநாண் பாது காத்தும் 28:705

திருவளர்ஞா னத்தலைவர் திருமணஞ்செய் தருளுதற்குப்
பருவமிது 28:1155

... ... ... வேள்விபல புரிவதற்கோர் கன்னிதனை
வேட்டருள வேண்டும் என விண்ணப்பஞ் செய்தார்கள்
28:1156

வருமுறையால் அறுதொழிலின் வைதிகமா நெறியொழுகுந்
திருமணஞ்செய் தருளுதற்குத் திருவுள்ளஞ் செய்யுமென
28:1158

திருஞான சம்பந்தர் சீர்பெருக மணம்புணரும்
பெருவாழ்வு திருத்தொண்டர் மறையவர்கள் மிகப்பேண

வருவாரும் பெருஞ்சுற்ற மகிழ்சிறப்ப, மகட்பேசத்
தருவார்தண் பணைநல்லூர் சார்கின்றார் தாதையார்
28:1162

ஊனமில் சீ லத்தும்பான் மகட்பேசி வந்ததென 28:1166

சீருடைய பிள்ளையார்க் கவர்நேர்ந்த படிசெப்பிப்
பார்குலவுந் திருமணத்தின் பான்மையினைத் தொடங்குவார்
28:1168

திருமணஞ்செய் கலியாணத் திருநாளுந் திகழ்சிறப்பின்
மருவியவோ ரையுங்கணித மங்கலநூ லவர்வகுப்பப்
பெருகுமண நாளோலை பெருஞ்சிறப்பி னுடன்போக்கி
அருள்புரிந்த நன்னாளில் அணிமுளைப்பா லிகைவிதைத்
தார் 28:1169

பொருந்துதிரு நாளோலை பொருவிறந்தார் கொண்ட
ணையத்
திருந்துபுகழ் நம்பாண்டார் நம்பிசிறப் பெதிர்கொண்டு
வருந்தவத்தான் மகட்கொடுப்பார் வதுவைவினை
தொடங்குவார்28:1171

மன்னுபெருஞ் சுற்றத்தார் எல்வாரும் வந்தீண்டி
நன்னிலைமைத் திருநாளுக் கெழுநாளா நன்னாளிற்
பன்மணிமங் கலமுரசம் பல்லியங்கள் நிறைந்தார்ப்பப்
பொன்மணிப்பா லிகைமீது புனிதமுளை பூரித்தார் 28:1172

மன்றல்வினைத் திருமுளைநாள் தொடங்கிவரு நாளெல்லாம்
... ... ... ... ... ...
துன்றுசுடர்த் தாமங்கள் தூபங்கள் துதைவித்தார் 28:1175

மங்கலநீள் மணவினைநாள் கேட்டுமிக மகிழ்வெய்தி 28:1176

மாமறைநூல் விதிச்சடங்கின் வகுத்தமுறை நெறிமரபின்
தூமணநல் லுபகரணஞ் சமைப்பவர்தந் தொழில்துவன்றத்
... ... ... ... ... ...
பூமருவு பொற்கலசப் புண்ணியநீர் பொலிவெய்த 28:1179

மனைவளரு மருகெல்லா மணவணிசெய் மறைமூதூர்28:1181

மாறி லாநிறை வளந்தரு புகலியின் மணமீக்
கூறு நாளின்முன் னாளினில் வேதியர் குழாமும்

நீறு சேர்திருத் தொண்டரு நிகரிலா தவருக்
காறு சூடினார் அருட்டிருக் காப்புநாண் அணிவார் 28:1182

மாதர் மைந்தர்பொற் காப்புநாண் நகர்வலஞ் செய்தார்
28:1182

பார்வழிப்பட வருமிரு வினைகளின் பந்தச்
சார்பொ ழிப்பவர் திருக்கையிற் காப்புநாண் சாத்த 28:1187

கண்ட மாந்தர்கள் கடிமணங் காணவந் தணைவார் 28:1188

அஞ்சி றைச்சுரும் பறைபொழிற் சண்பையாண டகையார்
தஞ்சி வத்திரு மணஞ்செயத் தவஞ்செய்நாள் என்று 28:1190

பரம்பு தம்வயின் எங்கணு முள்ளபல் வளங்கள்
நிரம்ப முன்கொணர்ந் தெண்டிசை யவர்நெருங் குதலால்
தாங்க டந்தவர் தந்திருக் கல்லியா ணத்தின்
வரம்பி றன்பயன் காட்டுவ தொத்தது வையம் 28:1191

நங்கள் வாழ்வென வருந்திரு ஞானசம் பந்தர்
மங்க லத்திரு மணவெழுச் சியின்முழுக்கு 28:1192

அளக்க ரேழுமொன் றாமெனும் பெருமையெவ் வுலகும்
விளக்கு மாமண விழாவுடன் விரைந்துசெல் வனபோல்
துளக்கில் வேதியர் ஆகுதி தொடங்கிடா முன்னம்
வளர்க்கும் வேதியில் வலஞ்சுழித் தெழுந்தது வன்னி 28:1193

சிந்தை தூயவன் பர்களுடன் திருமணம் போத
மந்த சாரியின் மணங்கொணர்ந் தெழுந்தது மருத்து 28:1194
(மருத்து-வாயு)

மண்டு மெய்த்திரு மணவெழுச் சியினணி வாய்ப்பக்
கொண்ட வெண்ணிறக் குருஉச்சுடர்க் கொண்டல்க
ளென்னும்
வெண்து கிற்கொடி நிரைத்தது போன்றது விசும்பு 28:1195

காலை செய்வினை முற்றிய கவுணியர் பெருமான்
மூலமாகிய தோணிமேன் முதல்வரை வணங்கிச்
சீல மார்திரு வருளினான் மணத்தின்மேற் செல்வார் 28:1196

சங்கொடு தாரை சின்னந் த ப்பெருங் ாளம் தாளம்
வங்கிய மேனை மற்று மலர்துளைக் கருவி யெல்லாம்
பொங்கிய ஒலியின் ஓங்கிப் பூசுரர் வேத கீதம்
எங்கனும் எழுந்து மல்கத் திருமண மெழுந்த தன்றே 28:1199

விஞ்சையர் இயக்கர் சித்தர் கின்னரர் மிடை ந்த தேவர்
மஞ்சுரை விசும்பின் மீது மணவணி காணச் சென்றார் 28:1204

அற்புத நிகழச்சி எய்த வனை தலான் மணமேற் செல்லும்
பொற்பமை மணத்தின் சாயை போன்றுமுன் பொலியச்
செல்ல 28:1205

பெருமணக் கோயில் உள்ளார் மங்கலம் பெருகும் ஆற்றல்
வருமணத் திறத்தின் முன்னர் வழியெதிர் கொள்ளச் சென்று
திருமணம் புணர வெய்துஞ் சிரபுரச் செம்ம லார்தாம்
இருண்மறைந் திலங்கு கண்டத் திறைவர்தங் கோயில் புக்கார்
28:1207

காதன்மெய் யருண்முன் பெற்றுக் கவுணியர் தலைவர் போந்து
வேதியர் 'வதுவைக் கோலம் புனைந்திட வேண்டும்' என்ன
பூதநா யகர்தங் கோயிற் புறத்தொரு மடத்திற் புக்கார்
28:1208

சீரணி தெருவி னூடு திருமணஞ் செல்ல 28:1220

அண்ணலார் வதுவை செய்ய அலங்கரித் தணையப் பெற்ற
புண்ணிய மறையோர் மாட மங்கலம் பொழிந்து பொங்க
28:1221

முற்றுமெய்ஞ் ஞானம்பெற்ற மூர்த்தியார் செங்கை பற்ற
கற்பகப் பூங்கொம் பன்னார் தம்மையுங் காப்புச் சேர்த்துப்
பொற்புறு சடங்கு முன்னர்ப் பரிவிடன் செய்த வேலை
28:1222

மாமறை மைந்தர் எல்லா மணத்தெதிர் சென்று மன்னும்
... ... ... ... ...
தாமரை மலரோன் போல்வார் அரசிலை தருப்பை தோய்ந்த
காமர்பொற் கலச நன்னீர் இருக்குடன் கலந்து வீச, 28:1224

திருமகட் கொடுக்கப் பெற்ற செழுமறை முனிவர் தாமும்
அருமையான் முன்செய் மெய்ம்மை யருந்தவ மனைவி யாரும்
பெருமகிழ்ச் சியினாற் பாதம் விளக்குவார் பிள்ளை யார்முன்
உரிமையால் வெண்பால் தூநீ ருடனெடுத் தேந்தி வந்தார் 28:1232

பெருகொளி ஞான முண்ட பிள்ளையார் மலர்க்கை தன்னில்
மருவுமங் கலநீர் வாசக் கரகமுன் னேந்தி வார்ப்பார்
தருமுறைக் கோத்தி ரத்தின் தங்குலஞ் செப்பி 'யென்றான்
அருநிதிப் பாவை யாரைப் பிள்ளையார்க் களித்தே'
என்றார் 2 :1235

நற்றவக் கன்னி யார்கை ஞானசம் பந்தர் செங்கை
பற்றுதற் குரிய பண்பிற் பழுதினற் பொழுது நண்ணப்
பெற்றவ ருடன்பி றந்தார், பெருமணப் பிணைய னாரைச்
சுற்றமுன் சூழ்ந்து போற்றக் கொண்டுமுன் றுன்னி
னார்கள் 28:1236

கடிசேர் மணமும் இனிநிகழும்
கால மென்னக் 29:210

கந்த மாலைச் சங்கிலியார்
தம்மைக் காதன் மணம் புணர
வந்த பருவ மாதலால் 29:224

முதிரா முலையார் தம்மைமணம்
புணர்க்க வேண்டி 29:234

இன்றும் இவளை மணம் புணர்க்க
என்று நின்றீர் எனப்போற்றி 29:236

சாருந் தவத்துச் சங்கிலிகேள்
சால வென்பால் அன்புடையான்
... ... நீயவனை
மணத்தால் அணைவாய் மகிழ்ந்தென்றார் 29:239

தம்பி ரானே யருள்தலைமேற்
கொண்டேன் தக்க விதிமணத்தால்
நம்பி யாரூ ரருக் கென்னை
நல்கி யருளும் 29:241

தூயமன மகிழ்ந்திருந்த தோழனார் பாலணைந்து
நீயவளை மணம்புணரு நிலையுரைத்தோம் 29:244

... ... நீயவளை மணம்புணர்தற்கு 29:245

பொன்றிகழ்பூண் வன்றொண்டர் புரிந்தவினை முடித்தருள
நின்றபுகழ்த் திருவொற்றி யூர்நிலவு தொண்டருக்கு
மன்றல்வினை செய்வதற்கு மனங்கொள்ள வுணர்த்துவார்
29:264

நம்பியா ரூரனுக்கு நங்கைசங் கிலிதன்னை
இம்பர்ஞா லத்திடை நம் மேவலினால் மணவினைசெய்
தும்பர்வா ழுலகறிய வளிப்பீரென் றுணர்த்துதலும் 29:265

எண்ணிறைந்த திருத்தொண்டர் எழிற்பதியோர் உடனீண்டி
உண்ணிறைந்த மகிழ்ச்சியுடன் உம்பர்பூ மழைபொழியக்
கண்ணிறைந்த பெருஞ்சிறப்பிற் கலியாணஞ் செய்தளித்தார்
29:266

வண்டமர் பூங்குழலாரை மணம்புணர்ந்த வன்றொண்டர்
29:267

கம்பராமாயணம்

(பால காண்டம்)

குயிலினம் வதுவை செய்ய 2:14
பொருந்திய மகளி ரோடு

.. வதுவையிற் பொருந்து வாரும் 2:15

நிலமகள் முகமோ திலதமோ கண்ணோ நிறைநெடு
மங்கலநாணோ 3:2

வடித்தடங் கண்ணீர் என்னை மணத்திரென் றுரைப்ப
வெந்தை
அடித்தலத் துரைத்துநீரே டளித்திடின் அணைதும் 8:9

வரம்பில்பே ரழகினாளை மணஞ்செய்வான் வருகின்றான்
10:2

(பலதார மணத்திற்குச் சான்று)

வளைபயின் முன்கையோர் மயில னாட்குத்தன்
இளையவள் பெயரினைக் கொழுநன் ஈதலும் 17:29

மானணி நோக்கி னார்தம் மங்கலக் கழுத்துக் கெல்லாம்
தானணி யென்ற போது தனக்கணி யாது மாதோ 20:7

வல்லிபொரு சிற்றிடை மடந்தைமண நாளாம்
எல்லையில் நலத்தபகல் என்று 20:40

தேனமர் குழலாள்தன் திருமண வினைநாளைப்
பூநகு மணிவாசம் புனைநகர் அணிவீரென்று
ஆனையின் மிசை ஆனை அணிமுற சறைவித்தான் 21:19

எஞ்சலில் மணநாளைப் புணர்குவர் 21:21

கன்னலின் மணவோலைக் கடிகைகள் தெரிவார் 21:31

மண்ணுறு திருநாளே ஒத்ததம் மணநாளே 21:38

நிரைவளை மணவினை நிரப்பு மண்டபம் 21:39

மன்றலங் கோதையாண் மாலை சூட்டிய 21:81

மலிதரு மணம்படு திருவை 21:81

(திருமணச் சடங்குகள்)

தண்டுலம் விரித்தனன் தருப்பை சாத்தினன்
மண்டலம் விதிமுறை வகுத்து மென்மலர்
கொண்டவை சொரிந்தெரி குழும மூட்டினன்
பண்டுள மறைநெறி பரவிச் செய்தனன் 21:85

மன்றலின் வந்து மணத்தவி சேறி 21:86

வெய்ய கனற்றலை வீரனு மந்நாள்
மையறு மந்திர முற்றும் வழங்கா
நெய்யமை ஆவுதி யாவையும் நேர்ந்தான்
தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான் 21:90
... ... ... ... வேள்வி

தொடங்கிய வெங்கனல் சூழ்வரு போதின் 21:91

வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம்புரி நூலவர் செய்பொருண் முற்றி
இலங்கொளி யம்மி மிதித்தெதிர் நின்ற
கலங்கலில் கற்பின் அருந்ததி கண்டாள் 21:92

எண்ணில கோடிபொன் எல்லையில் கோடி
வண்ண வருங்கல மங்கையர் வெள்ளம்
கண்ணக னாடொடு காசுயர் தூசும்
பெண்ணி னணங்கனை யாள்பெறு கென்றார் 21:98

பங்குனி உத்தர மான பகற்போது
அங்க ணிருக்கினி லாயிர நாமச்
சிங்க மணத்தொழில் செய்த திறத்தான்
மங்கல வங்கி வசிட்டன் வளர்த்தான் 21:100

மெய்ந்நிரை மூவரை மூவரும் வேட்டார் 21:102

(அயோத்தியா காண்டம்)

கழுத்தின் நாண்உன் மகற்குக் காப்பு நாணாம் என்றான் 4:49

மாதர் அருங்கலமு மங்கலமும் 4:96

(ஆரணிய காண்டம்)

சுந்தரி! மரபிற்கு ஒத்த தொன்மையின் துணிவிற்று அன்றால்
அந்தணர் பாவைநீ; யான் அரசரில் வந்தேன் என்றான் 5:49

வருத்தம் நீங்கு அரக்கர் தம்மில்
 மானுடர் மணத்தல், நங்கை!
பொருத்தம் அன்று 5:51

காந்தர்ப்பம் என்பது உண்டாற்
 காதலிற் கலந்த சிந்தை
மாந்தர்க்கு மடந்தை மார்க்கு
 மறைகளே வருத்த கூட்டம் 5:54

யாளியி னைப்பல தாலி யிசைத்தாள் 10;48

(கிட்கிந்தா காண்டம்)

மணமு மில்லை மறைநெறி வந்தன
குணமு மில்லைக் குலமுதற் கொத்தன 7:105

மங்கல வணியை நீக்கி மணியணி துறந்து வாசக்
கொங்கலர் கோதை மாற்றி 11:52

(சுந்தரகண்டம்)

கோவையுங் குழையு மின்னக் கொண்டலின் முரச
 மார்ப்பத்
தேவர்வந் தாசி கூற முனிவர்சோ பனங்கள் செப்பப்

பாவையர் குழாங்கள் சூழப் பாட்டொடு வான நாட்டுப்
பூவையர் பலாண்டு கூறப் புதுமணம் புணர்கின் றாரை]
2:120

மங்கையர் மங்கலத் தாலி மற்றையோர்
அங்கையின் வாங்கினர் எவரு மின்றியே
கொங்கையின் வீழ்ந்தன 3:48

மற்றைநல் லணிகள் காணுன் மங்கலங் காத்த மன்னோ
5:35

அற்ற நாணினர் ஆயினர் 6:16

தாலியம் பெருமலை தயங்கக் காண்டியால் 6:55

இவன்சிரத் திருந்தலால் திரு வாங்கலம் 13:5

பெண்ணிற் கியைபு மங்கலத்திற் பிணித்த கயிறே
யிடை பிழைத்த 13:120

(யுத்த காண்டம்)

... ... சனகன் தன்னைக் கட்டினன் கொணர்ந்து காட்ட
மணத்தொழில் புரியுமன்றே 16:3

மங்கல நீங்கி னாரை யாருயிர் வாங்கி னார 22:29

மறத்தைப் பூண்டுவெம் பாவத்தை மணம்புணர் மணாளர்
30:6

இயக்கர் தம்தேவிமார் மேலினித் தவிர்கிற்பர்கொல்
தம் தாலியைத் தொடல் என்னுமற் றோர்தலை 28:21

மணிக்கொ டுங்குழை வானவர் தானவர் மகளிர்
துணுக்கம் எய்தினர் மங்கல நாண்களைத் தொட்டார் 34:29

நளவெண்பா

குலவேந்தன் சிந்தித்தான் கோவேந்தர் தம்மை
மலர்வேய்ந்து கொள்ளும் மணம் 62

மங்கை சுயம்வரநாள் ஏழென்று வார்முரசம்
எங்கும் அறைகென்று இயம்பினான் 63

கோதை சுயம்வரநாள் கொற்றவனுக்கு குற்றுரைப்ப
ஏதமிலாக் காட்சியர்வந் தெய்தினார் 72

வீமன் மடந்தை மணத்தின் விரைதொடுத்த
தாமம் புனைவான் சுயம்வரத்து-மாமன்னர்
போயினார் என்றான் 78

மால்வரையை வச்சிரத்தால் ஈர்ந்தானும் வானவரும்
கோல்வளைதன் மாலை குறித்தெழுந்தார் 80

... ... ... சுயம்வரந்தான்
நின்பொருட்டால் என்று நினைகென்றாள் நீள்குடையான்
தன்பொருட்டால நைவாள் தளர்ந்து 95

மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் 133

மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்
கன்னியான் ஆகிற் கடிமாலை — அன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட அருளென்றாள் 159

கண்ணகன் ஞாலம் களிகூர — மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன் 161

மன்னவரில் வைவேல் நளனே மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டான் 166

விண்ணரசர் நிற்க வெறித்தேன் மணமாலை
மண்ணரசர்க் கீந்த மடமாது 167

வெங்கதிரோன் தானும் விதர்ப்பன் திருமடந்தை
மங்கலநாள் காண வருவான்போல்...ஏறினார்தேர் 170

கடிமொழிந்த நாளிற் கடிமணமும் செய்தார்
அணிமொழிக்கும் அண்ண லவர்க்கும் 172

மீண்டோர் சுயம்வரத்தை வீமன் திருமடந்தை
பூண்டாள் ... ... ... ... ... 369

எங்கோன் மகளுக் கிரண்டாஞ் சுயம்வரமென்று
அங்கோர் முரசம் அறைவித்தான் 370

வேத மொழிவாணன் மீண்டும் சுயம்வரத்தைக்
காதலித்தாள் வீமன்றன் காதலியென்று ஓதினான் 371

அரிச்சந்திர வெண்பா

நாளை யறியலாங் கண்டாய் நலஞ்சிறந்த
காளைதிரு மங்கலநாண் கண்டக்கால் — கேளாத
பண்ணிசைத்து வண்டிருக்கும் பைங்குழலாய்
புண்ணியத்தில் உள்ள பொருள் 14

... ... ... மங்கலநாண்
காட்டும் அரசனுக்கே என்றாவி கட்டுரைப்பக்
கேட்டு மகிழ்ந்தாள் கிளி 20

சங்கரனார் தந்த தருணி யுடன்பிறந்த
மங்கலநாண் கண்டான் 26

வரபதிதான் கண்டன்றி மண்டலத்தோர் காணாத்
தரமுடைய மங்கலநாண் தன்னைப் — புரிகுழலாள்
காட்டும் படிமக் கலந்தனிலே கண்டறிந்தாள் 27

மங்கலநாண் கண்ட இருவர்நிலைமையும் 28

விரத ச(மிதை)களும் முன்கொணர்ந்து
விப்பிரசனம் மிகக்கூடி

விவாகயஞ்ஞம் (எங்ஙனம்) செய்தாரோவெனில்
மாதும் அரசும் வலமுமிட முஞ்சிறப்ப
வேதநெறி யெல்லாம் மிகச்செய்து — போதில்
அருந்ததியுங் காட்டி அருமறைநூல் தன்னால்
இருந்துதியும் இட்டார் எடுத்து 31

அக்கினிதேவனை மிகவளர்த்து
ஆகுதிகள் பலகொடுத்துப்
பத்தினியுடன் பர்த்தாவுக்குப்
பாணிக்கிறாணஞ் செய்துகொடுத்துச்
சத்த தானம் மிகநடத்தித்
தாரகையை மிகக்காட்டி
உத்தம மான மந்திரத்தை
ஒளிபெறவே கொடுத்தார்
மகாசனங்கள் என்றவாறு 32

## வில்லிபாரதம்

அருமறை முறையினால் அங்கி சான்றெனத்
திருமணம் புரிந்துளந் திகழ வைகினான் 1-1-46

... ... நின்னுழை வதுவை
உலகுடை நாயகன் நயந்தான் 1-1-93

இன்று நற்றினம் என்றிளந் தோகையை
மன்றல் எய்தினன் மாநிலம் வாழ்த்தவே 1-1-107

அம்பி கைக்குமம் பாலிகைக் கும்பதி
எம்பி யேஎழி லாவென்று இசைவுறத்
தம்பி தன்னைத் தனஞ்செயன் தன்னெதிர்
வம்பி னான்மிகு மாமணஞ் சேர்த்தினான் 1-1-128

... ... ... காந்தார
பதிய ளித்தமெய்க் கன்னியைத் தருகபூ
பதிக்கென மணநேர்ந்தான் 1-2-23

அருங்கடி விளைத்திட்டார் ... 1-2-24

கன்னிற் பயந்த கதிர்வெம்முலைக் கன்னி தன்னை
முன்னர்ப் பயந்தோன் முகவோலை உவகை யோடு
மன்னர்க் கெழுத மடப்பாவை வரிக்கு மென்று
சென்னற் படைவேல் முடிமன்னவர் சென்று சேர்ந்தார்
1-2-43

பருவஞ் செய்பைம் பொற்கொடியன் னவள்பாண்டு
வென்னும்
நிருபன் தனக்கே மணங்கூர் பெருநேய முற்றாள் 1-2-44

மானே யனைய விழியாளை வதுவை செய்தான் 1-2-45

தான்வரித் தவற்கே யெய்த வுரியளென் தனயை யென்று
கான்வரிச் சுரும்புண் மாலைக் காவலர்க் கோலை போக்க
மான்வரிக் கண்ணிக் கேற்ற வதுவைநாண் மலர்ப்பூ
வொன்றைத்
தேன்வரித் தென்ன வந்து திரண்டது குமரர்சேனை 1-5-3

மாக்குர லளக வல்லி வதுவையின் அழகு காண 1-5-14

தாஞ்சாரற் கரியதனு வளைத்தான் என்று
தரணிபர்தம் முகங்கருகத் தனுவி னோடும்
பூஞ்சாரன் மணிநீல கிரிபோல் நின்ற
பூசுரனை யிவனவனே போன்மென் றெண்ணிப்
பாஞ்சாலர் பதிகன்னி யிருதன் செங்கட்
பங்கயத்தாற் பாங்காகப் பரிந்து நோக்கித்
தேஞ்சார நறுங்கழுநீர்ச் செய்ய தாமம்
செய மணிகா லருவியேனச் சேர்த்தி னாளே 1-5-57

தெம்மா தர்முற் பூண்கவர் மன்னன் 1-5-87

(முற்பூண்–தாலி)

கேள்விக்கு ஒருவன் எனும்தௌ மியன்கீ தவேத
வேள்விக்கு வேண்டு வனயாவும் விதியி னீட்டி
மூள்வித் தசெந்தீக் கரியாக முரசு யர்த்த
தாள்வித் தகற்கு வரமான சடங்கு செய்தான் 1-5-93

பன்மங் கலமும் உடன்வைகிய பண்பி னாளை
நன்மங் கலப்பூண் டுகிலோடு நயந்து சாத்தித்
தன்மங் கலந்த மனத்தோனை யத் தைய லோடும்
தென்மங் கலஞ்செய் சுடர்த்தீவலஞ் செய்வித் தாரே I-5-94

அங்கிப் புறத்துத் திருக்காப்பணி யங்கை யேந்திச்
செங்கட் கரிய குழலாள் பொரி சிந்தி னாளே 1-5-95

மைவா ரளக வடமீன்கிர் கற்பி னாளை
அவ்வா றுமற்றை யொருநால்வரு மன்று வேட்டார் 1-5-96

மாரன் கரும்பு வளரும்படி வார்த்த நீரால்
ஈரம் புலராக் கரத்தோருக்கி யாக சேனன்
தேரும் பரியுங் களிறுந்திரள் சேனை யாவும்
பாருந் தனமும் உமதென்று பலவும் ஈந்தான் 1-5-97

ஓடுங்கயல் விழியாரில்உ லூபிபெயர் அவளோடு
ஆடும்புன விடைநின்றவன் அநுராகமி குந்தே
நாடும்பில வழியேயவள் பின்சென்றுந லத்தால்
நீடுங்கொடி மணமெய்தினன் முகில்போலு நிறத்தான் 1-7-8

செந்திருவை யனையாளுந் திருமாலை
யனையானுஞ் சிந்தை ஒன்றாய்
கந்தருவ முறைமையினாற் கடவுளர்க்குங்
கிடையாத காமந் துய்த்தார் 1-7-29

தெண்டிரைகை தொழுகழலோன் திருமகட்கு
வதுவையென ... 1-7-39

... ... ... சதுர்மறையோர்
சடங்கி யற்றத் தழல்சான் றாகத்
துந்துபியின் குலமுழங்கச் சுரிசங்கின்
குழாந்தழங்கத் துலங்க வேட்டார் 1-7-41

தொடங்கி நாதவெம் முரசுடன் சுரிமுகந் தழங்கச்
சடங்கி னாலுயர் ஆகுதித் தழலவன் சான்றா
விடங்கி னான்மிகு விசயனக் கன்னியை வேட்டான் 1-7-77

பின்போய் இனிய மொழியாயிரம் பேசி மன்றற்கு
அன்போ டுதவும் உபகார மனைத்தும் ஈந்தார் 1-7-84

வடமது ரையினுந் தென்மது ரையினும்
மதிகுல நிருபர்கன் னியரைக்
கடிமணம் புரிந்தோன் 1-8-73

## திருப்புகழ்

... ... ... இந்திரன்
மகளைமண மேவி வீறு செந்திலில்
உரியஅடி யேனை யாள வந்தருள் தம்பிரானே 80

தினை வனங்கிளி காத்த சவுந்தரி
அருகு சென்றடி போற்றிமணஞ் செய்து
செகம றிந்திட வாழ்க்கை புரிந்திடும்
... ... ... தினைகாவல்
மயிலை மணந்த அயிலவ 341

ஒருசிறுவன் மணமதுசெய் போதில் 531

உமையை மணந்த நாதர் 535

வரைவில் அரிவையர் (பொதுமகளிர்) 567

அரிமகள் மணங்கொ டேகி 574

உவண நிரை கொண்டிடுஞ் செங்காவ ணத்திடையில்
உறவு கொள வந்துதம் பெண்காறை கட்டுவன
(பூதவேதாள வகுப்பு-47)

ஒன்றித் திண்குரல் கூகை பாம்பொடு
வென்றிச் செந்தலைத் தாலி பூண்பண (,, : 54)

மாதரணி தாலி நூல் (சித்து வகுப்பு 46)

## திருவிளையாடற்புராணம்

(பரஞ்சோதி முனிவர்)

விரைசெய்பூங் கோதை மாதை
விடையவன் மணந்து 5:1

அருங்கடி மன்றல் 5:3

கடிமணப் பேறு 5:4

கொன்றை அம்சடைக் குழகனே
நின்மணக் குழகன் 5:44

தொன்று தொட்டநான் மறைஉரை
வழி,வரு சோமவா ரத்துஒரை
நன்று தொட்டநாள் மணஞ்செய வருதும் 5:45

ஆக,மேல் புதுமணத் திறம்தீட்டி
எங்கும் ஓலைஉய்த்து, அமைச்சர் மங்
கலவினைக்கு இயைவன அமைக்கின்றார்
அங்கண் மாநகர் எங்கணும்
கடிமுரசு ஆனைமேல் அறைவித்தார் 5:47

கன்னிதன் மணமுரசு அறைதலும் 5:48

மன்றல் மகிழ்ச்சி மயக்கினால் 5:49

கடிமணம் எய்தும் களிப்பினால்
இன்னிசை யாழொடு பாடுவார் 5:57

துன்னினர், சோபனம் வினவுவார்;
தோகைதன் மணவணி நோக்குவார் 5:58

இணையிலி மணமகன், மணவினைக்
கன்னியும், அனையவள் என்னின்
... ... ... ...
முன்இறை மகள்தமர் மணவணி
மண்டப வினைசெயும் முறை 5:61

திருமணத் திருமுகம் வரவேற்று 5:73

கடைக டந்தவன் திருமணம் 5:78

எங்கள் நாயகன் திருமணச்
சோபனம் இயம்பினார் 5:80

அண்டம் காத்த கண்டன்ஓர் மண்டபத்து
இடைபுக்குக் கடிமணக் கவின்கொள்வான் 5:95

மங்கையை மணப்பான் என்னோ
வள்ளலும் நோற்றான்
... ... ... ... ... ...
இங்குஇவர் வதுவை காண்பான்
என்னநாம் நோற்றோம்? என்பார் 5:120

அணிங்கிளை வதுவை செய்து
... ... ... ...
மருமகனார் இயங்கள் ஆர்ப்ப,
வதுவைமண் டபத்தைச் சேர்ந்தார் 5:150

மாமணித் தவிசில் வைகி மணவினைக்கு அடுத்தஓரை
கோமகள் வதுவைக் கோலம் 5:153

சுற்றும்நான் மறைகள் ஆர்ப்ப,
தூரியம் சங்கம் ஏங்க,
கற்றநான் முகத்தோன் வேள்விச்
சடங்குநூல் கரைந்த ஆற்றால்
முற்றமங் கலநாண் சாத்தி
முழுதுலகு ஈன்றாள் செங்கை
பற்றினன் 5:185

புருடனும் பெண்ணும் ஆகி மணவினை முடித்தான் 5-186

நன்பொரி வாங்கி, செந்தீ நாமடுத்து,
... ... ... ...
முனிவர்க்குத் தக்க தானம்
இன்பு அகம் ததும்ப நல்கி
எரிவலம் முறையால் வந்து, 5:187

மங்கலம் புனைந்த செம்பொன் அம்மிமேல், 'மணாட்டு பாத
பங்கய மலரைக் கையால் பரிபுரம் சிலம்பப் பற்றி, 5:188

மதிநுதல் மங்கையோடு மணஅறை தன்னில் புக்கான் 5:189

மணஅறைத் தவிசின் நீங்கி
மன்றல்மண் டபத்தில் போந்து, 5:192

பொய்த்த மருங்குல் திருமகளை
பொன்அ னாரோடு இரதமிசை
வைத்து, மணம்சேர் திருவினோடு
மதுரை நோக்கி வழிக்கொண்டான் 12:7

நென்னல் எல்லை மணம்பேச நினைந்த வாறே
தென்னர் பெருமான் குமரனுக்கு உன்
திருவைந் தருதிஎன அனையான் 12:8

... ... ... மணம்நேர்ந்து நயப்ப 12;9

... ... ... ... திருமுகங்கள்
வேந்தர் யார்க்கும் விடுத்து, நகர்
விரைவு நாள்செய்து, அணிசெய்ய
மன்றல் முரசம் அறைவித்தார் 12:10

மாடம் புதுக்கி, பூகதமும்
கதலிக் காடும் மறுகுஎங்கும்
நீட நிரைத்து, பாலிகையும்
நிறைபொன் குடமும் முறை நிறுத்தி,
ஆடு கொடியும் தோரணமும்
புனைவித்து, அழகுக்கு அழகாக
கூடம் நெருங்கு நகரைமணக்
கோலம் பெருகக் கொளுத்தினார் 12:11

தென்றல் நாடன் திருமகளைத்
தேவர் பெருமான் மணம்புரிய
மன்றல் அழகால் 12:12

சங்குளறி துறைநீர் ஆடி,
தகும்கடி வனப்புக் கொள்வான் 12:44

அந்நிலை மணநீர் ஆட்டி
அருங்கலப் போர்வை போர்த்த
கன்னியைக் கொணர்ந்து நம்பி
வலவயின் கவின வைத்தார் 12:46

நங்கைதன் கையைப் பற்றி
நம்பிதன் கையில் ஏற்றி,
புங்கவர் அறிய நன்னீர்
மந்திரம் புகன்று பெய்வான் 12:47

உரவுநீர் ஞாலம் தாங்கும்
உக்கிர வருமற்கு, இன்றுஎன்
குரவுஅலர் கோதை மாதைக்
கொடுத்தனன் எனநீர் வார்த்தான் 12:48

விளைவொடு மூன்று மூதூர் மின்னுவிட் டெறியுஞ்
செம்பொன்
அளவிரு கோடி யின்ன வரும்பெறன் மகட்குச் செல்வ
வளமுற வரிசை யாக வழங்கினான் 12:52

... ... வேள்விச் செந்தீச்
சுழித்தது வலமாய்த் துள்ளி;
வார்த்தனம் மடவார் நாவின்
முளைத்தன வாழ்த்து; மன்றல்
பார்த்தனர் கண்கள் எல்லாம்
பெற்றன படைத்த பேறு 12:53

பொதியவிழ் கடப்பம் தண்தார்ப்
புயத்துஇளம் காளை அன்னான்
முதியவர் செந்தீ ஓம்ப,
இன்இயம் முழங்க, காந்தி
மதியை,மங் கலநாண் பூட்டி
வரிவளைச் செங்கை பற்றி
விதிவழி ஏனை மன்றல்
வினைஎலாம் நிரம்பச் செய்தான் 12:54

பண்நி லாவு மறைஒழுக்கம்
பயப்ப வேள்வி வினைமுடித்து 12:55

யானை மகளை மணந்துவரும் 12:58

ஒரு மனையின் மணமுளது 25:33

கடிமனை போய் 25:34

மன்றல் மகன் 25:35

முட்டியதால் மணமகனை 25:39

மணமகனே பிணமகனாய்
மணப்பறையே பிணப்பறையாய் 25:40

மறையவனை இன்னுமொரு மணமுடித்துக் கோடியென 25:41

உந்து நீர்ச்சடை யார்மண முன்னினார் 57:43

செய்தபூங் கோதை மாலைத் திருமணம் புணர்த்தினனே 57:57

அந்நிலை வதுவைக் கோலம் ஆயின மருகனாரும் 57:58

அரக்கெறி பவளச் செவ்வாய் அணங்கினை மணந்தென் பாசங்
கரக்கவெள் விடைமே னின்ற கருணையே போற்றி என்றான் 57:60

பெண்ணினை வதுவைக் கீந்த பெருந்துறைச் சேர்ப்பன் 57:62

## அரிச்சந்திர புராணம்

மன்னர்தந் தமக்கு மணஞ்செயச் சுருதி
மணமொழிந் தவர்க்கெலாங் கொடாது
முன்னமெம் பெருமான் மொழிந்தவர்க் கன்றி
முடிக்கிலேன் கடிமணம் என்னச் 2:18

அரசிளை அடிய னேனுக் கணிமணம் புணர்க்க நும்வா
யுரையுள தாயின் என்மாட்டு உயிருள தாகு மென்றான் 2:21

அல்லியங் குழலாள் தன்னை அருமணம் அடியேன் சூட்ட 2:23

போதலுஞ் செய்வோம் உங்கள் புதுமணங் காண்பே
மாயின் 2:24

மானவன் வதுவை சூட்ட மணமொழி வதற்கு நண்ணி 2:33

இருநிலத் தரசர்க் கெல்லாஞ் சுயம்வரம் ஏழு நாளென்று
உரைசெயு மென்று தூதும் ஓலையும் போக விட்டான் 2:44

திருந்திழை தனையு னக்கே திருமண முடிக்கத் தாதை
பொருந்தினன் ... ... 2:49

செந்திரு வனையாய் உன்னைத் திருமண முடிக்க வேண்டி
வந்தனர் அனேகர் 2:167

வாழி கைப்பிடி வந்துமென் னாவெனாக்
கோழி கைத்தலத் தைக்கொட்டிக் கூவிற்றே 2:95

முன்ன மன்னன் முகுர்த்தமோர் ஏழெனச்
சொன்ன நற்றினம் வந்து தொடங்கலும் 2;199

கன்னி தன்மணக் காவணத் தெய்தினாள் 2:210

செங்கயற் கண்ணினாள் திருக்க ழுத்தினில்
மங்கல நாணுறீஇ வயங்கக் கண்டனன் 2:236

கன்னியென்று எண்ணினங் கன்னி யோவலண்
முன்னரே மங்கலம் பூண்ட மொய்குழல்
இன்னமு மொருவருக் கெய்து மோவெனா
மன்னவன் மாதுலற் குரைவ ழங்கினான் 2:237

பொறுத்துமுன் மங்கலம் பூண்ட பேதையை
மறுத்திரண் டாவது மணமு டிப்பரோ 2:238

தையலாள் கழுத்தினில் தாலி உண்டெனில்
கையினாற் கண்ணுறக் காட்டு நீரென 2:240

மடந்தை மங்கலங் கண்டது 2:241

வண்டணி குழலியோ டுதித்த மங்கலங்
கண்டவர் பதியிவட்கு என்ற கட்டுரை உண்டு 2:242

புதும லர்த்துணை புணரிள வன்னமும் பெடையும்
வதுவை செய்வன ஒப்பன 2:265

வஞ்சிதிரு மணிமிடற்றில் வயங்கா நின்ற
மங்கலநாண் கண்டிறைவன் மறித்துஞ் சொல்வான் 8:41

... ... ... ... ... செம்பொன்
மங்கலநா ணுன்கழுத்தி லிருக்க வேது
மில்லைஎனச் சொல்லுவது சற்று மேலாது 8:42

... ... ... ... ... மங்கலம்
புலையன் காணவும் போதுவ தோவெனா 8:44

## அம்பிகாபதிக் கோவை

திரைவான் முழக்கின் மணிமுர சார்ப்பத் திருந்திழையார்
விரைவான் மலர்சிந்த வெண்மணல் பந்தரில் வெந்தழல் முன்
வரைவான் 304

அடுக்குந் தமருநம் அன்னையு மூரு மறிய இன்றே
கொடுக்கும் பரிசமெல் லாங்கொடுத்தார் 332

... வேங்கைத் துணர்மலை நாட துளங்குமின்போல்
வணங்கிடை மாதுன் மணம் பொருட் டாக வளையவீழ்பூங்
கணங்கமழ் சார லணங்கைப் பராநிலை கண்டருளே 336

அன்னே வதுவை யதுநம்மி லேவந் தயரவெண்ணின்
முன்னே வரைவு முடிந்தது போலும் 416

ஓங்கும் பலவுங் கதலியுஞ் சூழுமெம் ஊர்வயிற்போய்ப்
பாங்கொன் றியகுழல் வேள்விமுன் னாகப் பணிமொழியாம்
வாங்குஞ் சிலைநுதல் மங்கைக்கு மங்கல நாண்புனைந்தது
ஈங்குன் பெருந்தமர் யாவர்க்கும் நீசென்று இயம்புகவே 417

காணாது அலமரும் அன்னையும் நீசென்று காட்டுதிமின்
கோணாத கற்பினன் மங்கல நாணுமிக் கோலமுமே 430

முன்சென்ற கேண்மை முறைவழு வாமல் முதுநகர்க்கே
மன்சென்று வேட்கை மணநயந் தார்கள்தம் வாழ்
மனைக்கே 431

## பிரபுலிங்க லீலை

வாங்கு றாளழில் மங்கல நாண்ஒளி
தேங்கு பூணர சென்னச் சிறந்திட 2:21

துளங்கு சங்குடைத் தோன்றல் மணத்தணி 3:2
கன்னிதன் மணவினைக் கடனென்று உன்னியே 4:65

(பெண்கள் தம்மனம் போல் நடத்தற்குரியர் அல்லர் எனல்)
மணம்புரி வதன்முன் குரவரா ணையினும்
மணவினை முற்றிய பின்னர்
இணங்குற அருள்செய் கொழுநனா ணையினும்
இருப்பர் ... ... ... 5:79

யாகெனு மொழியான் தவறிலன் யாழோர்
பயில்மணம் அரசர்மேற் றென்பர்
ஆகலின் இவளுக் கல்லமன் தானே
அருமணத் தலைவன்
உலகெலாம் அறிய வதுவைசெய் காறும் 5:84,5

பெருந்தகை வசவ தேவன் பெருமைக்குத் தக்க வாறே
அருங்கடி மணஞ்செய் வித்தான் 9;40

## சீறாப்புராணம்

வானவர் செயல்! பூமாரி
தெரிதரச் சொரிதல்; உம்மைத்
திருமணம் முடித்தல் என்றான் 1:33:5

மருமரு பூங்குழலாட்கு முஹம்மதுக்கு
மணநாளை வகுத்துக் கூறித்
தெரிதரு சீதனப் பொருளும் இன்னதென
வகைவகையாத் தெளியச் சாற்றி 1;33:12

தெள்ளிய நன்முகூர்த்தம் முதற்றிங்களென
வகுத்துரைத்தார் செவ்வியோரே 1:33:13

புதிய பேரொளி முஹம்மதின்
மணவினைப் பொருட்டால்
பதியும் வீதியும் மாடமும்
மணம் படைத்தனவே 1:34:7

இருமுகிற் கனிகை முஹம்மது தமக்குங்
காரிகை கனங்குழை தமக்கும்
மருமலர்த் தொடையல் புனையு நிக்காஹ்
மணத்துடன் முடித்திடும் 1:34:11

முதியவர் உவந்து நீதிமுன் மார்க்க
முறைப்படி சடங்குகள் முடிப்ப
மதிவலர் குவைலித் அகமகிழ்ந்தெழுந்து
முஹம்மதின் செழுமணிக் கரத்தில்
புதுமதி வதனச் செழுங்கொடிக் கதீஜா
பொன்மலர்க் கரத்தினைச் சேர்த்திக்
கதிர்மதியுள நாள் வாழ்க என்றிசைத்துக்
கண் களித்தினிது வாழ்த்தினரே 1:34:12

**மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்**

போர்க்கோல மேதிரு மணக்கோல மானபெண்
பொன்னூசல் ஆடியருளே 98

**மதுரைக் கலம்பகம்**

மருமுகத்த நெறிக்குழலெம் மறக்கொடியை வேட்பான்
மணம்பேசி வரவிடுத்த வார்த்தை 77

**திருப்பெருந்துறைப்புராணம்**

**(திருமணக்காட்சி)**

மேனையுடன் மலையரசன் அருச்சித் தேத்தி
மிளிர்கரக நீரெடுத்தென் விரைமென் கூந்தல்
பானல்விழி யமுதினைவெண் கயிலை முக்கட்
பரம்பொருளுக் களித்தனெனப் பகர்ந்து கையால்
தானவறல் சொரிந்தனன்மங் களநாண் அய்யன்
தரித்தணங்கின் பாணிபற்றச் சாலி நோக்கி
வானமுற எழும்அழல்சூழ்ந் தோம முத்தீ
மணவாள னாயிருந்தான் மலைமின் னோடு 506

**பேரூர்ப்புராணம்**

மணஞ்செய் காதல்வைத் தார்திரு வுள்ளமே 29:1
மகதி விணையி னாய்மண நந்தமக்கு

அகில லோகத்தி னாருமிங் கண்முறப் பகர்தி 29:4
... ... மற்றெம் வதுவைக்கு

முழுத்த நாமே முழுக்கவின் செய்தும் 29:5

வதுவை மண்டப மாதி வியங்கவும் 29:6

மன்னிய வதுவைசெய் மண்ட பத்தெழில் 29:22

பாகியல்சொன் மரகதவல் லியைமணப்பத் திருவுள்ளம்
பற்றினார் 29:48

வரைவின் புதுமை 29:63

தன் துணைவி யோடும்எழில் சார்தர நினைந்தான்
மன்றலழ கெய்தியென மன்னிருவர் மாட்டும் 29:65

மரகத வல்லி தன்னை வதுவைசெய் கோல நோக்கி 29:67

... ... ... வதுவைநற் கோலங் காண்பான் 29:70

வார்தரு குழன்மென் சாயல் மரகத வல்லி மன்றல் 29:81

பிப்பில வனத்துள் வைகும் பிஞ்ஞகன் வதுவைக் கோலம்
29:84

அடுக்கலுக் கிறைவ னண்மி யவரிழை சுமக்க லாற்றா
நடுக்குமெல் லிடையின் மேனை வணங்கின னறும்பால்
வார்க்க
மடுக்குமெய் யன்பில் செம்மண் மலரடி விளக்கி நீர்பெய்
திடுக்கணெவ் வுலகு நீங்க வித்தனன் புதல்வி தன்னை
29:109

விண்ணவர் மலர்கள் சிந்த விடையவ னங்கை யேற்றுத்
தண்ணிய மலர்மே லண்ண றழன்முறை வளர்ப்பத் தாவி
புண்ணிய மலர்ந்தா லன்ன பூங்கொடி யிடற்றிற் சேர்த்து
மண்ணவர் உய்யச் செய்யு மரபெலாம் இயற்றி னானே
29:110

... ... மன்றல் காணத் திரண்டவர் தாமும் அந்நாள்
தனித்தெழும் இன்ப மன்றல் சார்ந்தவர் ஒத்து ளாரால் 29:112

கடியயர் வரைப்பு 29:113

திருமண வாளக் கோலம் 29:114

விதுவணி சடில மோலி வித்தகன் வெற்பின் மாதைப்
புதுவதி னியன்று சீர்த்த பொலங்கல மணிந்தெல் லோருங்

கதுவினர் போற்ற வாற்றுங் கடித்திறங் கேட்டோர் ஈண்டை
வதுவைமிக் கயர்ந்து முத்தி மன்றலு மயர்வ ரீற்றின் 29:115
வயிராங் கிசைப்ப மணம் விரைவின வடிவே லவன் செய்
திடும் 30:4

அன்னோ னிணைமன்றல் அயர்ந்திடுமே 30:12

தெரியிழை சுமங்குங் கோலத் தெய்வயானைக்கு மங்கை
உரிமைசெய் வேலி னாற்கு முறுமுறை மன்றல் ஈங்குப்
புரிவதற் கியைவ வெல்லாம் புரிகென அருளிச் செய்தான்
30:17

.... ... .... வியத்தகு வதுவைச் செய்தி 30:21

முன்னிய முடங்கல் ஏற்று முதிர்சுவை மன்றல் காண்பான்
30:63

இன்ன படிமங் கலவதுவைக் கியைய மணிமண் டபமாதி
மன்ன வியற்றி .... .... ... 30:64

.... .... .... மகளை நீரோடு
அரன் தனிக் குமரற்கு ஈந்தான் அருமறை முறைகள் கூறி
30:121

பாண்டிக்கோவை

.... ... கன்னியன் னாள்தன்னைப் பொன் அணிவான்
காரணி வார்முர சார்ப்பப் பிறரும் கருதி வந்தார் 167

தஞ்சைவாணன் கோவை

அன்னைக் கிளம்பினன் ஆண்டகை
.... .... .... எங்கள்
பொன்னைப் புணர்ந்து நுங்கேள் முன்னர் நீபொன்
புனைந்ததுவே 359

திருவருட்பா

அந்நாள் வந்தென்றனை யாண்டருள் செய்த
ஐயர முத ரென் னப்ப ரழகர்
பின்னா ளென் றெண்ணிப் பிதற்றாதே பெண்ணே

பேரருட் ஜோதி பெருமணஞ் செய்நாள்
இந்நாளே யென்கின்றார் என்னடியம்மா
என்கை பிடிக்கின்றார் என்னடியம்மா 5673

தனிப்பாடல்கள்

ஒருகொம்பு இருசெவி மும்மதத்து நால்வாய்க்
கரிஉரிவைக் கங்காளன் காளாய்—பரிவுடனே
கண்ணால ஓலை கடிதுஎழுத வாராயேல்
தன்ஆண்மை தீர்ப்பன் சபித்து (ஔவையார்) 20

... ... ... திருமணத்தில்
மும்மாரி பெய்யும் முதுவாரி யைமாற்றிப்
பொன்மாரி யாகப் பொழி ,, 24

திங்கள் குடையுடைச் சேரனும் சோழனும் பாண்டியனும்
மங்கைக்கு அறுகிட வந்துநின் றார்மணப் பந்தலிலே (,,)27

பொன்தாலி யோடு எவையும் போம் ... (,,) 64

நிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த
... ... சிறுவருக்கு
மணம்பேசி விரும்பித் தாலி
கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே
கிடத்துமட்டுங் கவலை தானே 436

... ... ... அம்மியின் மீதுவைக்கக்
கால் கொடுத் தாய்நின் மணவாள னுக்கு
(படிக்காசுப் புலவர்) 503

அண்டத் தமரரு மாயனும் வேதனும் அந்தணரும்
பண்டெத் தனைதவஞ்செய் தனரோ, மணப்பந்தலிலே.
துண்டப் பிறையணி சொக்கர்கைத் தாலிக்கு நீதுணிந்து
கண்டத்தை நீட்டினையே, கூடல் வாழுங் கயற்கண்ணியே
(பலபட்டடைச் சொக்கநாதப்புலவர்) 573

பன்னாள் மலர்க்குழற் பின்னாளெந் நாளும் பரிந்தனைய
நன்னாளிந் நால்வரச் சொன்னாண்மின் னாண்மண
நாளென்னவே (காளிமுத்துப் புலவர்) 621

பாரதியார் கவிதைகள்

சாத்தி ரங்கள் கிரியைகள் பூசைகள்
சகுன மந்திரத் தாலி மணியெலாம் (சுயசரிதை) 36-38

மூத்தவர் சம்மதியில் — வதுவை
முறைகள் பின்பு செய்வோம் (கண்ணம்மா என் காதலி)
16

பாரதிதாசன் பாடல்கள்

தெள்ளு தமிழன்தோள் தான் பெற்ற பங்கே
திருமணம் எனக்கென்றே ஊதாயோ சங்கே! பக்:94

இனிக்க இனிக்கநாம் திருமணம் புரிவோம்
இன்ப உலகில் கைகோத்துத் திரிவோம் பக்:99

பெருமணம் புரியாது
பிரிந்ததை உன்னிக்
கதறும் உன்னிலை
கதறினேன்
மணக்கவே என்றான் பக். 129

அன்புற்றார் வாழ்ந்த அறிவுமண முடித்தே
இன்புற் றிருந்தார்கள் நன்கு பக் 156

கல்வெட்டு, செப்பேடுகளிலிருந்து சில சான்றுகள்:—

1. வயிரச் செயல் தாலிமணி வடம் ஒன்றில் தாலிமணி
நூற்று ஐம் - No. 2 Inscription of Rajaraja See III. 7.

2. தாலிமணிவடம் ஒன்று தாலி உட்படப் பொன் நாற்
கழஞ்செய்
ஆறு மஞ்சாடியுங்குன்றி ... ... ... No. 6. ,, ; See. 1. 5.

3. மாணிக்கத்தின் தாலி ஒன்றிற் கட்டின வயிரம் எட்டும்
(தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டு)

4. இருநிலக் கிழத்தியைத் திருமணம் புணர்ந்து
(காஞ்சி ஏகாம்பரநாதர் கோயில் கல்வெட்டு)

5. திருப்பள்ளியறை நாச்சியாருக்குச் சாத்துகிற
சிறுதாலி ... ... ...
திருமங்கலநாண் க-ம் தாலி ... ... ...
திருமங்கலநாண் க தாலி கடைத்தொழிலுட்பட அ இ
மாறி பொன் கழஞ்சு

No. 211: Tirukkalar Plate of Kutottunka cota III

# திருமண முறை

(சுவடியினின்று எடுக்கப்பட்டது)

கணேசாய நம:

இருகம் படைத்தோனே எல்லோரும் கேளுமினி
இரண்டு கம்பெடுத்து எல்லோரும் கேளுமினி
தேனும் பலாச்சுளையும் தேங்கதலி மாங்கனியும்
இட்டமுடன் பொறியும் இயல்வான சர்க்கரையும்
மா......வெள்ளரிசி மருந்தும் திருமலர்
......—னே காப்பானே மெய்ப்பொருளே
ஆ...கும் தருள்தெரியும் ஆனைமுகத்தோனே
ஆனைமுகத்தோனே வேதமுடன் மாங்கனியே
வேதமுடன் மாங்கனியை விதவிதமாய் நான்படைப்பேன்
விதவிதமாய் நான்படைப்பேன் வேழமுக வேதியனே
திங்கள் கிழமையும் செஞ்சடையும் பெற்றடுப்பேன்
தும்பிக்கையானே வந்து துயரமுண்டு முன்னடவாய்
நம்பி தொழுதிடுவேன் நாள்தோறு முன்பாக
மங்கல வாழ்த்து மணவாழ்த்து வாழ்த்துகிறேன்
நான் வாழ்த்தும் நல்முகூர்த்தம் நல்லபலன் உண்டாமே
தேசம் செழித்திருக்க சீதேவி நின்றிலங்க
சீதேவி யெல்லாம் சீராக நின்றிலங்க
மூதேவி யானதெல்லாம் முக்காதம் ஓடிடவே
சிற்றாடையும் கோங்கும் கோங்கு மென்றும் சொன்னசர்
காண்
வுஸரத்த கருமம் உரைய மென்று தானுரைத்தார்
(4,5 ஏடுகள் இதில் இல்லை)

6. சென்றோடி சென்று மொழிவணங்கி ஆதரித்து
மைந்தருக்கு மங்கையரை மங்கிலியம் தரிக்கவென்று

தாயும் தகப்பனும் இருபேருந் தாங்கூடி
உற்றார் பெற்றார் உறமுறையார் தாங்கூடி
மாதர் கூடப்பிறந்த மாமன்மார் தாங்கூடி
சகலத்தார் கூட்டக்கார் சந்ததிமார் எல்லாரும்
பேசிபறந்தார் ஒருவர்க் கொருவராக
எல்லோரும் தாங்கூடி அனுப்பிவிட்டார் மன்னவரே
பெண்பேசி தானும் போறார்காண் மன்னவரும்
அம்மா உனக்கு மகள் அய்யா எனக்கடிமை

8 விடலையிளநீரும் வண்டியதும் நான்தருவேன்
கம்முவடைக்சாயும் கம்மாறு வெத்திலையும்
இத்தனையும் கொடுத்து உறவாக்கிக் கொண்டார்காண்
பெண்பேசித்தானும் போனார்காண் மன்னவரும்
போனார்காண் மன்னவரும் மச்சினிமார் வாசலிலே
வாசலிலே வந்து நின்று மன்னவரைத் தானழைத்து
கதவைத் திறக்க வென்றும் வந்த காரணத்தைப் பேச வென்றும்
உடனே யவர் ஓடிவந்து போய்க்கதவைத் தான்திறந்து
கட்டியணைத்து வாருமென்று உபசரித்தார்
தாம்பூலம் தரித்து சந்தோஷம் கொண்டார்காண்

9 இங்கு வந்த காரணங்கள் என்ன வென்று கேட்டார்காண்
என்னுடைய மைந்தருக்கு உம்முடைய மாதர்களை
திருமணம் செய்ய கேட்டு வந்தேன் மச்சினியே
மறுத்துபறையாதேயும் மறுவார்த்தை பேசாதேயும்
என்புத்திரர் போலே பெருமையாய் நான்வளர்ப்பேன்
என்சுந்தரி போலே இனிமையாய் நான்வளர்ப்பேன்
பிள்ளையைப் போலே வளர்ப்பாள் பெற்றவள் அங்கிருக்க
கடுகவே சோறூட்டி கண்மணியை நான் வளர்ப்பேன்
இவடமலை கன்னி விளையாடப் போன இடத்தில்
பாலுங் குடிக்கவில்லை பாவடங்கள் சேரவில்லை
(10 வது ஏடு இல்லை)

11 மாமன்மாரோடு மறுத்து உரையாளே
கொண்டவரோடு குறியறியா பாலகனை

அய்யோ அரும்பொருளே எப்படிநான் தந்துவிட
தந்துவிட வேணு மென்று வந்தார்காண் மன்னவரும்
வெகுநேரம் ஆகுதையா வந்தவகை சொல்லிடுங்கோ.
நீர் நினைத்த காரியத்தைத் தடை சொன்னலாகாது
வாழ்வும் தாழ்வும் தரித்திருக்கு தலைமேலே
ஆதியென்ற சோதிரியை அழைத்தோடி வாருமென்றார்
ஓடினார் ஓட்டம் ஒரு நொடியில் சென்றுகண்டான்
கொற்றவரே உம்மைக் கூட்டிவரச் சொன்னார்காண்

12 மைந்தவரே உம்மை வரவழைக்க சொன்னார்காண்
கொற்றவரே உம்மை கூட்டிவரச் சொன்னார்காண்
ஊர்கள்கூடி வரவழைக்க சொன்னார்காண்
மூப்பன்மார்கூடி முகூர்த்தமிடச் சொன்னார்காண்
செய்தியறிந்தார்காண் சென்றவிடம் நின்றார்காண்
சிவனைத் தொழுது திருவெண்ணீர் தானணிந்து
கட்டை பிரம்பெடுத்தார் கணக்கோலை கைப்பிடித்தார்
வட்ட பிரம்பெடுத்தார் வரியோலை கைபிடித்தார்
ஆழமுள்ள சோதிரியும் அழகுமுறையெடுத்தார்
லோகமுழங்க உள்ளமுறை எடுத்தார்.
(13வது ஏடு இல்லை)

13 சிங்கம் வாழைதும்பு வெட்டி கீழ்மேலாயிட்டார்காண்
நிறைநாழி நீர்மரக்கால் திருவிளக்கும் தானேற்றி
தேங்காயும் தெட்சணையும் அதுமேல பிட்சம் வைத்து
சொல்பலத்தை மனதில் உன்னி பரல்வாரி கொண்டார்கள்
சோதிபாத்தி வைத்து சொல்பலத்தை மனதிலுன்னி
எண்ணமெல்லாம் எண்ணிபரல் வாரி கொண்டார்காண்
பகவானை மனதிலெண்ணிப் பலன் பார்த்தார் சோதிரியும்
சூரியனை மனதிலெண்ணி துச்சபலன் பார்த்தார்காண்
கண்டபலன் அத்தனையும் மனதில் உதித்தார்காண்
வெட்டினார் ஓலையிலே விளம்பினார் சாத்திரத்தை
(15, 26 ஏடு இல்லை)

17. தெட்சணையை கைகொடுத்து சாத்தோலை கையில் வாங்கி
பச்சைப் பனைவெட்டி பந்தல் புரோகிதர் காட்டி வர

கலியாணம் சொல்வதுக்கும் அயனி கொடுப்பதுக்கும்
மங்கிலியம் செய்துவர உத்தரவுதானெழுதி
உத்தரவுதானெழுதி கைக்கொடுத்தார் சோதிரியும்
சோதிரிக்கு உண்டான படித்தரமும் தெகொடுத்து
உண்டு தின்று கைகூடி உறவுகள் பலதும் சொல்லி
ஆடறுப்பார் சோறிடுவார் அங்கே பொலிவு செய்வார்
பட்டணங்கள் தோறும் பதிகலங்கள் போகவிட்டார்
நாடுகள் தோறும் நல்லவரைப் போகவிட்டார்

18. தேசங்கள் தோறும் சேவகரைப் போகவிட்டார்
ஊருகள் தோறும் உற்றவரைப் போகவிட்டார்
குத்தி இருந்த அரிசிக் கோட்டை சொரிஞ்சளந்தார்
பச்சை பெருமறவன் மூக்கான நெல்லரிசி
வஞ்சகமில்லாத வாலரிசி முண்டானும்
செம்பாளை யோடே சிறந்தபனை மூக்கன்
இலுப்பைப்பூ சாயலிலெ யேத்ததொருசெம்பளம்
ஆனைக்கொம்பன் சம்பாவும் அழகுதிரு வெள்ளையனுக்
சித்திர காலி சிறுகுறும்பை கட்டையனும்
தட்டாரைபிள்ளை தந்த தொருகிரைசம்பா
19. வாரிடி முண்டானும் வாலியற முண்டானும்

ஆபத்துக்குதவும் கருப்பு காலி நெல்லரிசி
வேளைக்கு உதவும் வெள்ளரிசி கிள்ளரிசி
கோடாமல் அரசன் கூறிவிதைத்த வித்து
மங்காமல் அரசன் வாரிவிதைத்த வித்து
அந்த மலையிலுள்ள அத்தனை அரிசி யெல்லாம்
சில்லரிசி நல்லரிசி நெல்லரிசி அத்தனையும்
நல்ல அரிசி யென்பார் நறுநெய் கொடுவருவார்
இன்பமுடனே எருமைப்பால் தன்னுடனே
வண்டிகட்டிக் கொண்டுவந்து வைத்தார்காண் அந்நேரம்
(20, 21 ஏடு இல்லை)

22. ஆசாரி போற புதுமை தன்னைப் பாருமினி
வாச்சி யெடுத்தார்காண் வலத்தோளில் போட்டார்காண்

சிற்றுளியும் முள்கோலும் கையிலெடுத்தார்காண்
வடகிழக்கு தெரிசனமாய்ப் போனார்காண் ஆச்சாரி
தென்கரையில் நிற்குமரம் தென்னமரம் வெட்டாதே
வடகரையில் நிற்குமரம் மாமரங்கள் வெட்டாதே
எச்சிகள் வாழும் இளமரங்கள் வெட்டாதே
பேச்சிகள் வாழும் பிணமரங்கள் வெட்டாதே
ஆசாரி போற புதுமை தன்னைப்பாருமினி
பச்சைமலையும் பவளமலைதான் கடந்து

23 யொ ... ... புளியமலை சோலை விட்டார்
குன்றுமலையும் குரங்குயெனும் பொய்கைகளும்
கொண்டை குலையும் கடுகுமலைமீ தேறி
அரசர் குடியிருப்பு தான்களித்தார் ஆசாரி
கொற்றவர் குடியிருப்பு தான்களித்தார் ஆசாரி
ஆசாரி போற புதுமை தன்னைப்பாருமினி
தானங் கடந்தார் தோயன்குழி கடந்தார்
ஆன ... ... ரும்
அடவுடனோடி தான்களித்தார் ஆசாரி

24 கொடி கொண்டு வேலிபூக்கும் நிலைவிளக்கும் நிந்நரியும்
நின்று சிணுங்குமலை தான்களித்தார் ஆசாரி
பிடித்தமரம் சொட்டை இந்தமரம் தோலடந்து
பட்டை இங்கே படர்ந்தமரம் இடிவிழுந்துபட்டமரம்
கனகாற்று மாமரம் காமணத்துக்காகாது
இந்தமலை மரங்களெல்லாம் இரவைமரமென்றுசொல்லி
அந்தமலைக்கப் புறத்தே சென்றார்காண் ஆசாரி
சென்ற பேர்கள் எல்லாரும் தெரிந்துமரம் பார்த்தார்கள்
பக்க பணிச்சிகளும் பணித்தாங்கே தேவர்களும்
அங்கணாத்தி கொங்கணாத்தி ஆலும் அரசுகளும்

25 ஆகாச வட்டத்துக்கு அடைந்த தொருகாலிகளும்
பின்னே துயிலே ஆயண்ணியும் பலாமரமும்
நாடகத்திலுண்டான நல்ல இலுப்பைமரம்
காடகத்திலுண்டான காலிநகசிறுசிங்கன்

இந்தமலை மரங்களெல்லாம் இரவைமரமென்றுசொல்லி
அந்தமலை அப்புறத்தே சென்றார்காண் ஆச்சாரி
காக்கை சிறகொணத்தும் காக்காஞ்சிமலை கடந்து
பருந்து சிற கொணத்துக் பரந்துறாஞ்சி மலைகடந்து
கொக்கு சிற கொணத்தும் கொக்கியுஞ்சிமலைகடந்து
பூச்சை இறையும் மண்ணம் பூச்சி பூஞ்சிமலை கடந்து

26. நாகங்கள் வாழும் நாகமலை தான்கடந்து
இந்தமலை மரங்களெல்லாம் இரவைமரமென்று சொல்லி
அந்தமலை யப்புறத்தே சென்றார்காண் ஆசாரி
சென்ற பேர்களெல்லோரும் தெரிந்து மரம் பார்த்தார்கள்
கன்னிமார் பெண்கள் கலந்தாடும் சோலையிலே
தேவிமார் பெண்கள் வந்து திரண்டாடும் சோலையிலே
காளைகள் வந்து கலந்தாடும் சோலையிலே
வெள்ளானை வந்து விளையாடும் சோலையிலே
காரானை வந்து கலந்தாடும் சோலையிலே
மயிலும் குயிலும் வண்டினமும் தாராவும்

27. அன்னமும் புள்ளும் அணிந்திருக்குப் சோலையிலே
காமணத்துக் கேற்ற மரம் கண்டார்காண் அப்போது
வந்து வளைந்தார்காண் மனமருதும் தேக்கருவை
தேக்கு மருது சிறந்த தொரு சந்தனமும்
வாக்குடனே கண்டு தாக்குடனே தான்தரித்து
வெட்டின வெட்டதிலே சிறுகுறியும் பார்த்தார்காண்
தெற்கே சரிஞ்சமரம் தேவியருக்காகாது
வடக்கே சரிந்தமரம் மன்னவருக்கும் ஆகாது
மேற்கே சரிந்தமரம் வந்த ஒருத்தருக்கும் ஆகாது
வாகுடகன தேக்கு வெட்டி கீழ் மேலாய் தள்ளிவிட்டு

28. நாலு சரீரப்பாடு வெட்டி அறுத்து
வெட்டி அறுத்து தும்பிதுளை அடித்து
தும்பிதுளை அடித்து துய்ய நல்ல வடம் போட்டு
வெள்ளையானை விட்டு விரைவாய் வடம் பிடித்தார்
காரானைவிட்டு கருத்தால் வடம் பிடித்தார்

ஆனைபிடித்தாலும் அசங்காது அம்மரமும்
அற்றுவடம் சிதறினாலும் அசங்காது அம்மரமும்
தூறுகள் வைத்து அறுத்து பணிபடுத்தி
முப்பது முக்கோடி முனிமார் தெய்வர் பேரும்

29. செப்பத்துடனே இருந்தும் எழுதினார்காண்
காளி வைரவ காளி கண்கொள்ளா நாதமுடன்
ஆளிதுசிவன்னம் அச்சுதனைத்தானெழுதி
யம்பாலெழுதி மல்லிகைப்பூ தானெழுதி
செம்பாலெழுதி செந்தாமரைப்பூவு மலரெழுதி
மாநிலத்தில் வாழும் மணியீச்சிதானெழுதி
நாகம் எழுதி நாகத்தின் படம் எழுதி
காட்டானை சிங்கம் கரடி புலி ஒழுதி
அங்கே வாழுமங்கம் அழுகரடிதானெழுதி
கொளத்துக் குருவி கோரைகிண்டி தானெழுதி

30 கொளங்கிண்டியோடு குற்றாலந்தானெழுதி
வாயாலும் பிள்ளை மந்திரிமார் பேரெழுதி
முத்தத்து பிள்ளை முதலிமார் பேரெழுதி
பச்சை கிளியும் பனிக்கடலும் தானெழுதி
அன்ன மெழுதி அதின்மேலே கிளியெழுதி
கொண்ட சிறாட்டி குருவிதலை யெழுதி
மாடப்புறாவும் மயிலும் குயிலெழுதி
மூப்பன்மார் பேரும் முறை முறையாய்த் தானெழுதி
சாம்பாக்கமார் பேரும் தனித்தனியேதானெழுதி

31 ஒப்பூரிகாமணக்கால் ஒக்க யெழுதி முடித்து
வாக்குடனே யெடுத்து அருள்வேண்டிகொண்டார்காண்
ஏற்ற முள்ளமலை யெல்லாமலை கடந்து
காமணக்கால் கொண்டு வந்து சரித்தார்காண் வாசலிலே
பந்தல்கால் கொண்டுவந்து சரித்தார்காண் வாசலிலே
காமணக்கால வருகுதென்று கன்னியரும் குலவையிட
பந்தல்கால் வருகுதென்று மங்கையரும் குலவையிட
மங்களத்துக்காக வந்த மங்கையரும் குலவையிட

32 முகமலர வந்த முகூர்த்த மிதுபோகுமுன்னே
தட்டானைத் தானே தானே வரவழைத்து
மைந்தன் கண்ணாளனாக கூட்டிவரச்சொன்னார்காண்
கூட்டிவரக் கண்ணாளர் ஏன் னென்று கேட்டார்காண்
மங்கைக்கு மங்கிலியம் வைக்க வேணு மென்றுசொன்னார்
தாலி கொண்டு வாருமென்றார் தேடிவைத்த
தேட்டமென்றார்
முகமலரவந்த முகூர்த்த மிது போகுமுன்னே
கட்டி பொன்கட்டி கடுகி படி நிறுத்தி
வெள்ளி இருகழஞ்சி வெங்கலங்கள் முக்களஞ்சு
முக்களஞ்சி பொன்னாலே மெய்யிலிடும் பணியாம்

34. கோலவர்ணத் தட்டானுக்கு அரிசி கறி கொடுத்து
அரிசி கறி கொடுத்து போய்வாருமென்று சொல்லி
போய்வாருமென்று சொல்லி அனுப்பிவிட்டார்
தட்டானையும்
முகமலர வந்த முகூர்த்தமது போகுமுன்னே
பூச்சி இருவாச்சி நீலம் இருவாட்சி
செவ்வறளி வெள்ளறளி சிவந்தறளி பூவுகளும்
வெட்டி வேருங்கொழுந்து மேகவர்ண பச்சைகளும்
பட்சமுடன் பெண்கொடியாள் கையில் கொடுத்தார்காண்
வாடா குழலிக்கு வாடாப்பூ மாலைகளும்
ஆனைக்கு தும்புடனே அடவுடனே கொண்டுவந்து

35. கொண்டு கொடுத்தார்காண் கொங்குலிங்க சாலியரும்
மலுங்க குலுங்க கொங்குலிங்க சாலியரும்
கொங்குலிங்க சாலியரும் கோலங்கபட்டாணியரும்
பெட்டகம் பேழைகளும் பேணம் பூட்டிகையில் கொடுத்
தார்காண்
முகமலரவந்து முகூர்த்தமிது போகுமுன்னே
கண்டாங்கி யென்று கல்பித்தார் மன்னவரும்
கொட்டிமுறையறிந்து கொட்டாத்தான் பாவோடி
நீலம் இருகரையும் நெய்ததுகாண் சிற்றாடை
அக்காக்கு நெய்ததோ யெக்காக்கு நெய்ததோ

அண்ணனுக்கு யேத்த அரசியருக்கு நெய்ததோ
தம்பிக்கு ஏத்த நங்கையருக்கு நெய்ததோ
36. மாதர்கூட பிறந்த முறை மச்சினனுக்கு நெய்ததோ
ஆறுமுழம் ஆறுபணம் ஆனைவரி கண்டாங்கி
ஈக்கு விழும்பன் இடைவிழும்பன் கண்டாங்கி
பாக்கு விழும்பன் பவளநிறம் சிற்றாடை
குண்டு மணிப்புடவை யெடுத்துவரச் சொன்னார்காண்
கண்ணாடிகூடும் யெடுத்துவரச் சொன்னார்காண்
கொன்றைப்பூ சாயலிலே பூந்தோளி கண்டாங்கி
முருங்கைப்பூவு சாயலிலே பூந்தோளி கண்டாங்கி
முருக்கன்பூவு சாயலிலே பூந்தோளி கண்டாங்கி

37 ம ... ம் பூசாயலிலே பூந்தோளி கண்டாங்கி
மி ... பூவுசாயலிலே பூந்தோளி கண்டாங்கி
ஏழு கட லேறி யெடுத்து வந்த கண்டாங்கி
சாலியார் கடையிலே தெரிந்தெடுத்த கண்டாங்கி
முதலிமார் கடையிலே தெரிந்தெடுத்த கண்டாங்கி
ஒருவர்க் கொருவர் விலைமதிக்கும் கண்டாங்கி
ஏழுகடலேறி யெடுத்து வந்த கண்டாங்கி
கோட்டாறு செட்டிகொண்டு விற்கும் கண்டாங்கி
ம ... ருதன் செட்டி மோதிவிக்கும் கண்டாங்கி
பட்டணத்து செட்டி பரிமாறும் கண்டாங்கி
(38 ஏடு இலலை)

39 மலுங்க குலுங்க கொங்குலிங்க சாலியரும்
கொங்குலிங்க சாலியரும் கோலங்கபட்டாலியரும்
தெட்சணையும் கொடுத்து அரிசிகறி கொடுத்து
போய்வாருமென்று அனுப்பிவிட்டார் சாலியாரை
முகமலர வந்த முகூர்த்த மிதுபோகுமுன்னே
காவணம் கட்டவென்று கற்பித்தார் மூப்பன்மார்கள்
பூமிதரை மெழுகி (புஷ்பம்) திரட்டி வைத்து
சிங்கம் வாழை தும்புவெட்டி கீழ்மேலர்யிட்டார்காண்
நிறைநாழி நிறைமரக்கால் திருவிளக்கு தானேற்றி
தேங்காயும் தெட்சணையும் அதுமேல் கருள்வைத்து

40 முத்த மெங்கும் கோல்நாட்டி மோட்டுவளை போட்டார் காண்
பச்சை பனைபிளந்து பக்கவளை போட்டார்காண்
இருபத்தொருகால் நாட்டி ஒருக்கால் பிரம்புஇட்டு
இட்ட செழும் பந்தலுக்கு ஏதோ அலங்கரிப்பு
வண்ணானைத்தானே தானே வரவழைத்து
கீழ்க்கட்டுக்கட்டி கீழே அலங்கரித்து
தோரணங்கள் கட்டிடுவார் சுகிர்தமணிபந்தலிலே
கரி அரைத்து புள்ளிகுத்தி கம்பேறும் தாங்களித்து
மாவரைத்து புள்ளிகுத்தி மகதோஷம் தாங்கழித்து

41. சாலு தொழுது வைத்து சடங்குகளும் செய்தார்காண்
இருபத் தொருச்சடங்கு இன்ச்சடங்கு செய்தார்காண்
சென்று தலைமுழுகி செங்கழுனீர் ஓடையிலே
வந்து தலைமுழுகி வாய்ந்த கன்னிமார் ஓடையிலே
மொழுகி தலையில் வைத்து மாற்றுபகுந்துடுத்து
மாற்று பகுந்துடுத்து மணவறையில் உள்புகுந்து
செம்பொன் சரிகை அதுமேல் சுருள்வைத்து
அலங்காரம் காணவந்த அடியாள் கலங்களிலே
கச்சை கடுங்கன்களும் கைமுருகு இட்டார்காண்
மார்பில் பதக்கங்களும் வையிரமணி இட்டார்காண்

42. ... ... அணுகிவிட்டார் மன்னவருக்கு
மாலையும் இட்டு மன்னவரும் வழிநடந்தனர்
வழிநடந்த மன்னவரும் மச்சினியும் பக்கத்திலே
பக்கத்திலே சூழ்ந்துவர பதினாயிரம்பேர் சூழ்ந்துவர
குதிரை அணிந்துவர கொம்புடனே சங்கூத
கிறை அடிக்க திடனம்பணி நடக்க
நட்டுவர் கொட்டம் நாகசுரம் தானூத
சிங்களவர் பாட சீங்குடங்கள் தான்தட்ட
வன்னக்கை வேசியர்கள் வகைவகையாய் ஆடிவர
... ... சேனை இருபுறமும் வீசிவர }
(ஏடு 43 இல்லை)

44. செட்டி குடையானால் தெருவிலேயும் காணாதோ
அய்யர் தெருக்கடந்து போகுதுதான் என்பாரும்
திருவாய் தம்பலத்தை சிந்தியபேர் என்பாரும்
.........வாழை கலைக்கும்பேர் என்பாரும்
.........வழிவந்துப்போ என்பாரும்
.........னும் என்பாரும் நலங்காணும் என்பாரும்
.........வைச்சேரி யெல்லாம் குதித்தேறி பார்ப்பாரும்
வைக்கைப் படைப்பெல்லாம் வலிச்சேறி பார்ப்பாரும்
அன்று வைத்த மண்ணையெல்லாம் அழிச்சேறி பார்ப்பாரும்
அடைக்காயும் வெத்திலையும் அள்ளியெறிவாரும்
உச்சிக்கு மேற்கே உதியன் குளங்களென்ன
கொட்டோடே தட்டோடே வாரான்காண் மணவாளன்
வாரான் மணவாளன் மாமன் தலைவாசலிலே
வந்து இறங்கினார் மாமன் தலைவாசலிலே
மாதர் கூடப்பிறந்த மாமன் மகன் ஓடி வந்து
மாப்பிள்ளையைக் கொண்டு சென்று குறுத்தோலை பாய் போட்டு
மாப்பிள்ளையைக் கொண்டுசென்று கீள்மேலாய்த் தானிருத்தி
மைத்துனிமார் ஓடிவந்து வாடா விளக்கு வைத்தார்
வாடா விளக்கெரிய மாப்பிள்ளைக்கும் தானெரிய
முகமலர வந்த முகூர்த்தமிது போகுமுன்னே
(ஏடு 46 இல்லை)

47 கீழ் மேலாயிட்டு கீழே அலங்கரித்து
மேல் கீழாய்ப் போட்டிடுவர் சுகிர்த மணிபந்தலிலே
கரி அரைத்து புள்ளி குத்தி கம்பேறும் தான்கழித்து
மாவரைத்து புள்ளி குத்தி மகதோஷம் தான்கழித்து
சானு தொழுது வைத்து சடங்குகளும் செய்தார்காண்
இருபத்தொரு சடங்கு இனச்சடங்கு செய்தார்காண்
சென்று தலை முழுகி செங்கழனி ஓடையிலே
வந்து தலைமுழுகி வாய்த்த கன்னிமார் ஓடையிலே
மொழுகி தலையில் வைத்து மாற்றி பகுந்துடுத்து
மாற்றி பகுந்துடுத்து மணவறையில் உள்புகுந்து

48 செம்பொன் மதனாகை அதின்மேல் சுருள்வைத்தார்
அலங்காரம் காணவந்தார் அடியாள் கலங்களிலே
மாதர்கூடப் பிறந்த மாமன்மார் ஓடி வந்து
அர்த்தமும் பொன்னுமாத்திகொண்டேன் என்றுசொல்லி
முகமலர வந்த முகூர்த்தமது போகுமுன்னே
மாப்பிள்ளையைக் கொண்டு சென்று கீழ்மேலாய் தானிருத்தி
வாசல் நடைப்பணம் கொடுத்து மருவியஞ்சு பெண்ணெடுத்து
பெண்ணொடுத்து வைக்கும் புதுமைதனைப் பாருமினி
மாப்பிள்ளை இருக்கும் புதுமைதனைப்பா ருமினி
முகமலர வந்த முகூர்த்தமிது போகுமுன்னே

49 பூமிதரை மெழுகி புஷ்பம் திரட்டி வைத்து
சிங்கம் வாழை தும்புவெட்டி கீழ்மேலாய் போட்டார்காண்
நிறை நாழி நிலை மரக்கால் திருவிளக்கும் ஏற்றி வைத்து
தேங்காயும் தெட்சணையும் அதின்மேலே சுருள்வைத்து
முத்த மெங்கும் கால்நாட்டி மோட்டுவளை போட்டார்
காண்
பச்சை பனைபிளந்து பக்கவளை போட்டார்காண்
இருபத்திதொருகால் நாட்டி ஒருக்கால் பிரமணிட்டு
இட்டசெழும் பந்தலுக்கு ஏதோ அலங்கரிப்பு
வண்ணானைத்தானே தானே வரவழைத்து
மேல் கட்டு கட்டி மேலே அலங்கரித்து*

---

* இதே போன்ற திருமணமுறை பாடலொன்றில் பின்வரும் அடிகள் காணப்படுகின்றன.

முகமகர வந்த முகூர்த்தமிது போகுமுன்னே
பொன்பூட்டி ஓடிவந்து போத்தமுடன் பொன்னெடுத்து
மன்னவருக்கு நோக்கி மங்கையர்க்கு பூட்டிடவே
வாடாவிளக் கெரிய மாங்கலியம் தான்பூட்ட
காலுக்குப் பீலி கழுத்துக்கு ஆபரணம்
நெற்றிக்குச் சுட்டி தலைக்குதிருப்பயாத்தி
மாப்பிள்ளை யிருக்கும் புதுமைதனைப் பாருமினி

50 மாப்பிள்ளை இருக்கும் புதுமைதனைப் பாருமினி
ஏங்காணும் மச்சினியே முகங்கோணி நிற்கிறீர்
கோடி நிறைந்த கொழுந்திமார் போகிறதோ
வீடு நிறைந்த மாமிமார் போகிறதோ
பந்தல் நிறைந்த மாமன்மார் போகிறதோ
தோள் பிடித்து நிற்கும் மச்சினிமார் போகிறதோ
என்னடி மகளே இரங்கிமலங்குகிறாய்
என்ன என்ன சீதனங்கள் பெற்றாளிளங் கொடிக்கு
கொந்த பனையும் கோல் சொரிஞ்ச வாழையும்
இஞ்சி விளையும் எலுமிச்சந் தோட்டங்களும்

51 பேசுங் கிளியும் பிடித்தாடும் ஊஞ்சலும்
இத்தனையும் தந்தோமென்று பிள்ளை தகப்பனார் நீர்
வார்க்க
வெள்ளாடு முந்நூறு பால் பசுக்கள் முன்னூறு
கறக்கக் கடையாளும் கன்று கட்ட தும்புகளும்
இத்தனையும் தந்தோமென்று பிள்ளை மாமனார் நீர்வார்க்க
சீதனங்கள் போராட்ட பிள்ளை சீராட்டி வருகுதுகாண்
அம்மெகட்டும் அரிசிகளும் தலைமேலே பெட்டிகளும்
கம்மாளன் படியுடனே கெண்டி வகை தான்கொடுத்து
போ போவென்று பொன்போலே தொட்டிலிட்டார்
பிள்ளைகளைப் பெற்றிடுவார் பெற்றவர்போல் பேரிடுவார்

53. மாலைபகுந்திடுங்கோ மன்னவனார் தேவியருக்கு
பூவுபகுந்திடுங்கோ பொன்பூட்டி உண்டுமானால்
அண்ணனும் தம்பியும் அனந்தரங்கள் செய்திடுங்கோ
அறுகுகளும் பரலுகளும் அள்ளி தெளித்திடுங்கோ
அருவக்காரன் சேருவைக்காரன் அனந்தரங்கள் செய்
திடுங்கோ
வாத்தியம் முடித்தார் வாழிகதை பாடினார்காண்
கெடிநிறைந்த எல்லோரும் வாழிகதை
மறைய நின்று கேட்ட மாமிமார் வாழிகதை
கொடி நிறைந்த கொழிந்திமார் வாழிகதை
பந்தல் நிறைந்த மாமன்மார் வாழிகதை

54. தோள்பிடித்து நிற்கும் மச்சினிமார் வாழிகதை
கொடிக்காரர் குலகைவக்காரர் எல்லோரும் வாழிகதை
மாப்பிள்ளையும் பெண்ணும் இருபேரும் வாழிகதை
ஆல் போல் தழைத்து அறுகு போல் வேரோடி
மூங்கில் போல் அன்னை சுற்றம் முடிய வாழிகதை

திருமணமுறை முற்றிற்று

# திருமணப் பாடல்கள்

திருமணப் பாடல்கள் பலவகைப்படும். ஒருவரது வாழ்வின் மறக்க முடியாத நிகழ்ச்சியாக நினைக்குந்தோறும் இனிய உணர்வை ஏற்படுத்தலதாக அமைவது திருமணம். இன்ப நிகழ்வுக்கு இனிமையூட்டும் வகையில் திருமணத்தின் போது பல்வேறு இசைக்கருவிகள் இசைக்கப்படும். மேலும் திருமணவினையின் ஒரு சில குறிப்பிட்ட நிகழ்ச்சிகளின்போது பாடல்கள் பாடுவர். மணமகள் பாடவேண்டிய சந்தர்ப்பமும் உண்டு. இந்நாளில் ஒரு சிலர் இதற்காகவே பாடக் கற்றுக் கொள்கின்றனர். திருமணத்திற்கு வரும் வயது முதிர்ந்த மங்கலப் பெண்டிர் இச்சந்தர்ப்பங்களில் பாடக்கூடிய பாடல்களை அறிந்திருப்பர். திருமணம் நடைபெறும்பொழுது நாதசுர இன்னிசையோடு பெண்களும் பாடும் வழக்கமும் உள்ளது. இவ்வாறாகத் திருமணவினைக்குப் பாடும் பாடல்கள் பல்வகைப்படும். சான்றாக நலங்குப் பாடல்; ஊஞ்சல் பாடல்-லாலி, ஓடம்; வாழ்த்துப் பாடல்கள் போல்வன. திருமணவினை முடிவதற்கு முன்னர் நடைபெறுகின்ற நிகழ்ச்சியைச் சுட்டும் பாடல்கள் கேலிப்பாடல்கள் எனப்படும். இதனையே ஏசல் பாடல்கள் என்பர். இனி இவற்றிற்கான உதாரணப் பாடல்கள் சிலவற்றைக் காண்போம்.

**நலங்கு :**

வைதிகநெறி முறைப்படி நடைபெறும் திருமணங்களில் நலங்குப் பாடல்கள் பிரசித்தி பெற்றவை. நலங்குப் பாடல்களில் ஒரு சில வடமொழிச் சொற்கள் ஆங்கிலச் சொற்களைக் கலந்தும் சிலர் பாடுவர். தெலுங்கு மொழியிலும சிலர் பாடுவர். ஒரு சில குடும்பங்களில் 'வாரணமாயிரம்' எனத் தொடங்கும் ஆண்டாளின் பாசுரத்தைப் பாடுவர்.

**நலங்குப் பாடல்களுக்குச் சான்றுகள் :**

''முத்து முத்து செங்கிளியே நலங்கிட வாரும்
மோர்க்கணிங்க ராஜதுரையே நலங்கிட வாரும்

அரைச்ச மஞ்சள் ஒருபுறமாய் கருத்துபோகுதே
சுட்டதொரு அப்பளமும் நமுத்துப்போகுதே
வந்த தோழிமார்கள் எல்லாம் காத்திருக்காளே
இன்னும் என்ன தாமஸமோ வாரும் ஸ்வாமி.1''

**நலங்கு**

நாடோடிப் பாடல்கள்)

ஸ்ரீகிருஷ்ண பாதமே—தந்தருள் செய்குவீர்
சீராய் நலங்கு இடுகிறேன்;
பச்சை மஞ்சள் பூசுவேன்; பாங்குடன் யானுமே
பாத கமலம்தர வேணும்.
கச்சித மாகவே கமலப்பொற் பாதத்தில்
காதலால் நலங்கிடுகின்றேன்;
கடைக்கண்ணால் பாரும்.

**நலங்கிட அழைத்தல்**

பல்லவி

நலங்கிட வாருங்களிப்போ — நங்கைய ரெல்லாம்

**சரணங்கள்**

நால்வகை வாசஞ்சேர்ந்த நலமான சந்தனத்தை
நாகமீது தூங்குவோனுக்கும் லட்சுமி தேவிக்கும் (ந)
அல்லல்கள் மிகப்புரிந்த அசுரர்கள் சிரமரிந்த
வல்லராம மூர்த்திக்கும் நல்லசீதா தேவிக்கும் (ந)
பாலும் தயிரையு முண்ணப் பாற்கடல் வெண்ணெய உண்ணப்
பாலனாம் கோபாலனுக்கும் ருக்மணி தேவிக்கும்[2] (ந)

**ஊஞ்சல் பாடல்கள்**

திருமணத்தின் போது ஊஞ்சல் பாட்டு மிகப்பிரசித்தம். இப் பாடல்களை லாலி, ஓடம் என்பர். லாவிப்பாடல்கள் மண

1. பக். 52. கல்யாணமே வைபோகவே
2. பக். 92-94 கி.வா. ஜகந்நாதன் திருமணப் பாடல்கள் அமுத நிலையம் சென்னை 1983.

மக்களைப்புகழ்ந்து பாடுதல். ஓடப்பாடல் மணமக்களுக்கு அறிவு புகட்டுவது போலிருக்கும்.

**லாலிபாட்டு**

*சோழவள நாட்டில் வந்த செல்வனருள் மணியே*
*மன்னாதி மன்னனுக்கு மாலையிட்ட மகளே—லாலி*
*மாசில்லா மங்கை இவள் மைந்தர்களைப் பெறவும்*
*தேசுலாவும் அம்மைந்தர் சீரெல்லாம் பெறவும்—லாலி*

**ஓடப்பாட்டு**

*ஏலேலோ—ஏலேலோ*
*காசுகளை காலணா வாக்கவேணும்*
*கருத்தாக அதனை முடிபோட வேணும்*
*வீணாக செம்பொன்று செலவு செய்யாமல்*
*வெள்ளி ரூபாயாக்க விருப்பம் வேண்டும்*
*தகுவெள்ளி ரூபாயும் சவரன்களாகும்*
*தந்திரமாய் முயன்று பொருள் சேர்க்கவேண்டும்*
*... ... ... ... ...*
*பாவாடை ரவிக்கைகள் தைக்க தெரிந்தால்*
*பலபேர்களும் தேடிவந்து பொருள் தருவார்*
*கம்பளி நூல்வேலை கற்றுத் தெரிந்தால்*
*கழுத்துப்பட்டைகள் கோடி பின்னிடலாம்*
*சித்திர விசித்திர புஷ்பங்கள் செய்தே*
*சீரான கொண்டைக்கு அணியாகத் தரலாம்*
*அலங்கார மொக்குகள் அவை போடத் தெரிந்தால்*
*அனைவருக்கும் கற்பித்து அதிலும் பணம் பெறலாம்*
*— ஏலேலோ* [3]

மணமக்களை ஊஞ்சலில் அமர வைத்து பெண்கள் அவர்களுக்கு இறையருள் கிட்டுமாறு பாடி மகிழ்வதுண்டு. இதனையும் ஊஞ்சல் பாடல் என்பர்.

*ஆட வாங்கள் பொன்னூஞ்சல்*
*ஆட வாங்கள்*
*ஆதி நபி பெருமான் ஹப்பா மனம் மகிழக்*
*காதல் பொருந்தவே களித்து மகிழ் ஊஞ்சல் ஆட*

எனப் பாடுவர்.

3. பக். 53. கல்யாணமே வைபோகமே

"கடிமலரும் மதுகரமும் குழயிலாட
கஸ்தூரியுடன் வேர்பு முகத்திலாட
நெடுவிழியும் மணித்தோடும் செவியிலாட
நேர்வளையும் சூடகமும் கரத்திலாட
வடமணியும் கண்டிகையும் ஸ்தனத்திலாட
மாகலையும் மேகலையும் மருங்கிலாட
திடமறையும் பறிபுறமும் பதத்திலாட
ஸ்ரீரங்கநாயகியார் ஆடீரூஞ்சல்

என்று வைணவர்கள் பாடுவர்.

கன்னூஞ்சலாடினாளே! மீனாம்பிகை
கன்னூஞ்சலாடினாள்! கனகசபேசனுடன்
பொன்னும் மணியும் இழைத்த
மின்னு மண்டபம் தன்னில்
கன்னூஞ்சல் ஆடினாளே"

என்று சைவர்கள் பாடுவர்.[4]

**பந்தல்கால் நடும்போது பாடும் பாடல்**

பந்தல்கால் நாட்டுவோமே பாங்குடன்கூடி
அந்தமுடனே அலர்மேல் மங்கை நாதனின்
செந்தாமரைப் பாதம் சேர்ந்து வணங்கி நாமும் (பந்)
வாழையடி வாழையென வம்சம் விளங்கிடவும்
வாழைகள் கட்டி பனங்காய்கள் துலங்கிடவும்
ஆழிவண்ணன் அருளை அள்ளி அளித்திடும்
பேழையாம் தென்னையுடன் பேரின்பம் நிறைந்திட. (பந்)

திருமணம் என்ற நல்ல செயலைத் தொடங்கும் போது தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள்.

லட்சுமி கல்யாணம் வைபோகமே!
வசுதேவ தவபால அசுர குலகாலா
சசிவதன ருக்மணி சத்யபாமா லோலா
தூண்டாத மணிவிளக்காய் தொல்லுலகில் உதித்தாள்
தூய ரங்கராஜர் பதம் துலங்க மனம் பதித்தாள்
பட்டர்பிரான் மனமகிழ பாருலகில் உதித்தாள்
பக்தியுடன் திருப்பாவை பாடிதினம் துதித்தாள்

என்றும், தமிழ் நாட்டிலேயே சைவ மதத்தினர்,

4. பக். 26. தென்னாட்டுக் கல்யாண முறைகள்

கௌரீ கல்யாணம் வைபோகமே!
சொக்கநாதர் மகிழும் சொகுசு மீனாட்சி
சொர்ணபாதம் பணிந்து தோத்திரம் செய்வோம்.

என்றும் பாடுவர்.

கெட்டி மேளம் கொட்ட மணமகன் மணமகள் கழுத்தில் மங்கலவணி அணிவிக்கும் பொழுது,

ஆனந்தம் ஆனந்தம் ஆச்சுதேநம்
ஆண்டாள் கல்யாணம் காணவாய்ச்சுதே
ஞானந் துலங்கி எங்கும் நன்மை விளங்கித்தே
தும்புரு நாரதர் பாடினார் நல்ல
துய்ய முனிவர்கள் கொண்டாடினார்
அம்பரத்தினில் தேவமாதர்களாடினார்
பதினாறு வாத்ய முழங்கினார் ஆழ்வார்
பாங்காய் தாம்பூலம் வழங்கினார்
மதிமுக மாதர்கள் மங்களம் பாடினார்

என்று பாடுவர்.

**திருமண வாழ்த்துப் பாடல்கள் :**

திருமணம் என்பது ஒத்த பண்புள்ள ஓர் ஆணும் பெண்ணும் தொடங்கப் போகும் இல்லற வாழ்வின் நுழைவாசல். பலர் முன்னிலையில் நடைபெறும் திருமணத்தில் மணமக்களை வாழ்த்தும் மரபு புதியதன்று. பண்டைத் தமிழர் திருமண வினைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்வன அகநானூற்றுப் பாடல்களே ஆவன. அகநானூற்றில் வாழ்த்தும் மரபு அரும்பி, சிலப்பதிகார காவியத்தில் அம்மரபு மலர, அதை அடுத்துத் தோன்றிய இலக்கியங்களுள் அதன் வளர்ச்சியைப் பார்க்கலாம். இந்நாளில் நடைபெறும் வைதிகநெறி, சீர்திருத்தத் திருமணங்களிலும் திருமண மண்டபத்தில் குழுமியிருக்கும் பெரியோர்கள் மண மக்களைத் தங்களுடைய இதயங்கனிந்த வாழ்த்துக்களோடு ஆசீர் வாதம் செய்கின்றனர். மணமக்களை வாழ்த்தும் மரபு தமிழரிடம் தொன்று தொட்டு இருந்துவரும் வழக்கமாகும்.

பண்டைத் தமிழர்கள் மணமக்களை வாழ்த்துகின்ற பொழுது பாடியது.

"அத்திபோல் தளிர்த்து
ஆல் போல் படர்ந்து
அரசு போல் படர்ந்து
அருகு போல் வேரூன்றி
மூங்கில் போல் சுற்றம்
முசியாமல் வாழ்ந்திருப்பீர்".[5]

பாரதி தாசனின் திருமண வாழ்த்து :

ஒருமன தாயினர் தோழி — இந்தத்
திருமண மக்கள் என்றும் வாழி!

பெருமன தாகி இல்லறம் காக்கவும்
பேறெனப் படும்பிள் ளைகளையும் சேர்க்கவும்
ஒருமன தாயினர் தோழி!

மருமலர்த் தார்புனை மார்ப னோடும்
மழைபோற் கூந்தல் அழகன்னப் பேடும்
வருவார் என அந்தப் பஞ்சணை தேடும்
வந்து வரைவார் இன்ப இலக்கிய ஏடும்
ஒருமன தாயினர் தோழி;

இந்தநாள் போல எந்தநூற் றாண்டும்!
இன்பம் எனவே ஒவ்வோர் இமைப்போதும் தாண்டும்!
செந்தமிழ் நாட்டிடைத் தொண்டுகள் யாண்டும்
செயத்தக்க மக்களை இவர்பெற வேண்டும்.[6]

பெண்களுக்கு அறிவுரை

ஏலேலோ ஏலேலோ — உத்தமியே
ஏலேலோ ஏலேலோ!
சீரான பெண்ணரசே, சிறந்த ஒரு புருஷனுக்கே
ஆராய்ந்து உன்னைப் பெற்றோர் அழகாக மணம்பேசி

5. பக். 2. பி. என். சண்முக சுந்தரம்; திருமண வாழ்த்து
6. பக். 9 இசையமுது இரண்டாம் தொகுதி

பந்து ஜனங்களுக்கெல்லாம் பரிவாகச் சொல்லிப்
பாங்காகக் கல்யாணப் பந்தல்அலங் கரித்து
வாழை கமுகுகள் வரிசையாய் நாட்டி
வாத்தியம் கல்லென்று மாண்பாய் ஒலிக்க
நலமுற்ற வேளையில் நாற்புறமும் சூழ்ந்து
பொலிவுள்ள மாதர்கள் நலங்கிட்டு முடிக்கத்
தக்கஉத கத்தாலே ஸ்நானம் செய்வித்து
கந்தபரி மளப்பொடிகள் துலங்கமெய் பூசிச்
சரிமலர்க் குழலுக்குத் தூபங்கள் காட்டிச்
சொர்ணபூ ஷணங்கள்பல துலங்க அலங்கரித்து
மாதர்கள் பலசூழ்ந்து மங்களம் பாட
வேதியர்கள் பல்லாண்டு விளம்பிமகிழ் கூர
அக்கினி அருந்ததி இவர்சாட்சி யாக
அருகாக நின்றுதத் தஞ்செய் தளிக்கத்
தாலி கட்டிய கணவனே தெய்வமாகத்
தவறாமல் அவன்சொல்லும் வழிநிற்க வேணும்
மாமியார் நாத்திகளை மகிழ்விக்க வேணும்;
மாறுசொல் லாமல்அவர் சொல்கேட்க வேணும்;
கணவனார் கோபிக்க ஒன்றும்சொல் லாதே;
காட்டேரி போலவன் முன்னேநில் லாதே;
ஒன்றுக்குப் பலசொற்கள் பேசிஎதிர்க் காதே!
ஒட்டாரஞ் செய்துபாய் போட்டுப்படுக் காதே;
ஆத்திரம் கொண்டுஒரு அடிஉன்னை அடித்தால்
அடியென்று மடியிற்கை பிடித்திழுக் காதே;
இல்லாத பொருள்களுக் கிச்சைவைக் காதே
எந்நேர மும்செல்லைப் போலரிக் காதே;
வீட்டுச்சங் கதிகளை வெளியில்சொல் லாதே;
வெட்கங் கெடப்பிறர் நகைக்கவை யாதே:
பாழான கோபத்துக் கிடங்கொடுக் காதே;
பத்ரகா ளியைப்போலத் தலைவிரிக் காதே;
வரவுக்கு மேலிட்ட செலவுசெய் யாதே;
வாழ்நாள்எல் லாந்துக்கப் படவைத்தி டாதே;
இதமான வார்த்தையே பேசிவர வேணும்;

இஷ்டப தார்த்தங்கள் சமைத்துவைக்க வேணும்;
கூன்குருடானாலும் குறைபேசி டாதே;
குலம்கெட்ட போதிலும் குற்றம்வை யாதே,
அன்னிய புருஷர்மேல் ஆசைவை யாதே;
அதனால் அவமானம் அடக்கமுடி யாதே
காசுக் கழித்திட்ட கற்புக்கோ டிப்பொன்
கணக்காகக் கொடுத்தாலும் மீளவ ராதே;
அயல்வீட்டுக் கடிக்கடி போகநினை யாதே;
அலட்சிய மாய்ப்பேச உடல்எடுக் காதே;
மேனி மினுக்கிஒளி வாய்நட வாதே;
வேறு புருஷர்இச்சை கொள்ளத்திரி யாதே;
இவ்வாறு நடந்திடின் குடும்பவிஷ யங்கள்
எந்நாளும் குறையாமல் ஈடேற நல்ல
புத்திரப் பேறுடன் போகபாக் கியங்கள்
பொற்பூ ஷணங்களும் புகழுடன் பெறுவாய்;
தேர்ந்து—துயர்தீர்ந்து—அருள்
கூர்ந்து—மிக ஓர்ந்து
ஏலேலோ ஏலேலோ![7]

**வசந்தமாடல்**

மாப்பிள்ளையைக் கேலிசெய்து ஓடப்பாடல் பாடி முடிந்ததும் மஞ்சள் நீர் ஆரத்தியைக் குடங்குடமாகக் கரைத்து வைத்திருந்து இத்தனைச் சிறப்புள்ள மாப்பிள்ளைக்கு மஞ்சனமாட்டி மகுடாபிடேகம் செய்கிறோம் என்று கூறி மணமகன் மீது கொட்டி விடுவார்கள். இதை வசந்தம் ஆடுவது என்று சொல்வர்

1. மகுடா பிடேகம் செய்தோம் நல
மஞ்சள் நீராட்டமும் செய்தோம்.

2. வெகு நாட்களாகவே திருடி பழகிக் கொண்டு
மகிமை பெற்ற எங்கள் மாப்பிள்ளை சமர்த்தற்கு (ம)

3. அடித்தாலும் வைதாலும் அதட்டி மிரட்டினாலும்
பதட்ட மில்லாமலே பல்லிளித்து நின்றார்

7. பக். 136-37. கி.வா. ஜகந்நாதன்; திருமணப்பாடல்கள்.

கொடி போன்ற பெண்ணையும் கோப்பையும் கொண்டு
சென்ற
அழகான மாப்பிள்ளைக்கு அருமை பெருமையுடன். (ம)

என்ற பாட்டைப் பாடி மணப்பொடியைத் தூவி மகிழ்வர். இந்த சமயத்தில் சம்பந்திகளுக்கு நலங்கிட்டு மஞ்சள் நீரை வாரி இறைத்துக் கணக்கற்ற பரிகாசப் பாடல்களைப் பாடித்தீர்ப்பர். அதில் வசனமாகவே மந்திரம் சொல்வதுபோல் பாடும் ஒரு வகை பாடலுண்டு. அதாவது –

நம் சம்மந்தி யாத்துக் கல்யாணத்தில் யார் யார்?
என்ன என்ன செய்தார் தெரியுமா?
பெருச்சாளி வரவேற்க
காக்காய் கடிதம் எழுத
குருவி கொண்டு கொடுக்க
ஊமை ஊரழைக்க குருடன் வரவேற்க
ஆமை ஆம்மெழுக
கோழி கோலமிட
பாம்பு படிகள் போட
யட்சணி பட்சணம் பண்ண
குரங்கு சமையல் செய்ய
தேள் திருவாராதனம் பண்ண
பூனை பூசை பண்ண
எருமை இலைகள் போட
பசுக்கள் பழம் எடுக்க
கரப்பு பருப்புப் போட
பல்லி பச்சடிப்போட
அரணை அன்னமிட
பேன்கள் கறிகள் போட
பச்சைக் கிளி பாயசம் வார்க்க

என்று இவ்வாறு தொடர்ந்து பாடுவர். இந்த மஞ்சள்நீர் வசந்தத்துடன் கொண்டாட்டப் பாடல்கள் முடிந்துவிடும். பிறகு மேள தாளத்துடன் முளைப் பாலிகையைக் கொண்டு சென்று மண

மக்கள் கையால் ஆற்றிலோ, குளத்திலோ விடச்செய்து வீடு திரும்புவர். பிறகு பெண்கள் விளக்கேற்றி வைத்து ஏதாவது ஒரு கல்யாணக் கும்மியைப் பாடுவர். அல்லது இராமாயணச் சுருக்கத்தை விளக்கும் பாட்டைப் பாடுவார்கள்

தேவர் எல்லாம் துதித்திட தசரதற்குப் புத்திரனாய்
ஆதி வம்சந் தன்னிலே அவதரித்தான் ஸ்ரீராமன்
அயனீதியாய்ப் பிறந்துள்ள அழகு ஓங்கும் சீதைக்கு
ஐயன் இராமன் மாலையை அன்புடனே சூட்டினார்
தண்ட காரண்ய வனத்திலே தசரதாதி மருமகள்
நீண்ட கோதண்டராமனை பிரிந்து நின்ற நாளிலே
மாறு வேடம் தரித்த மாய ராவணன் ஆண்டிப் போல்
அம்மா பிச்சை போடென்று அண்டி வந்தான் அருகிலே
பிச்சை போட்ட சீதையை வெட்கங் கெட்ட ராவணன்
இச்சை கொண்டு தேரின்மேல் எடுத்து வைத்து ஓட்டினான்
பறவையான சடாயு பார்த்து நடுங்கி ஓடித்தாம்
போர்புரிந்து தோற்றதாம் புவியில் விழுந்து மாண்டதாம்
அனுமன் என்றோர் வானரம் அசோக வனத்தை அழித்ததாம்
அங்கே சீதையைக் கண்டதாம் அதிக வேகமாய்த்
தாண்டிற்றாம்
குரங்குகள் எல்லாம் கூடியே குன்று மலையை கட்டியே
வரிசையாக நட்டதோர் வாராவதியும் கட்டிற்றாம்
இராமன் அந்தமார்க்கமாய் இலங்கை நகரைத் தாண்டியே
இராவணனை வென்றுதான் எடுத்து வந்தார் சீதையை
காடு மலைகள் கடந்துமே வீடுவந்தார் காகுத்தன்

என மேற்கண்டவாறு அப்பாடல் இருக்கும். பிறகு எல்லா சம்பிரதாய நிகழ்சசிகளும் முடிந்த பிறகு மணப்பெண்ணைப் புகுந்த வீட்டிற்கு அனுப்பி வைப்பர். அப்பொழுது பாடும் பாடல் பின்வருமாறு :

1. புக்ககம் போய் வருவாய் — புனிதை என்று
மிக்க நல்ல பெயர் பெறுவாய்

2. அக்கரையாய் வேலை அனைத்தையும் செய்திட்டு
சக்கரம்போல் சுற்றி சந்தோஷமாகவே

3. பெரியோர்களை வணங்கிப் பேராசி பெற்று
பிரிய நாதனுடன் மகிழ்வாய்
பொறுமைக்குப் பூஷணம் பொன்மொழிக்கு இருப்பிடம்
தருமத்தின் தாயகமாய் தழைத்திடு

இவ்வாறாகத் திருமணம் நடைபெறும் பொழுது ஒவ்வொரு நிகழ்ச்சிக்கு ஏற்பப் பாடல்களைப் பாடும் பழக்கம் இன்றும் தொடர்ந்து வழக்கில் இருந்து வருகிறது.

# பயன்பட்ட நூல்கள்


| | |
|---|---|
| அபிதான சிந்தாமணி | ஆ. சிங்காரவேலு முதலியார், ஏசியன் எஜுகேஷனல் சர்விஸஸ் சி.21/5 எஸ்.டி.ஏ. புதுதில்லி, 110016. |
| அரிச்சந்திர வெண்பா | தமிழ்ப் பதிப்புத் தொடர்—3, திருவனந்தபுரம், 1949. |
| ஆய்வுக் கோவை | தொகுதி-3, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலைநகர், 1982. |
| இந்துச்சட்டம் | ச. செந்தில்நாதன், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் எண் 539. |
| இல்லற நெறி | டாக்டர். ந. சுப்புரெட்டியார், தமிழ்ப் புத்தகாலயம் சென்னை. 5, 1976. |
| இல்வாழ்க்கை | டாக்டர். மா. இராச மாணிக்கனார், மதுரை, 1950. |
| இலங்கை முஸ்லிம்களின் திருமண சம்பிரதாயங்கள் | ஏ.எம். சமீம், நான்காவது அனைத்துலக இஸ்லாமிய தமிழிலக்கிய ஆராய்ச்சி மாநாட்டு வெளியீடு, 1979. |
| ஈ.வெ.ரா. சிந்தனைகள் | முதல் தொகுதி, சிந்தனையாளர் கழகம், திருச்சி, 2, 1974. |

| | |
|---|---|
| உண்மைச் சித்திரங்கள் | வை.மு.கோ. ஜகன்மோகினி, 1947. |
| உமறுதரும் சீறா | ஹபீப் நூலகம், சென்னை. 1, 1965. |
| கம்பராமாயணம், பால காண்டம் | அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1957. |
| கம்பன் காவிய சாரம் | எஸ். நல்லபெருமாள், வானதி பதிப்பகம் சென்னை- 17, 1973. |
| கந்தபுராணம் | வித்தியா நுபாலனயந்திரசாலை சென்னை, 1955. |
| கல்யாணமே வைபோகமே | நஜன், பிரதிபா பிரசுரம், சென்னை-4, 1979. |
| கலைக்களஞ்சியம் | தொகுதி 5,8, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1961. |
| சங்க இலக்கியம் | எஸ். வையாபுரிப் பிள்ளை (தொகுப்பு), பாரிநிலையம், சென்னை-1, 1967. |
| சிந்தாமணி | (பதிப்பு) உ.வே. சாமிநாதையர், ஸ்ரீதியாகராச விலாச வெளியீடு, 7ஆம் பதிப்பு, சென்னை, 1969. |
| சிலப்பதிகாரத் திறனாய்வு | ம.பொ. சிவஞானம், பூங்கொடி பதிப்பகம், சென்னை-4, 1973. |
| சிலப்பதிகாரம் | கழக வெளியீடு, 1372, சென்னை-1, 1972. |
| சூளாமணி | கழக வெளியீடு, 1078, சென்னை-1, 1970. |
| தமிழ்த் திருமணம் | கண்ணப்ப முதலியார் சென்னை-1, 1953. |

| | |
|---|---|
| தமிழர் திருமண நூல் | தமிழர் நல்வாழ்க்கைக் கழகத்தார், 1939. |
| தமிழர் திருமணம் | ஞா. தேவநேயன், சேலம் கூட்டுறவு அச்சகம், 1956. |
| தமிழர் திருமணமும் தாலியும் | கவிஞர் கண்ணதாசன், அருணோதயம் வெளியீடு, சென்னை-4, 1955. |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், | டாக்டர். க. காந்தி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113, 1980. |
| தனிப்பாடல் திரட்டு, | பூம்புகார் பிரசுரம், சென்னை-13 |
| திருமணத்திற்கு ஜாதகப் பொருத்தங்கள் | புலியூர் கேசிகன், மாருதி பதிப்பகம், சென்னை-14 1980. |
| திருமணப் பாடல்கள் | கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம், சென்னை, 1983. |
| திருமண முறைகள் | பெர்ட்ராண்டு ரஸ்ஸல், தமிழாக்கம்-கோ. மாதவன், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-5, 1965. |
| திருமண வாழ்த்து | பி.என். சண்முகசுந்தரம், முத்து பதிப்பகம், வளவனூர், 1974. |
| திருமண விளக்கம் | ப, இராமநாத பிள்ளை, கழக வெளியீடு, சென்னை-1, 1965. |
| திருவிளையாடற்புராணம் | கழக வெளியீடு, 136, சென்னை-1, 1979. |
| தென்னாட்டுக் கல்யாண முறைகள் | வை.மு.கோ. ஜகன்மோகினி காரியாலயம், சென்னை-5, 1956. |
| தொல்காப்பிய ஆராய்ச்சி | டாக்டர், சி. இலக்குவனார், மதுரை. 1963. |
| தொல்காப்பியம் | கழக வெளியீடு, சென்னை-1, 1965. |

| | |
|---|---|
| தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை | ந. சுப்புரெட்டியார், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1974. |
| தொல்காப்பியர்காலத் தமிழர் | புலவர் குழந்தை, பாரி நிலையம் சென்னை-1, 1968. |
| நந்திக் கலம்பகம் | 4-ஆம், பதிப்பு, பாரி நிலையம், சென்னை-1, 1977. |
| நரிவிருத்தம் | ஜைன இளைஞர் மன்ற வெளியீடு-4, சென்னை-17, 1975. |
| நளவெண்பா | உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை-41, 1960 |
| நாலாயிர திவ்வியப் பிரபந்தம் | மயிலை மாதவதாசன், சென்னை. 1962. |
| பத்துப்பாட்டு | உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை-41, 1974. |
| பதினெண்கீழ்க்கணக்கு | எஸ். ராஜம் வெளியீடு, சென்னை. 1959. |
| பழந்தமிழர் திருமண நடைமுறைகள் | முதற்பாகம், முத்தமிழ் வெளியீட்டுக் கழகம், யாழ்ப்பாணம், 1984. |
| பாரதிதாசன் கவிதைகள் | தொகுதி 2,3, பாரி நிலையம், சென்னை-1.7-ஆம் பதிப்பு, 1974. |
| பிரபுலிங்க லீலை | கழகவெளியீடு, 702, சென்னை.1 1969. |
| பெருங்கதை | கழக வெளியீடு-1385, சென்னை-1 1973. |
| பேரூர்ப்புராணம் | திருவாவடுதுறை ஆதீனம், வெளியீடு எண். 244, 1969. |
| மகாபாரதம் | இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ், சென்னை. 1969 |

| | |
|---|---|
| மங்கல அணி | வித்துவான். ஆர். வீரபத்திரன், எம்.ஏ.எல்.டி, பாரிநிலையம் சென்னை-1 1968. |
| மங்கல மனைமாட்சி | டாக்டர். ந.சஞ்சீவி, அருள் வாழ்வுப் பதிப்பகம், சென்னை:4 1977. |
| யசோதரா காவியம் | கழகவெளியீடு, 368, சென்னை.1 1970. |
| வாழ்க்கைக் கலை | அ.கி. பரந்தாமனார். எம்.ஏ. பாரிநிலையம். சென்னை-1 1970. |
| வாழ்வும் இலக்கியமும் | வித்துவான். வே.முனுசாமி, வானதி பதிப்பகம். சென்னை.17 1970. |
| விவாக சாஸ்திரம் | முனிசாமி முதலியார், இரத்தின நாயகர் அண்டு சன்ஸ் சென்னை-1 1966. |
| விவாஹ மந்த்ரார்த்த போதினி | தொ.ஆ. கிழாத்தூர் ஸ்ரீநிவாசாச்சாரியர், திலிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை.17. 1974. |
| ஆராய்ச்சி | (காலாண்டுப் பத்திரிகை) நா.வானமாமலை. திருநெல்வேலி.2, டிசம்பர் 1971, |
| புலமை | தொகுதி. 5. மார்ச். 1979 |
| Tamil Culture | Vol. XI, No. 4. oct Dec. 1964. |

# சொல்லகராதி

(எண் — பக்கவெண்)

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | தமிழில் விடுகதைகள் | ... ரூ. 12-00 |
| 2. | உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? | ... ரூ. 6-00 |
| 3. | தமிழர் தோற்கருவிகள் | ... ரூ. 10-00 |
| 4. | தமிழும் தமிழரும் | ... ரூ. 5-00 |
| 5. | தமிழர் இசை | ... ரூ. 70-00 |
| 6. | ம. பொ. சி. யின் இலக்கிய நூல்கள்-ஓர் மதிப்பீடு | ... ரூ. 20-00 |
| 7. | இளங்கோவின் இலக்கிய உத்திகள் | ... ரூ. 12-00 |
| 8. | திராவிட மொழி இலக்கியங்கள் | ... ரூ. 35-00 |
| 9. | தமிழ் இலக்கியக் கொள்கை - 8 | ... ரூ. 20-00 |
| 10. | தமிழ் இலக்கியக் கொள்கை - 9 | ... ரூ. 20-00 |
| 11. | தொல்காப்பியம் - புணரியல் | ... ரூ. 10-00 |
| 12. | தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் | ... ரூ. 12-00 |
| 13. | தொல்காப்பியம் - விளிமரபு | ... ரூ. 6-00 |
| 14. | தொல்காப்பியம் - பெயரியல் | ... ரூ. 12-00 |
| 15. | தொல்காப்பியம் - வினையியல் | ... ரூ. 20-00 |
| 16. | பிரபந்த தீபிகை | ... ரூ. 12-00 |
| 17. | கண் மருத்துவம் | ... ரூ. 50-00 |
| 18. | வர்ம சூத்திரம் | ... ரூ. 10-00 |
| 19. | தன்வந்திரி குழந்தை வாகடம் | ... ரூ. 14-00 |
| 20. | வெள்ளக்காரன் கதை | ... ரூ. 7-00 |
| 21. | மெய்க்கீர்த்திகள் | ... ரூ. 20-00 |
| 22. | சிந்து இலக்கியம் | ... ரூ. 8-00 |
| 23. | தமிழ்ச் சுவடிகள் அட்டவணை | ... ரூ. 6-00 |
| 24. | தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் | ... ரூ. 12-00 |
| 25. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 1 | ... ரூ. 12-00 |
| 26. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 2 | ... ரூ. 22-00 |
| 27. | இஸ்லாம் வளர்த்த தமிழ் | ... ரூ. 15-00 |
| 28. | உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | ... ரூ. 10-00 |
| 29. | டாக்டர் உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் | ... ரூ. 10-00 |
| 30. | தமிழரின் தாயகம் | ... ரூ. 10-00 |
| 31. | பாவாணரும் தனித்தமிழும் | ... ரூ. 12-00 |
| 32. | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வு | ... ரூ. 10-00 |
| 33. | விவிலியம் - திருக்குறள் - சைவ சித்தாந்தம் | ... ரூ. 20-00 |
| 34. | செங்கை மாவட்ட ஊர்ப் பெயர்கள் | ... ரூ. 25-00 |
| 35. | மொழி பெயர்ப்பியல் | ... ரூ. 10-00 |
| 36. | Siddha Medicine (Heritage of the Tamils) | ... Rs. 45-00 |
| 37. | Cultural Heritage of the Tamils | ... Rs. 20-00 |
| 38. | Literary Heritage of the Tamils | ... Rs. 50-00 |
| 39. | Papers on Tamil Studies | ... Rs. 15-00 |
| 40. | Tamil Drama | ... Rs. 20-00 |
| 41. | Dr. Mu. Va. | ... Rs. 20-00 |
| 42. | Thiru Murugan | ... Rs. 5-00 |
| 43. | A Study of the Perunkatai | ... Rs. 12-00 |
| 44. | Tamil Writers Directory | ... Rs. 10-00 |
| 45. | Dissertations on Tamilology | ... Rs. 10-00 |
| 46. | Tamil-Text (An-Auto Instructional Course) | ... Rs. 25-00 |
| 47. | Siddha Medical Manuscripts in Tamil | ... Rs. 8-00 |
| 48. | Karaikkal Ammaivar | ... Rs. 6-00 |
| 49. | Heritage of the Tamils-Temple Arts | ... Rs. 50-00 |

Japonica — Dial 441913